கணபதி துணை.

# பத்துப்பாட்டு மூலமும்

மதுரையாசிரியர் பாரத்துவாசி

## நச்சினார்க்கினியருரையும்.

இவை

கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய

உத்தமதானபுரம்

வே. சாமிநாதையரால்

பரிசோதித்து

சிவகங்கை ஸப்டிவிஷன்

இருவயல் ஜமீந்தாரவர்களாகிய ம-ா-ா-ஸ்ரீ

முத்துராமலிங்கத்தேவரவர்களுடைய பெருதவியால்

சென்னை

ந. கோவிந்த ஆசாரியாரது

திராவிடரத்நாகர அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டு நிறைவேறின

1889

# இப்புத்தகத்திலடங்கியவை.

கணபதி துணை.

# முகவுரை.

அண்டர்க ளுறுகண் விண்டிட மூந்நீர்
அலைகடல் குடித்தும் மலைநிலை யழுத்தியுந்
தென்றிசை யுயர்ந்த நொய்ம்மை போக
அப்பணி சடையார் கொப்பவீற் றிருந்தும்
பன்னு வலர்புகழ் தென்னு டாண்ட
இராவணன் றனையவ னிராவணம் போக்கியும்
இலங்குறு பொதியில் விலங்கலவாழ் பெருந்தவத்
தகத்தியன் புரந்தருண் மகத்துவ மிகுத்த
அமிழ்தினிற் சிறந்த தமிழெனு மடந்தை
கந்தரத் தணிமணிக் கலனாச் சென்ன
உத்தமர் புகழும்இப் *பத்துப் பாட்டும்

பாண்டிவளநாட்டில் மதுரைப்பதியில் அங்கயற்கண்ணம்மையோடு எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக்கடவுளருளிய சங்கப்பலகையில் அக்கடவுளோடு ஒப்பவீற்றிருந்து தமிழாராய்ந்த மகிமைபொருந்திய நக்கீரனார்முதலிய நல்லிசைப்புலவர்களால் அருளிச்செய்யப்பட்டு அச்சான்றோராலேயே தொகுக்கப்பட்டவை

"முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோலகுறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து"

எனனுஞ்செய்யுளால் பத்துப்பாட்டுக்கள் இவையென்பதும், அவ்வப்பாட்டுக்களுடைய உரையினீற்றில் எழுதப்பட்டுள்ள தொடர்களால் இவற்றை அருளிச்செய்தோர் நக்கீரனார்முதலியோரென்பதும், பத்தாவது மலைபடுகடாத்தில் "தீயி னன்ன வொண்செங் காந்தள்" என்பதற்கு நச்சினார்க்கினியரெழுதிய விசேடவுரையால் இவற்றைத்தொகுத்தோர் சங்கப்புலவர்களே யென்பதும் நன்குவிளங்குகின்றன. இவை பழைய இலக்கிய வுரைகளிலும் இலக்கணவுரைகளிலும் உரையாசிரியர்களால் உதாரணமாக

---

* பத்துப்பாட்டின் இலக்கணமுதலியவற்றை வருஞ்சூத்திரங்களாலுணர்க:—
"நூறடிச் சிறுமை நூற்றுப்பத் தளவே, யேறிய வடியி னீரைம் பாட்டுத், தொகுப்பது பத்துப் பாட்டெனப் படுமே. உ. அதுவே, அகவலின் வருமென வறைகுநர் புலவர். ௩. புரவலன் பரிசு கொண்டு மீண்ட, விரவலன் வெயிற்றெறு மிருங்கா னத்திடை, வறுமை யுடன்வரூஉம் புலவர் பாணர், பொருநர் விறலியர் கூத்தர்க் கந்தப், புரவல னூர்பெயர் கொடைபராஅ, யாங்குநீ செல்கென விடுப்பதாற் றுப்படை. ஓங்கிய வதுதா னகவலின் வருமே" இவை பன்னிருபாட்டியல்.

எடுத்துக்காட்டப்படும் பிரமாணநூல்கள். தமிழுக்கேயுரிய ஒழுக்கமுதலியவற்றை இனிது புலப்படுத்துவதோடு மலை கடல் நாடு நகர் சிறுபொழுது பெரும்பொழுது முதலியவற்றை உள்ளவண்ணமேகூறி இன்பம்பயக்கும் நன்னெறியுடையவை. இக்காலத்து வேறொருவாற்றானும் விளங்காதனவாகிய அக்காலத்திருந்த தமிழ்நாட்டரசர்களிற் சிலருடையசரித்திரங்களும் அக்காலத்துமாந்தருடைய நடைமுதலியனவும் பிறவும் இவற்றால் நன்குவிளங்கும். பிற்காலத்து அரியபெரிய நூல்களியற்றிய ஆன்றோர்பலரும் "முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும் - பொன்னே போற் போற்றுவம்" என்பதற்கிணங்க, இவற்றின் பொருளையன்றிச் சொற்றொடர்களையும் தத்தம நூல்களுள்ளே ஆங்காங்கு இன்சுவைபெருக இயைத்துக்கூறினர். உரைச்சிறப்புப்பாயிரத்துள், "ஆன்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து, சான்றோருரைத்த தண்டமிழ்த்தெரியல், லொருபது பாட்டே" என்று சிறப்பித்துப் பாராட்டிக் கூறிய ஆன்றோர் திருவாக்கே இவற்றின் அருமைபெருமைகளை நன்குபுலப்படுத்தும் இவற்றுள்,—

௧ - வது திருமுருகாற்றுப்படை — இது ௩௱௧௭ - அடிகளையுடையது, வீடுபெறுதற்குச்சமைந்த ஓர் இரவலனை வீடுபெற்றானொருவன் முருகக்கடவுளிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அம்முருகக்கடவுளை மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரனார் பாடியது. இப்பாட்டு முருகக்கடவுளுடைய திருப்பதிகளுட்சிறந்த திருப்பரங்குன்றம் திருச்சீரலைவாய் திருவாவினன்குடி திருவேரகம் குன்றுதோறாடல் பழமுதிர்சோலை யென்னும் ஆறுபடைவீட்டிலும் அவர் எழுந்தருளியிருத்தலைப் பாராட்டிக்கூறும். ஒருமலைக்குகையில் முன்னமே அடைக்கப்பட்டிருந்த தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மரோடு சேர்த்துண்ணக்கருதித் தம்மையும் அக்குகையில் அடைத்துவிட்டு உண்ணுதற்கு நீராடப்போன ஒரு கொடியபூதத்தை வெல்லக்கருதி நக்கீரனார் முருகக்கடவுளைக்குறித்து இத்திருமுருகாற்றுப்படையைப்பாடி அப்பூதத்தினின்றும் விடுதல்பெற்றனரென்பர். இவ்வரலாற்றின்விரிவு, சீகாளத்திபுராணத்துள்ள நக்கீரச்சருக்கத்தால் விளங்கும் முருகக்கடவுள் நக்கீரனாரைச் சிறைமீட்டருளிய இத்தலீலை, ஒவ்வொருவருடத்தும் திருப்பரங்குன்றத்திற் பங்குனிமீ நடக்கும் உற்சவகாலத்து நான்காந்திருநாளில் நடைபெற்றுவருகின்றது முருகக்கடவுளுடைய திருவருளைப்பெற விரும்புவோர் இந்தத்திருமுருகாற்றுப்படையை நியமமாக அன்புடன் பாராயணம்பண்ணுதல் நலமென்று பெரியோர்கூறுவர்.

௨ - வது. பொருநராற்றுப்படை — இது ௨௱௪௮ - அடிகளையுடையது, பரிசில் பெறக்கருதிய ஓர்பொருநனைப் பரிசில்பெற்றானொருவன் இளஞ்சேட்சென்னி புதல்வனாகிய சோழன்கரிகாற்பெருவளத்தானிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அக்கரிகாற்பெருவளவனை முடத்தாமக்கண்ணியார் பாடியது [பொருநர் - ஏர்க்களம்பாடுவோர், போர்க்களம்பாடுவோர், பரணிபாடுவோரெனப் பலர், அவருள் இப்பொருநன் போர்க்களம்பாடுவோன்.] இது கரிகாற்பெருவளவன் கொடையையும், அவன் வீரத்தையும், அவனுடைய சோழநாட்டின்வளத்தையும், காவிரிநதி பயன்படுதலையும் நன்றாகக்கூறும்

௩ - வது. சிறுபாணாற்றுப்படை — இது ௨௱௬௯ - அடிகளையுடையது, பரிசில் பெறக்கருதிய பாணனொருவனைப் பரிசில்பெற்றானொருவன் ஏறுமாநாட்டு நல்லியக்கோடனிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அந்நல்லியக்கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர்நத்தத்தனார் பாடியது. [பாணர் - பாடுவோர்; இவர் இசைப்பாணரும், யாழ்ப்பாணரும், மண்டைப்பாணருமெனப் பலர்] இது நல்லியக்கோடனது வள்ளன்மை

யையும், அவனுடைய நகரங்களாகிய எயிற்பட்டினம் வேலூர் ஆமூர் முதலியவற்றி னியல்பையும், அவற்றிலுள்ளாருடைய நற்குணநற்செய்கைகளையும், அவனது அரண்மனையின் சிறப்பையும், பலதிறத்தினரும் ஏத்தும்படி பலகுணவிசேடத்தோடு அவன்வீற்றிருத்தலையுங் கூறுவதன்றித் தமிழ்நாட்டு மூவேந்தருடைய இராசதானிக ளாகிய மதுரை வஞ்சி உறந்தையென்னும் மூன்றுநகரங்களின் நிலைமையையும், பேகன் பாரி காரி ஆய் அதிகன் நள்ளி ஓரியென்னும் வள்ளல்களெழுவரும் இன்ன இன்னகொடையாற் பெயர்பெற்றாகளென்பதையுங் கூறும்.

ச - வது **பெரும்பாணாற்றுப்படை** — இது ரு00 - அடிகளையுடையது. பரிசில் பெறுதற்கெண்ணிய பாணனொருவனை அதுபெற்றானொருவன் தொண்டைமானிளந் திரையனிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அவ்விளந்திரையனைக் கடியலூர் உருத் திரங்கண்ணனார் பாடியது [இளந்திரையனென்பான் காஞ்சிநகரத்திருந்த ஓரர சன்; நாகபட்டினத்துச்சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தேசென்று நாக கன்னியைப்புணர்ந்தகாலத்து, அவள் யான்பெற்றபுதல்வனை என்செய்வேனென்ற பொழுது தொண்டையை (தொண்டை - ஓர்கொடி) அடையாளமாகக்கட்டிக் கட லிலேவிட அவன்வந்து கரையேறின் அவற்கு யான் அரசவுரிமையை எய்துவித்து நாடாட்சிகொடுப்பலென்று அவன்கூற அவளும் அங்ஙனம்வரவிட்டத் திரைதருதலின், திரையனென்பது இவனுக்குப்பெயராயிற்று, இதனை ககக-ம்பக்கத்திற் காண்க.] இப் பாட்டு அவனதுநாட்டிலுள்ள குறிஞ்சிமுதலிய ஐந்திணைப்பகுதிகளினியல்பையும், அவற்றில்வாழ்வாருடைய தொழில் ஊண் ஒப்புரவு முதலியவற்றையும், அவன் காஞ்சிநகரத்து மிக்கசிறப்போடு வீற்றிருத்தலையும், அவனவள்ளன்மையையுங் கூறும். இதிற் காஞ்சிநகரத்துள்ள திருவெஃகாவென்னுந் திருப்பதி கூறப்பட்டுள்ளது. மேலைப்பாட்டும் இதுவும் பாணராற்றுப்படையாயிருப்பினும் அடிவரையறையிற் சிறிதும் பெரிதுமாயிருத்தலபற்றி அது சிறுபாணாற்றுப்படையெனவும் இது பெரும்பா ணாற்றுப்படையெனவும் பெயர்பெற்றன.

ரு - வது **முல்லைப்பாட்டு** — இது க0௩ - அடிகளையுடையது, பகைமேற்சென்ற தலைவன்வருமளவும் தலைவி ஆற்றியிருத்தல்வேட்டது அவன்வந்ததனைக்கண்டு தோழிமு தலியோராகிய வாயில்கள் தம்முட்கூறியதாகக் காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வா ணிகனார்மகனார் நப்பூதனார் பாடியது. இது தலைவனைப்பிரிந்து தனித்திருக்கும் தலை வியியல்பையும், கார்காலத்தின் தன்மையையும், படைவீட்டிற் பகைவர் துயரத்தோ டிருத்தலையும், தலைவனது சௌரியத்தையும் விளங்கக்கூறும்.

சா - வது **மதுரைக்காஞ்சி** — இது எஅ௨ - அடிகளையுடையது, தலையாலங்கான த்துச் செருவென்றபாண்டியன் நெடுஞ்செழியனுக்கு வீடுபேறுநிமித்தம் நிலையாமை யைச் செவியறிவுறுத்தி மாங்குடிமருதனார் பாடியது. இது அப்பாண்டியனுடைய முன்னோர்களின்பெருமையையும், பாண்டிநாட்டின் ஐந்திணைவளங்களையும், மது ரையின்வளப்பையும், அப்பாண்டியனது வீரமுதலியவற்றையுங் கூறும். இதிற் சே ரனது நாளோலக்கச்சிறப்பும் பலசிற்றரசர்களுடைய பெருமைகளும் கூறப்பட் டுள்ளன.

எ - வது. **நெடுநல்வாடை** — இது கஅஅ - அடிகளையுடையது, பகைமேற்சென் றபாண்டியன் நெடுஞ்செழியனைப் பிரிந்துவருந்துந் தலைவிக்கு அவ்வருத்தந்தீரும்படி அவன் பகையைவென்று விரைவில்வருவானாகவென்று கொற்றவையைப்பரவுவாள் கூறியதாக அவனை நக்கீரனார்பாடியது. இஃது ஐப்பசி கார்த்திகைமாதங்களாகிய

கூதிர்க்காலத்தினியல்பையும் தனித்திருக்கும் தலைவியது வருத்தமிகுதியையும், படைவீட்டில் தலைவனிருக்கும்வண்ணத்தையும் விளங்கக்கூறும்.

அ-வது குறிஞ்சிப்பாட்டு:—இது உசுக - அடிகளையுடையது; தலைவியினது வேற்றுமைகண்டு வருந்திய செவிலிக்கு அறத்தொடுநிற்கும் பாங்கிகூற்றாக * ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழறிவுறுத்தற்குக் கபிலர் பாடியது. இது மலைவளங்களையும், இல்லறமுறைமையையும், தலைவனுந்தலைவியும் தம்முள்வைக்கத்தகும் அன்புடைமையையும், கற்பின் இன்றியமையாமையையுங்கூறும். இதிற் பல மலர்விசேடங்கள் கூறப்பட்டுள்ளன. இதனைப் பெருங்குறிஞ்சியென்றும் வழங்குவர்.

கூ-வது. பட்டினப்பாலை—இது ஙக - அடிகளையுடையது, வேற்றுநாட்டிற்குச் செல்லத்தொடங்கிய தலைவன் தனதுநெஞ்சைநோக்கித் தலைவியைப்பிரிந்துவாரேனென்று செலவழுங்கிக்கூறியதாகக் காவிரிப்பூம்பட்டினத்தையும், சோழன்கரிகாற்பெருவளத்தானது பராக்கிரமத்தையும், அவனதுசெங்கோலையும் பேரழகுபயப்பச் சிறப்பித்துக் கடியலூருருத்திரங்கண்ணனார்பாடியது. இதிற் சோழநாடும் காவிரிநதியும் மிகச்சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன. கடியலூர் உருத்திரங்கண்ணனார்க்குப் பதினாறுநூறாயிரம்பொன் பரிசளித்து இப்பாட்டைக் கரிகாற்பெருவளவன் கொண்டானென்பர். இதனை, † "தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன், பத்தொ டாறுநூ றாயிரம்பெறப், பண்டு பட்டினப் பாலை கொண்டதும்" என்பதனாலுணர்க.

௰-வது. மலைபடுகடாம்—இது ருஅங - அடிகளையுடையது, இதற்குக் கூத்தராற்றுப்படையெனவும் பெயருண்டு, பரிசில்பெறச்சமைந்த கூத்தரொருவனைப் பரிசில்பெற்றானொருவன் பலகுன்றக்கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன் சேய்நன்னனிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அந்நன்னனை இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடியது [கூத்தர் - ஆடன்மாக்கள். இவர்க்குச் சாதிவரையறையில்லை. இவர்கள் எண்வகைச்சுவையும் மனத்தின்கட்பட்ட குறிப்புக்களும் புறத்துப்போந்து புலப்பட ஆடுவோர்.] இஃது அவனிடத்துச்செல்லும் வழியின்றன்மையையும், ஆங்காங்குள்ள உணவின் வகைகளையும், அவனது மலைசோலைகாடுகளின் வளங்களையும், அவனது வள்ளன்மையையும், ஆற்றலையும், அவனது சுற்றத்தொழுக்கங்களையும், அவனது நாளோலக்க இருப்பையும், அவனது நவிரமென்னுமலையிற் காரியுண்டிக்கடவுளென்னுந் திருநாமத்தோடு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானது மகிமையையும், அவனுடையமுன்னோர் பெருமையையும், அவனூரினியல்பையும், அவனது சேயாறென்னும் ஆறுமுதலியவற்றின் வளங்களையும் விளங்கக்கூறும். மலைக்கு யானையை உவமித்து அதனகட்பிறந்த ஓசையைக் கடாமெனச் சிறப்பித்தவதனால் இப்பாட்டு மலைபடுகடாமென்று பெயர்பெற்றது. இதனை ருடுசு-ம் பக்கத்திற் காண்க.

இப்பெருஞ்சிறப்பினவாகிய பாட்டுக்கள் பத்தையும் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியருரையுடன் படித்துப் பல பிரதிரூபங்களைக்கொண்டு நன்றாகப் பரிசோதித்து, எழுதுவோரால் நேர்ந்த வழுக்களைமாற்றிப் பலர்க்கும் எளிதிற்பயன்படும் வண்ணம் அச்சிற் பதிப்பிக்கவெண்ணிச் சென்ற பார்த்திவ௵ மார்கழி௴ முதல் பிரதிகள்பெறுதற்கு முயன்றுவருகையில், திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்வானும் எனது தமிழாசிரியருமாகிய திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் பிரதியொ

* பிரத்தனென்றும், பிரமதத்தனென்றும் பிரதிவேறுபாடுண்டு

† கலிங்கத்துப்பரணி, இராசபாரம்பரியம் உஉ.

ன்றுகிடைத்தது அதைவைத்துப் படித்துவருங்காலத்து, வேலூர் ம-ா-ா-ஸ்ரீ, குமாரசாமிஐயர் ஒருபிரதிகொடுத்தார். அவ்விரண்டும் ஒன்றுக்கொன்று மிகவேறு பாடுற்றிருந்தமையால், பலபிரதிகள் பெறுதற்கெண்ணி இத்தமிழ்நாட்டில் ஆங்காங்குள்ள எனது நண்பர்களாகிய தமிழ்வித்துவான்கள் பலருக்கும் பிரபுக்கள் பலருக்கும் நான் அடிக்கடி கடிதமெழுதியும் தக்கவர்களைக்கொண்டு எழுதுவித்தும் எனக்குக் கிடைக்கும் விடுமுறைநாட்களில் பலஇடங்களுக்குப் போய்வந்தும் எனது அன்பர்களை ஆங்காங்கு அனுப்பியும் மிக்க முயற்சிசெய்துவந்தேன்.

அப்பொழுது திருவாவடுதுறையாதீனத்து ஸ்ரீ-ஸ்ரீ அம்பலவாணதேசிகரவர்கள், ஆறுமுகமங்கலத்தில் முன்னமிருந்தவரும் பல பழைய தமிழ்ப்புத்தகங்களை மிகமுயன்று தேடித் தமதுகையாலேயே அவற்றை எழுதித்தொகுத்தவருமாகிய குமாரசாமிபிள்ளையவர்களுடைய பிரதியை வருவித்துக்கொடுத்துப் பேருதவிசெய்தார்கள். அப்பால், திருநெல்வேலி ம-ா-ா-ஸ்ரீ * கவிராஜ நெல்லையப்பபிள்ளையவர்களும், * கவிராஜ ஈசுவரமூர்த்திபிள்ளையவர்களும், தங்கள் வீட்டிலிருந்தபிரதியை உதவியதன்றி வண்ணார்பேட்டையில் முன்னமிருந்த திருப்பாற்கடனாதகவிராயரவர்கள் பிரதியையும், ஷை யார் பேரராகிய ம-ா-ா-ஸ்ரீ திருப்பாற்கடனாதகவிராயரவர்களிடத்திருந்து வாங்கித்தந்தார்கள். பின்பு ஸ்ரீவைகுண்டத்திருக்கும் (ஸ்கூல்ஸப்அஸிஸ்டண்டு இன்ஸ்பெக்டர்) ம-ா-ா-ஸ்ரீ ஆ. சிவராமஐயரவர்கள், ஆழ்வார்திருநகரி (ஸப்ரிஜிஸ்ட்ரார்) ம-ா-ா ஸ்ரீ சி. இராமஸ்வாமிஐயரவர்கள், ஸ்ரீவைகுண்டம் (வக்கீல்) ம-ா-ா-ஸ்ரீ சுப்பராயமுதலியாரவர்கள் முதலியோருடைய சகாயத்தால் பலவிடத்துஞ்சென்று பார்த்தபொழுது ஆழ்வார்திருநகரியிலுள்ள தீர்த்தவிநோதத் திருமேனிகவிராயரவர்கள் பரம்பரையோராகிய தேவர்பிரான் கவிராயரவர்கள்பிரதியொன்று கிடைத்தது. இந்தப்பிரதிகளைப் பெறுவதற்குத் திருநெல்வேலி முதலிய இடங்களில் யான் சஞ்சாரஞ்செய்தபொழுது திருக்குற்றாலத்தைச்சார்ந்த மேலகரம் ம-ா-ா-ஸ்ரீ திரிகூடராசப்பக்கவிராயரவர்கள் கூடவே சிலநாளிருந்து எனக்குச் செய்த உதவிகள் பல. அதன்பின்னர், பலஇடத்துஞ்சென்று தமது அரும்பொருளைச் செலவுசெய்து பழைய தமிழ்ப்புத்தகங்களைத் தேடித் தொகுத்தவரும் அவற்றைப்படித்துக் காலங்கழித்தலையே பெரும்பயனாக எண்ணியவருமாகியபொள்ளாச்சிவித்துவான் ம-ா-ா-ஸ்ரீ சிவன் பிள்ளையவர்கள் எனமுயற்சிக்கிரங்கித் தமதுபிரதியை அனுப்பினார்கள்.

அப்பால், தருமபுரஆதீன மடத்துப் புத்தகசாலையிலிருந்து மிகப்பழமையான பிரதியொன்று கிடைத்தது. அதற்குமேல், சற்றேறக்குறைய ௫௦-வருடங்களுக்கு முன்பு சென்னையைச்சார்ந்த திருமயிலையிலிருந்த திருநெல்வேலி வித்துவசிரோமணியாகிய † திருவம்பலத்தின்னமுதம்பிள்ளையவர்களுடைய புத்தகங்களியாவும் ஷை திருமயிலை அண்ணுசாமியுபாத்தியாயர்வீட்டில் உள்ளனவென்றுதெரிந்து இப்பொழுது திருவல்லிக்கேணியிலிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ வை. விசுவநாத சாஸ்திரிகளுடைய சகாயத்தாற் சென்று பார்த்தபொழுது ஒருபிரதிகிடைத்தது. அதன்பின், பழைய தமிழ் நூலாராய்ச்சியையே இடைவிடாது செய்தொழுகுகின்றவராகிய (தபால்

* இவர்களிருவரும், திருவம்பலத்தின்னமுதம்பிள்ளையவர்களுக்கும் திருப்பாற்கடனாதகவிராயரவர்களுக்கும் ஆசிரியராகிய அம்பலவாணகவிராயரவர்களுடைய வழித்தோன்றல்கள்.

† இவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களுடைய ஆசிரியர்.

# முகவுரை.

ஸுபரின்டெண்டன்ட் ம-ா-ா-ஸ்ரீ வி கனகசபைபிள்ளையவர்கள் தமது பிரதியை அன்போடு உதவினார்கள்.

இப்பிரதிகளுள் பூர்த்தியாக இல்லாதன சில.

ஆறுமுகமங்கலத்துப் பிரதியில்மட்டும் திருமுருகாற்றுப்படைமூலமும் பொருநராற்றுப்படைமூலமுமிருந்தன; மற்றைச் சிறுபாணாற்றுப்படைமுதலிய எட்டிற்கும் மேற்கூறியபிரதிகளில் ஒன்றிலேனும் மூலம் தனித்துக்கிடையாமையின், உரைக்குமுன்னம் சிறிதுசிறிது ஒருமொழியுந்தொடர்மொழியுமாக எழுதப்பட்டுள்ள மூல பதங்களையேயிணைத்து எனது சிற்றறிவிற்கு எட்டியமட்டும் அடிவரையறைசெய்து சிறுபாணாற்றுப்படைமுதலிய பாட்டுக்களெட்டனையும் தனித்தனியே எழுதிக்கொண்டேன் உரையாசிரியர்களால் இவற்றிலிருந்து பழைய இலக்கிய இலக்கணவுரைகளில் உதாரணமாக எழுதப்பட்டவற்றுள் கிடைத்த சில, இவற்றின் மூலங்களை இணைக்குங்காலத்து எனக்குப் பேருதவியாகஇருந்தன

பின்பு சென்னைச் சருவகலாசாலையைச் சார்ந்த கையெழுத்துப் புத்தகசாலையில் இந்தப் பத்துப்பாட்டுப்பிரதி யிருப்பதுதெரிந்து அதனோடு எனதுபிரதியை ஒத்திட்டுவருகையில் அப்புத்தகத்திற் பெரும்பாணாற்றுப்படைமூலமும் முல்லைப்பாட்டு மூலமுமிருப்பக்கண்டு அவற்றோடு நான் எழுதிவைத்துக்கொண்டிருந்த அவ் பாட்டுக்களின்மூலங்களை ஒப்புநோக்கிக்கொண்டேன் அந்தப்பிரதியில

"முருகு பொருநாறு சிறு பாணாறு முல்லைபெரும் பாணாறு மதுரைக் காஞ்சி
பரிதாய பொருட்டமூவா நெடுநல் வாடை பட்டினப்பா லைகுறிஞ்சி மலைக டாமு
மருவாரும் பொழில்புடைசூழ் களந்தை மூதூர் வருசிவப்ப பூபனருள் வேல பூபன்
உரையோடு மெழுதினனு தவினு லனனு னேங்குபெருஞ் செலவமிசை யுறறு வாழி"

என்னும் பாடலொன்று எழுதப்பட்டிருந்தது.

மேற்கூறிய பிரதிகளெல்லாவொன்றும் ஆராய்ச்சிக்கு இன்றியமையாதனவாயிருந்தாலும் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் பிரதியும், வண்ணாரபேட்டைப்பிரதியும், ஆழ்வார்திருநகரிப்பிரதியும், தருமபுரவாதீனத்துப்பிரதியும் மிகப்பயன்பட்டன. இப்பிரதிகளியாவற்றுள்ளும் சிறியதொடர்கள்சிலவற்றிற்கு ஒன்றிலேனும் உரைகிடைக்கவில்லை.

*"புகழ்தரு மறைக்கு மேலோன் புடாசகன புரத்தின் மேன்மை
நிகழ்தர நிகழ்த்த வல்லே நீகொலென றெனது நெஞ்சே
யிகழ்தர வெழுந்த நாணு மிசையுந் தினமபோ ராடி
யகழ்தர நாணந் தோறற தாசையே வென்ற தம்மா"

என ஆன்றோர்கூறியவாறே, வித்துவசிரோமணிகளாற் பரிசோதித்தற்குரிய இப்பாட்டுக்களையும் இவ்வுரையையும் பரிசோதித்துப் பதிப்பித்தலில் மிக்கநாணமுடையனேனும் இவற்றை யாவருக்கும் எளிதிற்பயன்படும்படி செய்யவேண்டுமென்று வரம்புகடந்தெழுந்த ஆசைமேலீட்டால் அந்நாணத்தையிழந்து அச்சிற்பதிப்பிக்கத்துணிந்தேன்.

இப்பத்துப்பாட்டுரையைப் பரிசோதிக்கத் தொடங்கிய நாண்முதல் எனக்கு மனத்தளர்ச்சியுண்டாகாதபடி அடிக்கடி ஊக்கமளித்து வந்த திருப்பாதிரிப்புலியூர் ம - ா - ா - ஸ்ரீ ஸாது - சேஷையரவர்கள் இவற்றின் அருமைபெருமைகளைப் பல

* திருக்குற்றாலப்புராணம், அவையடக்கம்

ருமறியும்படி செய்ததன்றித் தாம் முந்திக் கையொப்பமிட்டுப் பொருளுதவியுஞ்செய்தார்கள்.

அதன்பின்பு, செந்தமிழ்ப்பாஷாபிமானிகளாகிய திருவாவடுதுறையாதீனத்து ஸ்ரீமஸ்ரீ அம்பலவாணதேசிகரவர்களும், மதுரை (டிபுடிகலெக்டர்) ம-ா-ா-ஸ்ரீ ம. தில்லைநாயகம்பிள்ளையவர்களும், தஞ்சாவூர் (ஜில்லாகோர்ட்டுவக்கீல்) ம-ா-ா-ஸ்ரீ கே. சி. சீநிவாசபிள்ளையவர்களும், சிவகங்கை (ஸப்டிவிஷன்சிறுவயல் ஜமீந்தாரவர்களாகிய) ம-ா-ா-ஸ்ரீ முத்துராமலிங்கத்தேவரவர்களும், சோழன்மாளிகை (மிராசு) ம-ா-ா-ஸ்ரீ இரத்தினம்பிள்ளையவர்களும் அன்புடன் கையொப்பமிட்டு மிக்கபொருளுதவிசெய்தார்கள். இவர்களுள் ம-ா-ா-ஸ்ரீ முத்துராமலிங்கத்தேவரவர்கள் என்னை முன்னம் அறியாதவர்களாயிருந்தும் இவற்றைநன்குமதித்து நல்லசமயத்துச்செய்த பேருதவியாலேயே இவை விரைவில் அச்சிடப்பட்டுநிறைவேறின. மேற்கூறியஇவ்வண்மையாளர்களுடைய பெருந்தகைமையையும், இப்பதிப்பின்பொருட்டுத் தத்தமக்கியன்றவளவு கையொப்பஞ்செய்து முற்பணமுதவியவர்களாகிய கும்பகோணம் சென்னை மதுரை இராமநாதபுரம் திருவனந்தபுரம் முதலிய இடங்களிலுள்ள கனவான்களுடைய பெருந்தகைமையையும் நான்மிகப்பாராட்டுகின்றேன்.

இவ்வுரையைப் பதிப்பிக்குங்காலத்து இடம் விளங்காமேற்கோள்களுள் இடம் விளங்கியவை:—

| பக்கம். | வரி | | நூல். |
|---|---|---|---|
| ௧௨ | ௧௩ | "மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்" | நற்றிணை, ௩௨. |
| ௨௭௧ | ௩௩ | "சேஎஞ்ஞெண மாட்டிய நறும்புகை ஞெகிழி" | குறுந்தொகை, ௧௫௦. |

நச்சினார்க்கினியர் இப்பத்துப்பாட்டுரையில் மேற்கோள்களாக எடுத்துக்காட்டிய நூல்களுள் விளங்கிய நூல்களின் பெயரகராதி —

| | | | |
|---|---|---|---|
| ௧. | அகநானூறு | ௧௧ | நற்றிணை. |
| ௨ | ஆசாரக்கோவை | ௧௨ | நாலடியார் |
| ௩ | கலித்தொகை | *௧௩ | நெடுநல்வாடை |
| ௪ | குறுந்தொகை | ௧௪ | பதிற்றுப்பத்து |
| ௫ | சிலப்பதிகாரம் | ௧௫ | பரிபாடல். |
| *௬ | சிறுபாணாற்றுப்படை | ௧௬ | பழமொழி. |
| ௭ | | ௧௭ | புறநானூறு |
| ௮ | | *௧௮ | பெரும்பாணாற்றுப்படை |
| ௯ | திருச்சிற்றம்பலக்கோவையார் | *௧௯ | மதுரைக்காஞ்சி |
| ௧௦ | திருவாசகம் | | |

அடியிற்குறித்தசொற்கள் தத்தம் நேரேயுள்ள வடிவங்களாகப் பழைய ஏட்டுப்பிரதிகளிலிருந்தன. இன்னும் இவ்வாறிருந்த சொற்கள் சில:

| | | | |
|---|---|---|---|
| ௧. | அடம்பு—அடும்பு. | ௭ | கொடிஞ்சி—கொடுஞ்சி |
| ௨. | அணிமை—அணுமை. | ௮ | சந்தி—சந்து. |
| ௩. | கண்டசருக்கரை—கண்டுசருக்கரை | ௯ | ஞெமிர்ந்து—ஞெமர்ந்து. |
| ௪ | கலுழ்தல்—கலிழ்தல் | ௧௦. | தொடங்கல்—துடங்கல். |
| ௫ | குரிசில்—குருசில் | ௧௧ | பரிதி—பருதி. |
| ௬. | குறிஞ்சி—குறுஞ்சி. | ௧௨. | முகூர்த்தம்—முகிழ்த்தம். |

* இவ்வடையாளமுள்ளவை பத்துப்பாட்டினுட்பட்டவையே.

# முகவுரை.

இப்பத்துப்பாட்டு நச்சினார்க்கினியருரையை எனது சிற்றறிவிற்கெட்டியமட்டும் பரிசோதித்துப் பதிப்பித்தேனாதலின், இப்பதிப்பில் ஆங்காங்குக் காணப்படும் பிழைகளையும் அவற்றின் திருத்தங்களையும் தயைசெய்து விவேகிகள் தெரிவிப்பின் அவ்வுதவியை நான் ஒருபொழுதும் மறவேன்.

இவற்றைப் பரிசோதித்துவந்தகாலத்தும் அச்சிட்டுவந்தகாலத்தும் எனது கூடவேயிருந்து உதவிபுரிந்துவந்த திருமானூர் ம-ா-ா-ஸ்ரீ கிருஷ்ணையருடைய நன்றி ஒருபொழுதும் மறக்கற்பாலதன்று.

இக்காலத்து மிக அருகிவழங்குகின்ற பழையநூல்கள் ஒவ்வொன்றையும் ஆராய்ந்து பதிப்பித்தலில் மிக்கவிருப்பமுடையனேனும், சீவகசிந்தாமணி அச்சிடப்பட்டு நிறைவேறியகாலந்தொடங்கி, கொழும்புநகரத்துப் பிரபுசிகாமணியும் செந்தமிழ்ப்பாஷாபிமானியுமாகிய ம-ா-ா-ஸ்ரீ பொ - குமாரசாமிமுதலியாரவர்கள், ஐந்துகாப்பியத்துள் இரண்டாவதாகிய சிலப்பதிகாரத்தை அடியார்க்குநல்லாருரையுடன் பதிப்பித்துப் பிரகடனஞ்செய்யவேண்டுமென்றும் அந்தச்செலவைத் தாம் கொடுப்பதாகவும் அடிக்கடி அன்போடு எழுதியனுப்புதலால், முந்தி அந்நூலை அவ்வுரையுடன் பதிப்பிக்க நிச்சயித்திருக்கிறேன்.

இப்பத்துப்பாட்டைப்போலவே நான்பதிப்பிக்கக்கருதிய நூல்கள் ஒவ்வொன்றையும் கருதியவண்ணம் நிறைவேற்றுதற்பொருட்டும், இம்முயற்சிக்குப் பொருட்கொடையினாலும் மனம் வாக்குக் காயங்களின் முயற்சிகளினாலும் உதவிசெய்துவருவோர் பெருவாழ்வடையும்பொருட்டும் திருவருள்சுரக்கும்படி, சங்கப்புலவர்களின் நடுநாயகமாகவீற்றிருந்து விளங்கிய ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசருடைய திருவடிகளைப் பிரார்த்திக்கின்றேன்.

[தமிழ்த்தெய்வம்]

"மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி
யிறைவர்தம் பெயரை நாட்டி யிலக்கணஞ் செய்யப் பெற்றே
யறைகடல் வரைப்பிற் பாடை யனைத்தும்வென் றாரி யத்தோ
டுறழ்தரு தமிழ்த்தெய் வத்தை யுணர்ந்நினைந் தேத்தல் செய்வாம்"

[சங்கப்புலவர்]

* "தடவரை முனிவ னீன்ற தமிழ்க்கொழுங் குழவி தன்னைப்
படாவெயி லுமிழுஞ் சங்கப் பலகையாந் தொட்டி லேற்றி
நடைவர வளர்த்து ஞால நனந்தலை மறுகில் விட்ட
மடவரு புலமை யோரை மனத்தியா நினைத்து மன்றே."

[நச்சினார்க்கினியர்.]

வெஞ்சுலவு வாயிடைவந் தமுதவா யடையவென்ன வியப்பப் பெற்றோன்
எவன்பண்டைப் பனுவல்பல விறவாது நிலவவுரை யெழுதி யீந்தோன்
எவன்பரம வுபகாரி யெவனச்சி னார்க்கினிய னெனும்பே ராளன்
அவன்பாத விருபோது மெய்ப்போது மலாகவென தகத்து மன்றே.

கும்பகோணம்
விரோதிவருடம்
ஆனிமீ

இங்ஙனம்,
உத்தமதானபுரம்
வே. சாமிநாதையன்.

* சீகாளத்திபுராணம், பாயிரம்.

உ

கணபதி துணை.

# பத்துப்பாட்டு

## நச்சினார்க்கினியருரை.

### முதலாவது

## திருமுருகாற்றுப்படை.

[க.—திருப்பரங்குன்றம்]

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
யுறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
ரு செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோண் முகந்த கமஞ்சூன் மாமழை
வாள்போழ் விசும்பில் வள்ளுறை சிதறித்
தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத்
க0 திருள்படப் பொதுளிய பராரை மராஅத்
துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
கரு கோபத் தன்ன தோயாப் பூந்துகிற்
பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பி
னாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
உ0 துணையோ ராய்ந்த விணையீ ரோதிச்
செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு

பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன்
௨௫ மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்
டுளைப்பூ மருதி னொள்ளிணர் அட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்
௩0 பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
௩௫ குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்டா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி யோங்கிய *வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
௪0 சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்
சூர மகளி ராடுஞ் சோலை
மந்தியு மறியா மரன்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
௪௫ பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
சூர்முத றடிந்த சுடரிலை நெடுவே
லுலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்
கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
௫0 பெருமுலை யலைக்குங் காதிற் பிணர்மோட்
டுருகெழு செலவி னஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்
கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
யொண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர
௫௫ *வென்றடு விறற்களம் பாடித் தோள்பெயரா
நிணந்தின் வாய டுணங்கை தூங்க
இருபே ருருவி னொருபே ரியாக்கை

* வென்றடு விறலென்றும் பாடம்.

யறுவேறு வகையி னஞ்சுவர மண்டி
யவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்
௬௰ மாமுத றடிந்த மறுவில் கொற்றத்
தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் * புலம்பிரிந் துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுட
௬௫ னன்னர் நெஞ்சத் † தின்னசை வாய்ப்ப
வின்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயிற்
௭௰ றிருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயி
னிருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்த லூதி யெற்படக்
௭௫ கண்போன் மலர்ந்த காமர் சுனைமல
ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங்
குன்றமர்ந் துறைதலு முரிய னதாஅன்று

[உ.—திருச்சீரலைவாய்]

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை யோடையொடு துயல்வரப்
௮௰ படுமணி யிரட்டு மருங்கிற் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பிற்
கால்கிளர்ந் தன்ன வேழ மேல்கொண்
டைவே றுருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
௮௫ மின்னுற ழிமைப்பிற் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ
யகலா மீனி னவிர்வன விமைப்பத்
தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்
௯௰ மனனேர் பெழுதரு வாணிற முகனே
மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப்

* புலம்புரிந் துறையுமென்றும் பாடம்.
† இன்னிசை யென்றும் பாடம்.

பல்கதிர் விரிந்தன் றொருமுக மொருமுக்
மார்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே யொருமுக
கூரு மந்திர விதியின் மரபுளி வழாஅ
வந்தணர் வேள்வியோர்க் கும்மே யொருமுக
மெஞ்சிய பொருள்களை யேமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே யொருமுகஞ்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
க00 கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே யொருமுகங்
குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே யாங்கம
மூவிரு முகனு முறைநவின் றொழுகலி
னாரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
க0ரு செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடு
வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள
விண்செலன் மரபினையர்க் கேந்திய தொருகை
யுக்கஞ் சேர்த்திய தொருகை
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய தொருகை
கக0 யங்குசங் கடாவ வொருகை யிருகை
யையிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப வொருகை
மார்பொடு விளங்க வொருகை
தாரொடு பொலிய வொருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை
ககரு பாடின் படுமணி யிரட்ட வொருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய வொருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட வாங்கப்
பன்னிரு கையும் பாற்பட வியற்றி
யந்தரப் பல்லியங் கறங்கத் திண்காழ்
க௨0 வயிரெழுந் திசைப்ப வால்வளை ஞால
வுரந்தலைக் கொண்ட வுருமிடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ
விசும்பா றாக விரைசெலன் முன்னி
யுலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீ
க௨ரு ரலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே யதாஅன்று

[ந.—திருவாவினன்குடி]

சீரை தைஇய வுடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்

மாசற விமைக்கு முருவினர் மானி
னுரிவை தைஇய வூன்கெடு மார்பி
௧௩௦ னென்பெழுந் தியங்கு மியாக்கையர் நன்பகற்
பலவுடன் கழிந்த வுண்டிய ரிகலொடு
செற்ற நீக்கிய மனத்தின ரியாவதுங்
கற்றோ ரறியா வறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
௧௩௫ கடுஞ்சினங் கடிந்த காட்சிய ரிடும்பை
யாவது மறியா வியல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந் தன்ன மாசி றூவுடை
முகைவா யவிழ்ந்த தகைசூ ழாகத்துச்
௧௪௦ செவிநேர்பு வைத்த செய்வுறு திவவி
னல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின
மென்மொழி மேவல ரின்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவி
னவிர்தளிர் புரையு மேனிய ரவிர்தொறும்
௧௪௫ பொன்னுரை கடுக்குந் திதலைய ரின்னகைப்
பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குன்
மாசின் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவோ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
௧௫௦ பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோ
ளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்
மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனு
௧௫௫ நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பி னெழினடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
யெருத்த மேறிய திருக்கிளர் செல்வனு
௧௬௦ நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
வுலகங் காக்கு மொன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவருந் தலைவ ராக
வேமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
தாமரை பயந்த தாவி லூழி

௧௬௫ நான்முக வொருவற் சுட்டிக் காண்வரப்
பகலிற் றோன்று மிகலில் காட்சி
நால்வே றியற்கைப பதினொரு மூவரோ
டொன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
௧௭௦ வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத
தீயெழுந் தனன திறலினர் தீபபட
வுருமிடித தன்ன குரலினர் விழுமிய
வுறுகுறை மருங்கிறறம பெறுமுறை கொண்ம
ரந்தரக கொட்பினர் வந்துடன் காணத்
௧௭௫ தாவில் கொள்கை மடந்தையொடு சின்னா
ளாவி னன்குடி யசைதலு முரிய னதாஅன்

[௪ —திருவேரகம்]

திருமூன றெயதிய வியலபினின் வழாஅ
திருவாச சுட்டிய பலவேறு தொல்குடி
யறுநான் கிரட்டி யிளமை நல்லியாண்
௧௮௦ டாறினிற் கழிபபிய வறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறிதத முததீச் செல்வத
திருபிறப பாளர் பொழுதறிந்து நுவல
வொன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர வுடீஇ
௧௮௫ யுச்சிக் கூபபிய கையினர் தற்புகழ்ந்
தாறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கி னவிலப் பாடி
விரையுறு நறுமல ரேந்திப் பெரிதுவந்
தேரகத் துறைதலு முரிய னதாஅன்று

[௫.—குன்றுதோறாடல்.]

௧௯௦ பைங்கொடி நறைக்கா யிடையிடுபு வேல
னம்பொதிப் புட்டில விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந் தொடுதத கண்ணிய
னறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
௧௯௫ நீடமை விளைந்த தேக்கட் டேறற்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை யயர
விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி

௨00 யிணைத்த கோதை யணைத்த கூந்தன்
முடித்த குல்லை யிலையுடை நறும்பூச்
செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகா ழல்குற் றிளைப்ப வுடீஇ
௨0௫ மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த வாடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளி ரயலலருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
௨௧0 றகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடிய னெடியன் றொடியணி தோளன்
னரம்பார்த் தன்ன வின்குரற் றொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்
மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்
௨௧௫ முழவுறழ் தடக்கையி னியல வேந்தி
மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதோ றாடலு நின்றதன் பண்பே யதாஅன்று

[ரு.—பழமுதிர்சோலை.]

சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
௨௨0 யூரூர் கொண்ட சீர்கெழு விழவினு
மார்வல ரேத்த மேவரு நிலையினும்
வேலன் றைஇய வெறியயர் களனுங்
காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்புஞ்
௨௨௫ சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு
மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர
நெய்யோ டையவி யப்பியை துரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
௨௩0 முரண்கொ ளுருவி னிரண்டுட னுடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பலபிரப் பிரீஇச்
௨௩௫ சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்

பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற வறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பி னன்னகர் வாழ்த்தி
நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி
உ௪0 யிமிழிசை யருவியோ டின்னியங் கறங்க
வுருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகிய நிறுத்து முரணின ருட்க
முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனக
உ௪ரு ராடுகளஞ் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி
யோடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
வாண்டாண் டுறைதலு மறிந்த வாறே
உரு0 யாண்டாண் டாயினு மாகக் காண்டக
முந்துநீ கண்டுழி *முகனமர்ந் தேத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும்பெருஞ் சிமயத்து நீலப் பைஞ்சுனை
யைவரு ளொருவ னங்கை யேற்ப
உருரு வறுவர் பயந்த வாறமர் செல்வ
வாலகெழு கடவுட் புதல்வ மாலவரை
மலைமகண் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
விழையணி சிறப்பிற் பழையோள் குழவி
உகூ0 வானோர் வணங்குவிற் றானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ
செருவி லொருவ பொருவிறன் மள்ள
வந்தணர் வெறுக்கை யறிந்தோர் சொன்மலை
மங்கையர் கணவ மைந்த ரேறே
உகூரு வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே
யரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக
உஎ0 நசையுநர்க் கார்த்து மிசைபே ராள
வலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்

* முகமலர்ந் தேத்தி யென்றும் பாடம்.

மண்டமர் கடந்தநின் வென்று டகலத்துப்
பரிசிலர்த் தாங்கு முருகெழு நெடுவேளே
பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்
௨எரு சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி
போர்மிகு பொருந குரிசி லெனப்பல
யானறி யளவையி னேத்தி யானாது
நின்னளந் தறிதன் மன்னுயிர்க் கருமையி
னின்னடி யுள்ளி வந்தனெ னின்னொடு
௨அ0 புரையுந ரில்லாப் புலமை யோயெனக்
குறித்தது மொழியா வளவையிற் குறித்துடன்
வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
யளியன் றானே முதுவா யிரவலன்
௨அரு வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
வினியவு நல்லவு நனிபல வேத்தித்
தெய்வஞ் சான்ற திறலவிளங் குருவின்
வான்றோய் நிவப்பிற் றான்வந் தெய்தி
யணங்குசா லுயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
௨கூ0 மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி
யஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென
வன்புடை நன்மொழி யளைஇ விளிவின்
றிருணிற முந்நீர் வளைஇய வுலகத்
*தொருநீ யாகித் தோன்ற விழுமிய
௨கூரு பெறலரும் பரிசி னல்குமதி பலவுடன்
வேறுபஃ றுகிலி னுடங்கி யகில்சுமந்
தார முழுமுதல் லுருட்டி வேரற்
பூவுடை யலங்குசினை புலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியிற் றொடுத்த
௩00 தண்கம ழலர்றால் சிதைய நன்பல
வாசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமல ருதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
லிரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
௩0ரு முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறங் கிளரப் பொன்கொழியா
வாழை முழுமுதல் துமியத் தாழை

* ஒருநீ யாகவென்றும் பாடம்.

யிளநீர் விழுக்குலை யுதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
௲௪௦ மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை யிரியக் கேழலோ
டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன
குரூஉமயி ரியாக்கைக் குடாவடி யுளியம
பெருங்கல் விடரளைச செறியக் கருங்கோட்
௲௪௫ டாமா நல்லேறு சிலைப்பச் சேணின்
றிழுமென விழிதரு மருவிப
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

## இதன்பொருள்.

### க.—திருப்பரங்குன்றம்

உலகம் என்பதுமுதற் கணவன் (சு) * என்னுந்துணையும் ஒருதொடர

உலகம் உவப்ப—சீவான்மாககள் உவப்ப,

உலகமென்பது பலபொருளொருசொல்லாய் நிலத்தையும், உயிர்களையும், ஒழுக்கத்தையும உணாததிநிற்குமேனும் ஈண்டு உவப்பவென்றதனுன், மண்ணிடத்து வாழுஞ் சீவான்மாககளை யுணாததிறறு

[வலனோபு திரிதரு:] எாபு வலன் திரிதரு—எழுந்து மகாமேருவை வலமாகத் திரிதலைச்செய்யும்,

பலர் புகழ ஞாயிறு—எல்லாசசமயத்தாரும் புகழும் ஞாயிற்றை,

கடற் கண்டாங்கு—கடலிடததே கண்டாறபோல,

இது வினையெச்சவுவமம்; † "விரவியும் வரூஉ மரபின வென்ப" என்பதனுல், தொழிலுவமமும், வண்ணவுவமமும் பறறிவந்தது; என்னை? ஞாயிறு இருளைக்கெடுக்குமாறுபோலத் தன்னை மனத்தால் நோககுவாாககு மாயையைக் கெடுத்தலிற் றொழிலுவமமும், தன்னைக் கட்புலனுல் நோக்குவார்க்குக கடலிறபசுமையும ஞாயிற்றின் செம்மையும்போல மயிலிற் பசுமையும் திருமேனிச்செம்மையுந் தோன்றலின் வண்ணவுவமமுங கொள்ளக்கிடந்தமை காண்க.

[ஓவற விமைக்குஞ் சேண்விளங்கு கவிரொளி.]

ஓ அற இமைக்கும் அவிர ஒளி—இருவகை யிந்திரியங்களும் தாம் செல்லுதற்குரிய பொருள்கண்மேற் சென்றுதஙகுதல் இல்லையாக இமைத்துப பாாத்தறகுக் காரணமாகும் விளங்குகின்ற ஒளி,

ஓ என்பது ஓரெழுத்தொருமொழியாகிய தொழிற்பெயா. இமைத்தல் - கண்களின் இதழ்களிரண்டினையும் குவித்தல்; அது ‡ "நுதல திமையா நாட்டம" என்பதனுணர்க.

---

* இந்த இயைபிலிசைக்குறிக் குட்பட்ட எண்ணும், இபபடியே பின்னர் ஆங்காங்குப் பதிப்பிக்கப்படும் எண்களும் தத்தம் முன்புள்ள மொழிகளையேனும, அம்மொழிகளைப்பொருளாகப்பெற்ற மொழிகளையேனு முடைய (மூலத்தின்) வரியைப் புலப்படுத்தும்.

† தொல்காப்பியம், பொருளதிகாரம், உவமவியல், உ.

‡ அகநானூறு, "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த், தாரன் மா

சேண் விளங்கு ஒளி—கட்புலனுல்நோக்குவார கண்ணிடங்க ளெல்லாவற்றி னும் சென்றுவிளங்குகின்ற ஒளியினையும்,

உவப்ப எழுந்து திரியும் ஞாயிற்றைக் கடற்கண்டாங்கு அவிாகின்ற ஒளியெனத் தொழிலுவமங் கொள்ளுங்கால் வினைமுடிகக. இனி உவப்ப எழுந்து திரியுஞாயிற் றைக் கடற்கண்டாங்குச் சேணவிளஙகொளியென்ன வண்ணவுவமங கொள்ளுங் கால் வினைமுடிக்க.

உறுநாத் தாங்கிய மதன் உடை நோன் தாள்—தன்னைச்சோந்தவர்கள் தீவினை யைப்போக்கி அவரைத்தாங்கிய, அறியாமையை உடைததற்குக் காரணமாகிய வலி யினையுடைய தாளினையும்,

செறுநாத் தேய்தத செல் உறழ தடக் கை—அழிததறகுரியாரை அழித்த இடி யைமாறுபட்ட பெருமையினையுடைய கையினையும்,

மறு இல் கறபின் வாள் நுதல கணவன்—மறககற்பில்லாத * அறக்கற்பினையும் ஒளிபொருநதிய நுதலினையுமுடைய இந்திரன்மகள் தெய்வயானையார கணவன்·

இப்பெயரை முற்கூறினுர், படைத்தறகுங் காத்தற்கும் உரிமைதோன்ற

ஒளியினையும் (ரு), தாளினையும் (சு), கையினையும (ௗ) உடைய கணவனென முடிக்க.

கணவனென்பது ஈணடு முருகனென்னுந் துணையாய் நின்றது.

கார்கோள் என்பதுமுதல மாாபினன் (கக) என்னுநதுணையும் ஒருதொடர்

காாகோள் முகந்த கமஞ சூல மா மழை—கடலிலே முகந்ததனுலுண்டாகிய நிறைவினையுடைததாகிய சூலினையுடைய பெருமையையுடைய மழை,

காா முகக்கபபடுதலிற கடல காாகோளென்று பெயாபெற்றது, ஆகுபெயர்.

வாள் போழ விசும்பில் வள் உறை சிதறி—திங்களும ஞாயிறும் இருளை நீககும் ஆகாயத்தே பெருமையையுடைய துளியை முற்படச்சிதறி,

வாள் - ஆகுபெயா.

தலைப்பெயல் தலைஇய தண நறுங் கானதது—காாகாலதது முதறபெயலைச் செ ரிநத தணணிய நறிய காட்டிடத்து,

இருள் படப் பொதுளிய பராரை மராஅதது—இருட்சியுண்டாகத் தழைத்த பரிய அடியினையுடைய †செங்கடம்பினது,

பராரை - பணபுதொகைசசந்திமுடிபு வேற்றுமையென்றுமாக

உருள் பூந் தண் தார் புரளும் மார்பினன்—‡ தேருருள்போலும் பூவாற்செய்யப் பட்ட குளிர்ந்த மாலையசையு மாாபினையுடையவன்,

---

லையன் மலைந்த கண்ணியன், மார்பி னஃதே மையி னுணஞா, ணுதல தீமையா நாட்ட மிகலட்டுக், கையது கணிச்சியொடு மழுவே மூவாய், வேலு முண்டத தோ்லா தோ ழகே, யூாந்த தேறே சோ்ந்தோ ளுமையே, செவ்வா னன்ன மேனி யவ்வா, னில ஙகுபிறை யன்ன விளஙகுவால் வையெயிற், றெரியகைந் தன்ன வவிா்ந்துவிளங்கு புரிசடை, முதிராத் திஙகளொடு சுடருஞ் சென்னி, மூவா வமரரு முனிவரும் பிறரு, மியாவரு மறியாத் தொன்முறை மரபின், வரிகிளர் வயமா னுரிவை தைஇய, யாழ் கெழு மணிமிடற் றந்தணன், றூவி றூணிழற் றவிாந்தன்று லுலகே'' கடவுள் வாழ்த்து; பாரதம் பாடிய பெருந் தேவனுர்

* அருட்கற்பென்றும் பிரதிவேறுபாடுண்டு.

† வெண்கடம்பென்றும் பிரதிவேறுபாடுண்டு.

‡ ''உருளிணர்க் கடம்பி னெலிதா ரோயே'' என்றுர் பரிபாடலிலும்.

உருள்பூ உவமத்தொகையாகலின், உருள்பூ உருட்பூவென உறழ்ச்சிமுடிபெய்தும். இனி உருளும்பூ உருண்டபூவென வினைத்தொகையுமாம்

மழை சிதறித் தலைஇய கானத்து மராஅத்துத தார் புரளும் மார்பினனென முடிக்க.

இது போகத்திற்குரிய தார்; இதனை முற்கூறினார், வாணுதல்கணவனென்றதனைநோக்கி.

மால்வரை என்பதுமுதற சென்னியன் (௬௪) என்னுந்துணையும் ஒருதொடர்.

மால் வரை நிவந்த சேண் உயர் வெற்பில—பெருமையையுடைய மூங்கில்வளர்ந்த தேவருலகளவாகச செல்லவுயாநத மலையில்,

வரைகளை யுடைமையின், வரையாயிறறு, இஃது ஆகுபெயர்; * "பெரிய வரை வயிரங் கொண்டு" என்றார் பிறரும் இனித திருமாலபோலும் குவடுகளோங்கிய வெற்பென்றுமாம்; "மாயோ னன்ன மால்வரைக கவாஅன்" என்றார்பிறரும.

கிண்கிணி கவைஇய ஒண் செஞ் சீறடி—சிறுசதங்கைசூழ்ந்த ஒள்ளிதாகிய சிவந்த சிறிய அடியினையும்,

கணைக் கால்—திரண்ட காலினையும்,

வாங்கிய நுசுப்பின்—வளைந்துநுடங்கிய இடையினையும்,

பணைத் தோள—பெருமையையுடைய தோளினையும,

மூங்கில்போலுந் தோளென்றுமாம்

கோபத்து அன்ன தோயாப் பூந் துகில்—இந்திரகோபத்தையொத்த நிறம்பிடியாத இயல்பான சிவப்பாகிய பூததொழிலினையுடைய துகிலினையும,

தெய்வத்தின் ஆணையாற் றானே சிவந்திருத்தலிற் றோயாத்துகிலெனறார்.

பல் காசு நிரைத்த சில் காழ அல்குல்—பலமணிகள்கோத்த ஏழுவடமாகிய மேகலையையணிந்த அல்குலினையும்,

அஃது, † "எண்கோவை காஞ்சி யெழுகோவை மேகலை - பண்கொள் கலாபம் பதினாறு - கண்கொள் - பருமம் பதினெட்டு முப்பத திரணடு - விரிசிகை யென் றுணரற் பாற்று." என்பதனானுணர்க

கை புனைந்து இயற்றாக் கவின் பெறு வனப்பின்—ஒருவர் கையாற சிறப்பித்துப் பிறப்பியாத அழகைத் தமக்கு இயல்பாகப்பெறுகின்ற அழகினையும்,

என்றது: மானிடமகளிர்க்குத் தாயாபலருங் கைசெய்து பிறப்பிக்கும் அழகன்றி இவர் தெய்வத்தன்மையான் இயல்பாகப்பெற்ற அழகினையுடையரென்றவாறு

நாவலொடு பெயரிய பொலம் புனை அவிர் இழை—சாம்பூநதமென்று நாவலோடுத்துப் பெயர்பெற்ற பொன்னாலே திருத்தது விளங்குகின்ற பூணினையும்,

பொலம - ‡ "பொன்னென் கிளவி" என்பதனான்முடிக்க.

சேண் இகநது விளங்கும் செயிர் தீர மேனி—சேய்நிலத்தைக் கடந்து விளங்குகின்ற குற்றநதீர்ந்த நிறத்தினையுமுடைய சூரரமகளிர் (௬௧) என்க

* வெண்பா. "அரிய வரைகீண்டு காட்டுவார் யாரோ - பெரிய வரைவயிரங் கொண்டு - தெரியிற - கரிய வரைநிலையார் காயந்தாலென் செயவார் - பெரிய வரைவயிரங் கொண்டு"

† "எண்கோவை மேகலை காஞ்சி யிருகோவை - பண்கொள் கலாபமிரு பத்தொன்று - கண்கொள் - பருமம் பதினைங்கு முப்பத் திரண்டு - விரிசிகை யென்றுரைரற் பாற்று" எனவும் பாடம்.

‡ தொல்காப்பியம, எழுததிகாரம், புள்ளிமயங்கியல், ௬௧.

துணையோர் ஆய்ந்த இணை ஈர் ஓதி—ஆயத்தார் நன்றென்றாராய்ந்த கடை யொத்த நெய்ப்பினையுடைய மயிரிலே,

[செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு, பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளி:] செங்கால் வெட்சிச் சிறிதழ் இடைப் பைந்தாட் குவளைத் தூ இதழ கிள்ளி இடுபு—சிவந்தகாலையுடைய வெட்சியுடைய சிறிய பூக்களை விடுபூவாகத்தூவி அதற்குநடுவே பசுத்த தண்டினையுடைய குவளையினது தூய இதழ்களைக் கிள்ளியிட்டு,

தெய்வ உத்தியொடு வலம்புரி வயின் வைத்து—சீதேவியென்னுந் தலைக்கோலத் துடனே வலம்புரிவடிவாகச்செய்த தலைக்கோலத்தையும் வைத்தற்குரிய இடத்தே வைத்து,

திலகம் தைஇய தேங் கமழ் திரு நுதல் மகரப் பகு வாய் தாழ மண்ணுறுத்து—திலகமிட்ட மணநாறுகின்ற அழகினையுடைய நெற்றியின்கண்ணே சுறாவினது அங் காந்த வாயாகப்பண்ணின தலைக்கோலந் தங்கப்பண்ணி,

மகரப்பகுவாய் - ஆகுபெயர் மண்ணுறுத்தலை, *" ஆவுதி மண்ணி" என்ற போலக்கொள்க இனி மண்ணுறுத்துத் துவரமுடித்தவென மேலேகூட்டிக் கழுவி முடித்தவென்றுமாம்.

துவர முடித்த துகள் அறும் முச்சிப் பெருந் தண் சண்பகம் செரீஇ—வேண்டு வனகூட்டி முற்றமுடித்த குற்றமறுகின்ற கொண்டையிலே பெரிய குளிர்ந்த சண்ப கப்பூவைச் செருகி,

கருந் தகட்டு உளைப் பூ மருதின் ஒள் இணர் அட்டி—கரிய புறவிதழினையும் மே லிற் றுய்யினையுமுடைய பூக்களையுடைய மருதினது ஒள்ளிய பூங்கொத்துக்களை அதன் மேலேயிட்டு,

இது முதலாகிய பொருட்கேற்ற அடையடுத்துநின்றது

கிளைக் கவின்று எழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு இணைப்புறு பிணையல் வளைஇ—பசு சென்ற அரும்புகளினின்றும் மேலேபோந்து அழகுபெற்றுத் தோன்றுகின்ற நீர்க்கீழ் நின்ற சிவந்த அரும்பைக் கட்டுதலுறுகின்ற மாலையை வளையவைத்து,

கவினென்னும் பண்படியாகக் கவினறென்னுந் தொழில பிறந்தது. கீழ்நீர்-நீர்க்கீழென்னும் இலக்கணத்தோடு பொருந்திய மரூஉ. அது மிகச்சிவத்தலின், ஒப்பனைக்குக் கொள்வர்

[துணைத்தக, வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர், நுண்பூ ணாகந் திளைப்ப] வண் காது துணைத் தக நிறைந்த பிண்டி ஒண் தளிர் நுண் பூண் ஆகம் திளைப்ப—வளவிய காதிலே தம்மில ஒத்தற்குப் பொருந்த இட்டு நிறைந்த பிண்டியி னது ஒள்ளிய தளிர் நுண்ணிய பூணையுடைய மார்பிடத்தே அசையாநிற்க,

திண் காழ் நறுங் குறடு உரிஞ்சிய பூங் கேழ்த் தேய்வை தேங்கமழ் மருது இணர் கடுப்பக் கோங்கின் குவி முகிழ் இளமுலைக் கொட்டி—திண்ணிய வயிரத்தையுடைய நறிய சந்தனத்தையுரைத்த பொலிவினையுடைய நிறத்தையுடைத்தாகிய குழம்பை மணநாறுகின்ற மருதம்பூவை அப்பினாற்போலக் கோங்கினது குவிந்த அரும்பை யொத்த இளமுலையிலே அப்பி,

மருதிணர் - நிறத்திற்குவமம்.

விரி மலர் வேங்கை நுண் தாது அப்பி—அவ்வீரம்புலர்வதற்கு முன்னே விரிந்த மலரையுடைய வேங்கைப்பூவினது நுண்ணிய தாதையும் அதன்மேலே அப்பி,

* மதுரைக்காஞ்சி: " ஆவுதி மண்ணி யவிர்துகின் முடித்து - மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல"

[காண்வர, வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா:] வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு காண் வரத் தெறியா—விளவினது சிறிய தளிரைக்கிள்ளி அழகுவர ஒருவர்மேல்ஒருவர் தெறித்துத் தப்பாமற பட்டபொழுது,

[கோழி யோங்கிய வென்றடு விறறகொடி, வாழிய பெரிதென் றேத்தி] வென்று அடு விறல கோழி ஒஙகிய கொடி பெரிது வாழிய என்று ஏத்தி—வஞ்சியாது எதிர்நின்று அடுகின்ற வெற்றியையுடைய கோழி மேலாயநின்ற கொடி நெடுங்காலம் வாழ்வதாக வென்று வாழ்த்தி,

[பலருடன், சீர்திகழ சிலமபகஞ் சிலமபப் பாடிச, சூரர மகளி ராடுஞ் சோலை.] சூர் அரமகளிா பலருடன் சீா திகழ் சிலம்பகம சிலமபப் பாடி ஆடும் சோலை—கொடுமையையுடைய தெய்வமகளிா பலருங் கூடிச் சீர்மை விளஙகுகின்ற மலையிடமெல்லாம் ஆரவாரிககப் பாடி ஆடுஞ சோலையினையுடைய,

மந்தியும் அறியா மரன் பயில அடுக்கத்து—மரமேறுதற்றொழிலிற் சிறப்புடைய மந்திகளும் மரஙகளினீட்டததால் ஏறியறியாத மரநெருங்கின பககமலையிடத்து நின்ற,

உம்மை - சிறப்பும்மை.

சுரும்பும் மூசாச சுடாப பூவ காந்தட் பெருந தண் கணணி மிலைந்த சென்னியன் — தான் விருமபுதலிற சுருமபினமும மொய்யாத நெருப்புப்போலும் பூவினையுடைய செங்காந்தளினது பெரிய குளிர்ந்த கணணியைச் சூடிய திருமுடியையுடையவன்,

அடியினையும் (கரு) காலினையும நுசுப்பினையும் தோளினையும் (கசு) துகிலினையும் (கரு) அல்குலினையும (கசு) வனபபினையும (கஎ) இழையினையும் (கஅ) மேனியினையும் (கக) உடைய சூரரமகளிா (சுக) பலருஙகூடி (ருக) இடையிட்டு (உக) வைத்துத் (உரு) தாழப்டணணிச் (உகு) செரீஇ (உஎ) இணரட்டி (உஅ) வளைஇத (ரு0) கிளையாரிறகக் (ருஉ) கொட்டி (ருகு) அபயித் (ருசு)) தெறித்து (ருஎ) ஏத்திப்(ருகு)பாடி (சு0) ஆடுஞ்சோலையையுடைய (சுக) வெற்பில் (கஉ) அடுககத்துக் (சுஉ) காந்தட்கண்ணிமிலைந்த சென்னியனென முடிக்க.

இதனான் அடையாளப்பூக் கூறினா. இது *"வெறியாட் டயாந்த காந்தளும்" என்பதனானுணாக.

† "அகன்றுபொருள கிடப்பினு மணுகிய நிலையினு, மியன்றுபொருண முடியத் தந்தன ருணாத்தன், மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்" என்னும் மாட்டிலக்கணத்தான், இப்பாட்டுக்கள்பத்துஞ் செயதார்களாதலின், இவ்வாறே மாட்டிமுடித்தல் யாண்டும் வருமென்றுணர்க

பார் என்பதுமுதற சேய் (சுக) எனனுநதுணையுமொருதொடா.

‡ பார் முதிா பனிக் கடல் கலங்க உள் புககு—பாராகிய நிலம முற்றுப் பெற்ற தளிர்ச்சியையுடைய கடல தன் நிலைகுலையும்படி உள்ளேசென்று,

பாா - பாறை மண்ணிடத்தே முதிர்ந்த கடலென்றுமாம்.

சூா முதல தடிந்த சுடா இலை நெடு வேல்—சூரபன்மாவாகிய தலைவனைக்கொன்ற ஒளிகின்ற இலைத்தொழிலையுடைய நெடிய வேலாலே,

உலறிய கதுப்பின்—காய்ந்த மயிரினையும,

பிறழ்பல்—நிரை யொவ்வாத பல்லினையும்,

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறததிணையியல், ரு.

† செய்யுளியல், உகக.

‡ "பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு" என்றூர் பரிபாடலிலும்

பேழ் வாய்—பெருமையையுடைய வாயினையும்,
சுழல் விழிப பசுங் கண—கோபத்தாற் சுழலும் விழியையுடைய பசிய கண்ணி

சூர்த்த நோக்கின்—கொடுமைசெய்த பார்வையினையும்,
கழல் கண் கூகையொடு கடும் பாம்பு தூங்கப் பெரு முலை அலைக்கும் காதின்—பிதுங்கிய கண்ணையுடைய கூகையோடே கடிய பாம்பு தூஙகுகையினாலே பெரிய முலையை வருத்துகின்ற காதினையும்,
பிணா மோட்டு—சருச்சரையையுடைய பெரிய உடலினையும்,
மோடு - வயிறுமாம்.
உரு கெழு செலவின்—கணடார உட்குதல பொருந்தும் நடையினையுமுடைய,
அஞசு வரு பேய மகள்—கணடாரககு அச்சநதோன்றுகின்ற பேயாகியமகள்,
குருதி ஆடிய கூா உகிாக கொடு விரல கண தொட்டு உணட கழி முடைக் கருந் தலை—உதிரததையளைந்த கூரிய உகிரினையுடைய கொடியவிரலாலே கணகளைத தோணடி யுண்ணப்பட்ட மிகக முடைநாற்றத்தையுடைய கரிய தலையை,
இனித தொட்டென்பதனை வினையெச்சமாககாது தொழிற்பெயராக்கிக் கண் தோண்டுதலுணடவென்று கூறுதலுமாம
ஒண தொடித் தடக கையின ஏந்தி—ஒளளிய தொடியினையுடைய பெருமையை யுடைய கையிலே எடுதது,
வெருவர ஒன்று அடி விறற களம் பாடி—அவுணாககு அசசந்தோன்ற வஞசியாது எதிர்நின்று கொல்கின்ற வெறறிக்களததைப பாடி,
தோள் பெயரா—தோளையசைதது,
நிணம் தின் வாயள்—நிணத்தைத் தின்கின்ற வாயினையுடையளாய்,
வாயள் - வினையெச்சமுற்று
துணங்கை தூஙக—துணங்கைக்கூததாட,
* "பழுப்புடை யிருகை முடக்கி யடிககத, துடககிய நடையது துணஙகை யாகும்"
கதுப்பு (சஎ) முதலியவறறையுடைய பேய்மகள் (ருக) தலையை (ருகூ) யேந்தி (ருச) வாயளாயப் (ருசு) பாடித (ருரு) தூஙக வென முடிகக
இரு பேர உருவின் ஒரு பேர் யாக்கை—மககள்வடிவும் விலங்கின்வடிவுமாகிய † இரண்டு பெரிய வடிவினையுடைய ஒன்றாகிய பெரிய உடல,
அறு வேறு வகையின் அஞ்சுவர மண்டி—ஆறாகிய வேறுபட்ட கூற்றாலே அச்சந்தோன்ற மிககுச்சென்று,
என்றதனுன், இறைவன உமையை வதுவைசெய்துகொணடநாளிலே இந்திரன் சென்று நீ புணாச்சிதவிரவேண்டுமென்று வேணடிககொள்ள அவனும் அதற்குஉடம் பட்டு அது தப்பாகுகிப புணாச்சிதவிர்ந்து கருப்பத்தை இந்திரன்கையிற் கொடுப்ப

* "முடக்கிய விருகை பழுபபுடை யொறறத் - துடக்கிய நடையது துணங கை யாகும்" எனவும் பாடம்.

† இரணடு பெரிய வடிவினையுடைய ஒன்றாகிய பெரிய வுடலென்றது, முகம் குதிரைமுகமும், உடல் மக்களுடலுமாகிய சூரபன்மாவினது உடலத்தை. இத னைக் கலித்தொகையில், "வணங்கு சாந்தம்" என்னும மருதக்கலியில் "ஈரணிக் கேறறவொடியாப படிவத்துச், சூா" என்பதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை யானுணர்க.

அதனை இருடிகளுணர்ந்து அவன்பக்கனின்றும் வாங்கித் தமக்குத்தரித்தல் அரிதாகை யினாலே இறைவன்கூறிய முத்தீக்கட்பெய்து அதனைத் தம்மனைவியர்கையிற் கொடுப்ப அருந்ததியொழிந்த அறுவரும் வாங்கிக்கொண்டு விழுங்கிச் சூன்முதிர்ந்து சரவணப்பொய்கையிற் பதுமப்பாயலிலே பயந்தாராக, ஆறுகூறுகி வளராகின்றகாலத்து இந்திரன் தான் இருடிகளுக்குக் கொடுத்தநிலையை மறநது ஆண்டுவந்து வச்சிரத்தான் எறிய அவ்வாறுவடிவுமொன்றாய அவனுடனே பொருது அவனைக்கெடுத்துப் பின் சூரபன்மாவைக் கொல்லுதற்கு அவ்வடிவம் ஆறாகிய வேறுபட்ட கூறாலே மணடிச்சென்றதென்று புராணங்கூறிற்று இதனைப் *"பாயிரும் பனிக்கடல்" என்னும் பரிபாடற்பாட்டானுணர்க. இவ்வாறன்றி வேறு வேறு புராணங் கூறுவாருமுளர்.

இனி அவனுடல் அற்று வேறு வேறாம் வகையாலென்றுமாம.

அவுணர நல்வலம அடஙக—அவனையொழிந்த அவுணருடைய நல்லவெற்றி இல்லையாம்படி,

அடங்க என்றது "களமடங்க" என்றாற்போலக் கொள்க.

கவிழ் இணர மா முதல் தடிந்த—கீழ்நோக்கின பூங்கொத்துக்களையுடைய †மாமரத்தை வெட்டின,

என்றது - அவுணரெல்லாருந் தம்முடனே எதிராந்தார்வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங்கொண்டிருந்து சாதித்ததொரு மாவைவெட்டினனென்றவாறு.

மறு இல் கொறறத்து—குற்றமில்லாத வெற்றியினையும்,

எய்யா நல்லிசை—ஒருவரானும் அளந்தறியவொண்ணாத நல்ல புகழினையுமுடைய,

செவ்வேற சேஎய்—செய்ய வேலையுடைய சேய்,

எககாலும் போர்செய்தலிற செவ்வேலென்றார் செய்யவனென்பது சேஎயென விகாரத்தால் நீண்டதென்றுமாம

கடல்கலஙக உள்புக்குச் (௪௫) சூர்முதலுடைய ஒருபேரியாக்கை (௫௭) அறுவேறுவகையின் அஞ்சுவர மண்டிச்சென்று (௫௮) பேய்மகள் (௫௧) துணங்கைதூங்கும்படியாக (௫௬) அசுரர்முதறடிந்த வேலானே (௪௬) பின்னும் அவுணர்நல்வலமடங்க (௫௯) மாமுதறடிந்த கொற்றத்தினையும் (௬௦) நல்லிசையினையுமுடைய சேஎயென முடிக்க.

கணவன்(௬) மார்பினன்(௧௧) சேனனியனாகிய (௪௪) சேஎயென ஒருபொருள் குறித்த வேறுபெயராய் நின்றன.

[சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு, நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்:]

புலம் பிரிந்து உறையும் அடி—மெய்ஞ்ஞானத்தான் அறிதலைக் கைவிட்டுத் தங்குந் திருவடி,

* பரிபாடல், ௫.

† "உயிர்புகுஞ் சட்டக முழிதொறு முழிதொறும், பழவினை புகுந்த பரிசுபோல, முதிர்புயல் குளிறு மெழுமலை புக்க, கட்டுடைச் சூருடல் காமங் கொண்டு பற்றியுட் புகுந்து பசுங்கடல் கண்டு, மாவொடுங் கொன்ற மணிநெடுந் திருவேற் சேவலங் கொடியோன்" என்றார் கல்லாடத்திலும்.

திருவடியே வீடாயிருக்குமென்றா, அது *"தென்னன் பெருந்துறையான் - காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித் - தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி" என்பதனானும், பிறருந் திருவடியைக் கூறுமாற்றானு முணர்க.

சேவடி படரும் நலம் புரி கொள்கைச் செம்மல் உள்ளமொடு—அத் திருவடியிற் செல்லுதற்குக் காரணமான நல்வினைகளைப் பலபிறப்புக்களிலும் விரும்பிநிகழ்த்தின கோட்பாட்டானே தலைமையினையுடைத்தாகிய உள்ளத்தோடே,

செலவு நீ நயந்தனையாயின்—செல்லுஞ்செலவை நீ விரும்பியேவிட்டாயாயின்,

[பலவுடன், னன்னா நெஞ்சத் தின்னசை வாய்ப்ப, வின்னே பெறுதிநீ முன்னிய வினையே:] நீ முன்னிய வினை பலவுடன் நன்னா நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப இன்னே பெறுதி—நீ முற்பிறப்பிற் கருதிச்செய்த நல்வினையாலே வீடுபெறுவார்க்கு உரியனவாகக்கூறிய நற்குணங்கள் பலவுஞ்சேர நன்றாகிய நெஞ்சத்திலுண்டாகிய இனிய வீடுபேற்றைத் தப்பாமல் இப்பொழுதே பெறுவை,

செருப் புகன்று எடுத்த சேண் உயர் நெடுங் கொடி—போரைவென்று விரும்பிக் கட்டின சேய்நிலத்தே சென்றுயர்ந்த நெடியகொடிக்கருகே,

வரிப் புனை பந்தொடு பாவை தூங்க—நூலால் வரிந்துபுனையப்பட்ட பந்தும் பாவையும் அறுப்பாரின்மையிற் றூங்கியேவிடும்படி,

+ என்றது பகைவரை மகளிராக்கி அவர் கொண்டுவிளையாடுதற்குத் தூக்கின வென்றவாறு.

பொருநர்த் தேய்த்த போர் அரு வாயில்—பொருவாரை இல்லையாக்குகையினாலே எக்காலமும் போர்த்தொழிலரிதாகிய வாயிலினையும்,

திரு வீற்றிருந்த தீது தீர் நியமத்து—திருமகள் வருத்தமின்றியிருந்த குற்றந்தீர்ந்த அங்காடித்தெருவினையும்,

மாடம் மலி மறுகிற் கூடற் குடவயின்—மாடங்களமிக்க ஏனைத்தெருக்களையுமுடைய மதுரையின் மேற்றிசையிடத்து,

அம் சிறை வண்டின் அரிக் கணம் (எசு)—அழகினையுடைத்தாகிய சிறகையுடைய வண்டினுடைய அழகினையுடைய திரள்,

இருஞ் சேற்று அகல் வயல் விரிந்து வாய் அவிழ்ந்த — கரிய சேற்றினையுடைய அகன்றவயலிலே முறுக்குநெகிழ்ந்து பின்பு தாதும் அல்லியுந் தோன்றமலர்ந்த,

முள் தாள் தாமரைத் துஞ்சி—முள்ளையுடைத்தாகிய தாளையுடைய தாமரைப்பூவிலே இராப்பொழுது துயில்கொண்டு,

வைகறைக் கள் கமழ் நெய்தல் ஊதி—விடியற்காலத்தே தேன் நாறுகின்ற நெய்

எற்படு—ஞாயிறு தோன்றின காலத்தே,

[கண்போன் மலர்ந்த காமர் சுனைமலர், அஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங், குன்றமர் துறைதலு முரியன்]

அஞ்சிறைவண்டி னரிக்கணமென்பது முன்னேகூட்டிற்று.

* திருவாசகம், திருவம்மானை, சு "கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன் - தீட்டார் மதிற்புடைசூழ் தென்னன் பெருந்துறையான் - காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித் - தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி - நாட்டார் நகைசெய்ய நாமேலை வீடெய்த - ஆட்டாண்கொண் டாண்டவா பாடுதுங்காண் அம்மானாய்"

கண் போல் மலர்ந்த காமர் சுனை மலர் ஒலிக்கும் குன்று அமர்ந்து உறைதலும் உரியன்—கண்ணையொக்க விரிந்த விருப்பமருவின சுனைப்பூக்களிலே சென்று ஆரவாரிக்குந் திருப்பரங்குன்றிலே நெஞ்சமர்ந்திருத்தலு முரியன்;

உம்மை - எதிரதுதழீஇய எச்சவும்மை கூடற்குடவயிற குன்று, வண்டினரிக் கணம் துஞ்சி ஊதி ஒலிக்கும் குன்று.

அதாஅன்று—அதுவன்றி,

அதாஅன்றென அகரமிட்டெழுதுக. இதனை *"அன்றுவரு காலை" என்பதனுனும், †"இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி" என்பதனுள் "தொன்றியன் மருங்கின்" என்பதனுனு முடிக்க

உ.—திருச்சீரலைவாய்

வைந்நுதி யென்பது முதல அலைவாய்ச்சேறல (கஉரு) என்னுந்துணையுமொரு தொடர்.

வை நுதி பொருத வடு ஆழ வரி நுதல்—கூர்மையையுடைத்தாகிய தோட்டிவெட்டின வடுவழுந்தின புகரையுடைய மத்தகத்தே,

வைந்நுதி - ஆகுபெயர்

வாடா மாலை ஓடையொடு துயல்வர—பொன்னரிமாலை பட்டத்தோடேகிடந்து அசைய,

படும் மணி இரட்டும் மருங்கின—தாழ்கின்ற மணி மாறியொலிக்கின்ற பக்கத்தினையும்,

கடு நடை—கடிய நடையினையும்,

கூற்றத்து அன்ன மாற்றரு மொய்ம்பின்—கூற்றுவனையொத்த பிறரால் தடுத்தற்கரிய வலியினையுமுடைய,

கால் கிளர்ந்தன்ன வேழம் மேல்கொண்டு—ஓடுங்கால் காற்றெழுந்தாலொத்த களிற்றை யேறி,

மருங்கு முதலியவற்றையுடைய வேழத்தை நுதலிலே மாலை பட்டத்தோடே யசைய ஏறியென முடிக்க

ஐ வேறு உருவின் செய் வினை முற்றிய முடியொடு விளங்கிய முரண மிகு திரு மணி—ஐந்தாகிய வேறுபட்ட வடிவினையுடைய (முடிக்குச்)செய்யுந் தொழிலெல்லாம் முற்றுப்பெற்ற முடியோடேகூடிவிளங்கிய ஒன்றற்கொன்று மாறுபாடுமிகும் அழகினையுடைய மணி,

ஐவேறுருவு "தாம முகுடம் பதுமங் கிம்புரி, கோடக மிவைமுடிக் கைவே றுருவே"

மின் உறழ் இமைப்பிற் சென்னிப் பொற்ப—மின்னோடே மாறுபடுகின்ற விளக்கத்தோடே முடியிலே பொலிவுபெற,

நகை தாழ்பு துயல்வரூஉம் வகை அமை பொலங் குழை—ஒளி தங்கியசையும் தொழிற்கூறமைந்த பொன்னாற்செய்த மகரக்குழை,

சேண் விளங்கு இயற்கை வாள் மதி கவைஇ அகலா மீனின் அவிர்வன இமைப்ப—சேய்நிலத்தேசென்று விளங்கும் இயல்பினையுடைய ஒளியையுடைய மதியைச் சூழ்ந்து நீங்காத மீன்கள்போல விளங்குவனவாய் ஒளியைசகால,

மீன் - உரோகிணிமுதலியன, வியாழமும் வெள்ளியுமாம்.

---

* தொல்காப்பியம், எழுத்ததிகாரம், உயிர்மயங்கியல், ருக

† ,, ,, ,, கூரு

தா இல் கொள்கைத் தம் தொழில் முடிமார்—வருத்தமில்லாத விரதங்களையு டைய தவத்தொழிலை முடிப்பாருடைய,

மனன் நேர்பு எழுதரு வாள் நிற முகன்—மனத்திலே பொருந்தித் தோன்று கின்ற ஒளியையுடைய நிறத்தையுடைய முகங்களிலே,

பொற்ப (அகு) இமைப்ப (அஅ) எழுதருமுகனென்க.

முகனென்றது ஆற்றுக்கும் பொது.

[மாயிருண் ஞாலம் மறுவின்றி விளங்கப், பலகதிர் விரிந்தன் றொருமுகம்] ஒருமு கம் மா இருள் ஞாலம் மறு இன்றி விளங்கப் பலகதிர் விரிந்தன்று—ஒருமுகம் பெரு மையையுடைத்தாகிய இருட்சியையுடைய உலகம் குற்றமின்றாய் விளங்கும்படி பலகிரணங்களையும் தோற்றுவித்தது,

ஒருமுகமென்று முன்னே கூட்டிப் பொருள் கொள்க.

ஒருமுகம் ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகிக் காதலின் உவந்து வரம் கொ டுத்தன்று—ஒருமுகம் தன்மேல் அன்புசெய்தவர்கள் துதிக்க அதற்குப் பொருந்தி அ வர்க்கினிதாக நடந்து அவர்மேற்சென்ற காதலாலே மகிழ்ந்து வேண்டும்பொருள் களை முடித்துக் கொடுத்தது,

ஒருமுகம் மந்திர விதியின் மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி ஓர்க்கும்—ஒருமுக ம் மந்திரத்தையுடைய வேதத்திற்கூறிய முறைமையிடத்துத் தப்பாத அந்தணரு டைய யாகங்களில் தீங்குவாராதப்படி நினையாநிற்கும்,

அந்தத்தை அணவுவார் அந்தணர். என்றது-வேதாந்தத்தையே நோக்குவாரொன் றவாறு

[ஒருமுக, மெஞ்சிய பொருள்களை யேமுற நாடித், திங்கள் போலத் திசைவிளக் கும்மே.] ஒருமுகம் எஞ்சிய பொருள்களை நாடி ஏம உறத் திங்கள் போலத் திசை விளக்கும—ஒருமுகம் காண்டு வழங்காத வேதங்களினும் நூல்களினுமுள்ள பொருள்க ளையாராய்ந்து இருடிக ளேமுறும்படி உணர்த்தித் திங்கள்போலத் திசைகளெல்லாம் விளக்குவிக்கும்,

ஏமம் - இரட்சை கலைநிறைதலிற் றிங்கள் உவமையாயிற்று

[ஒருமுகஞ், செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்,கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே] ஒருமுகம் செல் சமம் முருக்கிக் கறுவு கொள் நெஞ்சமொடு செறுநர்த் தேயத்துக் களம் வேட்டன்று—ஒருமுகம் திருவுள்ளத்துச் செல்கின்ற நடு வுநிலைமையைக் கெடுத்து இவர்களைக் கொல்லவேண்டுமென்று கறுவுதல் கொண்ட திருவுள்ளத்தோடே செறப்படும் அசுரர் முதலியோரைப் பொன்றக் கெடுத்துக் கள வேள்வியை வேட்டது,

சமம் - நடுவுநிலைமை அதனைக் கெடுத்தலாவது - தேவரையும் அசுரரையும் ஒப் பக்கருதாது தேவர்பக்கத்தது அசுரரையழித்தல்

[ஒருமுகங், குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின, மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே.]

ஒருமுகம் குறவர் மடமகள் கொடி போல நுசுப்பின் வள்ளியொடு நகை அமர் ந்தன்று—ஒருமுகம் குறவருடைய மடப்பத்தையுடைய மகளாகிய வல்லிபோலும் இடையினையுடைய வள்ளியுடனே மகிழ்ச்சியைப் பொருந்திற்று;

மடவரல் நகையெனக் கூட்டித் தனக்கு ஒரறியாமைதோன்றுந் தன்மை யுடைத்தாகிய நகையென்று கூறுக.

அவளோடு *நகையமர்தலின் அறியாமை கூறினா. காமநுகர்ச்சி யில்லாத இறைவன் இங்ஙனம் நகையமர்ந்தான், உலகில் இல்வாழக்கை நடத்தற்கென்றாணாக. அது "தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்" என்பதனுட் "பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர் - விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ" என்பதனானுணாக.

விரிந்தன்று (கூஉ), கொடுத்தன்று (கூச), வேட்டன்று (க00), நகையமர்ந்தன்று (க0௨), ஓக்கும் (கூகூ), விளக்கும் (கூஅ) எனபன முற்றுச்சொல

[ஆங்கம, மூவிரு முகனு முறைநவின் றொழுகலின ]

அம் மூவிரு முகனும் — அவ்வாறுமுகமும்,

ஆங்கு முறை நவின்று ஒழுகலின்—அததொழில்களிடத்துச் செய்யும் முறைமைகளைப் பயினறு நடத்துகையினாலே அமமுகங்களுக்குப் பொருந்த,

[ஆரந் தாழ்நத வம்பகட்டு மாாபிற, செம்பொறி வாங்கிய மொய்யமபிற் சுடா விடுபு, வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிாதோள் ]

ஆரம் தாழ்ந்த அம் பகட்டு மாாபிற் செம்பொறி வாங்கிய தோள்—பொன்னாற் செய்த ஆரந்தங்கிய அழகையுடைத்தாகிய பெருமையை யுடைய மாாபிற்கிடக்கின்ற உத்தம இலக்கணமாகிய சிவந்த மூனறுவரியினையும தனனிடத்தே வந்து விழும்படி வாங்கிக்கொண்ட தோள்,

வாஙகிய வென்றா, அவ்வரி தோளளவும வந்துகிடந்தமை தோனற, ‡ "வரையகன் மார்பிடை வரையு மூன்றுள" எனறா பிறரும.

மொய்ம்பின் வண புகழ நிறைநது—தம முடைய வலியினாலே பெரிய புகழ நிறையப்பட்டு,

§சுடர் விடுபு வசிந்து வாஙகு தோள்—சுடரையுடைய படைக்கலங்களை யெறிந்து பகைவர்மாாபைப் பிளந்து அவற்றை வாஙகுந்தோள்,

சுடரையுடைய படைக்கலஙகளைச் சுடரென்றா, அஃது ஆகுபெயா

நிமிர் தோள் — பெருகு தோள்,

நிறைந்து நிமிருந் தோளெனக

¶வசிந்தென்பது பிளந்தென்னும் பொருட்டாதலிற, செய்வதன றொழிற்கும் செய்விப்பதன் றொழிற்கும் பொது அசுரா முதலியோரை அழிக்குங் காலத்துப் பனனிருகையினும் படைக்கலமேந்துவ னென்றுணாக, அஃது அறுவேறு வகையினஞ்சுவர மண்டி (ருஅ) எனறதனானுணாக

இனி மொய்மபினையுடைத்தாய ஒளிவிட்டு நிறைந்து வளையவேண்டுமிடம் வளைந்து நிமிரவேண்டுமிடம நிமிருந தோளென்றுமுரைப்பா இதற்கு வசிந்தென்பதனைத் தொடியொடுதொட்ப (ககச) மணியிரட்டுவென (ககரு) யேலே கூட்டுக. வசிந்து பகைவாமாாபைப் பிளந்தென்க வசிந்தென்பதற்குப் படைக்கலங்களாலவடுப்பட்டென்று பொருளுரைத்தல் இறைவற்காதலிற் பொருநதாது.

* நகையமாதல இன்றியமையாமையெனவும் பிரதிபேதமுண்டு

† திருவாசகம், திருச்சாழல், கூ "தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன் - பெண்பா லுகந்தான பெரும்பித்தன காணேடீ - பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோா - விண்பாலி யோகெய்தி வீடுவாகாண சாழலோ."

‡ சீவகசிந்தாமணி, கேமசரியாரிலம்பகம், ருக: "வரையகன் மார்பிடை வரையு மூன்றுள - புரைதபு பொன்புரை நாவு முள்ளுடைத் - தருவரைத் தோள்களு மமரர் கோன்களிற - றுருவுகொ டடக்கையின் வடிவு கொண்டவே"

இனி அவை போர்செய்யாக்காலத்து இங்ஙனமிருக்குமென்று அவற்றினியல்பு கூறுகின்றார்.

அத்தோள்களில் ஒருகை யென்க

[விண்செலன் மரபின் ஐயர்க்கு ஏந்திய தொருகை] ஒருகை விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது—ஒருகை எக்காலமும் ஆகாயத்தே இயங்குதன் முறைமையினையுடைய தெய்வவிருடிகளுக்குப் பாதுகாவலாக வெடுத்தது,

[உக்கஞ் சேர்த்திய தொருகை] ஒருகை உக்கம் சேர்த்தியது—ஏந்தியகைக்கு இணைந்தகை மருங்கிலேவைத்தது;

என்றது - ஞாயிற்றின்வெம்மையைப் பலவுயிரும் பொறுத்தலாற்றாவென்று கருதித் தமதருளினாற் சுடரொடுதிரிந்து அவ்வெம்மையைப்பொறுக்கின்ற முனிவரைப் பாதுகாக்கவே உலகத்தைத் தாங்கிக்காத்ததாயிற்று இதனானேஇக்கை மாயிருண்ஞாலமறுவின்றி விளங்கப் பலகதிர்விரிந்த முகத்திற்கேற்ற தொழில் செய்ததாயிற்று. இது *"நிலமிசை வாழ்நர லமர றீரத், தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக், காலுண வாகச் சுடரொடு கொட்கு, மவிர்சடை முனிவரு மருள" என்ற புறப்பாட்டானுணர்க. மனமும் முகமும் கையும் ஒருதொழிலைச் செய்தலின், ஏனைக்கை தொழிலின்றி மருங்கிலே கிடந்தது

[நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய தொருகை,யங்குசங் கடாவ வொருகை] ஒருகை அங்குசம் கடாவ ஒருகை நலம் பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசை அசைஇயது—ஒருகை தோட்டியைச் செலுத்தாநிற்க மற்றைக்கை செம்மை நிறம்பெற்ற ஆடையையுடைத்தாகிய துடையின்மேலே கிடந்தது,

இஃது யானையேறுவார்க்கு இயல்பென்று கூறினார் தன்னை வழிபடுவாரிடத்து வருங்கால் யானைமேல்வந்து அருள்செய்தல் இயல்பாகலின், இக்கைகள் காதலினுவந்து வரங்கொடுத்த முகத்திற்கு ஏற்றவாறுணர்க

இருகை ஐ இரு வட்டமொடு எஃகு வலம் திரிப்ப—இரண்டு கைகள் வியப்பையும் கருமையையுமுடைய பரிசையுடனே வேலையும் வலமாகச் சுழற்ற,

* புறநானூறு, சுங — "நிலமிசை வாழ்நர லமர றீரத், தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக், காலுண வாகச் சுடரொடு கொட்கு, மவிர்சடை முனிவரு மருளக் கொடுஞ்சிறைக், கூருகிர்ப் பருந்தி னேறுகுறித் தொரீஇத், தன்னகம் புக்க குறுநடைப் புறவின், றபுதி யஞ்சிச் சீரை புக்க, வரையா வீகை யுரவோன் மருக, நேரார்க் கடந்த முரண்மிகு திருவிற், றேர்வண் கிள்ளி தம்பி வார்கோற், கொடுமர மறவர் பெரும கடுமான், கைவண் டோன்ற லைய முடையே, னாபுனை தெரியனின் முன்னோ ரெல்லாம், பார்ப்பார் நோவன செய்யார் மற்றிது, நீர்த்தோ நினக்கென வெறுப்பக் கூறி, நின்யான் பிழைத்தது நோவா யென்னினும், நீபிழைத் தாய்போ னனிநா ணினையே, தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்குஞ் செம்மல், விக்குடிப் பிறந்தோர்க் கெண்மை காணுமெனக், காண்டகு மொய்ம்ப காட்டினை யாகலின், யானே பிழைத்தனென் சிறக்கநின் னாயுள், மிக்கு வருநீர்க் காவிரி, யெக்க ரிட்ட மணலினும் பலவே"

திணை - வாகை. துறை - அரசவாகை சோழன் நலங்கிள்ளிதம்பி மாவளத்தானும், தாமப்பல்கண்ணனும் வட்டுப்பொருவுழிக் கைகரப்ப வெகுண்டு வட்டுக் கொண்டெறிந்தானைச் சோழன்மகனல்லையென நாணியிருந்தானைத் தாமப்பல்கண்ணனார்.

இதனானே, அசுரர்வந்து வேள்வியைக் கெடாமல் அவரையோட்டுதற்கு இவற்றைச் சுழற்றுதலில் வேள்வியோர்க்கு முகத்திற்கு இக்கைகள் ஏற்றவாறுணர்க.

ஒருகை மார்பொடு விளங்க ஒருகை தாரொடு பொலிய—முனிவர்க்குத் தத்துவங்களைக்கூறி உரையிறந்தபொருளை யுணர்த்துங் காலத்து ஒருகை மார்போடே விளங்காநிற்க, ஒருகை மார்பின் மாலை தாழ்ந்ததனோடே சேர்ந்து அழகுபெற,

இறைவன் மோனமுத்திரையத்தனையத் தானேயேயிருந்து காட்ட ஊமைத்தசும்புள் நீர்நிறைந்தாற்போல ஆனந்தமயமானவொளி மாணாக்கர்க்கு நிறைதலின், அதற்குரிய மோனமுத்திரைகூறிற்று "தன்னை யுன்னி யென்னை யாக்கிய போழ்தே யானவனாயினேன்" என்பதனானுணர்க.

இக்கைகள் எஞ்சியபொருள்களை விளக்குமுகத்திற்கு ஏற்றவாறுணர்க

[ஒருகை, கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை, பாடின் படுமணி யிரட்ட:] ஒருகை தொடியொடு மீமிசைக் கொட்பக் கீழ் வீழ் ஒருகை பாடு இன் படு மணி இரட்ட—ஒருகை தொடியொடு மேலேசுழன்று களவேள்விக்கு முத்திரைகொடுப்பக் கீழேவீழ்ந்த மற்றைக்கை ஓசையினிதாகிய ஒலிக்கின்றமணியை மாறியொலிக்கப்பண்ண,

இக்கை களவேள்வி வேட்கின்ற முகத்திற்கு ஏற்றவாறுணர்க.

ஒருகை நீனிற விசும்பின் மலி துளி பொழிய ஒருகை வான் அரமகளிர்க்கு வதுவை சூட்ட—ஒருகை நீலநிறத்தையுடைய மேகத்தாலே மிக்கமழையைப்பெய்வியாநிற்க, ஒருகை தெய்வமகளிர்க்கு மணமாலையைச் சூட்ட,

என்றது வள்ளியொடு நகையமர்ந்தமுகம் உலகிற்கு இல்வாழ்க்கை நிகழ்த்துவித்ததாகலின், அவ்வில்வாழ்க்கை நிகழ்தற்கு மழையைப் பெய்வித்தது ஒருகை, ஒருகை இல்வாழ்க்கை நிகழ்த்தற் பொருட்டு மணமாலையைச் சூட்டிற்றென்றவாறு.

ஆங்கு அப் பன்னிருகையும் பாற்பட இயற்றி—அப்படியே அந்தப்பன்னிரண்டுகையும் முகத்தின் பகுதியிலேபடும்படி தொழில்செய்து,

முகங்களில் ஒருமுகம் ஓர்க்கும் (௯௬) ஒருமுகம் விளக்கும் (௯௮) ஒருமுகம் வேட்டன்று (௧௦0) ஒருமுகம் அமர்ந்தன்று (௧௦௨) ஒருமுகம் விரிந்தன்று (௯௨) ஒருமுகம் கொடுத்தன்று (௯௪) அம்மூவிருமுகனும் அத்தொழில்களிடத்துச்செய்யும் முறைமைகளைப் பயின்று நடத்துகையினாலே (௧௦௩) அம்முகங்களுக்குப்பொருந்தத் தோள்களில் (௧௦௬) இருகை (௧௧0) திரிப்ப (௧௧௧) ஒருகை விளங்க (௧௧௨) ஒருகை பொலிய (௧௧௩) ஒருகை கொட்ப (௧௧௪) ஒருகை யிரட்ட (௧௧௫) ஒருகை பொழிய (௧௧௬) ஒருகை சூட்ட (௧௧௭) ஒருகை ஐயர்க்கேந்தியது (௧௦௭) ஒருகை உக்கஞ் சேர்த்தியது (௧௦௮) ஒருகை கடாவ (௧௧0) ஒருகை அசைந்தது (௧௦௯) அப்படியே பன்னிருகையும் முகத்தின்பகுதியிலே படும்படி தொழில்செய்தென இச்சொன்முடிபுக்கேற்பக் கைகளையும் முகங்களையும் மாட்டாகமுடிக்க. திரிப்பவென்பதுமுதலிய நிகழ்காலச் செயவெனெச்சங்கள் ஏந்தியது சேர்த்தியதென முற்றுவினைகொண்டு முடிந்தன.

அந்தரப் பல்லியம் கறங்க—ஆகாயத்தனது துந்துமி யொலிப்ப,

திண் காழ் வயிர் எழுந்து இசைப்ப—திண்ணிய வயிரத்தையுடைய கொம்பு மிக்கொலிப்ப,

வால் வளை ஞரல—வெள்ளிய சங்கு முழங்க,

உரம் தலைக் கொண்ட உரும் இடி முரசமொடு—வலியைத் தன்னிடத்தேகொண்ட உருமேற்றினது இடிப்புப்போலும் ஓசையையுடைய முரசுடனே,

பல் பொறி மஞ்ஞை வெல் கொடி அகவ—பலபீலியையுடைய மயில் அவனுணை யினாலே வென்றெடுத்த கொடியிலேயிருந்து ஒலியாநிற்க,

பொறி - ஆகுபெயர்.

விசும்பு ஆறாக—ஆகாயமே வழியாக

விரை செலல் முன்னி—விரைந்த செலவினை மேற்கொண்டு,

[உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீர்] ஓங்கு உலகம் புகழ்ந்த உயர் விழுச் சீர்—நன்மையோங்கும் நன்மக்கள்புகழ்ந்த உயருஞ்சீரினையுடைய புகழினையுடைய,

அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பு—திருச்சீரலைவாயென்னும் திருப்பதி யேற எழுந்தருளுதலும் அவற்கு நிலைபெற்ற குணம்,

குன்றமர்ந்துறைதலுமுரியன், அதுவன்றி (எஎ) வேழமேல்கொண்டு (அஉ) இயற்றிக (கசஅ) கறங்க (ககக) இசைப்ப குரல (கஉ0) அகவ (கஉஉ) முன்னி(கஉங) அலைவாய்ச்சேறலும நிலைஇய பண்பென முடிக்க.

அதாஅன்று— அதுவன்றி,

ங.—திருவாவினன்குடி.

சீரைதைஇய வென்பதுமுதல முனிவர்முற்புக (கஙஎ) வென்னுந்துணையுமொ ருதொடர்.

சீரை தைஇய உடுக்கையர்—மரவுரியை உடையாகச்செய்த உடையினையு டையர்,

இதற்குக் கற்றோய்த்தன்முதலியன செய்த உடுக்கையென்பாருமுளர்.

சீரொடு வலம்புரி புரையும் வால் நரை முடியினர்—அழகோடு வடிவாலும் நிற த்தாலும் வலம்புரிச்சங்கினையொக்கும் வெள்ளிய நரைமுடியினையுடையர்,

மாசு அற இமைக்கும் உருவினர்—எக்காலத்தும் நீராடுதலின் அழுக்கறவிளங் கும் வடிவினையுடையர்,

மானின் உரிவை தைஇய ஊன் கெடு மார்பின் என்பு எழுந்து இயங்கும் யாக் கையர்—கிருட்டிணசினம் போர்த்த விரதங்களாலவிட்ட பட்டினியால் தசைகெடு கின்ற மார்பினெலும்புகள் கோவைதோன்றி உலவும் உடம்பினையுடையர்,

தைஇய மார்பென்க.

நன் பகல் பல உடன் கழிந்த உண்டியர்—எப்பொருளுநுகர்தற்கு நன்றாகிய பக ற்பொழுதுகள் பலவும் சேரக்கழிந்த உணவினையுடையர்,

இது மாதோபவாசங் கூறிற்று

இகலொடு செற்றம் நீக்கிய மனத்தினர்—மாறுபாட்டோடே நெடுங்கால நிற்கும் செற்றத்தினையும் போக்கிய மனத்தினையுடையர்,

பகைமை நெடுங்காலம் நிகழ்வது செற்றம்.

[யாவதுங், கற்றோ ரறியா வறிவினர்] கற்றோர் யாவதும் அறியா அறிவினர்— பலவற்றையும் கற்றோர் சிறிதுமறியப்படாத இயல்பான அறிவினையுடையர்,

கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர்—பலவற்றையுங் கற்றோர்க்குத்தாம் எல்லையாகிய தலைமையையுடையர்,

என்றது - கலவியைக் கரைகண்டாரென்றவாறு.

காமமொடு கடுஞ் சினம் கடிந்த காட்சியர்—ஆசையோடே கடிய சினத்தையும் போக்கின அறிவினையுடையர்,

கோபத்தின்பெருமைக சிறிதுபொழுது நிற்பது சினம்

இடும்பையூயாவதும் அறியா இயல்பினர்—தவத்தான் மெய்வருத்தம் உளவேனு ம் மனத்தான் வருத்தம் சிறிதுமறியப்படாத இயல்பினையுடையர்,

மேவர—திருவுள்ளம் பொருந்துதல் வர,

துனி இல் காட்சி முனிவர் முற்புக—ஒருவருடனும் வெறுப்பில்லாத நல்லஅறி வினையுடைய முனிவர் முன்னே செல்ல,

உடுக்கையர் முடியினர் உருவினர் யாக்கையர் உண்டியர் மனத்தினர் அறிவி னர் தலைமையர் காட்சியர் இயல்பினராகிய முனிவர் மேவர முற்புகவெனமுடிக்க.

புகைமுகந்தன்ன என்பதுமுதல் மேவலர் (கசஉ) என்னுந்துணையும் பாடுவா ரைக் கூறிற்று

புகை முகந்தன்ன மாசு இல் தூ உடை—புகையை முகந்தாலொத்த தெய்வத் தன்மையால் அழுக்கேறாத தூய உடையினையும்,

முகை வாய் அவிழ்ந்த தகை சூழ் ஆகத்து—முகைவாய்நெகிழ்ந்த மாலைசூழ்ந்த மார்பினையும்,

கட்டுதலிற் றகையென்றார், மாலையை, ஆகுபெயர்.

செவி நேர்பு வைத்த செய்வு உறு திவவின் நல் யாழ் நவின்ற—எஃகுசெவியா லே சுருதியையளந்து நரம்பைகட்டின சுற்றுதலுறும் வார்க்கட்டினையுடைய நன் றாகிய யாழினிசையிலே பயின்ற,

நயன் உடை நெஞ்சின் மென்மொழி மேவலர் இன் நரம்பு உளர—ஈரமுடைய நெஞ்சாலே எக்காலமும் மெல்லிய வார்த்தைசொல்லுதலைப் பொருந்திய கந்தருவர் இனியநரம்பை வாசிக்க,

நவின்ற நயனென்க

நோயின்றென்பது முதல் மகளிர் (கசஎ) என்னுந்துணையும் பாடுமகளிரைக் கூறிற்று.

நோய் இன்று இயன்ற யாக்கையர்—மக்களுக்குரியநோய் இல்லையாக நிருமித்த உடம்பினையுடையராய்,

மாவின் அவிர் தளிர் புரையும் மேனியர்—மாவினது விளங்குகின்ற தளிரை யொக்கும் நிறத்தினையுடையராய்,

அவிர்தொறும் பொன் உரை கடுக்கும் திதலையர்—விளங்குந்தோறும் பொன்னு ரை விளங்கினாற்போலுந் தித்தியினையுடையராய்,

இன் நகைப் பருமம் தாங்கிய பணிந்து ஏந்து அல்குல் மாசு இல் மகளிரொடு—கட்கினிய ஒளியினையுடைய பதினெண்கோவையாகிய மேகலையணிந்த தாழவேண் டியவிடம் தாழ்ந்து உயரவேண்டியவிடம் உயர்ந்த அல்குலையுடைய குற்றமில்லாத கந்தருவமகளிரோடே,

மறு இன்றி விளங்க—குற்றமின்றாய் விளங்காநிற்க,

உடையினையும் (கஙஅ) ஆகத்தினையுமுடைய (கஙக) மென்மொழிமேவலர் (கசஉ) யாக்கை (கசங) முதலியவற்றையுடையராய், மாசிலலாத மகளிரோடே மறு வின்றிவிளங்க (கசஎ) இன்னரம்புளர (கசஉ) வெனமுடிக்க.

கடுவோடு ஒடுங்கிய தூம்புடை வால் எயிறு—நஞ்சுடனே உறைக்குஞ்சேர்ந்த துளையினையுடைய வெள்ளிய எயிற்றினையும்,

மிடற்றினஞ்சு தன்னிடத்தேதோன்றுதலின், நஞ்சோடென்றார் எயிறு. காளி, காளாத்திரி, யமன, யமதூதியென நான்காம்

அழலென உயிர்க்கும் அஞ்சு வரு கடுந் திறல்—நெருப்பென்னும்படி நெட்டுயிர்ப்புக்கொள்ளும் கண்டார்க்கு அச்சநதோன்றும் கடிய வலியினையுமுடைய,

பாமபு படப் புடைக்கும்—பாம்பு படும்படி அடிக்கும்,

பல் வரிக் கொடுஞ் சிறைப் புள் அணி நீள் கொடிச் செல்வனும்—பல வரியினையுடைத்தாகிய வளைந்த சிறகினையுடைய கருடனையணிந்த நீண்ட கொடியினையுடைய திருமாலும்,

[வெள்ளேறு, வலவயி னுயரிய பலர்புகழ திணிதோ, ளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண், மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனும்:]

வலவயின் வெள்ளேறு உயரிய செல்வன்—வெற்றிக்களத்தே வெள்ளிய ஏற்றினை வெறறிக்கொடியாக வெடுதத உருத்திரன்,

உமை அமர்ந்து விளங்கும் செல்வன்—இறைவி ஒருபாகத்தே பொருந்தி விளங்குஞ் செல்வன்,

பலா புகழ திணி தோள்—பலரும் புகழ்கின்ற சிக்கென்ற தோளினையும்,

இமையா முககண் செல்வன்—இதழ் குவியாத மூன்றுகண்ணினையுடைய செல்வன்,

மூ எயில் முருககிய முரண மிகு செல்வனும்—முப்புரத்தையெரித்த மாறுபாடு மிக்க செல்வனும்,

நூற்றுப்பத்து அடுககிய நாட்டதது—நூற்றைப்பத்தாகவடுக்கிய கண்ணினையும்,

என்றது ஆயிரஙகண் ணென்றவாறு.

நூறு பல் வேள்வி முற்றிய வென்று அடு கொற்றத்து — நூறென்னு மெண்ணுகிய பலவேள்விகளை வேட்டுமுடித்ததனாற்பெறற பகைவரை வென்றுகொல்கின்ற வெற்றியினையும்,

[ஈரிரண் டேந்திய மருப்பின்·] ஏந்திய ஈரிரண்டு மருப்பின்—தலைகள் ஏந்தியிருக்கின்ற நான்காகிய கொமபினையும்,

எழில் நடை—அழகினையுடைய நடையினையும்,

தாழ் பெருந் *தடக் கை—நிலத்தே கிடக்கின்ற பெரிய வளைவினையுடைய கையினையுமுடைய,

உயர்த்த யானை எருத்தம ஏறிய திருக கிளர் செல்வனும்—எல்லாரும் உயர்த்துச் சொல்லப் படுகின்ற யானையின் கழுத்திலே ஏறிய திருமகள் விளங்கும் இந்திரனும்,

உயர்ந்த உயாததவென விகாரமுமாம.

நாட்டத்தினையும் (௧௬௭), கொற்றத்தினையுமுடைய (௧௫௬) செல்வனென்க.

மருப்பு (௧௫௭) முதலியவற்றையுடைய யானையென்க.

நாற் பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய உலகம் காக்கும் ஒன்று புரி கொள்கை—நான்காகிய பெரிய தெய்வத்தையுடைய நன்றாகிய ஊர்கள் நிலைபெற்ற உலகத்தைக் காக்கும் ஒருதொழிலையே விரும்பிய கோட்பாட்டையுடைய செல்வன் (௧௬௧) என முன்னேகூட்டித் திருமாலுககடையாக்குக.

---

* "தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்." என்பது தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல், உ௰ - வது சூத்திரம்.

நாற்பெருந்தெய்வமாவன: இந்திரன், யமன், வருணன், சோமனென்னுந் தெய்வங்கள்.

பலர் புகழ் மூவரும் தலைவராக—பலரும் புகழ்கின்ற அயன் அரி அரனென்னு மூவருந் தத்தமக்குரிய தொழில்களை முன்புபோலே நிகழ்த்தித் தலைவராகவேண்டி,

என்றது - பிள்ளையாற் அயனைச்சபித்தலின், அயன் படைத்தற்றொழிலைத் தவிரவே ஏனையிருவர்க்கும் காத்தற்றொழிலும் அழித்தற்றொழிலும் இன்றாமாகலின், மூவருந் தத்தமக்குரிய தொழில்களைப்பெற்றுத் தலைவராகவென்றார்

[ஏழுறு ஞாலந் தன்னிற் றோன்றித், தாமரை பயந்த தாவி லூழி, நான்முக வொருவற் சுட்டி·]

ஞாலந்தன்னில் தோன்றி ஏழுறு நான்முக ஒருவற சுட்டி—பிள்ளையார் சபித்தலாலே மண்ணிடத்தே தோன்றி மயக்கமுறுகின்ற நான்குமுகத்தையுடைய அயனைப் பழையநிலையிலே நிறுத்தக் கருதி,

தாமரை பயந்த ஊழி தா இல் ஒருவன்—திருமாலுடைய திருவுந்தித்தாமரை பெற்ற ஊழிகடோறும் தன்படைத்தற்றொழிலில் வருத்தமில்லாத ஒருவன் (கசுரு)

இனித் தாமரையென்னும் எண்ணைத் தந்த அழிவில்லாத ஊழிக்காலத்தை யுடைய அயனுமாம்

பயந்த ஒருவனென்க.

சாபமென்றது· பிள்ளையார் அசுரரையழித்துத் தேவரைக் காத்ததற்கு இந்திரன் மகள் தெய்வயானையாரை அவர்க்குக் கொடுத்தவிடத்தே, பிள்ளையார் தங் கையில் வேலைநோக்கி, "நமக்கு எல்லாந்தந்தது இவ்வேல்" என்ன, அருகிருந்தஅயன் "இவ்வேலிற்கு இந்நிலை என்னால் வந்ததன்றோ" என்றானாக, நங் கையில் வேலுக்கு நீகொடுப்பதொரு சத்தியுண்டோவென்று கோபித்து, "இங்ஙனங் கூறிய நீ மண்ணிடைச்செல்வாய்" என்ற சாபத்தை.

காணவர—அழகு தோன்ற

பகலில தோன்றும் இகல இல் காட்சி—ஒருபொருளை பலவாமாறு பகுத்துக்காண்டற்கண் வேறுபடத் தோன்றும தம்முள் மாறுபாடில்லாத அறிவினையுடைய,

நால் வேறு இயற்கைப பதினொரு மூவரொடு—நான்காகிய வேறுபட்ட இயல்பினையுடைய முப்பத்துமூவரும,

என்றது: ஆதித்தன், உருத்திரன, வசு, மருத்துவனென்னும ஒரோவோர்பொருள்கள் பலவாகப பகுக்குங்காற் பன்னிருவர் பதினொருவர் எண்மர் இருவராகப பகுக்க நான்குகூறாய் முப்பத்துமூவராயினுமொன்றவாறு பதினொருவராகிய மூவரொன்க. அவர் ஆதித்தர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும, வசுக்கள் எண்மரும், மருத்துவர் இருவருமாம. ஒடு - எண்ணொடு.

ஒன்பதிற்று இரட்டி உயர் நிலை பெறீஇயர்—பதினெணவகையாகிய உயர்ந் தநிலையைப் பெற்றவரும்,

என்றது - பதினெண்கணங்களை. அவர· தேவரும, அசுரரும், தைத்தியரும், கருடரும், கின்னரரும, கிம்புருடரும, இயக்கரும், விஞ்சையரும, இராக்கதரும், கந்தருவரும், சித்தரும், சாரணரும், பூதரும, பைசாசகணமும, தாராகணமும், நாகரும், ஆகாயவாசிகளும், போகபூமியோரும் எனவிவர். இவர்க்குப் பிறவாறுமுரைப்பர். பெறீஇயர் - தொழிற்பெயர்.

மீன் பூத்தன்ன தோன்றலர்—உடுக்கள் பொலிவுபெற்றுத் தோன்றினாலொத்த தோற்றத்தையுடையராய்,

மீன் சேர்பு வளி கிளர்ந்தன்ன செலவினர்—மீன்களுலாவுகின்றவிடத்தே சேர்ந்து காற்று எழுந்தாலொத்த செலவினையுடையராய்,

வளி இடைத் தீ எழுந்தன்ன திறலினா—காற்றிடத்தே நெருப்பெழுந்தாலொத்த வலியினையுடையராய,

தீப் பட உரும் இடித்தன்ன குரலினா—நெருப்புபபிறக்க உருமேறு இடித்தாற் போன்ற குரலினையுடையராய்,

இவை வினையெச்சமுற்று

[விழுமிய, வுறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மார்] தம விழுமிய பெறுமுறை குறை உறு மருங்கிற் கொண்மார்—தம்முடைய சீரிய படைத்தல்காத்தல் அழித்தலென்னுந்தொழில்களைப பண்டுபோலப் பெறுமுறைமையினைக் குறைவேண்டிநின்று பெறுங்கூற்றாலே முடித்துக்கோடற்கு,

அந்தரக் கொட்பினர்—ஆகாயத்தே சுழற்சியினையுடையராய்,

[வந்துடன் காண—] உடன் வந்து காண—சேரவந்து காணும்படியாக,

தா இல் கொள்கை மடந்தையொடு—வருத்தமில்லாத அருட்கற்பினையுடைய தெய்வயானையாருடன்,

[சின்னாள், ஆவினன்குடி யசைதலும உரியன்] ஆவினன்குடி சின்னாள் அசைதலும் உரியன்—ஆவினன்குடியென்னுமவூரிலே சிலநாள் இருத்தலுமுரியன்;

பலர்புகழ்மூவருந் தலைவராகவேண்டி (கசுஉ) அதற்குக் குறைபாடுண்டாக்கின நான்முகனொருவனைக்கருதி (கசுடு) ஒன்றுபுரிகொள்கைப் (கசுக) புள்ளணி நீள்கொடிச்செல்வனும் (கடுக), மூரணமிகு செல்வனும் (கடுச), யானையெருத்தமேறிய செல்வனும் (கடுகூ), முப்பத்துமூவரும் (கசுள), பதினெண்கணங்களும் (கசுஅ) தோன்றலர் (கசுகூ) செலவினர் (களO) திறலினா (களக) குரலினா (களஉ) கொட்பினராய் உடன்வந்து (களச) தம் விழுமிய (களஉ) பெறுமுறை குறையுறுமருங்கின் முடித்துக் கோடற்கு (களந) மென்மொழிமேவலா இன்னரம்புளர (கசஉ) முனிவா (கருள) மேவர(கருசு) முற்புகக் (கருஎ) காணத் (களச) தான் ஆவினன்குடியிலே காண்வர (கசுடு) அசைதலுமுரியனென முடிக்க.

கந்தருவர் - பாட்டான் முனிவுதீரப்பார் முனிவா தம்மை மறுமைபற்றி முன்னேசென்றா.

இனிச் சித்தன்வாழ்வென்று சொல்லுகின்றவூர் முற்காலத்து ஆவினன்குடியென்று பெயர்பெற்றதென்றுமாம். அது "நல்லம்பா நல்ல குடியுடைத்துச் சித்தன் வாழ் - வில்லந் தொறுமூன்றெரியுடைதது - நல்லரவப் - பாட்டுடைத்துச் சோமன் வழிவந்த பாண்டியநின - நாட்டுடைத்து நலல தமிழ்" என்று ஔவையார் கூறியதனானாக *சித்தனென்பது பிள்ளையாருககுத் திருநாமம.

அதாஅன்று—அதுவன்றி,

ச.—திருவேரகம்.

இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது—ஓதல் ஓதுவித்தல் வேட்டல்

* இது முருகக்கடவுள் ஆயிரநாமத்துள் ஒன்று.

வேட்பித்தல் ஈதல் ஏற்றலென்னும் ஆறாகிய நன்மைபொருந்திய இலக்கணத்தில் வழுவாமல்,

வழாமல், வழுவாமலெனத் திரிக்க.

இருவர்ச் சுட்டிய பல் வேறு தொல் குடி—தாயுந் தந்தையுமாகிய இருவர்குலத்தையும் உலகத்தார் நன்றென்றுமதித்த பலவாய்வேறுபட்ட பழைய குடியிற்பிறந்த இருபிறப்பாளர் (கஅஉ)

குடி - *குண்டினர், காசிபர் என்றாற்போல்வன

[அறுநான் கிரட்டி யிளமை நல்லியாண், டாறினிற் கழிப்பிய] அறுநான்கு இரட்டி ஆண்டு நல்லிளமை ஆறினிற் கழிப்பிய — இருபத்துநான்கின் இரட்டியாகிய நாற்பத்தெட்டியாண்டு நல்லிளமையை வேதங்கூறியநெறியிலே போக்கிய இருபிறப்பாளர் (கஅஉ)

பிரமசரியங்காத்த அந்தணர்.

அறன் நவில் கொள்கை—அறத்தை எப்பொழுதுங் கூறுகின்ற கோட்பாட்டினையும்,

மூன்று வகைக் குறித்த முத்தீச் செலவத்து—நாற்சதுரமும் முச்சதுரமும் வில் வடிவுமாகிய †மூன்றுவகையைக கருதின ஆகவனீயம் தக்கிணாக்கினி காருகபத்தியம் என்னும் மூன்றுதீயானுண்டாகிய செல்வத்தினையுமுடைய,

இருபிறப்பாளர்—உபநயனத்துக்கு முன்பு ஒருபிறப்பும் பின்பு ஒருபிறப்புமாகிய இருபிறப்பினையுமுடைய அந்தணர்,

பொழுது அறிந்து நுவல—தாங்கள் வழிபடுங்காலமறிந்து தோத்திரங்களைக் கூற,

ஒன்பது கொண்ட மூன்று புரி நுண் ஞாண—மும்நூறகொணடு முபபுரியாக்குதலின், ஒன்பதாகியநூலைத் தன்னிடத்தேகொண்ட ஒருபுரி மூன்றாகிய நுண்ணிய பூணுநூலையும்,

ஞாணினையும் (கஅரு) கொள்கையினையும் (கஅ௦)செலவத்தினையுமுடைய(கஅக) இருபிறப்பாளரென்க.

புலராக் காழகம் புலர உடீஇ—நீராடுங்கால் தோய்க்கபபட்ட கலிங்கம உடம்பிலே கிடந்துபுலர உடுத்து,

என்றது - ஈரத்துடனேயிருந்து வழிபடுதல் கூறிற்று.

உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து—தலைமேலே வைதத கையினையுடையராய்த் தன்னைத்துதித்து,

ஆறெழுத்து அடக்கிய அருமறைக கேள்வி—ஆறெழுத்தினைத் தன்னிடத்தே அடக்கியிருக்கின்ற கேட்டற்கரிய, மறையவுச்சரிககப்படும் மந்திரத்தை,

அது "நமக்குமாராய" என்பதாம்.

நா இயல் மருங்கில் நவிலப் பாடி—நாப் புடைபெயரும் அளவிலே பயில உச்சரித்து,

---

* குண்டலரென்றும் பிரதிவேறுபாடுணடு

† இவற்றுட் பின்னைய இரணடன் வகையும் இக்காலத்து வழங்குவனவற்றிற்கு வேறுபட்டிருத்தலின், இம்மூன்று வகையும் சாகாபேதமாக இருத்தல்வேண்டுமெனக் கூறுகின்றனர்.

விரை உறு நறு மலர் ஏந்தி—மணமிக்க நறியபூவை எடுத்து,

பெரிது உவந்து ஏரகத்து உறைதலும் உரியன்—பெரிதுமகிழ்ந்து ஏரகமென்கி ,ன்றவூரிலே இருத்தலுமுரியன்;

இருபிறப்பாளர் (௧௮உ) புலரவுடீஇத் (௧௮௫) தற்புகழ்ந்து (௧௮௬) நறுமலரேந் திக் (௧௮௮) கூப்பியகையராய் (௧௮௬) நவிலப்பாடிப் (௧௮௬) பொழுதறிந்து நுவல (௧௮உ) அதற்குப் பெரிதுமகிழ்ந்து ஏரகத்துறைதலும் உரியனெனமுடிக்க.

ஏரகம் - மலைநாட்டகத் தொருதிருப்பதி

அதாஅன்று—அதுவன்றி,

௫—குன்றுதோறாடல்.

பைங்கொடி—பச்சிலைக்கொடியாலே,

எல்லாவறறினும் பசுததிருத்தலிற். பச்சிலையென்று பெயர்பெற்றது. பச்சிலை யென்றது சினைவினைமுதன்மேலேறறிப் பைங்கொடியென்றார்

நறைக்காய—நறுநாறறததையுடைய காயை,

அது சாதிக்காய்

இடைஇடுபு—நடுவேயிட்டு,

வேலன்—படிமத்தான,

அம் பொதிப் புட்டில்—அழகினையுடைத்தாகிய பொதிதலையுடைய தக்கோலமெ ன்னும் முதலின்காய,

அது புட்டில்போறலிற் புட்டிலென்றா

விரைஇ—கலந்து,

குளவியொடு—காட்டுமல்லிகையுட்னே,

வெண் கூதாளம் தொடுத்த கண்ணியன்—வெண்டாளியையும் கட்டின் கண்ணி யையுடையனாய்,

நறுஞ் சாந்து அணிந்த கேழ் கிளா மாாபின்—நறிய சந்தனததைப்பூசிய நிறம் விளங்கும் மார்பினையுடைய வேலன் (௧௯0),

வேலன் பைங்கொடியாலே (௧௯0) புட்டில்விரைஇ (௧௯௧) நறைக்காய்இடை யிடுபு (௧௯0) குளவியொடு (௧௯௧) கூதாளத்தையுங் கட்டிய கண்ணியனாய் (௧௯உ),

கண்ணியன் - வினையெச்சவினைக்குறிப்புமுற்று.

கொடுந் தொழில் வல் விற கொலைஇய கானவா—கொடிய தொழிலையுடைய வலியவில்லாற் கொல்லுதலைச்செய்த குறவர்,

"கூலுஇய" என்ற பாடத்திற்கு வில்லைவளைத்தகானவரென்க எனவே கோ றல் பெற்றாம்.

நீடு அமை விளைந்த தேக் கள் தேறல்—நெடுகின மூங்கிலிலே யிருந்து முற்றின தேனாற்செய்த கட்டெளிவை,

குன்றகச் சிறு குடிக் கிளையுடன் மகிழ்ந்து—மலையிடத்துச் சிறியவூரிலே இருக்கி ன்ற சுற்றத்தோடே உண்டுமகிழ்ந்து,

தொண்டகச் சிறு பறைக் குரவை அயர—அந்நிலத்துக்குரிய தொண்டகமாகிய சிறுபறையினது தாளத்திற்குக் குரவையாட,

கானவர் (௧௯௪) தேறலைமகிழ்ந்து குரவையாடவென்க.

[விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற், குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி:]

விரல் உளாப்பு அவிழ்ந்த வேறுபடு நறுங் காந் கண்ணி—விரலதலைப்பாலே வலிய வலர்த்தவலாந்த பூவாகலின் வேறுபடுகின்ற நறியமணத்தினையுடைய தலையிற் சூடும் மாலையினையும்,

குண்டு சுனை பூத்தவணடு படு கணணி—அதுதான் ஆழ்ந்த சுனையிற்பூத்த பூவாற் செய்த வண்டுவீழ்கின்ற கணணி.

இஃது ஒற்றுமை நயம்பறறிச் செயபபடு பொருண்மேல் நின்றது. காாக் குண டுசுனை யென்று பாடமாயின, கரிய ஆழ்ந்த சுனையென்க.

இணைதத கோதை—இதழ்பறித்துக்கட்டின மாலையினையும,

அணைதத கூந்தல்—சோததின கூந்தலினையும்,

முடித்த குல்லை—இலையைத் தலையிலே யணிநத கஞசஙகுல்லையினையும்,

இலை உடை நறும பூ—இலையையுடைய நறிய பூஙகொத்துக்களையும்,

செங் கால் மராஅத்த வால் இணா இடை இடுபு சுரும்பு உணத் தொடுத்த பெருந் தண் மாத் தழை—செவ்விய காலினையுடைய மராத்திடத்தனவாகிய வெள்ளிய கொத்துக்களை நடுவேவைத்துச் சுரும்பு தேனையுண்ணும்படி தொடுதத பெரிய குளிர்ந்த அழகினையுடைய தழையை,

குல்லையையும் பூவையும் வாலிணா இடையிட்டுத தொடுதத தழை யென்க.

[திருந்துகா ழல்கு றிளைப்ப வுடீஇ:] காழ் திருந்து அல்குல் திளைபபு உடீஇ—வடங்கள் திருந்தும் அல்குலிடத்தேஅசையுமபடி உடுத்து,

அல் குற்றிளைப்பவென்னும் வல்லொற்று விகாரமாயிற்று.

[மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு:]

மயில் கண்டுஅன்ன மகளிரொடு—சாயலுடைமையான் மயிலைக கணடாறபோன்ற மகளிரொடு,

மடநடை மகளிா—மடப்பம்பொருநதிய ஒழுக்கததினையு முடைய மகளிா,

தழையை யுடுத்து மயில்கணடன்ன மகளிரென்க.

உடுத்தென்னும வினையெச்சம அன்னவென்னும் பெயரொச்சமாகிய உவமவுருபோடு முடிந்தது.

கண்ணியினையும் கோதையினையுஞ் சோத்தின கூந்தலினையும, மடநடையினையு முடைய மகளிரென்க.

இம் மகளிர் தன்னைச் சேவிக்கு மகளிா

செய்யன் — சிவந்தவன்,

சிவந்த ஆடையன் செவ்வரைச செயலைத் தண் தளிர் துயல்வரும் காதினன்—சிவந்த ஆடையுடுததுச் சிவந்த அரையினையுடைய அசோகிற குளிர்ந்த தளிர் அசையுங்காது பொருந்தி,

கச்சினன் கழலினன் செச்சைக கண்ணியன்—கசசைக் கட்டிக் கழலையணிந்து வெட்சிமாலையைச் சூடி,

குழலன் கோட்டன் குறும் பல்லியத்தன்—குழலை யூதிக கொம்பைக் குறித்துச் சிறிய பல்லியங்களை எழுப்பி,

தகரன் மஞ்ஞையன் புகா இல் சேவலங்கொடியன — கிடாயைப் பின்னிட்டு மயிலையேறிக் குற்றமில்லாத கோழிக்கொடியை உயர்த்து,

நெடியன்—தான் வேண்டிய வடிவுகோடலிற் பிள்ளையுருயிராது நெடுகவளர்ந்து,

தொடி அணி தோளன—தோளிலே தொடியையணிந்து,

நரம்பு ஆர்த்து அன்ன இன் குரல் தொகுதியொடு—நரம்பு ஆரவாரித்தாலொத்த இனிய மிடற்றையுடைய பாடுமகளிரோடே,

இவர்கள் தன்னைச் சேவித்துப்பாடுமகளிர்

[குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன், மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்:]

மருங்கிற் கட்டிய குறும்பொறிக் கொண்ட—இடையிலே இறுகக்கட்டிய உதரபந்தத்தின்மேலே உடுப்பதாக வுட்கொண்ட,

நிலன் சேர்பு நறுந் தண் சாயல் துகிலினன் — நாலவிட்டமையால் நிலத்தைப் பொருந்தி நறிய குளிர்ந்த மென்மையை உடைத்தாகிய துகிலையுடுத்து,

[முழவுறழ் தடக்கையி னியல வேந்தி, மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து]

மென்றோட் பல பிணை இயல—மெல்லிய தோளினையுடைய பலவாகிய மான்பிணைபோலும் மகளிர் குரவையாடி அசைய,

இவர்கள் மெய்தீண்டி விளையாடுதற்குரிய மகளிர்

முழவு உறழ தடக் கையின் தழீஇ ஏந்தித் தலைத் தந்து—தன்னுடைய முழவையொத்த பெருமையையுடைய கையினாலே அவர்கள்கையினைத் தழீஇ எடுத்துக்கொண்டு முதற்கைகொடுத்து,

[குன்றுதோ றாடலு நின்றதன் பண்பே] குன்றுதோறு ஆடலும் தன் நின்ற பண்பு—மலைகடோறுஞ்சென்று விளையாடுதலும் தனக்கு நிலைநின்ற குணம்;

கண்ணியன் ஆடையனென்பனமுதலியன வினையெச்சவினைக் குறிப்பு முற்று; *"முன்னத்தி னுணருங் கிளவியு முளவே" என்னுஞ் சூத்திரவிதியால், செய்தெனெச்சப்பொருளையுணர்த்தின

கானவர் (௧௯௪) குரவையயர (௧௯௭), அதனைக்கண்டு மென்றோட் பல்பிணை (௨௧௬) குரவையாடியசைய (௨௧௫), அதனைப்பொறாதே செய்யன் (௨௦௬) வேலன் (௧௯௦) றொடுத்த கண்ணியைச்சூடி (௧௯௨) உடுத்துப் (௨௦௬) பொருந்திக் (௨௦௭) கட்டி அணிந்து சூடி (௨௦௮) ஊதிக குறித்து எழுப்பிப (௨௦௯) பினனிட்டு ஏறி (௨௧௦) உயர்த்து வளர்ந்து தொடியையணிந்து (௨௧௧) துகிலையுடுத்துத் (௨௧௪) தொகுதியுடனே (௨௧௨) மகளிரோடே (௨௦௫) மலைகடோறுஞ்சென்று (௨௧௭) தழீஇ (௨௧௬) ஏந்தித் (௨௧௫) தலைதந்து (௨௧௬) ஆடலும் நின்றதன்பண்பென வினைமுடிக்க

"குரவை யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் வென்றியு, மெய்தக் கூறு மியல்பிற் றாகும்" எனவரும்.

அதா அன்று—அதுவன்றி,

௬.—பழமுதிர்சோலை.

சிறுதினை மலரொடு விரைஇ மறி அறுத்து—சிறிய தினையரிசியைப் பூக்களோடே கலந்து பிரப்பரிசியாகவைத்து மறியையறுத்து,

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், ௬௬.

வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ—கோழிக்கொடியோடே தான் அவ்வி டத்தே நிற்கும்படி நிறுத்தி,

ஊர் ஊர் கொண்ட சீர் கெழு விழவினும்—ஊர்தோறும் ஊர்தோறும் எடுத்துக் கொண்ட தலைமைபொருந்தின விழாவின்கண்ணும்,

ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும் — தன்மேல் அன்புடையார் ஏத்துதலாலே தன்மனம் பொருந்துதல்வருகின்ற இடத்தினும்,

வேலன் தைஇய வெறி அயர் களனும்.—படிமத்தான் இழைத்த வெறியாடு களத்தினும்,

பிள்ளையாரவேலைத் தனக்கு அடையாளமாகக் கொண்டு திரிதலின், வேலனென் ஞர்; இது*"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்" எனப் புறத்திற்குங் கூறியது.

காடும் காவும் கவின் பெறு துருத்தியும் —காட்டினும் பொழிலினும் அழகுபெ றுகின்ற ஆற்றிடைக்குறையினும்,

யாறும் குளனும் — ஆறுகளினுங குளங்களினும்,

வேறு பல் வைப்பும் — முற்கூறிய ஊர்களன்றி வேறுபட்ட பலவாகிய ஊர்க ளினும்,

சதுக்கமும் — நாற்சந்தியினும்,

சந்தியும் — முச்சந்தியினும் ஐஞ்சந்தியினும்,

புதுப் பூங் கடம்பும்—புதிய பூக்களையுடைய கடம்பினும்,

மன்றமும்—ஊர்க்குநடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தடியினும்,

பொதியிலும்—அம்பலத்தினும்,

கந்து உடை நிலையினும—ஆதீண்டு குற்றியையுடைய இடத்தினும்,

[மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர] மாண் தலைக் கொடியொடு உருகெழு வியனகர் (உ௪௪) அமைவர மண்ணி—மாட்சிமைப்பட்ட தலைமையினை யுடையகோழிக்கொடியோடே உருகெழுவியனகரை அமைவரப்பண்ணி,

ஓடு - வேறுவினை யொடு.

இனி ஆண்டலைக்கொடியென்று பாடமாயின், பேய்முதலியன பலியை நுகரா மற் றலை ஆணமகன்றலையும், உடல் புள்ளின்வடிவுமாக எழுதின கொடியென்க.

நெய்யோடு ஐயவி அப்பி—நெய்யோடே வெண்சிறுகடுகையும் அப்பி,

ஐது உரைத்து—தான் வழிபடுதற்குரிய மந்திரத்தைத் தோன்றும லுச்சரித்து,

குடந்தம்பட்டு—வழிபட்டு,

வணக்கம்பட்டென்றும் உரைப்பர், குடவென்பது தடவென்பதுபோல வளைவை யுணர்த்துவதோர் உரிச்சொல்லாதலின், அதனடியாகப்பிறந்த பெயருமாம்.

கொழு மலர் சிதறி—அழகிய மலர்களைத் தூவி,

முரண் கொள் உருவின் இரண்டு உடன் உடீஇ—தம்மிற் பகைத்தல் கொண்ட வடிவினையுடைய இரண்டாடையை உள்ளொன்றும் புறம்பொன்றுமாக உடுத்து,

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், ௫

† இதன்பின்னே, குடந்தமாவது - "நால்விரன் முடக்கிப் பெருவிர னிறுத்தி - நெஞ்சிடை வைப்பது குடந்த மாகும்" என்று ஓர் பிரதியிலுள்ளது.

சொகூல் யாத்து—சிவந்தநூலைக் கையிலே காப்புககட்டி,
நூலொழுக்கி எல்லைபபடுத தென்றுமாம்.
வெண் பொரி சிதறி—வெள்ளிய பொரியைத் தூவி,
மத வலி நிலைஇய மாத தாள் கொழு விடை—மிகுதியையுடைய வலி நிலைபெற்ற பெருமையையுடைத்தாகிய காலையுடைய கொழுவிய கிடாயினது,
குருதியொடு விரைஇய தூ வெள் அரிசி—உதிரத்தோடே பிசைந்த தூய வெள்ளரிசியை,
சில் பலிச செயது—சிறுபலியாக இட்டு,
பல பிரபபு இரீஇ—பலபிரபபும வைதது,
இனிப பிரப்புக்கூடையெனபாருமுளா
சிறு பசுமஞ்சளொடு நறு விரை தெளிதது—சிறிய பசுமஞ்சளோடே நறிய சந்தனமுதலியவற்றையுந் தெளிதது,
இனிச சிறுபசுமஞ்சள மஞ்சளில ஒரு சாதிவிசேடமுமாம். விரை - ஆகுபெயர்.
[பெருநதண கணவீர நறுந்தண் மாலை துணையற வறுத்துத தூஙக நாற்றி·]
பெருந் தண கணவீர மாலை—பெரிய குளிர்ந்த செவ்வலரிமாலையையும்,
நறுந் தண மாலை — ஒழிந்த நறிய குளிரநத மாலைகளையும்,
அறுத்து — தலையொக்க அறுததது,
துணை அறத தூஙக நாற்றி — தமககு ஒபபிலலாதபடி அசையத்தூக்கி,
இனித தமமில் இணையொதத அறுபபாக அறுததென்றுமாம்.
நளி மலைச சிலம்பில் நல் நகர் வாழ்த்தி — செறிந்த மலைப்பக்கத்திலுள்ள நல்லவூாகளைப பசியும் பிணியும் பகையும நீங்குகவென்று வாழ்த்தி,
நகர் - பிள்ளையாா கோயிலென்றுமாம
நறும் புகை எடுதது — நறிய தூபங்கொடுதது,
குறிஞ்சி பாடி — அந்நிலத்திற்கடைத்த குறிஞ்சிபபணணைப பாடி,
இமிழ் இசை அருவியோடு இன் இயம் கறங்க — முழங்குகின்ற ஓசையினையுடைய அருவியோடே இனிய பல்லியங்களும் ஒலியாநிறக,
உருவப பல பூத தூஉய் வெரு வரக குருதிச் செந் தினை பரப்பி—சிவந்த நிறத்தினையுடைய பலபூக்களையுந் தூவி அச்சம்வருமபடி உதிரமளைந்த சிவந்த தினையினையும் பரப்பி,
குறமகள் முருகு இயம் நிறுதது முரணினா உட்க முருகு ஆற்றுப்படுத்த உருகெழு வியன் நகா—குறசசாதியாகிய மகள முருகனுவக்கும் வாசசியங்களை வாசிக்கப்பணணித் தெய்வமின்றென்பாா அஞ்சும்படியாகப பிள்ளையார்வரும்படி வழிப்படுத்தின் அச்சம்பொருநதின அகற்சியையுடைய நகரின்கண்ணே,
"வேலன் வெறியாட் டயாநத" என்புழிச சிறுபான்மை யேனையோரும் ஆடுவாரென்றலிற், குறமகள் வெறியாட்டுக கூறினா
குறமகள (உசஉ) மணணி(உஉஎ)அபபி உரைத்துப்(உஉஅ)பட்டுச சிதறி உஃஇ பாத்துச், சிதறிச் செய்து இரீஇத் தெளித்து நாற்றி வாழ்த்தி எடுத்துப பாடிக் கறஙகாநிற்கத் தூஉய்ப பரபபி நிறுத்து ஆறறுபபடுதத நகரென வினைமுடிக்க.
சாந்திசெய்ய ஆறறுபபடுததாள்.

தொல்காபபியம், பொருளதிகாரம், புறத்திணையியல், ௫.

ஆடு களம் சிலம்பப் பாடி— அவ்வெறியாடுகின்ற களம் ஆரவாரிப்ப அதற்கேற் பனவற்றைப் பாடி,

[பலவுடன்,கோடுவாய வைத்து.] கோடு பல உடன் வாய் வைத்து—கொம்புகள் பலவற்றையுஞ் சேரவூதி,

கொடு மணி இயக்கி—கொடிய மணியையும் ஒலிப்பித்து,

ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி—கெடாத வலியினையுடைய *பிணிமுக மென்னும் பட்டத்தினையுடைய யானையை வாழ்த்தி,

பிணிமுகம்-மயிலுமாம்.

வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட—காரியங்களை விரும்புவோர் தாங்கள் விரும்பினகாரியங்களை விரும்பினாற்போலப் பெற்றுநின்று வழிபட,

நகரிலே (உ௪௪) பாடி வைத்து இயக்கி வாழ்த்தி வழிபட உறைதலுமுரியன (௧௮௯) என்க.

விழவின்கண்ணும் (உஉ௦) நிலையினகண்ணும் (உஉ௧) கந்துடைநிலையின்கண்ணும் (உஉ௬) உறைதலுமுரியன (௧௮௯) என்க.

ஆண்டாண்டுறைதலும்—களனும் (உஉஉ)காடும் காவும் துருத்தியும்யாறும் குளனும் வைப்பும் சதுக்கமுஞ் சந்தியும் கடம்பும் மன்றமும் பொதியிலுமாகிய அவ்வவ் விடங்களிலே உறைதலுமுரியனென்க.

அறிந்தவாறே—யான் அறிந்தபடியே கூறினேன்,

ஆண்டு ஆண்டு ஆயினும் ஆக — யான் முற்கூறிய அவ்வவ்விடங்களிலேயாயினுமாக பிறவிடங்களிலே யாயினுமாக,

உம்மை-ஐயவும்மை.

[காண்டக,முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்தி] முந்து நீ கண்டுழிக் காண் தக முகன் அமர்ந்து ஏத்தி — முற்பட நீ கண்டபொழுது அழகு தக்கிருக்கும்படி முகம்விரும்பித் துதித்து,

முகனமர்ந்தென்றார், அவன் தெய்வத்தன்மையைக் கண்டபொழுது அச்சம்பிறவாது நிற்கவேண்டுமென்றற்கு.

கை தொழூஉப் பரவி—முன்னாகக் கையைத் தலைமேலேவைத்து வாழ்த்தி,

கால் உற வணங்கி—பின்னாகத் திருவடி தலையிலேயுறும்படி தண்டனிட்டு,

நெடும் பெருஞ் சிமயத்து † நீலப் பைஞ்சுனை—நெடிய பெரிய இமவானுச்சியிற் றருப்பைவளர்ந்த பசிய சுனையிடத்தே,

நீலமென்றார், அதினின்ற நீலநிறத்தையுடைய தருப்பையை அஃது ஆகுபெயர், என்றது சரவணப்பொய்கையையென்றவாறு.

ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப — விசும்பும் வளியும் தீயும் நீரும் நிலனுமாகிய ஐவருள் தீத் தன்னங்கையிலே ஏற்ப,

சதாசிவனும் மயேசுரனும் உருத்திரனும் அரியும் அயனும் பூதங்கட்குத் தெய்வமாகலின், ஐவரென்றார்; ஐவருளொருவனென்றது உருத்திரன் றெய்வமாகிய தீயை.

---

* பிணிமுகம் - முருகற்குரிய யானையென்பதை, "பாயிரும் பனிகடல்" என்னும் பரிபாடலிற் "சேயயாபிணிமுக மூர்ந்தமருழுக்கி" என்பதனுரையானுணர்க.

† "நிவந்தோங் கிமயத்து நீலப் பைஞ்சுனை" என்றார் பரிபாடலிலும்.

அவன் அங்கையேற்பவென்றது· இறைவனிடத்தினின்றும் இந்திரன்வாங்கிய கருப்பத்தினை முனிவர் வாங்கித் தமக்குத் தரிக்கலாகாமையின் இறைவன்கூறிய முத்தீககுண்டத் திட்டதனைக கூறிறறு.

அறுவா பயந்த ஆறு அமர் செல்வ — அருந்ததியொழிந்த அறுவராலே பெறப்பட்ட ஆறுவடிவுபொருந்திய செல்வ,

என்றது: அஙஙனம் அங்கியின்கணிட்டுச சததிருறைநத கருபபத்தை முனிவரொழுவரும் வாங்கித தம்மனைவியாககுக கொடுபப அருந்ததியொழிந்தோர் விழுங்கிச் சூன்முதிர்ந்து, சரவணபபொயகையிற் பதுமபபாயலிலே பெற ஆறு வடிவாக வளாந்தமை கூறிற்று

ஏறகையினுலே அறுவராற பைஞ்சுனையிலே பயககபபட்ட செல்வவென்க; இது பரிபாடலிற * "பாயிரும் பனிககடல"என்னும பாட்டானுணாக.

ஆல் கெழு கடவுட் புதலவ — கல்லாலின் கீழிருநத கடவுளினுடைய புதல்வ,

கடவுளரென உயர்திணையாய் நில்லாது கடவுளென்பது தெயவமென்னும் பொருட்டாய் அஃறிணைமுடிபுகொள்ளும் உயாதிணையாய் நிற்றலின், அஃறிணைப்பாற்பட்டு †"உணரக்கூறிய" என்னும் புறனடையான் முடிநதது

மால் வரை மலை மகள் மகனே — பெருமையையுடைய மலையாகிய மலையரையன் மகளுடைய மகனே,

வரை - மூஙகிலுமாம

மாறறோா கூற்றே — பகைவாககுக் கூற்றுவனே,

[வெற்றி வெலபோாக கொறறவை சிறுவ]

வெறறிக் கொறறவை சிறுவ — வெறறியை உலகததிறகுக கொடுககும் வனதுர்க்கையினுடைய புதலவ,

வெல போாக கொறறவை — தான் வெல்லும்போரைச செயயுங கொற்றவை,

என்றது மகிடனைச செறறதனை

இழை அணி சிறபபிற பழையோள் குழவி— பூணணிந்த தலைமையினையுடைய காடுகாளுடைய குழவி,

காடு கிழாளெனபது இககாலததுக் காடுகாளென மருவிறறு. அவளும் இறைவனுடைய சத்தியாகலின், அவளுடைய குழவியெனறூா

[வானோா வணஙகுவிற றானைத தலைவ]

வானோா தானைத தலைவ—தேவாகள் படைத்தலைவ,

என்றது தேவசேனுபதி எனறதாம்

வணங்கு வில—வளையும வில்லையும,

விலலையும், தேவராகிய தானையையுமுடைய தலைவவென்க.

மாலை மாாப—இன்பத்திற்குரிய மாலையணிந்த மாாப,

நூல அறி புலவ—எலலா நூலகளையும் அறியும் புலவ,

புலவன-அறிவுடையவன.

செருவில் ஒருவ—போாததொழிலில ஒருவனுகி நிற்பாய,

பொரு விறல் மளள—பொருகினற வெற்றியினையுடைய மளள,

மள்ளன-இளமைபபகுதித திருநாமததோன்.

அந்தணா வெறுககை—அந்தணருடைய செல்வமாயிருப்பாய்,

---

* பரிபாடல், ரு. ௭

† தொல்காபபியம், எழுத்ததிகாரம, புள்ளிமயஙகியல, ௪௪0.

அறிந்தோர் சொல் மலை—சான்றோர் புகழ்ந்து சொல்லப்படும் சொற்களினீட்ட மாயிருப்பாய்,

மங்கையர் கணவ—தெய்வயானையாரும், வள்ளிநாச்சியாருமாகிய மகளிர்க்குக் கணவ,

மைந்தர் ஏறே—வீரர்களிடேறே,

வேல் கெழு தடக் கைச் சால் பெருஞ் செல்வ—வேலபொருந்தின பெருமையையுடைய கையானமைந்த பெரிய செல்வ,

என்றது: வேல வெற்றியாற்பெற்ற அச்செல்வத்தை

[குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து, விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ]

குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்துக் கிழவ—குருகாற் பெயர்பெற்ற மலையைப்பிளந்த குறையாத வெற்றியையுடைய கிழவ,

விண் பொரு நெடு வரைக் குறிஞ்சிக் கிழவ—தேவருலகைத் தீண்டும் நெடிய வரைகளையுடைய குறிஞ்சிநிலத்துக்கு உரிமையுடையாய,

அதற்குரியனுதல் *"சேயோன் மேய மைவரை யுலகமும்" என்பதனுனுணர்க.

பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே—பலரும் புகழ்ந்துசொல்லும் நன்றாகிய சொற்களையுடைய பரசமயத்தினுள்ளார்க்கு ஏற்றினதன்மையை உடையவனே,

என்றது. கலவிமதத்தையுடைய யானைபோலவார்க்குச் சிங்கவேறு போல்வா யென்றதாம்.

[அரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக] பெறல் அரு மரபின் பெரும் பெயர் முருக—பிறர்க்குப் பெறலரிய முறைமையினையுடைய பெரும்பொருளையுடைய முருக,

பெயர் - பொருள். † "பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய" எனவும், "சொற்பெயர் நாட்டம்" எனவும்வரும் பெரும்பொருளென்றது - வீட்டினை.

[நசையுநர்க் கார்த்து மிசைபே ராள] நசையுநர்க்கு ஆர்த்தும் பேர் இசை ஆள—அவ்வீட்டைப் பெறவேண்டுமென்று நச்சிவந்தார்க்கு அதனை நுகர்விக்கும் பெரியபுகழை ஆளுதலையுடையாய,

பேரிசை யென்று மாறுக

[அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய், மண்டமர் கடந்தநின் வென்று -கலத்து.]

அலந்தோர்க்கு அளிக்கும் சேஎய்—பிறரால் இடுக்கட்படுவந்தோர்க்கு அருள் பண்ணும் சேய்,

மண்டு அமர் கடந்த வென்று ஆடு நின் அகலத்துப் பொலம் பூண் சேஎய்—மிக்குச்செல்கின்ற போர்களைமுடித்த வென்றடுகின்ற நினதுமார்பிடத்தே பொன்னாற் செய்த பேரணிகலங்களையணிந்த சேயென்க

பரிசிலர்த் தாங்கும் உரு கெழு நெடு வேள்—இரந்துவந்தோரை வேண்டுவன கொடுத்துப் பாதுகாக்கும் உட்குதல்பொருந்திய நெடியவேளே,

பெரியோர் ஏத்தும் பெரும் பெயர் இயவுள்—தேவரும் முனிவரும் ஏத்தும் பெரிய திருநாமத்தையுடைய தலைவனே,

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், ரு.

† பதிற்றுப்பத்து, ஒன்பதாம்பத்து, க0.

‡ ,, மூன்றாம்பத்து, க.

இயவுள்—கடவுளுமாம்.

[சூர்மருங் கறுத்த மொய்ம்மயின் மதவலி, போர்மிகு] போர் மிகு மொய்ம்பின் சூர் மருங்கு அறுத்த மதவலி—போர்த்தொழிலிலே மிகுகின்ற மொய்ம்பாலே சூரபன்மாவின்குலத்தை இல்லையாக்கின மதவலியென்னும் பெயரையுடையாய்,

பொருந—உவமிக்கப்படுவாய,

பொருவப்படுமவன, பொருநனென நின்றது.

குரிசில்—தலைவன்,

[எனப்பல, யானறி யளவையி னேத்தி யானாது] என யான் அறி அளவையின் ஆனாது பல ஏத்தி—என்று யானறிந்து நினக்குக்கூறிய அளவாலே நீயும் அமையாதே பலவற்றையும் கூறிப் புகழ்ந்து,

நின் அளந்து அறிதல் மன் உயிர்க்கு அருமையின்—நின்தன்மையெல்லாம் முற்ற அளவிட்டறிதல் பல்லுயிர்க்கு அரிதாகையினாலே,

நின் அடி உள்ளி வந்தனென்—நின் திருவடியைப் பெறவேண்டுமென்று நினைந்துவந்தேன்,

நின்னொடு புரையுநர் இல்லாப் புலமையோய—நின்னோடு ஒப்பாரில்லாத மெய்ஞ்ஞானத்தை உடையோய்,

எனக் குறித்தது மொழியா அளவையில்—என்றுசொல்லி நீகருதிய வீடுபேற்றினை விண்ணப்பஞ்செய்வதற்கு முன்னே,

முந்துநீகண்டுழி முகனமர்ந்து (உருக), மகனே, கூற்றே (உருள), குழவி(உருகூ), வெறுக்கை,சொன்மலையாயிருப்பாய(உசுரு),மைந்தரேறே(உசுச),புலவரேறே(உசுஅ), சேயே (உஎக), வேளே (உஎரு), இயவுளே (உஎச), மதவலி (உஎரு), புலமையோய் (உஅ0) என்றுமுன்னா எதிர்முகமாக்கி ஏத்தி(உருக) யென அண்மைவிளி யல்லாதனவற்றை முன்னாக்கூட்டி முடிக்க அங்ஙனம் எதிர்முகமாக்கி யேத்திப் பின்னர்ப் பரவி வணங்கிச (உருஉ) செல்வ (உருரு), புதல்வ (உருசு), சிறுவ (உருஅ), தலைவ (உசு0), மார்ப, புலவ (உசுக), ஒருவ, மள்ள (உசுஉ), கணவ (உசுச), செல்வ (உசுரு), கிழவ (உசுள), முருக (உசுகூ), இசைபேராள (உஎ0), பொருந (உஎசு) வென்றுஅண்மையாகவிளித்து, மன்னுயிர்க்கருமையின் (உஎஅ) யானறியளவையினேத்தி (உஎஎ) நின்னடியுள்ளிவந்தனென் (உஎகூ) என்று நீ குறித்தது மொழியாவளவையினென முடிக்க.

[குறித்துடன, வேறுபல லுருவிற் குறும்பல கூளியர்.] வேறு பல உருவிற் குறும் பல கூளியர் உடன் குறித்து—வேறுவேறாகிய பலவடிவினையுடைய சிறிய பலராகிய சேவித்துநிற்பார சேரக்கருதி,

* "நின் கூர்நல் லடிபிற கொடுவிற் கூளியர்" என்றார் பிறரும

சாறு அயர் களத்து வீறு பெறத் தோன்றி—விழாவெடுத்தகளத்தே தாங்கள் பொலிவுபெறத் தோன்றி,

[அளியன் றானே முதுவா யிரவலன] முது வாய இரவலன தான் அளியன்—அறிவுமுதிர்ந்த வாய்மையையுடைய புலவனறான அளிக்கத்தக்கான்;

[வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென,வினியவு நல்லவு நனிபலவேத்தி:] பெரும நின வண் புகழ் நயந்து இனியவும நல்லவும் நனி பல ஏத்தி வந்தோன் என—பெரும, நினது வளவிய புகழினைக்கூறவிரும்பிக் கேட்டோர்க்கு இனியனவும் உறுதிபயப்பனவுமாக மிகக பலவற்றை வாழ்த்தி வந்தோனென்றுகூற,

* புறநானூறு, உரு.

கூளியர் (உஅஉ) குறித்துத் (உஅக) தோன்றி (உஅரு) அளியன் (உஅச) பெரும நின் வண்புகழைக் கூறநயந்து (உஅ௬) இனியவும் நலலவுமாக எத்தி, (உஅசு) வந்தோன் (உஅ௬) என்று கூறவென முடிக்க.

தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின்—தெய்வத்தன்மையமைந்த வலிவிளங்கும் வடிவினையும்,

வான் தோய் நிவபபின் தான் வந்து எயதி—வானைத்தீணடும் வளாச்சியினையுமுடைய தான் அவையை வந்தணுகி,

அணங்கு சால உயா நிலை தழீஇ—வருத்தமமைந்த தெய்வததன்மையை உள்ளடக்கிக்கொண்டு,

[பண்டைததன், மணங்கமழ் தெயவத் திளநலங காட்டி·] மணம் கமழ் தெய்வத்துப் பண்டைத் தன் இளநலம் காட்டி—மணம் நாறுகினற தெயவத்தன்மையையுடைய முன்புணடாகிய தன் இளையவடிவைக காட்டி,

[அஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென ] நின் வரவு அறிவல் அஞ்சல் ஓம்புமதி என—நீ வீடுபெற நினைததுவநத வரவை யான முன்னேயறிவேன்; அது நினக்கு எய்துதலரிதென்று அஞ்சுதலைப பரிகரியென்று,

அன்புடை நன்மொழி அளைஇ—நின்மேல் அன்புடைத்தாகிய நல்ல வார்த்தைகளைப பலகாலும் அருளிசசெய்து,

[விளிவின்று, இருணிற முந்நீர வளைஇய வுலகத, தொருநீ யாகித் தோன்ற] இருள் நிற முந்நீா வளைஇய உலகததுு ஒரு நீயாகி விளிவு இன்று தோன்ற—இருண்டநிறத்தையுடைய கடல்சூழ்ந்த உலகத்திடததே நீ யொருவனுமே பிறாககு வீடளித்தற்குரியையாய்க கேடின்றித தோன்றுமபடி,

விழுமிய பெறல் அரும பரிசில நல்குமதி—சீரிய பிறராற் பெறுதற்கரிய வீடுபேற்றினைத் தருவன்,

"இருமுஞ் சின்னு மேனை யிடததொடுந், தகுநிலை யுடைய வென்மனா புலவர்." என்றதனுனுதல † "அவவச சொல்லிறகு" என்னும் புறனடையதனுனுதன் மதி புடாக்கைககணவருதல கொள்க

இனி மதிபலவுடனெனக கூட்டி, அறிவுகள் பலவுடனே பரிசில் நலகுமென்று கூறுவாருமுளர்.

[பலவுடன், வேறுபஃ றுகிலி னுடஙகி ] வேறு பல் துகிலிற பல உடன் நுடஙகி—வேறுபட்ட பலவாகிய துகிற்கொடிகளைபபோலத தாம பலவுங கூடவசைநது,

அகில் சுமந்து ஆரம முழுமுதல் உருட்டி—அகிலை மேறகொணடு சந்தனமாகிய பெரிய மரத்தைத் தள்ளி,

வேரற் பூ உடை அலஙகு சினை புலம்ப வோ கீணடு—சிறுமூஙகிலினது பூவுடைத்தான அசைகின்ற கொம்பு தனிபப வேரைபபிளநது,

விண் பொரு நெடு வரைப் பரிதியின் தொடுதத தண் கமழ் அலா இறால் சிதைய— தேவருலகததைத் தீண்டுகின்ற நெடிய மலையிடத்தே ஞாயிற்றின்மணடிலத்தைப்போல ஈ வைக்கப்பட்ட தண்ணியவாய் மணககின்ற விரிந்த தேன்கூடு கெட,

நன் பல ஆசினி முது சுளை கலாவ—நன்றாகிய பல ஆசினிகளினுடைய முற்றிய சுளை தன்னிடத்தே கலகக,

---

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், இடையியல், உஎ.

† ,, ,, ,, சஎ

மீமிசை நாக நறுமலர் உதிர—மலையினுச்சியிலுண்டான சுரபுன்னையின் நறிய மலர்கள் உதிர,

யூகமொடு மா முக முசுக்கலை பனிப்ப—கருங்குரங்கோடே கரிய முகத்தையுடைய முசுக்கலைகளும் நடுங்க,

* "கலையென் காட்சி யுழைக்கு முரித்தே." † "கலையென் பெயர் முசுவின்" என்றார்.

பூ நுதல் இரும் பிடி குளிர்ப்ப வீசி—புகரையணிந்த மத்தகத்தையுடைய பெரிய பிடி குளிரும்படி வீசி,

பெருங் களிற்று முத்து உடை வான் கோடு தழீஇ—பெரிய யானையினுடைய முத்தையுடைத்தாகிய வெள்ளிய கொம்புகளை உள்ளடக்கி,

[தத்துற்று, நன்பொன் மணிநிறங் கிளர] நன் பொன் மணி நிறம் கிளரத் தத்துற்று—நல்ல பொன்னும் மணியும் நிறம்விளங்கும்படி மேலே கொண்டுகுதித்து,

தத்துறல்- தத்துதலையுறல்

பொன் கொழியா—பொடியான பொன்னைத் தெள்ளி,

வாழை முழுமுதல் துமியத் தாழை இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கி—வாழையினது பெரிய முதல் துணியத் தெங்கினது இளநீரையுடைய சீரியகுலை உதிர அவ்விரண்டினையும் மோதி,

கறிக் கொடிக் கருந் துணர் சாய—மிளகினதுகொடியின் கரிய கொத்துக்கள் சாய,

[பொறிப்புற, மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக், கோழி வயப்பெடை யிரிய] பொறிப் புற மட நடை மஞ்ஞை கோழி வயப் பெடை வெரீஇப் பலவுடன் இரிய—பீலியையுடைத்தாகிய இடத்தினையும் மடப்பத்தையுடைத்தாகிய ஒழுக்கத்தினையுமுடைய மயில்களோடே கோழியினுடைய வலியையுடைய பெடை வெருவிப் பலவுஞ் சேரக்கெட,

[கேழலொ டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன, குரூஉமயி ரியாக்கைக் குடாவடி யுளியம், பெருங்கல் விடரளைச் செறிய] கேழலொடு வெளிற்றின் இரும் பனைப் புன் சாய அன்ன குரூஉ மயிர் யாக்கைக் குடாவடி உளியம் பெருங் கல் விடர் அளைச் செறிய— ஆண்பன்றியுடனே உள்ளே வெளிற்றினையுடைத்தாகிய கரிய பனையினது புல்லிய செறும்பையொத்த கரியநிறத்தையுடைத்தாகிய மயிரினையுடைய உடம்பினையும், வளைந்த அடியினையுமுடைய கரடி பெரிய கல்விண்ட முழைஞ்சிலே சேர,

கருங் கோட்டு ஆமா நல் ஏறு சிலைப்ப—கரிய கொம்பினையுடைய ஆமாவினுடைய நன்றாகிய ஏறுகள் முழங்க,

சேண் நின்று இழுமென இழிதரும் அருவி—மலையின் உச்சியினின்றும் இழுமென்னும் ஓசைபடக் குதிக்கும் அருவியையுடைய,

பழம் முதிர் சோலை மலை கிழவோனே—பழம் முற்றின சோலைகளையுடைய மலைக்கு உரிமையையுடையோனே,

நுடங்கிச் சுமந்து உருட்டிக் கீண்டு சிதையக் கலாவ உதிரப் பனிப்ப வீசித் தழீஇத் தத்துறூஉக் கொழியாத் துமிய உதிரத்தாக்கிச் சாய இரியச் செறியச் சிலைப்ப இழிதரும் அருவியென முடிக்க.

கிழவோனென்றபெயர் உடம்பொடுபுணர்த்தலாற் கொள்க.

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௬௫.

† " " " ௬௯.

கணவன் (சு) மார்பினன் (கக) சென்னியனுகிய (சச) சேயுடைய (சுக) சேவடி படரும் உள்ளத்தோடே (ஙஉ) செல்லுஞ்செலவை நீநயந்தனையாயின் (சுச),நன்னா நெஞ்சத்து இன்னசைவாய்ப்ப இன்னேபெறுதி (சுசு), அதுபெறுதற்கு அவன்யாண்டு றையுமென்னிற் குன்றமர்ந்துறைதலுமுரியன்; அதுவன்றி (எஎ) அலைவாய்ச்சேற லும் நிலையியபண்பு; அதுவன்றி (கஉரு) ஆவினன்குடி அசைதலுமுரியன்; அது வன்றி (கஎசு) ஏரகத்துறைதலுமுரியன்; அதுவன்றிக் (கஅக) குன்றுதோறாடலும் நின்றதன்பண்பு, அதுவன்றி(உகஎ)விழவினகண்ணும்(உஉ0)நிலையின்கண்ணும்(உஉக) கந்துடைநிலையின்கண்ணும (உஉசு) உறைதலுமுரியன் (கஅக), களனும் (உஉஉ)காடு (உஉங) முதலியன ஆண்டாண்டுறைதலும (உசக) உரியன் (கஅக); நகரிலே (உசச) பாடி (உசரு) வைத்துஇயக்கி (உசசு) வாழ்த்தி (உசஎ) வழிபட (உசஅ) உறைதலுமு ரியன்; (கஅக) இஃதியானறிந்தபடியே கூறினேன்(உசக), இனி ஆண்டாண்டாயினு மாகப் பிறவிடங்களிலேயாயினுமாக (உரு0),முகந்தகண்டுழிமுகனமர்ந்துமுன்னரே திர்முகமாக்கிஏத்திப்(உருக) பரவி வணங்கி(உருஉ)அண்மையாகவிளித்து யானறிய ளவையினேத்தி (உஎஎ) நின்னடி யுள்ளி வந்தேனென்று (உஎக) நீகுறித்தது மொழி வதற்குமுன்னே(உஅக) கூளியா (உஅஉ)குறித்துத்(உஅக) தோன்றிப் (உஅங) பெரும (உஅரு)இரவலன் நீஅளிக்கத்தக்கான் (உஅச) வந்தோனென்றுகூற (உஅரு) மலைகிழ வோனாகிய(ஙகஎ)குரிசிலும் (உஎசு) தான்வந்தெய்தித் (உஅஅ) தழீஇக் (உஅக) காட் டி (உகூ0)அஞ்சலோம்புமதியென்று (உகூக)அன்புடை நன்மொழியளைஇ (உகூஉ) ஒரு நீயாகித்தோன்றும்படி (உகூச) பெறலரும்பரிசில் நல்குவனென (உகூரு) வீடுபெறக் கருதியஇரவலனைநோக்கி வீடுபெற்றானொருவன் ஆற்றுப்படுத்ததாக வினைமுடிக்க

இது,புறத்திணையியலுள் *"தாவினல்லிசை" என்னுஞ் சூத்திரத்துள் "ஆற்றி டைக் காட்சி யுறழத் தோன்றிப்,பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச், சென்று பய னெதிரச் சொன்ன பக்கமும்" எனபதனுன் முற்கூறிய கந்தழியைப் பெற்றானொ ருவன் அதனைப் பெறாதானொருவனுக்குப் பெறுமாறு கூறி அவனை வழிப்படுத்துக்கூ றுவானென்பது பற்றிச் செய்யுள் செய்தாராயிற்று

கந்தழியாவது ஒருபற்றுமற்று அருவாய்த் தானேநிற்குந் தத்துவங்கடந்த பொ ருள்; அது † "சார்பினுற் றோன்றாது தானருவாய் **மைதீர் சுடர்" என்பதாம்; இதனை ‡ "உற்றவாக்கையி னுறுபொரு ளறுமல ரெழுதரு நாற்றமபோற-பற்றலா வதோர் நிலையிலாப பரம்பொருள்" என அதனை உணர்ந்தோர கூறியவாற்றானுணர்க

முருகாற்றுப்படை யென்றதற்கு வீடுபெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடுபெற்றா னொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்ததென்று பொருள்கூறுக.

**குமரவேளை மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரனார்பாடிய திருமுருகாற் றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று**

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், ஙசு

† வெண்பா. "சார்பினுற் றோன்றாது தானருவா யெப்பொருட்குஞ் - சார் பெனநின் றெஞ்ஞான்று மின்பந் தகைத்தரோ - வாய்மொழியான் மெய்யான் மனத் தா னறிவிறந்த - தூய்மையதா மைதீர சுடர்"

‡ திருவாசகம், அதிசயப்பத்து, கூ.

## வேலும் மயிலுந் துணை.



அடியிலுள்ள பாடல்கள், பத்துப்பாட்டுமூலத்துள்ள பழைய ஏட்டுப்பிரதிகளிலில்லாமல் திருமுருகாற்றுப்படை மட்டுமுள்ள புதிய ஏட்டுப்பிரதிகளிலும் அச்சுப் பிரதிகளிலும் இருந்தமையால் தனியே பதிப்பிக்கப்பட்டன.

### நேரிசை வெண்பா.

௧ குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய் — என்று
மிளையா யழகியா யேறூர்ந்தா னேறே
யுளையாயென் னுள்ளத் துறை.

௨ குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவு
மன்றங் கமரரிடர் தீர்த்ததுவு — மின்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவு
மெய்விடா வீரன்கை வேல்.

௩ வீரவே றாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வே டிருக்கைவேல் — வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
துளைக்கவே லுண்டே துணை.

௪ இன்ன மொருகா லெனதிடும்பைக் குன்றுக்குக்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா — முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்.

௫ உன்னை யொழிய வொருவரையு நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன் — பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே.

௬ அஞ்சு முகந்தோன்றி லாறு முகந்தோன்றும்
வெஞ்சமரி லஞ்சலென வேறோன்றும் — நெஞ்சி
லொருகா னினைக்கி னிருகாலுந் தோன்று
முருகாவென் றோதுவார் முன்.

௭ முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே — யொருகைமுகன்
றம்பியே நின்னுடைய தண்டைக்கா லெப்பொழுது
நம்பியே கைதொழுவே னான்.

அ. காக்கக் கடவியநீ காவா திருந்தக்கா
லாக்குப ப[illegible]மறுமுகவா—பூக்குங
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
விடங்கா ணிரங்கா யினி.

கூ. பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதங
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காம
லாசையா னெஞ்சே யணிமுருகாற றுப்படையைப்
பூசையாக கொண்டே புகல

க0. நககீரா தாமுரைதத நன்முருகாற றுபபடையைத
தறகோல நாடோறுஞ சாறறினுல—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்ததருளித
தானினைதத வெலலாந தரும



இ ர ண் டா வ து

# பொருநராற்றுப்படை.



அறாஅ யாண ரகன்றலைப் பேரூர்ச்
சாறுகழி வழிநாட் சோறுநசை யுறாது
வேறுபுல முன்னிய விரகறி பொருந
குளப்புவழி யன்ன கவடுபடு பத்த
ரு விளக்கழ லுருவின் விசியுறு பச்சை
யெய்யா விளஞ்சூற் செய்யோ ளவ்வயிற்
றைதுமயி *ரொழுகிய தோற்றம் போலப்
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை
யளைவா ழலவன் கண்கண் டன்ன
க0 துளைவாய் தூர்ந்த துரப்பமை யாணி
யெண்ணாட் டிங்கள் வடிவிற் றாகி
யண்ணா வில்லா வமைவரு வறுவாய்ப்
பாம்பணந் தன்ன வோங்கிரு மருப்பின்
மாயோண் முன்கை யாய்தொடி கடுக்குங்
கரு கண்கூ டிருக்கைத் திண்பிணித் திவவி
னாய்தினை யரிசி யவைய லன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பிற்
கேள்வி போகிய நீள்விசித் தொடையல்
மணங்கமழ் மாதரை மண்ணி யன்ன
உ0 வணங்குமெய்ந் நின்ற வமைவரு காட்சி
யாறலை கள்வர் படைவிட வருளின்
மாறுதலை பெயர்க்கு மருவின் பாலை
வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்துஞ்
சீருடை நன்மொழி நீரொடு சிதறி
உரு யறல்போற் கூந்தற் பிறைபோற் றிருநுதற்
கொலைவிற் புருவத்துக் கொழுங்கடை மழைக்க
ணிலவிதழ் புரையு மின்மொழித் துவர்வாய்ப்
பலவுறு முத்திற் பழிதீர் வெண்பல்

* ஒழுங்கிய வென்றும் பாடம்.

மயிர்க்குறை கருவி மாண்கடை யன்ன
௩௰ பூங்குழை யூசற் பொறைசால் காதி
னாணடச் சாய்ந்த நலங்கிள ரொருத்தி
னாடமைப் பணைத்தோ ளரிமயிர் முன்கை
நெடுவரை மிசைஇய காந்தண் மெல்விரற்
கிளிவா யொப்பி னொளிவிடு வள்ளுகி
௩௫ ரணங்கென வுருத்த சுணங்கணி யாகத்
தீர்க்கிடை போகா வேரிள வனமுலை
நீர்ப்பெயர்ச் சுழியி னிறைந்த கொப்பூ
ழுண்டென வுணரா வுயவு நடுவின்
வண்டிருப் பன்ன பல்கா ழல்கு
௪௰ லிரும்பிடித் தடக்கையிற் செறிந்துதிரள் குறங்கிற்
பொருந்துமயி ரொழுகிய திருந்துதாட் கொப்ப
வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி
யரக்குருக் கன்ன செந்நில னொதுங்கலிற்
பரற்பகை யுழந்த நோயொடு சிவணி
௪௫ மரற்பழுத் தன்ன மறுகுநீர் மொக்கு
ணன்பக லந்தி நடையிடை விலங்கலிற்
பெடைமயி லுருவிற் பெருந்தகு பாடினி
பாடின பாணிக் கேற்ப நாடொறுங்
களிறு வழங்கதர்க் கானத் தல்கி
௫௰ யிலையின் மராத்த வெவ்வந் தாங்கி
வலைவலந் தன்ன மென்னிழன் மருங்கிற்
காடுறை கடவுட்கடன் கழிப்பிய பின்றைப்
பீடுகெழு திருவிற் பெரும்பெயர் நோன்றாண்
முரசுமுழங்கு தானை மூவருங் கூடி
௫௫ யரசவை யிருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை யெழாஅற்
கோடியர் தலைவ கொண்ட தறிந
வறியா மையி னெறிதிரிந் தொராஅ
தாற்றெதிர்ப் படுதலு நோற்றதன் பயனே
௬௰ போற்றிக் கேண்மதி புகழ்மேம் படுந
வாடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கலொடு
நீடுபசி யொராஅல் வேண்டி னீடின்
றெழுமதி வாழி யேழின் கிழவ
பழுமர முள்ளிய பறவையின் யானுமவ
௬௫ ணிழுமென் சும்மை யிடனுடை வரைப்பி

னசையுநர்த் தடையா நன்பெரு வாயி
லிசையேன் புக்கென் னிடும்பை தீர
வெய்த்த மெய்யே னெய்யே னாகிப்
பைத்த பாம்பின் றுத்தி யேய்ப்பக்
எ0 கைக்கச டிருந்தவென் கண்ணகன் றடாரி
யிருசீர்ப் பாணிக கேற்ப விரிகதிர்
வெள்ளி முளைத்த நள்ளிருள் விடிய
லொன்றியான் பெட்டா வளவையி னொன்றிய
கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி
எரு வேளாண் வாயில வேட்பக் கூறிக்
கண்ணிற காண நண்ணு வழியிரீஇப
பருகு வனன வருகா நோககமோ
டுருகு பவைபோ லென்பு குளிர்கொளீஇ
யீரும பேனு *மிருந்திறை கூடி
அ0 வேரொடு நனைந்து வேறறிழை நுழைந்த
துன்னற சிதாஅர் துவர நீக்கி
நோக்கு †நுழை கலலா நுண்மைய பூக்கனிந்
தரவுரி யன்ன வறுவை நல்கி
மழையென மருளு மகிழ்செய மாடத
அரு திழையணி வனபபி னின்னகை மகளிர்
போககில பொலங்கல நிறையப் பல்கால
வாக்குபு தரததர வருததம் வீட
வார வுண்டு பேரஞர் போக்கிச
செருககொடு நின்ற காலை மறறவன்
கூ0 றிருககிளர் கோயி லொருசிறைத தஙகித
தவஞசெய மாகக டமமுடம பிடாஅ
ததன்பய மெயதிய வளவை மான
வாறுசெல வருதத மகல நீக்கி
யனநதா நடுகக மலலதி யாவது
கூரு மனஙகவல பின்றி மாழாந் தெழுநது
மாலை யனனதோா புன்மையுங் காலைக
கண்டோர் மருளும வண்டுசூழ் நிலையுங்
கனவென மருண்டவென் னெஞ்சே மாப்ப
வலலஞா பொத்திய மனமகிழ் சிறபபக்
க00 கல்லா விளைஞர் சொல்லிக் காட்டக்

* இமிரந் தென்றும் பாடம்.
† நுழைவேலா வென்றும் பாடம்.

கதுமெனக் கரைந்து வம்மெனக் கூஉ
யதன்முறை கழிப்பிய பின்றைப் பதனறிந்து
துராஅய்த் துற்றிய துருவையம் புழுக்கின்
பராஅரை வேவை பருகெனத் தண்டிக்
௧௦௫ காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை
யூழி னூழின் வாய்வெய் தொற்றி
யவையவை முனிகுவ மெனினே சுவைய
வேறுபல் லுருவின் விரகு தந்திரீஇ
மண்ணமை முழவின் பண்ணமை சீறியா
௧௧௦ ழொண்ணுதல் விறலியர் பாணி தூங்க
மகிழ்ப்பதம் பன்னாட் கழிப்பி யொருநா
ளவிழ்ப்பதங் கொள்கென் றிரப்ப முகிழ்த்தகை
முரவை போகிய முரியா வரிசி
விரலென நிமிர்ந்த நிரலமை புழுக்கல்
௧௧௫ பால்வறைக் கருனை காடியின் மிதப்ப
வயின்ற காலைப் பயின்றினி திருந்து
கொல்லை யுழுகொழு வேய்ப்ப பல்லே
யெல்லையு மிரவு மூன்றின்று மழுங்கி
யுயிர்ப்பிடம் பெறாஅ தூண்முனிந் தொருநாட்
௧௨௦ செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய
செல்வ சேறுமெந் தொல்பதிப் பெயர்ந்தென
மெல்லெனக் கிளந்தன மாக வல்லே
யகறி ரோவெம் மாயம் விட்டெனச்
சிரறிய வன்போற் செயிர்த்த நோக்கமொடு
௧௨௫ துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு
பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கெனத்
தன்னறி யளவையிற் றரத்தர யானு
மென்னறி யளவையின் வேண்டுவ முகந்துகொண்
டின்மை தீர வந்தனென் வென்வே
௧௩௦ லுருவப் பஃறே ரிளையோன் சிறுவன்
முருகற் சீற்றத் துருகெழு குரிசி
றாய்வயிற் றிருந்து தாய மெய்தி
யெய்யாத் தெவ்வ ரேவல் கேட்பச்
செய்யார் தேஎந் தெருமரல் கலிப்பப்
௧௩௫ பவ்வ மீமிசைப் பகற்கதிர் பரப்பி
வெவ்வெஞ் செல்வன் விசும்புபடர்ந் தாங்குப்
பிறந்துதவழ் கற்றதற் றொட்டுச் சிறந்தநன்

ளுடுசெகிற் கொண்டு நாடொறும வளர்ப்ப
வாளி நன்மா னணங்குடைக் குருளை
கசா0 மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி
முலைக்கோள் விடாஅ மாததிளை'ஞரோரெனத
தலைக்கோள் வேட்டங் களிறட் டாஅங்
கிருமபனம போந்தைத தோடுங கருஞசினை
யரவாய் வேமபி னங்குழைத தெரியலு
கசரு மோங்கிருஞ சென்னி மேமபட மிலைநத
விருபெரு வேந்தரு மொருகளத தவிய
வெண்ணிற றாககிய வெருவரு நோன்றட
கண்ணார் கண்ணிக கரிகால வளவன
றாணிழன் மருஙகி லணுகுபு குறுகித
கரு0 தொழுதுமுன னிறகுவி ராயிற் பழுதின
றீற்று விருபபிற போறறுபு நோககிநும
*கையது கேளா வளவை யொயயெனப
பாசி வேரின் †மாசொடு குறைநத
துன்னற சிதாஅர் நீககித தூய
கருரு கொட்டைக கரைய படடுடை நலகிப
பெறலருங கலததிற பெட்டாங குண்கெனப
பூககமழ் தேறல வாககுபு'தரததர
வைகல வைகல கைககவி பருகி
யெரியகைந தன்ன வேடி றாமரை
கசூ0 சுரியிரும பிதளைப் பொலியச சூட்டி
நூலின் வலவா நுணங்கரின் மாலை
வாலொளி முததமொடு பாடினி யணியக
கோட்டிற செயத கொடிஞசி நெடுநதே
ரூட்டுளை துயலவர வோரி நுடஙகப
கசூரு பாலபுரை புரவி நாலகுடன பூட்டிக
காலி னேழடி பபினசென்று கோலின
றாறுகளைந் தேறென றேற்றி வீறுபெறு
போயாழ் முறையுளிக் கழிபபி நீரவாயத
தணபணை தழீஇய தளரா விருககை
கஎ0 நன்பல லூர நாட்டொடு நனபல
வெரூஉபபறை நுவலும பரூஉபபெருந் தடக்கை
வெருவருஞ் செலவின் வெகுளி வேழங்

* கையது கொள்ளா வென்றும் பாடம்.

† மாசொடு மிடைந்த வென்றும் பாடம்

தாவிடைத் தங்கலோ விலனே வரவிடைப்
பெற்றவை பிறர்பிறர்க் கார்த்தித் தெற்றெனச்
கஎரு செலவுகடைக் கூட்டுதி ராயிற் பலபுலந்து
நில்லா வுலகத்து நிலைமை தூக்கிச்
செல்கென விடுக்குவ னல்ல னொல்லெனத்
திரைபிறழிய விரும்பெளவத்துக்
கரைசூழ்ந்த வகன்கிடக்கை
க௮0 மாமாவின் வயின்வயினெற்
றூழ்தாழைத் தண்டண்டலைக்
கூடுகெழீஇய குடிவயிஞற
செஞ்சோற்ற பலிமாந்திய
கருங்காக்கை கவவுமுனையின
க௮ரு மனைநொச்சி நிழலாங்க
ணீற்றி யாமை தன்பார்ப் போம்பவு
மிளையோர் வண்ட லயரவு முதியோ
ரவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவு
முடக்காஞ்சிச் செம்மருதின்
ககூ0 மடக்கண்ண மயிலால்ப
பைம்பாகற் பழந்துணரிய
செஞ்சுளைய கனிமாந்தி
யறைக்கரும்பி னரிநெல்லி
னினக்களம ரிசைபெருக
ககூரு வறளடும்பி னிவர்பகன்றைத்
தளிர்ப்புன்கின் றாழ்காவி
னனைஞாழலொடு மரங்குழீஇய
வவண்முனையி னகன்றுமாறி
யவிழ்தளவி னகன்றோன்றி
உ00 நகுமுல்லை யுகுதேறுவீப்
பொற்கொன்றை மணிக்காயா
நற்புறவி னடைமுனையிற்
சுறவழங்கு மிரும்பெளவத்
திறவருந்திய வினநாரை
உ0ரு பூம்புன்னைச் சினைச்சேப்பி
னோங்குதிரை யொலிவெரீஇத்
தீம்பெண்ணை மடற்சேப்பவுங்
கோட்டெங்கின் குலைவாழைக்
கொழுங்காந்தண் மலர்நாகத்துத்

உகO துடிக்குடி ஞைக் குடிப்பாக்கத்
தியாழ்வண்டின் கொளைக்கேற்பக்
கலவம்விரித்த மடமஞ்ஞை
நிலவெக்காப் பலபெயர்த்த
தேனெய்யொடு கிழங்குமாறியோர்
உகரு மீனெய்யொடு நறவுமறுகவுந்
தீங்கரும்போ டவல்வகுத்தோர்
மான்குறையொடு மதுமறுகவுங்
குறிஞ்சி பரதவர் பாட நெய்தல்
நறும்பூங் கண்ணி குறவர் சூடக்
உஉO கானவர் மருதம் பாட வகவர்
நீனிற முல்லைப் பஃறிணை நுவலக்
கானக்கோழி கதிர்குத்த
மனைக்கோழி தினைக்கவர
வரைமந்தி கழிமூழ்கக்
உஉரு கழிநாரை வரையிறுப்பத்
தண்வைப்பினு * னாடுகுழீஇ
மண்மருங்கினான மறுவின்றி
யொருகுடையா னொன்றுகூறப்
பெரிதாண்ட பெருங்கேண்மை
உகூO யறனொடு புணர்ந்த திறனறி செங்கோ
லன்னோன் வாழி வெல்வேற் குரிசில
மன்னர் நடுங்கத் தோன்றிப் பன்மா
ணெல்லை தருநன் பல்கதிர் பரப்பிக்
குல்லை கரியவுங் கோடெரி நைப்பவு
உகூரு மருவி மாமலை நிழத்தவு மற்றக்
கருவி வானங் கடற்கோண் மறப்பவும்
பெருவற னாகிய பண்பில் காலையு
நறையு நரந்தமு மகிலு மாரமுந்
துறைதுறை தோறும் பொறையுயிர்த்தொழுகி
உசO நுரைத்தலைக் குரைப்புனல் வரைப்பகம் புகுதொறும்
புனலாடு மகளிர் கதுமெனக் குடையக்
கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து
சூடுகோ டாகப் பிறக்கி நாடொறுங்
குன்றெனக் குவைஇய குன்றாக் குப்பை
உசரு கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்கு

---

* நாடுகெழீஇ யென்றும் பாடம்.

சாலி நெல்லின் சிறைகொள் வேலி
யாயிரம் விளையுட் டாகக
காவிரி புரககு நாடுகிழ வோனே.

'இதன்பொருள்.

அருஅ யாணா அகன் தலைப் பேரா ஊா—இடையறாத செல்வவருவாயினையு டைய அகன்ற இடத்தையுடைய பெரிய ஊர்களிடத்து,

சாறு கழி வழிநாட் சோறு நசை உருது—விழாக்கழிந்த பின்னாளில் ஆண்டுப் பெறுகின்ற சோற்றை விரும்புதல்செய்யாது,

வேறு புலம் முன்னிய விரகு அறி பொருந—விழாக்கொண்டாடும் வேறறுபபு லத்தைக கருதிய * விரகையறிந்த பொருந,

இஃது அண்மைவிளி·

குளப்பு வழி அன்ன கவடு படு பததல—மான்குளம்பழுத்திய இடத்தையொ தத இரணடருகுந்தாழ்ந்த நடுவுயாநத பததலினையும்,

விளக்கு அழல் உருவின் விசி உறு பசசை—விளக்கினது எரிகின்ற நிறத்தை யுடைய விசித்துப் போாத்தலுறற தோல்,

எயயா இளஞ் சூற் செயயோள அவவயிறறு—மிக அறியப்படாத இளைய சூலையு டைய சிவந்த நிறததையுடையோளது அழகினையுடைய வயிற்றின்,

செய்யோளென்றார், மயிரொழுஙகு விளஙகித தோற்றுதற்கு

ஐது மயிா ஒழுகிய தோறறம் போல—ஐதாகிய மயிா ஒழுங்குபடக்கிடந்த தோ றறாவுபோல,

`பொல்லம் பொத்திய பொதி உறு போாவை—இரண்டுதலையுங் கூட்டித்தைத்த மரத்தைப்பொதிதலுறும் போர்வையினையும,

அளை வாழ அலவன் கண் கணடு அன்ன துளை வாய தூாநத துரப்பு அமை ஆணி—முழையிலேவாழ்கின்ற ஞெணடின்கண்ணைக் கண்டாலொத்த பத்தலிரண்டு ஞ்சோாததறகுத் திறந்த துளைகளின் வாய மறைததறகுககாரணமாகிய முடுககுதலமை ந்த ஆணியினையும்,

தோல் நெகிழாமல் முடுககின ஆணியென்றமுறைபபா. அன்ன ஆணியென்க.

எணணாள திஙகள் வடிவிறறாகி அணணா இலலா அமை வரு வறு வாய—உவா விறகு எட்டாநாளிற் றிஙகளின்வடிவை உடைத்தாய் உணணாககில்லாத பொருந்துத ல்வந்த வறியவாயினையும,

பாம்பு அணாநது அன்ன ஓங்கு இரு மருப்பின்—பாமபு தலையெடுத்தாலொத்த ஓங்கின கரிய தணடினையும்,

மாயோள முன்கை ஆய் தொடி கடுக்கும திவவின் (கடு)—கரியநிறத்தை யுடையோளுடைய முன்கையில் அழகினையுடைய நோ்நத தொடியையொக்கும் வா ர்க்கட்டினையும்,

கண்கூடு இருக்கைத் திண பிணித திவவு—ஒன்றோடொன்று நெருங்கின இருப்பையுடைததாகிய திணபிணிப்பினையுடைய திவவு,

இது நரம்புதுவக்கப்படுவது

* விரகு-உபாயம்

ஆய் தினை அரிசி அவையல் அன்ன வேய்வை போகிய விரல் உளா நரம்பின் கேள்வி போகிய நீள் விசித் தொடையல்—அழகினையுடைய தினையரிசியிற குத்தலரிசியையொத்த குற்றம்போகிய விரலாலசைககும் நரமபினையுடைய இசைமுற்றுப் பெற்ற நீண்ட விசிததலையுடைய தொடாச்சியினையும்,

மணங கமழ் மாதரை மணணி அன்ன காட்சி (உ0) - கலியாணஞ்செயததமை தோறறுகின்ற மாதரை ஒப்பிததாலொதத அழகினையுமுடைய,

அணஙகு மெயந் நினற அமை வரு காடசி—யாழிறகுரியதெயவம தன்னிடதததேநின்ற இலககணம் அமைதலவரும் அழகு

ஆறு அலை கள்வா *படை இட—வழியையலைக்கின்ற கள்வா தஙகையிற படைக் கலஙகளைக் கைவிடும்படி,

அருளின் மாறு தலை பெயாககும மருவு இன பாலை—அருளினது மாறுகிய மறத்தினை யவாகளிடததுநின்று பெயாககும் மருவுதலினிய பாலையாழை,

பாலை - ஆகுபெயா. "கோடே பதத ராணி நரம்பே - மாடக மெனவரும் வகையின தாகும" என்றதனலை, மாடகமொழிநதன கூறினா.

பததலினையும் (௪), பொலலமபொததிய (அ) பச்சையாகிய (௫) போாவையினையும் (அ), ஆணியினையும (௧0), வறுவாயினையும (௧௨), மருபபினையும் (௧௩), வார்ககட்டினையும் (௧௫), நரம்பினதொடாச்சியினையும் (௧அ), காடசியினையும் (௨0) உடைய பாலையாழென முடிகக

"கொனறை கருஙகாலி குமிழ்முருககுத தணககே" எனபதனுல, கோட்டிற்கு மரம கொனறையுங கருஙகாலியுமாம, குமிழும, முருககும, தணககும பத்தறகு மரம

வாரியும—நரமபுகளைககூடடத தழுவியும,

வடிததும- -உருவியும,

உநதியும—தெறிததும,

உறழநதும—ஒனறைவிடடு ஒனறைததெறிததும,

வடித்தல - நரம்பெறிதலெனறுமுரைபபா

சீா உடை நனமொழி நீரொடு சிதறி—சீாையுடைததாகிய தேவபாணிகளை நீாமையுடன் பரககபபாடி,

சீரெனவே பாணியுந் தூககும் உளவாயின

அறலபோறகூந்தல—ஆறறறலபோலும் கூநதலினையும,

பிறை போற திரு நுதல—பிறைபோல அழகினையுடைய நுதலினையும,

கொலை விற புருவதது—கொலைததொழிலையுடைய விறபோலும புருவததினையும,

கொழுங கடை மழைக கண—அழகிய கடையினையுடைய குளிாசசியையுடைய

இலவு இதழ புரையும இன மொழித துவா வாய்—இலவினது இதழையொககும் இனியசொலலையுடைய செமமையுடைததாகிய வாயினையும்,

பல உறு முத்திற் பழி தீா வெண பல்—பலவுஞ்சோாநத முத்துக்களபோற் குற்றந்தீர்ந்த வெளளிய பலலினையும,

* படை விடவென்றும் பாடம.

பலமுத்தென்றார், ஒருகோவையாயிருத்தலின். இனிப் பலவிலையுற்ற முத்தென்றுமாம்.

[மயிர்குறை கருவி மாண்கடை யன்ன, பூங்குழை யூசறு பொறைசால் காதின்:]

மயிர் குறை கருவி மாண கடை அன்ன காதின்—மயிர்வெட்டுகின்ற கத்திரிகையினுடைய மாட்சிமைப்பட்ட குழைச்சையொத்த காதினையும்,

பூங்குழை ஊசறு பொறை சால் காது—பொலிவினையுடைய மகரக்குழையினுடைய அசைவினைப் பொறுத்தலமைந்த காது.

நாண் அட சாய்ந்த நலங் கிளர் எருத்தின்—நாணம் வருத்தலாற் பிறரைநோக்காதுகவிழ்ந்த நன்மைவிளங்குகின்ற கழுத்தினையும்,

ஆடு அமைப் பணைத் தோள்—அசைகின்ற மூங்கில்போலும் பெருத்தலையுடைய தோளினையும்,

அரி மயிர் முன்கை—ஐம்மைமயிரினையுடைய முன்கையினையும்,

நெடு வரை மிசைஇய காந்தள் மெல் விரல்—நெடிய மலையின் உச்சியிடத்தனவாகிய காந்தள்போலும் மெல்லிதாகிய விரலினையும்,

கிளி வாய் ஒப்பின் ஒளி விடு வள் உகிர்—கிளியினது வாயோடொப்பினையுடைய ஒளிவிடுகின்ற பெருமையையுடைத்தாகிய உகிரினையும்,

அணங்கு என உருத்த சுணங்கு அணி ஆகத்து முலை (௩௬)—பிறர்க்கு வருத்தமெனத் தோற்றின சுணங்கணிந்த மார்பிடத்து முலையினையும்,

ஈர்க்கு இடை போகா ஏர் இள வனம் முலை—ஈர்க்கும் நடுவேபோகாத எழுச்சியையுடைய இளைய அழகினையுடைய முலை

நீர்ப் பெயர்ச் சுழியின் நிறைந்த கொப்பூழ்—நீரிடத்துப் பெயர்தலையுடைய சுழிபோல உத்தமவிலக்கணங்கள் நிறைந்த கொப்பூழினையும்,

உண்டென உணரா உயவும் நடுவின்—உண்டென்று பிறருணரப்படாத வருந்துமிடையினையும்,

உயவினென்று பாடமாயின், வருந்துதலையுடையவென்க

வண்டு இருப்பு அன்ன பல காழ் அல்குல்—பல வண்டினங்களின் இருப்பையொத்த பலமணிகோத்த வடங்களையுடைய மேகலையணிந்த அல்குலையும்,

காழ்-ஆகுபெயர்.

இரும் பிடித் தடக் கையிற் செறிந்து திரள் குறங்கின்—பெரிய பிடியினுடைய பெருமையையுடைய கைபோல ஒழுகவந்து மெல்லிதாகத் தம்மிலநெருங்கி ஒன்றித்திரண்ட குறங்கினையும்,

பொருந்து மயிர் ஒழுகிய திருந்து தாட்கு ஒப்ப—கணைக்காற்கு இலக்கணமென்றற்குப் பொருந்தின மயிர் ஒழுங்குபட்ட வினையிலக்கணங்களிருந்தின கணைக்காலுக்குப் பொருந்த,

[வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி]

வருந்து நாய் நாவிற் சீறடி—ஓடியிளைத்த நாயினது நாப்போலச் சிறிய அடி

தாட்கொப்பப் பெருந் தகு அடி—தாளுக்குப்பொருந்தப் பெருமை தக்கிருக்குமடியென்க

பெருவென்னுமுதனிலை பெருமையையுணர்த்திநின்றது.

அரக்கு உருக்கு அன்ன செந்நிலன் ஒதுங்கலின்—சாதிலிங்கத்தை உருக்கின தன்மையொத்த செய்யநிலத்தே நடக்கையினாலே,

பரற் பகை யுழந்த நோயொடு சிவணி—சுக்கான்கல்லாகிய பகையாலே வருந்தின நோயோடேபொருந்தி,

மரற் பழுத்தன்ன மறுகு நீர் மொக்குள்—மரற்பழுத்தாற்போன்ற துளும்புநீரை யுடைய கொப்புளம்,

நன் பகல் அந்தி நடை இடை விலங்கலின்—நன்றாகிய உச்சிக்காலமான சந்தியிலே நடத்தலை நடுவே தவிர்தலாலே,

பெடை மயில் உருவிற் பெருந் தகு பாடினி—பெடைமயிலருகுநின்ற மயில் போலும் சாயலினையுமுடைய கலவிப்பெருமை தகுகின்ற பாடினி,

கூந்தலினையும், நுதலினையும் (உரு), புருவத்தினையும், கண்ணினையும் (உசு), வாயினையும் (உஎ), பல்லினையும் (உஅ), காதினையும் (௩௦), எருத்தினையும் (௩௧), தோளினையும், கையினையும் (௩உ), விரலினையும் (௩௩), உகிரினையும் (௩௪), முலையினையும் (௩௫), கொப்பூழினையும் (௩எ), நடுவினையும் (௩அ), அல்குலினையும் (௩௯), குறங்கினையும் (௪௦), சீறடியினையும் (௪உ), உருவினையுமுடைய பாடினியென்க

இங்ஙனம் சீறடியுங்கூட்டி எண்ணுகைக்காலை தலைமுதல் அடியீறின்றாகக் கூறிற்று

பாடின பாணிக்கு ஏற்ப—பாடின தாளத்திற்குப் பொருந்த,

நாடொறுங் களிறு வழங்கு அதர்க் கானத்து அல்கி—நாடோறும் யானையுலாவரும் வழியையுடைய காட்டிடத்தே தங்கி,

[இலையின் மராத்த வெவ்வந் தாங்கி, வலைவலந் தன்ன மென்னிழன் மருங்கின்:]

இலை இல மராத்த வலை வலந்தன்ன மெல் நிழல் மருங்கில்—இலையில்லாத மராத்திடத்தனவாகிய வலையை மேலேகட்டினாலொத்த மெல்லியநிழலினிடத்தே,

எவ்வம் தாங்கி—கொப்புளாலவந்த வருத்தந்தாங்கி,

இனி ஞாயிற்றின் வெம்மையால் தனக்குவந்த எவ்வத்தைத்தாங்கி இலையில்லாத மராமரமென மராமரத்தின்மே லேற்றுதலுமாம்

காடு உறை கடவுட் கடன் கழிப்பிய பின்றை—காட்டின்கண்ணே தங்குகின்ற தெய்வத்திற்கு மனமகிழ்ச்சியாகச்செய்யும் முறைமைகளைச் செய்துவிட்டபின்பு,

பொருந (௩), பாடினி (௪எ) செந்நிலனொதுங்கலின் (௪௩), அவளடிகள் (௪உ), பரற்பகையுழந்த நோயொடுசிவணித் (௪௪) நமமிடத்தேகொண்ட மொக்குளால்(௪ரு) தனக்குவந்த வருத்தத்தைத் தாங்கித் (௫௦) தான் நடையைத்தவிர்தலாலே (௪௬) கானத்தின (௪௯) மென்னிழன் மருங்கிற் (௫௧) றங்கிப (௪௯) பாலையாழை (உஉ) வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும் (உ௩) வாசித்து, பாடின பாணிக்கேற்பச் (௪அ) சீருடைநன்மொழி நீரொடுசிதறிக (உ௪) காடுறைகடவுட்கடன் கழிப்பியபின்றை யெனமுடிக்க

கடன்கழித்தல் - நடாரியைவாசித்தல.

பீடு கெழு திருவிற் பெரும் பெயர் நோன் தாள் முரசு முழங்கு தானை மூவருங் கூடி—பெருமைபொருந்தின செல்வத்தையும் பெரிய பெயர்களையும் வலியையு

டைய முயறசியையும் வெற்றிமுரசுமுழங்கும படையினையுமுடைய சேரசோழபாண்டியர் தம்மிற் பகைமைநீங்கிச் சேர்ந்து,

அரசவை யிருநத தோறறம் போல—செல்வக்குறைபாடின்றி அரசிருத்தற்குரிய அவையாகவிருநத தோற்றவுபோல,

தோறறமபோல இனமைதீரவநதனென் (கஉக) என மேலேகூட்டுக

இனி அரசவையிருந்த தோறறம்போல வலிவும மெலிவுஞ் சமனுமாகபபாடுதலை ப்பறறியவென்று பாடடினமேலேற்றிப பொருள்கூறின், குலமுஞ்செலவமும் வீரமு முதலியவறறாற் றம்மிலஒத்தாரை உவமித்ததலின், அவாகடும் வலிவும் மெலிவும் சம னுமென்னுங்குணங்கள் எய்துமாதலின், அங்ஙனங்கூறல பொருந்தாமையுணாக அன்றியும பயனே ஈணடு உவமையென்றுமுணாக

இனிப பாட்டு நிருததகீதவாசசியத்தை யுடைமையின, அரசரோடு உவமித்தா ரென்பாருமுளா

பாடல பற்றிய பயன் உடை யெழாஅற கோடியா தலைவ—மிடறறுபபாடலைத தொடங்கி எழுநதிருந்த பயனகளைத தன்னிடததேயுடைததாகிய யாழையுடைய கூத

இவன் போாககளம்பாடும் பொருநனாதலானும், கூததரில இவனிற்சிறந்த கூத தா இன்மையானும் இங்ஙனங கூறினா

கொண்டது அறிந—பிறா மனததுககொணடதனைக குறிபபால அறியவலலாய,

அறியாமையின் நெறி திரிநது ஒராஅது—வழியறியாமையினாலே இவவழியை த்தப்பி வேறொருவழியிற போகாதே,

ஆற்று எதிாப படுதலும் நோறறனை பயனே—இவவழியிலே எனனைககாணட லும் நீமுறபிறபபிறசெயத நலவினைபபயன,

[போறறிக் கேணமதி புகழுமேம படுந] புகழ மேமபடுந போற்றிக கேணமதி— புறத்தாாபுகழை அரசவைகளிலே மேம்படுத்தவலலாய, யானகூறுகின்றவற்றை விருமபிககேட்பாயாக,

ஆடு பசி உழநத நின் இரும பே ஒககலொடு நீடு பசி ஒராஅல வேணடின— அடுகின்ற பசியாலேவருநதின நினனுடைய கரிய பெரியசுறறததோடே தொன்று தொட்டுவந்தபசி நினனைக கைவிடுதல விரும்புவையாயின,

நீடு இன்று எழுமதி—நீட்டிததலினறி எழுநதிருபபாயாக,

வாழி—நீவாழ்வாயாக,

ஏழின் கிழவ—குரல துததம் கைக்கிளை உழை இளி விளரி தாரமென்னு நரமபு ஏழின்கண்உரிமையுடையாய,

[பழுமர முளளிய பறவையின யானும] யானும பழுமரம உளளிய பறவை யின்—செலவமெயதியயானும் முன்பு பழுததமரததை நினைததுச்செலகின்ற புட் போல,

அவன் இழுமெனு சுமமை யிடனு உடை வரைாபபின்—அவனுடைய இழுமென றெழும் ஓசையினையுடைய அகலமுடைததாகிய மதிலின,

நசையுநாத் துடையா நன பெரு வாயில—நசைவாதாாககுத தடையிலலாத நன் றாகிய பெரிய கோபுரவாயிலின் கணணே,

இசையேன் புக்கு—வாயிலோனுக்குக் கூறுமற்புகுந்து,

என் இடும்பை தீர—என்னுடைய மிடி தீர்தல் காரணமாக,

எய்த்த மெய்யேன் எய்யேனாகி—முன்பு இளைத்த உடம்பையுடைய யான் அவ் வாயிற்குள்ளேசென்ற உவகையாலே பின்பு இளைப்புத்தீர்ந்து,

பைத்த பாம்பின் துத்தி ஏய்ப்பக் கைக்கசடு இருந்த என் கண் அகன் தடாரி—படமவிரித்த பாம்பினது பொறியையொப்பக் கையினது வடுப் பட்டுக்கிடந்த எனது கண்ணகன்ற உடுக்கையிற் றோற்றுவித்த,

[இருசீர்ப் பாணிக் கேற்ப விரிகதிர், வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல், லொன்றியான் பெட்டா வளவையின்]

இரு சீர்ப் பாணிக்கு ஏற்ப ஒன்று யான் பெட்டா அளவையின்—இரட்டைத் தாளத்திறகுப் பொருந்த ஒருபாட்டினை யான் பேணிப்பாடுவதற்கு முன்னே,

விரி கதிர் வெள்ளி முளைத்த நள் இருள் விடியல்—விரிகின்ற கிரணங்களையுடைய வெள்ளியெழுந்த செறிந்த இருளையுடைய விடியற்காலத்தே,

ஒன்றிய கேளிர் போலக் கேள் கொளல் வேண்டி—முன்பே தன்னோடுபொருந்திய நட்டாரைப்போல என்னுடன் உறவுகொள்ளுதலைவிரும்பி,

வேளாண் வாயில் வேட்பக் கூறி—தான் உபகரித்தற்கு வழியாகிய இரப்பினையே யானெப்பொழுதும் விரும்பும்படி உபசாரங்களைக்கூறி,

கண்ணிற் காண நண்ணுவழி இரீஇ—தன்கண்ணிலேகாணும்படி தனக்கு அணித்தானஇடத்திலே என்னைஇருத்தி,

பருகு அன்ன அருகா நோக்கமோடு—தன்னைக் கண்ணாற்பருகுந் தன்மையை யொத்த கெடாத பார்வையாலே,

[உருகு பவைபோ லென்பு குளிர்கொளீஇ] என்பு உருகுபவைபோற் குளிர் கொளீஇ—என்னை உருகும் மெழுகுமுதலியனபோல நெகிழும்படி குளிர்ச்சியைக் கொளுத்தி,

நோக்கத்தாலே (என) கொளுத்தியெனக்

ஈரும் பேனும இருந்து இறைகூடி—ஈரும்பேனுங் கூடியிருந்து அரசாண்டு,

[வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த, துன்னற் சிதாஅர் துவர நீக்கி]

வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த துன்னற் சிதாஅர் நீக்கி—வேர்ப்பாலே நனைந்து சறுகேள உள்ளேயோடுதற்குக் காரணமாகிய தைத்தற்றொழிலையுடையனவாகிய சீலையை என்னிடத்தினின்றும் போக்கி,

நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து அரவு உரி அன்ன அறுவை துவர (அக) நல்கி—கண்ணிற்பார்வை இஃது இழைபோனவழியென்று அறிந்துபார்க்கவாராத நுண்மையையுடையவாய்ப் பூத்தொழில் முற்றுப்பெற்றதன்மையாற் பாம்பினது தோலையொத்த துகிலை மிகநல்கி,

துவரவென்பதனைஇதனொடுகூட்டுக

[மழையென மருளும் மகிழ்செய் மாடத் திழையணி வனப்பி னின்னகை மகளிர்.]

இழை அணி வனப்பின் இன்னகை மகளிர்—இழைக்கலையணிந்த அழகினையுடைய பாட்டாலும்கூத்தாலுமவாரநகையாலும் அரசனுக்கு இனியமகிழ்ச்சியைச் செய்யுமகளிர்,

இதனை "இன்னகை யாயமோ டிருந்தோற் குறுகி" என்முர், சிறுபாணாற் றிலும்

[போக்கில் பொலங்கல நிறைய பல்கால், வாக்குபு தரத்தர:]

மருள செய்யும் மகிழ் மழையென மாடத்துப பலகால் வாக்குபு தரத்தர—உண டார் மயங்குதலைச்செய்யும் கள்ளை மழையென்னும்படி மாடத்திடத்தே பல்காலும வார்த்துத் தரத்தர,

மகிழ் - ஆகுபெயா

போக்கு இல் பொலங் கலம் நிறைய தரத்தர—ஓட்டமற்ற பொன்றுற்செய்த வட்டில்நிறைய தரத்தர,

வருத்தம் வீட ஆர உண்டு போ அருா போக்கி—வழிபோனவருத்தம் போம்படி நிறையவுண்டு கள்ளுணணப்பெறுகிலேமென்று நெஞ்சிறகிடந்த பெரிய வருத்தத்தையும்போக்கி,

செருக்கொடு நின்ற காலை—மகிழ்ச்சியுடனே நான்நின்ற அந்திக்காலத்தே,

மற்றவன் திருக கிளா கோயில ஒருசிறைத் தங்கி—இங்ஙன மிடிதீர்ந்தபின்பு அவனுடைய செலவம்விளங்குகின்ற கோயிலில ஒருபக்கத்தே கிடநது,

அவனைச் சேவித்துநிறகின்ற நகுலத்திலுள்ள மகளிா (அகு) பொலங்கலநிறைய (அசு) மகிழை (அஎ) வார்த்துத் தரத்தர (அஎ) உண்டு போக்கிக் (அஅ) கோயிலில் ஒருசிறைத் தங்கியென முடிக்க.

தவஞ் செய மாக்கள் தம உடம்பு இடாஅது அதன் பயம் எய்திய அளவை மான—மிக்க தவத்தைச்செய்கின்ற மாக்கள் தமமுடைய தவஞ்செய்தஉடம்பைப் போகடாதேயிருந்து அத்தவத்தாறபெறும் பயனைப்பெற்ற தன்மையையொபப,

மக்களென்றது மாக்களெனமுா, வீடுபேறு குறியாது செலவத்தைக் குறித்தலின்.

ஆறு செல வருத்தம அகல நீக்கி—வழிபோனவருத்தத்தை என்னிடத்துச் சிறிதும் நில்லாமற்போக்கி,

[அனந்தா நடுக்க மலலதி யாவது, மனங்கவல பினறி மாழாந் தெழுந்து:]

அனந்தா நடுக்கம அல்லது மனங் கவலபு யாவதும் இன்றி எழுந்து—கள்ளின் செருக்காலுண்டான மெய்நடுக்கமல்லது வேறுமனக்கவறசி சிறிதுமின்றித் துயிலுணர்ந்து,

கவலபு - கவற்சியெனப பெயராய நினறது

மாலை யன்னதோா புன்மையும—யான் அவனைக் காணபதற்கு முன்னுளின மாலைக்காலத்தில் என்னிடத்திலநின்ற சொலலிற்கெடாத மிடியையும்,

அன்னது - நெஞ்சறிசுட்டு

காலைக் கண்டோா மருளும் வண்டு சூழ நிலையும மாழாந்து (கூ௦)—அவனைக்கண்டமற்றைநாட்காலத்தில எனனைக்கண்டவா நெருநலவந்தவனல்லனென்று மருளுதற்குக் காரணமான வண்டுகள் இடையறாதுமொய்க்கின்ற தன்மையையும் யான்கண்டுமயங்கி,

மாழாந்தென்பதனை இதனோடு கூட்டுக.

பல நறுநாற்றங்களும் தானுடைமையின், வண்டுசூழ நிலையென்முன்.

கனவென மருண்ட என் நெஞ்சு ஏமாப்ப—இது கனவாயிருக்குமென்று கலங்கிய என்னுடையநெஞ்சு நனவென்று துணிய,

வல் அனா பொத்திய மனம் மகிழ சிறப்ப—வலிய மிடியானுண்டாகிய வருத்தம்பொதிந்த கூட்டத்தார் மனம் மகிழ்ச்சி மிக,

கல்லா இளைஞர் சொலலிக் காட்ட—அவற்குரியபுகழ்களைத் தாங்கள் முறறக் கற்று என்பின்னின்ற இளையவர் அவற்றைச் சொலலிக் காட்ட,

கல்லாவென்பது - செயயாவென்னுமெச்சம. இனித் தத்தஞ் சிறுதொழிலன்றி வேறொன்றுங்கல்லாத இளைஞர் நெருநலவந்தவன் இவனென்று அரசனுக்குச் சொல்லிக்காட்ட வென்றுமாம் என்றது - இவனை வேறுபாடுகூறிற்றாம்.

கதுமெனக் கரைந்து வம்மெனக் கூஉய்—அதுகேட்டு அவர்களைக் கடுகவழைத்துவாருமென்று வாயிலோர்க்குக்கூறி யாங்கள்சென்றபின் தான் அணுகவாருமென்றுஅழைக்கையினாலே,

*“ஏனோருந் தம்மென” என்புழித் தம்மென்பது தாருமெனவினைமுற்றுப்போல வம்மென்பது வாருமென்னும் பொருட்டாய்நின்றது.

அதன் முறை கழிப்பிய பின்றை—அக்காட்சியிடத்துச் செயயுமுறைமைகளை யாங்கள் செய்துமுடித்தபின்பு,

பதன் அறிந்து—காலமறிந்து,

துராஅய் துறறிய துருவை அம புழுக்கின் பராரை வேவை பருகெனத் தண்டி—அறுகம்புல்லாற்றிரித்த பழுதைதின்ற செம்மறிக்கிடாயினது அழகினையுடைய புழுக்கினிற பரிய மேறகுறங்கு நெகிழவெந்ததனை விழுங்கென்று பலகாலலைத்து,

[காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை, யூழி னூழின் வாயவெய் தொற்றி:] காழிற கோழூன் சுட்ட கொழுங் குறை வெயது வாய ஊழின் ஊழின ஒற்றி—இருப்புநாராசத்தே கொழுத்த இறைச்சிகளைக் கோத்துச் சுட்ட கொழுவிய பெரியதசைகளின் வெம்மையை வாயிடத்தே இடத்தினும்வலத்தினுஞ்சோத்தி ஆறறித்தின்று,

அவை அவை முனிகுவம எனினே—புழுக்கின இறைச்சியையும, சூட்டிறைச்சியையும யாங்கள் இனி வேண்டே மென்கையினாலே,

சுவைய வேறு பல் உருவின் விரகு தந்து இரீஇ—இனிமையுடையவாய் வெவ்வேறாகிய பலவடிவினையுடைய †பண்ணியாரங் கொண்டுவந்து அவற்றைத் தின்னும்படி உபாயங்களாற் பண்ணுதலின், விரகென்றார், ஆகுபெயர்.

[மண்ணமை முழவின பண்ணமை சீறியா, ழொண்ணுதல விறலியர் பாணி தூங்க] பண் அமை சீறியாழ ஒண்ணுதல் விறலியர் மண அமை முழவின் பாணி தூங்க—பணகுறைவற்ற சிறிய யாழையுடைய ஒள்ளிய நுதலினையுடைய விறல்படப்பாடியாடுவார் மார்ச்சனையமைந்த முழவினது தாளத்திற்கு ஆடும்படி,

மகிழ்ப் பதம் பன்னாள் கழிப்பி—மகிழச்சியையுடைய கள்ளுணடலிலே பலநாள்போக்கி,

பதம - காலமுமாம.

* மதுரைக்காஞ்சி “யாவருமவருக வேனோருந் தம்மென, வரையா வாயிற் செறாஅ திருந்து, பாணர் வருக பாட்டியர் வருக, யாணர்ப் புலவரொடு வயிரியர் வருகென”

† பண்ணிகாரமென்றும் பிரதிபேதமுண்டு.

ஒருநாள் அவிழ்ப் பதங் கொள்க என்று இரப்ப—ஒருநாள் சோறாகியஉணவை யுங் கொள்வாயாகவென்று வேண்டிககொள்கையினாலே,

முகிழ்த் தகை முரவை போகிய முரியா அரிசி விரலென நிமிர்ந்த நிரல் அமை புழுக்கல்—முல்லைமுகையின் தகைமையினையுடைய வரியற்ற இடைமுறியாத அரிசி விரலென்னும்படி நெடியவினை ஒன்றோடொன்றுசேராத சோற்றையும்,

பழுத்தவரிசியை ஆகக்கினமைதோன்ற நிரலமை புழுககலென்றார்

பால வறைக் கருனை காடியின் மிதபப அயின்ற காலை—பாலைப் பொரித்தத னோடேகூடிய பொரிககறிகளையும கழுத்திடததேவந்து நிரமபுமபடி விழுங்கினகால த்தே,

இனிக காடியைய புளிஙகறியாககிப புளிஙகறியோடே நிரம்ப விழுஙகினகா லையெனறுமுறைாபபா

பயின்று இனிது இருந்து—அவனைவிடாதே இனிதாகவிருநது,

[கொல்லை யுழுகொழு வேயபபப பலலே, யெலலையு மிரவு மூனறினறு மழுஙகி·] பல்லே கொல்லை உழு கொழு ஏயபப எலலையும இரவும ஊன் தின்று மழுங்கி—எம்முடையபற்கள கொல்லைநிலத்தேயுழுத கொழுவையொபபப் பகலும்இரவும இறைச்சியைததின்று முனைமழுஙகி,

உயிர்ப்ப இடம் பெறுஅது ஊண முனிந்து—இளைபபாற இடம்பெறுதே இவ் வுணவுகளை வெறுதது,

முற்கூறியனவெல்லாம் உண்டற்றொழிற்கு உரிமையுடைமையின், ஊண்முனி ந்தென்றா

[ஒருநாட், செயிாதெழு தெவவா திறைதுறை போகிய செலவசேறுமெந் தொலபதிப பெயாந்தென, மெலலெனக கிளந்தன மாக ]

'செயிாதது எழு தெவ்வா திறை துறை போகிய செலவ—குறறததைசசெயதெ ழுந்த பகைவாாத திறைகொள்ளும் கூறுபாடுகளெலலாம் முடியப்போன செலவா,

பெயாந்து எம தொல பதிச சேறுமென மெல்லென ஒருநாள் கிளந்தனமாக—இனி மீணடு எம்முடைய பழைய ஊரிடததே செலவேமெனறு மெததென ஒருநாளி லேசொன்னேமாக,

தொல்பதியென்றா, இதுவுந் தமககுபபதியெனபத தோனற.

[வல்லே, யகறி ரோவெம் மாயம் விட்டெனச, சிறறிய வன்போற் செயிாத்த நோக்கமொடு·] சிறறியவன் போல் செயிாதத நோக்கமொடு எம் ஆயம்விட்டு வல்லே அகறிரோ என—அதுகேட்டுக் கோபித்தான்போல எமக்குவருததததைசசெய்த பாா வையுடனே எந்திரளைக கைவிட்டு விரைநதுபோகின்றீரோவெனச சொல்லி,

[துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு, பிடிபுணா வேழம பெட்டவை கொள்கென ]

பிடி புணா வேழம் அடி துடி அன்ன தூங்கு நடைக குழவியொடு கொள்க என—பிடியொடுபுணாந்தகளிறுகளைந் தம்மடிகள் துடியின்கண்ணையொத்த அசைந்த நடையினையுடைய கன்றுகளுடனே கைககொள்வாயாகவென்று சொல்லி,

[தன்னறி அளவையிற் றரததர·] பெட்டவை (௧௨௬) தன் அறி அளவையில் தரத்தர—பின்னும் தான்விரும்பியிருந்த ஊாதிகள் ஆடைகள் அணிகலங்கள் முதலிய வற்றைத்தான் அறிந்தஅளவாலே மேன்மேலேதர,

யானும் என் அறி அளவையின வேண்டுவ முகந்துகொண்டு—யானும் என்னு டையகுறைகளை யானறிந்த அளவாலேவேண்டுவனவற்றை வாரிக்கொண்டு,

இன்மை தீர வந்தனென்—மிடி எக்காலமும் இல்லையாம்படி வந்தேன்;

யானும் அவன் (சுச) வரைப்பின் (சுரு) வாயிற்கண்ணே (சுசு) புக்கு என் இடும்பைதீர்தல் காரணமாக (சுஎ) எய்யேனாகி (சுஅ) விடியற்காலத்தே (எஉ) ஒன்று யான்பெட்டாவளவையிற் (எங) கொளல்வேண்டிக் (எச) கூறி (எரு) இருத்தி (எசு) நோக்கத்தாலே (எஎ) குளிர்கொளாநிற்கச் (எஅ) சிதாரீக்கித் தூவர (அக) நல்கி (அரு) மகளிர (அசு) மகிழ்தல் (அச) வார்த்துத்தரத்தர (அஎ) உண்டு போக்கி (அஅ) நின்றகாலைத் (அகூ) தங்கி (கூ0) நீக்கி (கூரு) எழுந்து (கூசு) ஏமாப்பச் (கூஅ) சொல்லிக்காட்டக (க00) கூவுகையினாலே (க0க) கழிப்பியபின்னறைத் (க0உ) தண்டி (க0ச) ஓறி (க0சு) வேண்டேமெனகையினாலே (க0எ) இரீஇத் (க0அ) தூங்கக (கக0) கழிப்பி (ககக) இரப்ப (ககஉ) அயினறகாலத்திலே இருந்து (ககசு) மழுங்கி (ககஅ) முனிந்து (கககூ) சேறுமென (கஉக) ஒருநாட் (ககக) கிளந்தனமாக (கஉஉ) அகறிரோவெனச் சொல்லித் (கஉரு) தரத்தர யானும் (கஉஎ) தவஞ்செய்மாக்கள் (கூக) அதன் பயமெய்திய அளவைமான (கூஉ) வேண்டுவ முகந்துகொண்டு (கஉஅ) அரசவையிருந்த தோற்றம்போல (ருரு) இன்மைதீர வந்தனென் (கஉகூ) என வினை முடிக்க.

வெல் வேல உருவப பஃறேர் இளையோன சிறுவன—வென்ற வேலினையுடைய அழகினையுடைத்தாகிய பலதேரினையுடைய இளஞ்சேட்சென்னியுடைய புதல்வன்,

வென்ற வேற்புதல்வன்

முருகற் சீற்றத்து உருகெழு குரிசில—முருகனது சீற்றம்போலும் சீற்றத்தையுடைய உட்குதலபொருந்திய தலைவன்,

தாய் வயிற்று இருந்து தாயம் எய்திப பிறந்து (கூஎ)— தாயுடைய வயிற்றிலேயிருந்து அரசவுரிமையைப்பெற்றுப் பிறந்து,

தான் பிறக்கின்றகாலத்துப் பிறவாதே நல்லமுகூர்த்தம் வருமளவுந் தாயுடைய வயிற்றிலேயிருந்து பிறக்கையினாலே அரசவுரிமையைப்பெற்றுப் பிறந்தென்றார்

எய்யாத் தெவ்வர் ஏவல் கேட்ப—முன்பு தன்வலியறியாத பகைவர் பின்பு தன்வலியினையறிந்து ஏவினதொழிலைச் செய்ய,

செய்யார் தேஎந் தெருமரல் கலிப்ப— ஏவல்செய்யாத பகைவர்தேசம் மனக்கவற்சி பெருக,

[பௌவ மீமிசைப பகற்கதிர் பரப்பி, வெவ்வெஞ் செல்வன விசும்புபடர்ந் தாங்கு] வெவ் வெஞ் செல்வன் பௌவம் மீமிசைப் பகற்கதிர் பரப்பி விசும்பு படர்ந் தாங்கு — வெம்மையையுடைய எல்லாரும்விரும்பப்படும் இளஞாயிறு கடலின்மீதே பகற்பொழுதைச்செய்யுங் கிரணங்களைப்பரப்பிப் பின்னர் விசும்பிலே மெத்தெனச்சென்றாற்போல,

[பிறந்துதவழ் கற்றதற் றொட்டு]

தவழ் கற்றதற் றொட்டு—தவழ்தலைக் கற்றநாள் தொடங்கி,

பிறந்து முன்னேகூட்டிற்று

[சிறந்தநன, நாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப, வாளி நன்மா னணங்குடைக் குருளை, மீளி மொய்ம்பின மிகுவலி செருக்கி.]

மீளி மொய்ம்பின் மிகு வலி செருக்கி— கூற்றுவனுடைய வலியிற்காட்டின் மிகுகின்றவலியாலே கலித்து,

செல்வன் விசும்புபடர்ந்தாங்குத (உகூ) தவழ்கற்றதற்றொட்டு (உகஎ) மிகு கின்றவலியென்க.

இவன் பின்பு அரசாட்சிபெற்றானாதலின், தவழ்கற்றதற்றொட்டு நாடுசெகிற்கொண்டானென்றல் பொருந்தாமையுணர்க.

சிறந்த நன்றாடு செகிற் கொண்டு நாள தொறும் வளர்ப்ப — ஏனையோர்நாட்டிற் சிறந்த நன்றாட்டைத் தோளிலேவைத்துக்கொண்டு நாடோறும் வளர்த்தல்காரணமாக,

தோள்வலியாலே பகைவென்று நாடுகோத்தமைபற்றி, நாடுசெகிற்கொண்டென்றார்.

[முலைக்கோள் விடாஅ மாத்திரை] ஆளி நன் மான் அணங்கு உடைக் குருளை (உகக) முலைக் கோள் விடாஅ மாத்திரை—ஆளியாகிய நல்ல மானினது வருத்துதலையுடைய குருளை முலையையுண்டலைக் கைவிடாத இளையபருவத்தே,

யாளியை ஆளியென்றார், * "கடிசொ வில்லை" என்பதனான் † "நாயே பன்றி" என்னுஞ் சூத்திரத்து 'ஆயுங்காலை' என்பதனாற் குருளையென்பது முடித்தாம்

ஞெரேரென—கடுக,

தலைக் கோள் வேட்டங் களிறு அட்டாங்கு—முற்பட இரையைக் கோடற்குக் காரணமான வேட்டையிலே களிற்றைக் கொன்றாற்போல,

இரும் பனம்போந்தைத் தோடும்—கரிய பனங்குருத்தில் அலர்ந்த வலப்பக்கத்து லையும்,

‡ "தோடேமடலே" என்னுஞ் சூத்திரத்துப் 'பிறவும்' என்றதனாற் போந்தை முடித்தாம் அதனிடத்தினின்றும் போந்ததனாற் போந்தையென்றார் "இரும்பனைக் கொண்டு கடைகழுமிய வடங்குசிறை வலனகலத்து' என்றார்பிறரும்

[கருஞ்சினை, யரவாய வேம்பி னங்குழைத் தெரியலும்] கருஞ் சினை வேம்பின் அரவாய அம் குழைத் தெரியலும்—கரிய கொம்பினையுடைய வேம்பினுடைய வாள ரத்தின் வாய்போலும் விளிம்பினையுடைய அழகிய தளிராற்செய்த மாலையும்,

ஓங்கு இருஞ் சென்னி மேம்பட மிலைந்த இரு பெரு வேந்தரும் ஒருகளத்து அவிய — உறிய மாலைகளில் மேலாதற்குக் காரணமான பெரியதலையிலே ஏனையோர் சூடும் அடையாளப்பூக்களிற் சிறப்ப அவற்றைச்சூடிய சேரனும் பாண்டியனும் ஒருகளத்தே படும்படி,

வெண்ணில் தாக்கிய வெரு வரு நோன் தாட் கண ஆர் கணணிக் கரிகால வளவன்—வெண்ணிலென்கின்ற ஊரிடத்தேபொருத அச்சந்தோன்றுகின்ற வலியையுடைய முயற்சியையும் கண்ணுக்கு அழகுநிறைந்த ஆத்திமாலையினையுமுடைய கரிகாற்சோழன்,

¶ "முச்சக் கரமும்" என்னுங் கவியானே கரிகாலாதலுணர்க

தாயமெய்திப் (உகஉ) பிறந்து (உகஎ) மிகுவலிசெருக்கித் (கச0) தெவ்வர் ஏவல்

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், ருகூ
† " பொருளதிகாரம், மரபியல், அ.
‡ " " " அகூ.
¶ வெண்பா: முச்சக் கரமு மளப்பதற்கு நீட்டியகால், விச்சக் கரமே யளந்ததால், செய்ச்செ, யரிகானமேற் றேன்றொடுக்கு மாயபுனனீர் நாடன், கரிகாலன் கானெருப் புற்று

கேட்பச் (கருரு) செயயார்தேஎம் தெருமரல்கலிப்ப (கருசு) நாடுசெகிற்கொண்டு நாடோறும்வளாத்தல்காரணமாகக (கருஅ) குருளை (கருகூ) களிறட்டாங்கு (கசுஉ) இருபெருவேந்தரும் அவியத் (கசுசு) தாக்கிய (கசுஎ) கரிகால் வளவனெனமுடிகக.

[தாணிழன் மருங்கி லணுகுபு குறுகித், தொழுது] நிழல் மருஙகின் தாள் அணுகுபு குறுகித் தொழுது—அருளைத் தன்னிடததிலேயுடைய திருவடிகளை அண்ணிதாக நின்றுசேர்நது வணங்கி,

முன் நிறகுவிராயின்—நும்முடைய வறுமைதோன்ற முன்னே நிற்பீராயின்,

[பழுதின், றீறறு விருபபிற் போற்றுபு நோக்கி] ஈறறு ஆ விருப்பிற பழுதின்று போற்றுபு நோக்கி—ஈறறுத்தொழிலையுடைய பசுத் தனதுகன்றுக்குப் பால்சுரந்து கொடுக்கவேணடுமெனனும் விருப்பம்போல நும்மிடத்துநிறகின்ற மிடியின்றாம்படி பேணிப்பாாத்து,

நுங் கையது கேளா அளவை—நுமமிடததுள்ள கலையைத தான்கேட்பதற்கு முன்னே,

ஒயயென—கடுக,

பாசி வேரின் மாசொடு குறைந்த துன்னற சிதாஅா நீககி—கொட்டைப்பாசியினது வோபோலே அழுககோடேகுறைந்த தையலையுடைய துணிகளைப்போககி,

தூய கொட்டைக கரைய பட்டுடை நலகி—தூயவாகிய திரளமுடிந்தமுடிகளைக் கரையிலேயுடைய பட்டாகிய உடைகளைத தநது,

கொட்டை - துமபுமாம

பெறல அருங கலததிற பெடடாஙகு உணக என—பெறுதறகரிய பொறகலததே விரும்பினபடியே உணபாயாகவெனறுசொலலி,

[பூககமழ் தேறல வாககுபு தரததர, வைகல் வைகல கைககவி பருகி] பூக் கமழ கைகவி தேறல வாககுபு தரத தர வைகல வைகல பருகி—தேம்பூ நாறுகினற தன்கடுமையாற சிறிதமையுமெனறு கைகவிததறகுககாரணமான கடடெளிவை மேன்மேலே வாாததுத தரததர நாடோறுமநாடோறும் பருகி,

"தேட்கடுப பன்ன நாடபடு தேறல" என்றாபிறரும

எரி அகைநதன்ன ஏடில தாமரை—நெருபபுத தழைத்தாலொதத ஒருவனசெய்ததன்றித தனக்கென இதழில்லாத தாமரையை,

எனவே பொறறாமரைககு வெளிபபடைகூறினா *"தோடே மடலே" என்னுஞ் சூததிரததேகூறினா.

சுரி இரும் பித்தை பொலியச சூட்டி—கடைகுழன்ற கரியமயிரிலே பொலிவுபெறச்சூட்டி,

நூலின் வலவா நுணஙகு அரில மாலை வால ஒளி முததமொடு பாடினி அணிய—நூலாறகட்டாத நுணமையையும் பிணககததையுமுடைய பொன்னரிமாலையை வெள்ளிதாகிய ஒளியையுடைய முததததோடே பாடினிசூட,

கோட்டிற செயத கொடிஞ்சி நெடுந தோ—யானைககொம்பாற செய்த தாமரைமுகையினையுடைய நெடிய தேரிலே,

ஊட்டு உளை துயல்வர ஓரி நுடஙக—சாதிலிங்கமூட்டின தலையாட்டம்பொஙகக கழுத்தின்மயிரசைய,

பால் புரை புரவி நாலகு உடன பூட்டி — பாலையொத்த நிறத்தினையுடைய குதிரைகள் நான்கினைச் சேரபபூட்டி,

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல். அசு.

நான்கு - நால்கெனப் பெயர்திரிசொல்.

காலின் ஏழடிப் பின் சென்று—தான் காலாலே ஏழடிப் பின்னே வந்து,

ஏழடிவருதல் ஓர்மரபு, ஏழிசைக்கும் வழிபாடுசெய்தானாகக் கருதுதலின் *"செலவினும்வரவினும்" என்னுஞ் சூத்திரத்துப் பொதுவிதியாற் சென்றென்பது வந்தென்னும்பொருட்டாய் நின்றது

[கோலின், ஞாறு களைந்து·] இன் தாறுகோல் களைந்து—செலுத்துதற்கினிதாகிய செலவுமுடுகுங்கோலைப் போக்கி,

என்றதனாற் கடுவிசைக்கு இவர்இருத்தலாற்றானென்று கருதி இயற்கையிற் சேறல் அமையுமென்றார்

ஏறென்று ஏற்றி—இங்ஙனம் ஏறென்று ஏறவிட்டு,

வீறு பெறு பேர் யாழ் முறையுளிக் கழிப்பி—வீணையாழ்களின் வீறுபெற்ற யாழ்ப் பாணர்க்குக் கொடுக்குமுறைமைகளை நினக்குத் தந்துவிட்டு,

நீர் வாய்த் தண்பணை தழீஇய தளரா இருக்கை நன் பல ஊர நாட்டொடு—நீரை எப்பொழுதுந் தன்னிடத்தேயுடைத்தாகிய தண்ணிய மருதநிலஞ்சூழ்ந்த அசையாத குடியிருப்பினையுடைய நன்றான பலவூர்களையுடைய நாடுகளுடனே,

[நன்பல, வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை, வெருவரு செலவின் வெகுளி வேழம்·]

பறை வெரூஉ நுவலும் வேழம்—பறை எல்லாருக்கும் அச்சத்தைச்சாற்றுதற்கு காரணமாகிய யானை,

பரூஉப் பெருந் தடக்கை வெரு வரும் செலவின் வெகுளி நன்பல வேழம்—பருத்த பெரியவளைவினையுடைய கையினையும் அச்சந்தோன்றும் ஓட்டத்தினையும் கோபத்தினையுமுடைய நன்றாகிய பலயானைகள்,

தரவு இடைத் தங்கல் ஓவிலன — தருதற்றொழில்இடத்தே நிலைபெறுதலை ஒழிதலிலன்;

இனித் தரவிடத்துத் தாழ்த்தலிலனென்றுமாம்

வரவிடைப் பெற்றவை பிறர்பிறர்க்கு ஆர்த்தி—வருதலிடத்துப் பெற்றபொருள்களைப் பிறர்க்குப்பிறர்க்குக் கொடுத்து,

தெற்றெனச் செலவு கடைக்கூட்டுதிர் ஆயின்—கடுக அவனிடத்துநின்றும் போகின்றபோக்கை முடிவுபோக்குவீராயின்,

பல புலந்து—அதுபொறாமற் பலகாலும்வெறுத்து,

நில்லா உலகத்து நிலைமை தூக்கி—செலவமும் யாக்கையுமுதலியன நிலைநில்லாத உலகத்துப் புகழைச் சீர்தூக்கிப் பார்த்து;

நிலைபெறுந் தகைமையுடைத்தாகலிற் புகழை நிலைமையென்றார், ஆகுபெயர்

செல்க என—இங்ஙனம்போகெனக்கூறி,

விடுக்குவன் அல்லன்—நும்மைக் கடுக விடுவானல்லன்,

தொழுது முன்னிற்குவிராயின் (கஙo) நோக்கி (கருக) நலகிப (கருரு) பாடினி அணியாநிற்கச் (கசுஉ) சூட்டி (கசுo) வாகைப்பு தரத்தரப் (கருள) பருகித் (கருஅ) தெற்றெனச் (களச) செலவுகடைக்கூட்டுதிராயின அதற்குப பலபுலந்து (களரு) தேரிலே

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், உஅ.

(கசுந) குதிரையைப்பூட்டி (கசுரு) ஏறறி (கசுஎ) முறையுளிக்கழிபபி (கசுஅ) விடுக் குவனல்லன் (கஎஎ), பின்னா நின்னைநோககி நில்லாவுலகத்து நிலைமையைச சீாதூககி (கஎசு) வரவிடைப (கஎரு) பெறறவை பிறாபிறாககாததி (கஎச) இஙஙனஞ் செல்வா யாகவெனககூறி (கஎஎ) அஙஙனம நீபோதறகு நடைடோடு (கஎ௦) வேழந் (கஎ௨) தர விடைததஙகல் ஓவிலன் (கஎந) எனமுடிகக

நிலலாவுலகத்து நிலைமைதூக்கிப பலபுலநது செலகென விடுகுவனலலனென் பாருமுளா

ஒல்லெனத திரை பிறழிய இரும்பெளவததுக கரை சூழநத அகன் கிடககை மண மருங்கினுன் (௨௨எ) நாடு (௨சஅ)—ஒல்லெனனும ஓசைபடத திரைமுறிந்த கரியகட லினது கரைசூழந்த அகன்ற பரபபினையுடைய இவவுலகதது ஒருகூறறின்கண உள தாகிய சோழநாடு,

[மாமாவின வயினவயினெறற, ருழதாழைத தணடணடலைக, கூடுகெழீஇய குடி வயினுன]

மா மாவின் வயின வயின நெற்கூடு கெழீஇய நாடு(௨சஅ)—ஒருமாநிலத்தில ஒரு மாநிலத்திற றிடாதோறும் திடாதோறும் நெறகூடுகளபொருந்தின சோழநாடு,

தாழ் தாழைத தண தணடலைக குடி வயினுன்—தாழ்ந்த தெஙகினையுடைய குளிர்ந்த மரசசோலைகளிலிருககினற குடிமககளிடததில,

செஞ் சோறற பலி மாந்திய கருங காககை—உதிரததாற சிவந்தசோறறை யுடையவாகியபலியை விழுஙகின கரியகாககை,

[கவவுமுனையின, மனைநொசசி நிழலாஙக, ணீறறி யாமை தனபாாப் போமபவும்]
மனை நொசசி நிழல் ஆஙகண ஈறறு யாமை தன பாாபபு கவவு முனையின் ஓமபவும்—மனையைச்சூழ்ந்த நொசசியினது நிழலிடததுககிடந்த ஈறறுததொழிலையுடைததாகிய யாமை தன்னுடையபாாபபைத தானறினறலை வெறுததுதாயின், அதனைபபினபு பசித்தகாலத்துததின்பதாகப பாதுகாததுவைபபவும,

எனவே மருதநிலததிலிருககுஙகாக்கை நெயதனிலததுபபாாபபைத தின்னு மென்ருர் *"தவழ்பவை தாமு மவறறோ ரன்ன" என்பதனுற பார்பபென்ருா.

இளையோா வணடல் அயரவும்—அவ்வுழவர்மகளிா நெய்தனிலததின் மணற குன்றிலே வண்டலிழைத்து விளையாடவும்,

[முதியோா, அவைபுகு பொழுதிற்றம் பகைமுரண செலவும்] பகை முதியோா அவை புகு பொழுதில் தம முரண் செலவும பெரிதாணட (௨௨கூ)—பகைமைமு திர்ந்தோா தனது அரசவையிறசெனறு புகுஙகாலததுத தமமாறுபாட்டைப போககு ம்படியாகவும் பெரிதாணடவென மேலேகூட்டுக

* எனறது வழககுமாறுபட்டு வந்தோர்கடு அவ்வழககு வீடறுபபனென்றவாறு.
† "உரைமுடிவு காணுன" எனனும் பழமொழி கூறினா

* தொலகாப்பியம், பொருளதிகாரம, மரபியல, ௫

† பழமொழி, ௨௧—உரைமுடிவு காணு னிளமையோ னென்ற, நரைமுது மக்க ளுவப்ப, நரைமுடித்துச, சொல்லான் முறைசெயதான் சோழன் குலவிச்சை, கல்லாமற பாகம் படும். என்பது. தம்முள் மறுதலையாயினுரிருவா தமககு முறைமை செயவேண்டிவந்து சிலசொன்ஞல்அச்சொன்முடிவுகணடே ஆராய்ந்து முறைசெய்ய அறிவுநிரம்பாத இளமைப்பருவத்தா னென்றிகழ்ந்த நரைமுதுமக்க ளுவக்கும்வகை

[முடக்காஞ்சிச் செம்மருதின்,மடக்கண்ண மயிலாலப்,பைம்பாகற் பழந்துணரிய, செஞ்சுளைய கனிமாந்தி·] பைம்பாகற பழம் செஞ் சுளைய துணரிய கனி மாந்தி முடக் காஞ்சிச் செம்மருதின் மடக் கணண மயில ஆல—பசிய பாகற்பழத்தையும் சிவந்த சுளையையுடையவாகிய குலைகொணட பலாப்பழததையுந்தின்று வளைவையுடைய காஞ்சிமரத்திலும செவ்விய மருதிலுமிருந்த மடபபத்தைத் தம்மிடத்தேயுடையவாகிய பெடைமயில்கள் ஆரவாரிததழைககும்படி அஙகுநின்றுமபோந்து,

[அறைககரும்பி னரிநெல்லி, னினககளம ரிசைபெருக, வறளடும்பி னிவாபகன் றைத, தளிரப்புன்கின் ருழ்காவின், நனைஞாழலொடு மரஙகுழீஇய, வவண்முனையி னகன்றுமாறி, யவிழ்தளவி னகன்ருேன்றி, நகுமுல்லை யுகுதேறுவீப், பொற்கொன் றை மணிககாயா, நற்புறவி னடைமுனையிற், சுறவழங்கு மிரும்பௌவத், திறவருந் திய வினநாரை, பூம்புன்னைச சினைச்சேப்பி, ஞெஙகுதிரை யொலிவெரீஇத், தீம் பெண்ணை மடறசேப்பவுங், கோட்டெஙகின் குலைவாழைக, கொழுங்காந்தண் மலர்நாகத்துத, துடிககுடிஞைக குடிபபாககத், தியாழ்வணடின் கொளைக்கேற்பக், கலவம் விரித்த மடமஞ்ஞை, நிலவெககாப பலபெயர]

யாழ் வணடின கொளைககு ஏறபக கலவம் விரித்த மடமஞ்ஞை நிலவு எககாப பல பெயர—யாழோசைபோலும வண்டினது பாட்டினைக்கேட்டு அதறகுப்பொருந் தத் தோகையைவிரிதத அறியாமையையடைய மயில் நிலவுபோலும் இடுமணலிலே பலபகுதிப்படஆடவும்,

பெடை நுஙகுகின்ற மருதநிலததைவிட்டுப பாட்டைககேட்டு நெய்தனிலத்தே போந்தமைபறறி மடமஞைஞையென்ருா

அகவா (உஉ0) அறைக் கரும்பின் அரி நெல்லின் இனக களமா இசைபெருக வறள் அடும்பின் இவா பகன்றைத் தளிரப் புன்கின் தாழ காவின் நனை ஞாழலொடு மரம் குழீஇய அவண முனையின் அகன்று மாறி நீல நிற முல்லைப பல் திணை நுவல (உ௧)—நாட்டில்வாழ்வார் அறுத்தலைசெய்யும கரும்பினகணணும்அரிகினற நெல லினகணணுமெழுப்பின திரண்ட களமருடைய ஓசைமிகுகையினுலே நீரறறஇடத திலெழுந்த அடும்பினையும் படாகினற பகன்றையினையும் தளிரையுடைத்தாகிய புன் கினையும் தாழ்ந்தசோலைகளையுமுடையதாய் அரும்பின ஞாழலோடே ஏனைமரஙக ளுந்திரண்ட அந்நாட்டை வெறுததார்களாயின் அவவிடததைநீஙகி நெஞசாலெகை விட்டு நீலநிறததையுடைய முல்லைககொடிபடாந்த பலகாட்டுநிலத்தேசென்று அநநி லத்தைககொண்டாடவும்,

அகவா இசைபெருக முனையின அகனறு மாறிப பல்திணை நுவலவென முடிக்க

கானவா (உஉ0) அவிழ தளவின் அகன் தோன்றி நகு முல்லை வீ உகுதேறு பொற கொன்றை மணிககாயா நற புறவின் நடைமுனையின் மருதம் பாட (உஉ0)—முல்லைநிலதது வாழ்வார அவிழகினறதளவினையும் பரந்ததோனறியினையும் அலா கின்றமுல்லையினையும பூ உகுகினற தேறறுவினையும் பொனபோலும் பூவினையுடைய கொன்றையினையும் நீலமணிபோலும் பூவினையுடைய காயாவினையுமுடைய நல்லகாட்

---

நளைமுடித்துப ந்து முறைவேணடிவந்த இருதிறததாருஞ் சொல்லிய சொற்கொண டே ஆராய்ந்தறிந்து முறைசெயதான் கரிகாற்பெருவளத்தானென்னுஞ்சோழன், ஆதலால், தத்தங் குலத்துககுததககவிச்சைகள் கற்பதற்குமுன்னே செம்பாகமுளவா மென்றவாறு.

டில் உறைகின்றஒழுக்கத்தை வெறுக்கின் மருதநிலத்தேசென்று அவ்வொழுக்கத்தைப் புகழவும்,

தளவு - முல்லைவிசேடம்.

சுற வழங்கும் இரும் பௌவத்து இறவு அருந்திய இன நாரை பூம் புன்னைச் சினைச் சேப்பின் ஓங்கு திரை ஒலி வெரீஇத் தீம்பெண்ணை மடற் சேப்பவும்—சுறாத்திரியுங் கரியகடலின்கண் இறவைத்தின்ற திரண்டநாரைகள் பூக்களையுடைய புன்னைக் கோட்டிலே தங்கின் அதன்மேலேமுரிகின்ற உயர்ந்ததிரையினது ஆரவாரத்திற்கு வெருவி மருதநிலத்தில் இனியபனையினது மடலிலேதங்கவும்,

கோள் தெங்கின் குலை வாழை கொழுங் காந்தள் மலர் நாகத்துத் துடிக்குடிஞைக் குடிப் பாக்கத்துப் பரதவர் (உகஅ) அவணமுனையின் (ககஅ) குறிஞ்சி பாட (உகஅ)—குலைகொண்ட தெங்கினையும் குலையினையுடைய வாழையினையும் கொழுவிய காந்தளினையும் மலர்ந்த சுரபுன்னையினையும் துடியோசைபோலும் ஓசையினையுடைய பேராந்தையினையுமுடைய குடியிருப்பையுடைத்தாகிய பாக்கத்திலவாழும் பரதவர் அவ்விடத்தைவெறுப்பின் குறிஞ்சிநிலத்தேசென்று அவ்விடத்தைப் புகழவும்,

தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர் மீன் நெய்யொடு நறவு மறுகவும்—தேனாகியநெய்யோடே கிழங்கையும் விற்றவர்கள் மீனினதுநெய்யோடே நறவையுங் கொண்டுபோகவும்,

தீங் கரும்போடு அவல் வகுத்தோர் மான் குறையொடு மது மறுகவும்—இனிய கரும்போடே அவலைக் கூறுபடுத்தி விற்றவர்கள் மானினது தசையோடே கள்ளையுங் கொண்டுபோகவும்,

[குறிஞ்சி பரதவர் பாட நெய்தல் நறும்பூங் கண்ணி குறவர் சூட]

குறவர் நெய்தல் நறும் பூங்கண்ணி சூட—குறவர் அந்நிலத்துப் பூக்களைவெறுக்கின் நெய்தலினது நறிய பூவாற்செய்த கண்ணியைச்சூடவும்,

[கானவர் மருதம் பாட அகவர், நீனிற முல்லைப் பஃறிணை நுவலக், கானக்கோழி கதிர்குத்த:]

கானக் கோழி கதிர் குத்த—காட்டிடத்துக் கோழிகள் நெற்கதிரைத் தின்னவும்,

மனைக் கோழி தினைக் கவர— மருதநிலத்தின் மனையிற்கோழிகள் தினையைத் தின்னவும்,

வரை மந்தி கழி மூழ்க—மலையிடத்திற்குரியமந்திகள் கழியிலேமூழ்கவும்,

கழி நாரை வரை யிறுப்ப—கழியிற்றிரியும்நாரைகள் மலையிலேகிடக்கவும்,

தண் வைப்பின் நால் நாடு குழீஇ—குளிர்ந்த வைப்புக்களையுடைய நான்குகூறாகிய நாடுகள் திரண்டு,

நால் நாடென்றார், * "நடுவணைந்திணை நடுவணது ஒழிய" என்னுஞ்சூத்திரத்தால்.

பாரப்போம்பவும் (கஅசு) அயரவும் (கஅஎ) மயிலால (ககூ0) மடமஞ்ஞை (உகஉ) பலபெயரவும் (உகங) நாரை (உ0ச) சேப்பவும் (உ0எ) அகவர் (உஉ0) அகன்றுமாறிய (ககூஅ) பஃறிணைநுவலவும் (உஉக) கானவர் (உஉ0) நடைமுனையின் (உ0உ) மருதம்பாடவும் (உஉ0) பாக்கத்துப் (உக0) பரதவர் குறிஞ்சிபாடவும் (உகஅ) கிழங்கு மாறியோர் (உகச) நறவுமறுகவும் (உகரு) அவல்வகுத்தோர் (உகசு) மதுமறுகவும் (உகஎ) குறவர் கண்ணிசூடவும் (உகக) கோழி கதிர்குத்தவும் (உஉஉ) மனைக்கோழி

* தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், உ.

திணைக்கவரவும் (உஉக) மந்தி சூழ்கவும் (உஉச) நாரை வரையிறுப்பவும் (உஉரு) நாளொடு குழீஇ (உஉசு) மாமாவின் வயின்வயின் நெற் (கஅ௦) கூடுசெழீஇய (கஅஉ) காடு (உசஅ) எனவினைமுடிக்க

குழீஇயென்னுஞ் செய்தெனெச்சம் பிறவினைகொண்டது, * "அம்முக் கிளவியும" என்னுஞ்சூத்திரவிதியால்.

[மண்மருங்கினுன் மறுவின்றி, யொருகுடையா னென்றுகூறப், பெரிதாண்ட பெருங்கேண்மை, யறனொடு புணாந்த திறனறி செங்கோ, லன்னோன் வாழி வெல்வேற் குரிசில்:]

மறுவின்றி அறனொடு புணாந்த திறன் அறி செஙகோல் ஒரு குடையான் ஒன்று கூற முதியோா (கஅஎ) முரண் செலப (கஅஅ) பெருஙகேணமை பெரிது ஆண்ட வெல் வேற குரிசில்—குறறமின்றித தருமத்தோடுகூடிய வழியை உலகம் அறிதற்குக காரணமாகிய செவ்வியகோலாலும் தணணளிசெயதறகெடுத்த ஒருகுடையாலும் தனதுஆணையே யுலகஙகூறும்படியாகவும் முதியோா முரணசெலலுமபடியாகவும் பெரியநட்புடனே நெடுஙகாலம் உலகையாணட வெலகினற வேலையுடைய தலைவன்,

ஒருகுடை என்றதனுனும, ஒன்றுகூற என்றதனுனும் இவன மணமுழுதும ஆணடானென்றூா

அன்னோன்—யான்கூறிய அததனமைகளையுடையோன,

வாழி—வாழ்வாயாக,

இறுதி யுகரஙகெட்டுநின்றது.

[மன்னாநடுஙகத் தோனறிப பன்மா, ணெல்லை தருநன பல்கதிா யரப்பி]

மன்னா நடுங்கத தோன்றி—பகையரசா நடுஙகுமபடி விளஙகி,

பன் மாண எல்லை தருநன பலகதிா பரபபி—பலவுயிாகளும் மாட்சிமைபபடுதறகு காரணமாகிய பகற்பொழுதைததருங் கதிரோன் தன்னிலையைவிட்டுப பலகிரணங்களைப் பரபபுகையினுலே,

குல்லை கரியவும்—கஞசங்குல்லைதீயவும,

கோடு எரி நைபபவும்—மரங்களினுடைய கொமபுகளை நெருபபுததின்னவும்,

[அருவி மா மலை நிழத்தவும்] மா மலை அருவி † நிழததவும்—பெருமையையுடையமலை தன்னிடததருவிகளை இல்லையாககவும்,

மற்றக கருவி வானங் கடற் கோண் மறபபவும்—இவையொழிந்த தொகுதியையுடைய மேகம் கடலிடத்துமுகத்தலை மறப்பவும்,

பெரு வறன் ஆகிய பண்பு இல் காலையும்—பெரிய வறகடமுணடாகிய நற்குணமில்லாத காலத்தும்,

கரியவும் நைபபவும (உருச) நிழத்தவும் (உருரு) மறப்பவும் (உருசு) வறனுகிய காலையுமெனமுடிக்க

[நறையு நரந்தமு மகிலு மாரமுந், துறைதுறை தோறும் பொறையுயிர்த தொழுகி] நறையும் நரந்தமும அகிலும் ஆரமும் பொறை துறை துறை தோறும் உயிர்த்து ஒழுகி—நறைகொடியும் நரந்தபபுல்லும் அகிலும் சந்தனமுமாகிய சுமையைத் துறைதோறும் துறைதோறும்இளைபபாறத்தளளிப் போய,

---

* தொலகாபபியம், சொல்லதிகாரம், வினையியல, ருச

† "ஓய்த லாய்த னிழத்தல் சாஅ, யாவயி னுன்குமுள்ளத னுணுக்கம்." என்பது தொல்காப்பியம், சொல்லதிகாரம். உரியியல், ருச.

நுரைத் தலைக் குரைப புனல்—நுரையைத் தலையிலேயுடைய ஆரவாரத்தையு டைய நீர்,

வரைபபு அகம் புகுதொறும—குளததிலுங் கோட்டத்திலும் புகுந்தோறும், வரைக்கப்படுதலின், வரைப்பு ஆகுபெயர்

புனல ஆடும் மகளிர கதுமெனக குடைய—நீராடுமகளிர கடுகக் குடைந்துவிளை யாட,

புனல ஒழுகிப் புகுதொறும மகளிர குடையவெனக.

கூனிக் குயததின் வாய நெல அரிநது—வளைந்துநின்ற அரிவாளின் வாயா லே நெலலையறுத்து,

நெல்லு மிகககாயததுத தரையிலேவிழுதலின, வளைநதுநிறகவேண்டுமென் றூர

சூடு கோடாகப பிறககி—சூட்டை மலையாகவடுககி,

நாடொறும குனறெனக குவைஇய குன்றுக குபபை—நாடோறுங கடாவிட்டு மேருவென்னுமபடி திரட்டின தொலையாத நெறபொலி,

[கடுந்தெறறு மூடையி னிடநகெடக் கிடக்குஞ், சாலி நெலலின் சிறைகொள வேலி, யாயிரம் விளையுட் டாகக, காவிரி புரககு நாடுகிழ வோனே:]

கடுந் தெறறு மூடையின இடம் கெடக் கிடககும் விளையுட்டாக—நெருங்கத் தெறறின குதிரின்கண்ணே வெறறிடம் இலலையாம்படி கிடத்தற்குக்காரணமான விளைதலை யுடைததாக,

கடுந்தெற்றுமூடை-கோட்டையுமாம

சிறை கொள் வேலி ஆயிரம் சாலி நெலலின விளையுட்டாக—வரம்புகட்டின வேலிநிலம் ஆயிரககலமாகிய செந்நெல்லின் விளையுட்டாக,

காவிரி புரக்கும் நாடு கிழவோன்—காவிரி பாதுகாக்கும் நாடு தனக்கே உரித்தாந் தன்மையுடையோன்

வறஞுகிய காலையும் (உசஎ) புனல் (உசO) ஒழுகிப (உருக) புகுதொறும் (உசO) மகளிர குடைந்து விளையாடக் (உசக) கூனி அரிந்து (உசஉ) பிறக்கிக் (உசரு) குவை இய குப்பை (உசச) கிடத்தற்குக்காரணமான (உசரு) விளையுட்டாகக் (உசஎ) காவிரி புரககு நாடு (உசஅ) எனவினைமுடிக்க

பொருந (ரு), கோடியாதலைவ, கொணடதறிந (ருஎ), புகழ்மேமபடுந (சுO), எழின் கிழவ (சுரு), காடுறை கடவுட்கடன் கழிபபியபின்றை (ருஉ) நெறிதிரிந்தொராஅது (ருஅ) ஆறறெதிர்பபடுதலும நோறறதன்பயனே (ருக), போற்றிககேண்மதி (சுO), நின்னிரும்பேரொக்கலொடு (சுக) பசியொராஅலவேணடின், நீடின்று (சுஉ) எழுமதி (சுரு), யானும் (சுச) இன்மைதீர வந்தனென (கஉக), உருகெழுகுரிசிலாகிய (கருக) உருவபபஃறே ரிளையோன்சிறுவன் (கருO), கரிகாலவளவன் (கசஅ), நாடுகிழவோன் (உசஅ), குரிசில, அனஞேன (உருக) தாணிழன்மருஙகிற் குறுகி (கசக) மன்னர்நடுங கத்தோன்றி (உருஉ), வாழியெனத (உருக) தொழுது முன்னிற்குவிராயின் (கடுO), காட்டொடு (கஎO) வேழந் (கஎஉ) தரவிடைத தஙகலோவிலன் (கஎரு) எனககூட்டி வினைமுடிவுசெய்க

*"முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி**வேண்டும்" என்பதனான், இங்ஙனமுடிந்தது.

† "கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு, மாறறிடைக காட்சி யுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம பெறாஅர்க் கறிவுறீஇச், சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்" என்பது இதற்குவிதி.

‡"ஆசிரிய நடைத்தே வஞ்சி" என்பதனாற, பின்னர் வஞ்சி மிகவும்வந்தன வென்றுணர்க

சோழன் கரிகாற்பெருவளத்தானை முடத்தாமக்கண்ணியார்பாடிய பொருநராற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்த வுரை முற்றிற்று



வெணபா

க. ஏரியு மேற்றததி னுனும பிறநாடடு
வாரி சுரக்கும வளனெல்லாந் தேரி
னரிகாவின் கீழுகூஉ மங்கெல்லே சாலுங
ஈரிகாலன் காவிரிசூழ் நாடு

உ. அரிமா சுமந்த வமளிமே லானைத
திருமாற் வளவனெனத தேறேன் திருமாபின்
மானமா லென்றே தொழுதேன் றொழுதகைப
போனவா பெய்த வளை

௩. முச்சக் கரமு மளபபதறகு நீட்டியகா
லிச்சக் கரமே யளந்ததாற் செய்சசெ
யரிகான்மேற றேனறொடுக்கு மாயபுனனீர நாடன
கரிகாலன் கானெருப பு்றறு



* "முன்னிலை சுட்டிய வொருமைக கிளவி, பனமையொடு முடியினும வரைநிலை யின்றே, யாற்றுப்படை மருங்கிற போற்றல வேண்டும்" என்பது தொலகாப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், ௬௬

† தொல்காப்பியம், பொருளதிகாரம், புறததிணையியல், ௩௬

‡ செய்யுளியல, ௧௦௮.

## மூன்றாவது

# சிறுபாணாற்றுப்படை.



மணிமலைப் பணைத்தோண் மாநில மடந்தை
யணிமுலைத் துயல்வரூஉ மாரம் போலச்
செல்புன லுழந்த சேய்வரற் கான்யாற்றுக்
கொல்கரை நறும்பொழிற் குயில்குடைந் துதிர்த்த
௫ புதுப்பூஞ் செம்மல் சூடிப் புடைநெறித்துக்
கதுப்புவிரித் தன்ன காழக நுணங்கற
*லயிலுருப் பனைய வாகி யைதுநடந்து
வெயிலுருப் புற்ற வெம்பரல் கிழிப்ப
வேனி னின்ற வெம்பத வழிநாட்
௧௦ காலை ஞாயிற்றுக் கதிர்கடா வுறுப்பப்
பாலை நின்ற பாலை நெடுவழிச்
சுரன்முதன் மராஅத்த வரிநிழ லசைஇ
யைதுவீ ழிகுபெய லழகுகொண் டருளி
நெய்கனிந் திருளிய கதுப்பிற் கதுப்பென
௧௫ மணிவயிற் கலாபம் பரப்பிப் பலவுடன்
மயின்மயிற் குளிக்குஞ் சாயற் சாஅ
யுயங்குநாய் நாவி னல்லெழி லசைஇ
வயங்கிழை யுலறிய வடியி னடிதொடர்ந்
தீர்ந்துநிலந் தோயு மிரும்பிடித் தடக்கையிற்
௨௦ சேர்ந்துடன் செறிந்த குறங்கிற் குறங்கென
மால்வரை யொழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த வோதி யோதி
நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக்
களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கிற் சுணங்குபிதிர்ந்
௨௫ தியாணர்க் கோங்கி னவிர்முகை யெள்ளிப்
பூணகத் தொடுங்கிய வெம்முலை முலையென
வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கி
னின்செறி நீர்தரு மெயிற்றி னெயிற்றெனக்
குல்லையம் புறவிற் குவிமுகை யவிழ்ந்த

* அயிலுருக்கனையவாகியென்றும், அயிலுருத்தனையவாகி யென்றும் பாட.

௩௦ முல்லை சான்ற கற்பின் மெல்லியன்
மடமா னோக்கின் வாணுதல் விறலியர்
நடைமெலிந் தசைஇய நன்மென் சீறடி
கல்லா விளையர் மெல்லத் தைவரப்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பி
௩௫ னின்குரற் சீறியா ழிடவயிற் றழீஇ
நைவளம் பழுநிய நயந்தெரி பாலை
கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க
வியங்கா வையத்து வள்ளியோர் நசைஇத்
துனிகூ ரெவ்வமொடு துயராற் றுப்படுப்ப
௪௦ முனிவிகந் திருந்த முதுவா யிரவல
கொழுமீன் குறைய வொதுங்கி வள்ளிதழ்க்
கழுநீர் மேய்ந்த கயவா யெருமை
பைங்கறி நிவந்த பலவி னீழன்
மஞ்சண் மெல்லிலை மயிர்ப்புறந் தைவர
௪௫ விளையா விளங்க ணாற மெல்குபு பெயராக்
குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளுங்
குடபுலங் காவலர் மருமா னொன்னா
வடபுல விமயத்து வாங்குவிற் பொறித்த
வெழுவுறழ் திணிதோ ளியறேர்க் குட்டுவன
௫௦ வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே யதாஅன்று
நறவுவா யுறைக்கு நாகுமுதிர் நுணவத்
தறைவாய்க் குறுந்துணி யயிலுளி பொருத
கைபுனை செப்பங் கடைந்த மார்பிற்
செய்பூங் கண்ணி செவிமுதற் றிருத்தி
௫௫ நோன்பகட் டுமண ரொழுகையொடு வந்த
மகாஅ ரன்ன மந்தி மடவோர்
*நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்
வாள்வா யெருந்தின் வயிற்றகத் தடக்கித்
தோளபுற மறைக்கு நல்கூர் நுசுப்பி
௬௦ னுளரிய லைம்பா லுமட்டிய ரீன்ற
கிளர்பூட் புதல்வரொடு கிலுகிலி யாடுந்
தத்துநீர் வரைப்பிற் கொற்கைக் கோமான்
றென்புலங் காவலர் மருமா னொன்னா
மண்மாறு கொண்ட மாலை வெண்குடைக்
௬௫ கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்

* நகாஅவன்னவென்றும் பாடம்

றமிழ்நிலை பெறற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின மதுரையும வறிதே யதாஅன்று
நறுநீர்ப பொயகை யடைகரை நிவந்த
துறுநீக் கடமபின றுணையார கோதை
௭0 யோவத தன்ன வுண்டுறை மருங்கிற்
கோவத் தனன கொஙகுசேர் புறைததலின்
வருமுலை யன்ன வண்முகை யுடைந்து
திருமுக மவிழ்ந்த தெயவத தாமரை
யாசி லங்கை யாகததோயந் தன்ன
௭௫ சேயிதழ் பொதிந்த செமபொற கொட்டை
யேம வின்றுணை தழீஇயிற குளர்ந்து
காமா துமபி காமரஞ் செபபுந
கண்பணை தழீஇய தளரா விருக்கைக
குணபுலங காவலர் மருமா னொன்னா
௮0 ரோங்கெயிற கதவ முருமுசசுவல சொறியுந்
தூங்கெயி லெறிநத தொடிவிளங்கு தடக்கை
நாடா நலவிசை நற்றேர்ச செமபிய
னோடாப பூட்கை யுறநதையும வறிதே யதாஅனறு
வானம் வாயதத வளமலைக கவாஅற
௮௫ கான மஞ்ஞைககுக கலிஙக நலகிய
வருந்திற லணங்கி னாவியா பெருமகன
பெருங்க லடன் பேகனுஞ சுருமபுண
நறுவீ யுறைகக நாக நெடுவழிச
சிறுவீ முலலைககுப பெருநதேர் நலகிய
௯0 பிறங்குவெள ளருவி வீழுஞ சாரற்
பறமபிற கோமான் பாரியுங கறங்குமணி
வாலுளைப புரவியொடு வையக மருள
வீர நனமொழி யிரவலாக கீந்த
வழறிகழ்ந் திமைககு மஞ்சுவரு நெடுவேற
௯௫ கழறொடித தடககைக காரியு நிழறிகழ்
நீல நாக நலகிய கலிங்க
மாலமா செலவற கமாநதனன் கொடுதத
சாவந் தாங்கிய சாநதுபுலா திணிதோ
ளார்வ நனமொழி யாயு மாலவரைக
௧00 கமழ்பூஞ் சாரற் கவினிய நெலலி
யமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீந்த
வுரவுச்சினங் கனலு மொளிதிகழ் நெடுவே

லாவககடற் ரூனே யதிகனுங் காவாது
நட்டோ ருவபப னடைபரி கார
க0ரு முட்டாது கொடுதத முனேவிளஙகு தடக்கைத்
துளிமழை பொழியும வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலே நாட னள்ளியு நளிசினே
நறுமபோது கஞலிய நாகுமுதிா நாகததுக்
குறுமபொறை நன்னாடு கோடியர்க் கீந்த
கக0 காரிக் குதிரைக காரியொடு மலேந்த
வோரிக குதிரை யோரியு மெனவாங
கெழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோ
ளெழுவா பூண்ட வீகைச செநநுகம
விரிகடல வேலி வியலகம விளஙக
கக௫ வொருதான ருங்கிய வுரனுடை நோனரு
ணறுவீ நாகமு மகிலு மாரமுந
துறையாடு மகளிரகுத தோட்புணே யாகிய
பொருபுன றருஉம போக்கரு மரபிற்
றொனமா விலங்கைக் கருவொடு பெயரிய
க௨0 நன்மா விலஙகை மனன ருள்ளு
மறுவின்றி விளங்கிய வடுவில் வாயவா
ளுறுபுலித துபபி னேவியர் பெருமகன்
களிறறுததழும் பிருந்த கழறயங்கு திருந்தடிப
பிடிக்கணனு சிதறும பெயன்மழைத தடக்கைப
க௨௫ பல்லியக் கோடியா புரவலன் பேரிசை
நலலியக் கோடனே நயந்த கொள்கையொடு
தாங்கரு மரபிற றன்னுந தந்தை
வானபொரு நெடுவரை வளனும பாடி
முனனாட் சென்றன மாக விருநா
க௩0 டிறவாக் கண்ண சாயசெவிக் குருளே
கறவாப பான்முலே கவர்தனோ னேது
புனிற்றுநாய் குரைககும புலலென னட்டில
காழ்சோா முதுசுவாக கணசசிதலரித்த
பூழி பூதத புழறகா ளாமபி
க௩௫ யொல்குபசி யுழந்த வொடுங்குநுண் மருஙகுல
வளேக்கைக் கிணேமகள் வள்ளுகிர்க் குறைத்த
குப்பை வேளே யுப்பிலி வெந்ததை
மடவோர் காட்சி நாணிக் கடையடைத்
திரும்பே ரொக்கலொ டொருங்குடன் மிசையு

ககO மழிபசி வருத்தம் வீடப் பொழிகவுட்
டறுகட் பூட்கைத் தயங்குமணி மருங்கிற்
சிறுகண் யானையொடு பெருந்தே ரெய்தி
யாமவ ணின்றும் வருதும் நீயிரு
மிவணயந் திருந்த விருமபே ரொக்கற்
கசரு செம்ம லுள்ளமொடு செலகுவி ராயி
னலைநீர்த் தாழை யன்னம் பூப்பவுந்
தலைநாட் செருந்தி தமனிய மருட்டவுங்
கடுஞ்சூன் முண்டகங் கதிர்மணி கழாஅலவு
நெடுங்கால் புன்னை நித்தில மவைப்பவுங்
கருO கானல் வெண்மணல் கடலுலாய் நிமிர்தரப்
பாடல் சான்ற நெய்த னெடுவழி
மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய
பனிநீர்ப் படுவிற் பட்டினம் படரி
னோங்குநிலை யொட்டகந் துயின்மடிந் தன்ன
கருரு வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகிற்
கரும்புகைச் செந்தீ மாட்டிப் பெருந்தோண்
மதியேக் கறூஉ மாசறு திருமுகத்து
நுதிவே னோக்கி னுளைமக ளரித்த
பழம்படு தேறல் பரதவர் மடுப்பக்
கசூO கிளைமலர்ப் படப்பைக் கிடங்கிற் கோமான்
றளையவிழ் தெரியற் றகையோற் பாடி
யறற்குழற் பாணி தூங்கி யவரொடு
வறற்குழற் சூட்டின் வயின்வயிற் பெறுகுவிர்
பைந்நனை யவரை பவழங் கோப்பவுங்
கசூரு கருநனைக் காயாக் கணமயி லவிழவுங்
கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவுஞ்
செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவுங்
கொல்லை நெடுவழிக் கோப மூரவு
முல்லை சான்ற முல்லையம் புறவின்
கஎO விடர்கா லருவி வியன்மலை மூழ்கிச்
சுடர்கான் மாறிய செவ்வி நோக்கித்
திறல்வே னுதியிற் பூத்த கேணி
விறல்வேல் வென்றி வேலூ ரெய்தி
னுறுவெயிற் குலைஇய வுருப்பவிர் குரம்பை
கஎரு யெயிற்றிய ரட்ட வின்புளி வெஞ்சோறு
தேமா மேனிச் சில்வளை யாயமொ

டாமான் சூட்டி னமைவரப பெறுகுவிர்
நறுமபூங் கோதை தொடுத்த நாட்சினைக்
குறுங்காற காஞ்சிக் கொம்ப ரேறி
௧௮௦ நிலையருங் குட்ட நோக்கி நெடிதிருநது
*புலவுக்கய லெடுதத பொனவாய மணிசசிரல
வள்ளுகிர் கிழித்த வடுவாழ் பாசடை
முள்ளரைத தாமரை முகிழ்விரி நாட்போது
கொங்குகவர் நீலச் செஙகட் சேவல்
௧௮௫ மதிசே ரரவின் மானத் தோன்று
மருதஞ் சான்ற மருதத தண்பணை
யந்தண ரருகா வருங்கடி வியனக
ரந்தண் கிடங்கினவ ணூமு ரெய்தின்
வலம்பட நடககும வலிபுண ரெருதது
௧௯௦ னுரன்கெழு நோன்பகட் டுழவர் தங்கை
பிடிக்கை யன்ன பினனுவீழ் சிறுபுறத்துத
தொடிக்கை மகடூஉ மகமுறை தடுபப
விருங்கா ழுலககை யிருப்புமுகந் தேய்த்த
வவைபபு மாணரிசி யமலைவெண் சோறு
௧௯௫ கவைததா ளலவன் கலவையொடு பெறுகுவி
ரெரிமறிந் தன்ன நாவி னிலங்கெயிற்றுக்
கருமறிக் காதிற் கவையடிப பேய்மக
ணிணனுண்டு சிரித்த தோற்றம் போலப்
பிணனுகைததுச் சிவந்த பேருகிர்ப் பணைததா
௨௦௦ ளண்ணல் யானை யருவிதுக ளவிபப
நீறடங்கு தெருவினவன் சாறயர் மூதூர்
சேயத்து மன்று சிறிதுநணி யதுவே
பொருநர்க் காயினும புலவர்க் காயினு
மருமறை நாவி னந்தணர்க் காயினுங்
௨௦௫ கடவுண் மால்வரை கண்விடுத தன்ன
வடையா வாயிலவ னருங்கடை குறுகிச
செய்நநன்றி யறிதலுஞ் சிற்றின மின்மையு
மின்முக முடைமையு மினிய னாதலுஞ
செறிந்துவிளங்கு சிறபபி னறிந்தோ ரேததத்
௨௧௦ வஞ்சினர்க களிததலும வெஞ்சின மின்மையு
மாணணி புகுதலு மழிபடை தாங்கலும
வாண்மீக் கூற்றத்து வயவ ரேத்தக்

* பலவக்கய லெரிந்க வென்னும் பாடம்

கருதியது முடித்தலுங் காமுறப் படுதலு
மொருவழிப் படாமையு * மோடிய துணர்தலு
௨௧௫ மரியே றுண்க ணரிவைய ரேத்த
வறிவுமடம் படுதலு மறிவுநன் குடைமையும்
வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்
பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்தப்
பன்மீ னடுவட் பான்மதி போல
௨௨௦ வின்னகை யாயமோ டிருந்தோற் குறுகிப்
பைங்க ணூகம் பாம்புபிடித் தன்ன
வங்கோட்டுச் செறிந்த வவிழ்ந்துவீங்கு திவவின்
மணிநிரைத் தன்ன வனப்பின் வாயமைத்து
வயிறுசேர் பொழுகிய வகையமை யகளத்துக்
௨௨௫ கானக் குமிழின் கனிநிறங் கடுப்பப்
புகழ்வினைப் பொலிந்த பசைசையொடு தேம்பெய்
தமிழ்துபொதிந் திலிறு மடங்குபுரி நரம்பிற்
பாடுதுறை முற்றிய பயன்றெரி கேள்விக்
கூடுகொ ளின்னியங் குரலகுர லாக
௨௩௦ நூனெறி மரபிற் பண்ணியா னுது
முதுவோர்க்கு முகிழ்த்த கையினை யெனவு
மிளையோர்க்கு மலர்ந்த மார்பினை யெனவு
மேரோர்க்கு நிழன்ற கோலினை யெனவுந்
தேரோர்க் கழன்ற வேலினை யெனவு
௨௩௫ நீசில மொழியா வளவை மாசில
காம்புசொலித் தன்ன வறுவை யுடீஇப்
பாம்புவெகுண் டன்ன தேற லலகிக்
காவெரி யூட்டிய கவர்கணைத் தூணிப்
பூவிரி கச்சைப் புகழோன் றன்முன்
௨௪௦ பனிவரை மார்பன் பயந்த நுண்பொருட்
பனுவலின் வழாஅப் பல்வே றடிசில்
வானிற விசும்பிற் கோண்மீன் சூழ்ந்த
விளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து
விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி
௨௪௫ யானு விருப்பிற ருனின் றாட்டித்
திறல்சால் வென்றியொடு தெவ்வுப்புல மகற்றி
விறல்வேன் மன்னர் மன்னெயின் முருக்கி

* ஊடிய துணர்தலுமென்றும்பாடம்.

நயவர பாணர் புன்கண் டீர்த்தபின்
வயவர் தந்த வான்கேழ் நிதியமொடு
உ௫0 பருவ வானத்துப பாற்கதிர பரபபி
யுருவ வான்மதி யூர்கொண் டாங்குக்
கூருளி பொருத வடுவாழ் நோன்குறட்
டாரஞ் சூழ்ந்த வயிலவாய் நேமியொடு
சிதர்நனை முருக்கின சேணுயர் நெடுஞ்சினைத
உ௫௫ ததர்பிணி யவிழ்ந்த தோற்றம போல
வுள்ளரக் கெறிந்த வுருககுறு போர்வைக்
கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி
யூர்ந்துபெயர் பெறற வெழினடைப பாகரொடு
மாசெல வொழிக்கு மதனுடை நோன்றாள
உ௬0 வாண்முகப பாண்டில வலவனொடு தரீஇ
யன்றே விடுக்குமவன பரிசின் மென்றோட
டுகிலணி யலகுற றுளங்கியன் மகளி
ரகிலுண விரித்த வமமென் கூந்தலின்
மணிமயிற கலாப மஞ்சிடைப் பரபபித
உ௬௫ துணிமழை தவழுந துயலகழை நெடுங்கோட
டெறிந்துரு மிறந்த வேறறருஞ் சென்னிக
குறிஞ்சிக கோமான கொய்தளிர்க் கண்ணிச
செலலிசை நிலைஇய பண்பி
னல்லியக கோடனை நயநதனிர செலினே

## இதனபொருள்.

[மணிமலைப பணைததோண மாநில மடநதை, யணிமுலைத துயல்வரூஉ மாரம் போல:] பணைத தோள் மா நிலமடந்தை மணி மலை அணி முலைத் துயல்வரூஉம் ஆரம் போல—மூங்கிலாகிய தோளையுடைய பெருமையினையுடைய மணமகளுடைய மணிகள்தங்கின மலையாகிய அழகினையுடைய முலையிற கிடந்தசையும் முததுவடம்போல,

[செல்புன லுழந்த சேய்வரற கான்யாற்றுக், கொலகரை நறும்பொழில:] சேய வரற் கரை கொல் கான்யாற்றுச் செல் புனல் உழந்த நறும் பொழில்—மலைததலையினின்றும் வருதலையுடைய கரையைக் குத்துகின்ற காட்டாறறிடத்து ஓடுகின்ற புனலாலே வருநதின நறிய பொழிலிடத்து,

இரண்டுமலையினின்றும் வீழ்ந்து இரணடு ஆறறிடைககுறையைச சூழ்வந்து பின்னர்க் கூடுதலின், முத்துவடம் உவமையாயிற்று; இது மெயயுவமம். பெருக்காற கோடுகள் வருந்துதலின், உழந்தவென்றார். இதனறபயன் ஆறறிடைக்குறையில் நின்றமரம் இளவேனிறகாலத்து மிகவும் பூத்ததாயிறறு

[குயில்குடைந் துதிர்த்த, புதுப்பூஞ் செம்மல் சூடிப் புடைநெறித்துக், கதுப்பு விரித் தன்ன காழக நுணங்கற, லயிலுருப் பனைய வாகி யைதுநடந்து, வெயிலுருப் புற்ற வெம்பரல் கிழிப்ப']

காழ் அகம் நுணங்கு அறல் குயில் குடைந்து உதிர்த்த புதுப் பூஞ் செம்மல் சூடிப் புடை நெறித்துக் கதுப்பு விரித்தன்ன வேனில் நின்ற (கூ)—கருமையை இடத்தேயுடைய நுண்மையையுடைய அறல் குயில்கள் சிறகாலுளர்ந்து உதிர்த்த புதிய பூக்களாகிய வாடலைச்சூடித் தம்மிடமெல்லாம் ஆறல்பட்டு மயிரை விரித்தாலொத்த தன்மையவாக இளவேனிலநின்றவெனக

பொழிலிடத்தறலென்க

வெயில் உருப்பு உற்ற வெம் பரல்— வெயிலால் வெம்மையுற்ற வெவ்விய பருக்கை,

அயில் உருப்பு அனையவாகிக் கிழிப்பச் சுரன மராத்த வரி நிழல் முதல் அசைஇ (கஉ) ஐது நடந்து—வேல காய்ந்த தன்மையவாய் அடியைக் கிழிக்கையினாலே அருங்கானகத்துநின்ற கடம்பினுடைய செறியாத நிழலைஉடைத்தாகிய அடியிலே இளைப்பாறிப் பினபு போகவேண்டுதலின், மெத்தென நடந்து,

[வேனி னின்ற வெம்பத வழிநாட், காலைஞா யிற்றுக கதிர்கடா வுறுப்பப், பாலை நின்ற பாலை நெடுவழி.] வேனில நின்ற காலை வழிநாள் ஞாயிற்றுக் கதிர் கடாவுறுப்ப வெம்பதப் பாலை நின்ற பாலை நெடுவழி—இளவேனில் நிலைபெற்ற காலத்திற்குப பின்னாகிய நாளிலே ஞாயிற்றினுடைய கதிர் வெம்மையைச் செலுத்தலைச் செய்கையினாலே வெய்ய செவ்வியையுடைய பாலைத்தன்மை நிலைபெற்றமையால் பிறந்த பாலைநிலமாகிய தொலையாத வழியினையுடைய சுரனெனக. (கஉ)

*"நடுவுநிலைத்திணையே" என்னுஞ் சூத்திரத்துரையால் பாலைத்தன்மை கூறினும்; அதுகொண்டு உணர்க. பாலைநின்ற பாலைவழி - "ஆறுசென்றவியர்" போல்

[சுரனமுதன் மராஅத்த வரிநிழ லசைஇ] எனபதனை முன்னேகூட்டுக.

[ஐதுவீ ழிருபெய லழகுகொண் டருளி, நெய்கனிந் திருளிய கதுப்பின்:] அருளி ஐது வீழ் இரு பெயல் அழகு கொண்டு நெய் கனிந்து இருளிய கதுப்பின்—உலகிற்கு அருளுதலைச்செய்து மெலவிதாய் வீழ்ந்து தாழ்கின்ற மழையினது அழகைத் தன்னிடத்தே கொண்டு எண்ணெயிலே முற்றுப்பெற்று இருண்ட மயிரினையும்,

[கதுப்பென, மணிவயிற் கலாபம் பரப்பிப் பலவுடன், மயின்மயிற் குளிக்குஞ் சாயல்·] மயில் பலவுடன் மணி வயிற் கலாபங் கதுப்பெனப் பரப்பி மயிற் குளிக்குஞ் சாயல்—மயில்கள் பலவுங்கூடி நீலமணிபோலுங் கண்ணினையுடைய தோகைகளை மகளிர் மயிரைவிரித்தாற்போல விரித்துப்பார்த்து இவர்கள்சாயற்கு ஒவ்வேமென்று பேட்டிற்குள்ளே சென்று மறைதற்குக் காரணமாகிய கட்புலனாகிய மென்மையினையும்,

சாஅய் உயங்கு நாய் நாவின் நல்லெழில் அசைஇ வயங்கு இழை உலறிய அடியின்—ஓடியிளைத்து வருந்துகின்ற நாயினது நாக்கினுடைய நல்ல அழகைவருத்தி வறுமையாலே விளங்குகின்ற சிலம்புமுதலியனவின்றிப் பொலிவழிந்த அடியினையும்,

[அடிதொடர், ஈர்ந்து நிலந் தோயு மிரும்பிடித் தடக்கையின்:] ஈர்ந்து நிலம் தோயும் இரும் பிடித் தடக் கையின் அடி தொடர்ந்து—இழுக்கப்பட்டு நிலத்தேசெறியும் கரிய பிடியினது பெருமையையுடைய கைபோலத் தாழும் அடியோடே தொடர்புபட்டு முறையாற் பருத்து,

[சோர்ந்துடன் செறிந்த குறங்கிற் குறங்கென, மால்வரை யொழுகிய வாழை:]

* தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், கூ.

மால் வரை ஒழுகிய வாழையெனச் சேர்ந்து—பெருமையையுடைய மலையிலே ஒழுங்குபட வளர்ந்த வாழையெனத் திரண்டு,

சேரென்னு முரிச்சொல் முதனிலையாகச் சேர்ந்தென்னும் வினையெச்சம் வந்தது.

குறங்குடன் செறிந்த குறங்கின்—ஒருகுறங்குடனே ஒருகுறங்கு நெருங்கியிருக்கின்ற குறங்கினையும்,

வாழைப பூவெனப் பொலிந்த ஓதி— வாழையினது பூவென்னும்படி அழகு பெற்ற பனிச்சையினையும்,

[ஓதி, களிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக், களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கிற் சுணங்குபிதிர்ந்து] களிச் சுரும்பு களிச் சினை வேங்கை நாள் மலர் நசசி ஓதி அரற்றும் சுணங்கிற் சுணங்கு பிதிர்ந்து—களிப்பினையுடைய சுரும்புகள் செறிவினையுடைத்தாகிய கொம்பினையுடைய வேங்கையினது நாட்காலத்து மலரென்று விரும்பிப பாடி ஆரவாரிக்கும் ஓரிடத்திற்றோன்றிய சுணங்குடனே ஓரிடத்திறறோன்றிய சுணங்குபிதிர்பட்டு,

யாணர்க் கோங்கின் அவிர் முகை எள்ளிப் பூண் அகத்து ஒடுங்கிய வெம் முலை—புதிதாகப் பூத்தலையுடைய கோஙகினது விளஙகுகின்ற முகையை இகழ்ந்து மெல்லிய பணிகள் இடையிலேகிடக்கின்ற விருபபததையுடைய முலையினையும்,

[முலையென, வண்கோட் பெண்ணை வளர்தத நுங்கி, னின்செறி நீர்தரு மெயிற்றின்:] வன் கோட் பெண்ணை முலையென வளாத்த நுங்கின் இன் செறி நீர் தரும் எயிற்றின்—பெரிய குலையினையுடைய பனை முலையென்னும்படி வளாத்த நுங்கினது இனிய செறிந்த நீா தன்னீர்மையாற் றரும் எயிறறினையும்,

[எயிறெனக, குல்லையம் புறவிற் குவிமுகை யவிழ்ந்த, முல்லை சான்ற கற்பின்:] குல்லை அம் புறவிற குவி முகை எயிறென அவிழ்ந்த முல்லை சான்ற கற்பின்—கஞ்சங்குல்லையையுடைய அழகிய காட்டகத்தே குவிந்த அரும்பு எயிறென்னும்படி நெகிழ்ந்த முல்லைசூடுதறகமைநத கற்பினையும்,

கற்பின் மிகுதிதோன்ற முலலைசூடுதல்இயல்பு கதுப்பிற் கதுபபென்பது முதல் இத்துணையும் இயைபுத்தொடை திரிந்து வந்ததென்றறிக. * "இறுவாயொன்றல்" என்னுஞ் சூத்திரத்துட் கூறினும

மெல்லியல் மடமான் நோக்கின வாள் நுதல் விறலியா—மெல்லிய இயல்பினையும், மடப்பத்தினையுடைய மான்போலும் பாாவையினையும், ஒளியையுடைத்தாகிய நுதலினையுமுடைய விறலபட ஆடுமகளிா,

கதுபபினையும (கச), ஓதியினையும் (உஉ), நுதலினையும், நோக்கினையும் (௩க), எயிற்றினையும் (உஅ), முலையினையும் (உசு), குறங்கினையும (உ0), அடியினையும் (கஅ), சாயலினையும் (கசு), மெல்லிய இயல்பினையும, கறபினையு (௩0) முடைய விறலியரென்க.

நடை மெலிந்து அசைஇய நன் மென் சீறடி கலலா இளையா மெல்லத் தைவா—நடையால் இளைதது ஓய்ந்த நன்மையையுடைய மெலலிய சிறிய அடியைத் தந்தொழிலையொழிய வேறுகல்லாத இளையா மெத்தென்று வருட,

பொன் வார்ந்தன்ன புரி அடஙகு நரம்பின் இன் குரல் சீறியாழ் இடவயின்

* தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், ௯சு.

தழீஇ— பொற்கம்பியினையொத்த முறுக்கடங்கின நரம்பினது இனிய ஓசையையு டைய சிறிய யாழை இடப்பக்கத்தே தழுவி,

நைவளம் பழுநிய நயம் தெரி பாலை கைவல் பாணமகன் கடன் அறிந்து இயக்க —நட்டபாடையென்னும் பண முறறுபபெற்ற, இனிமை தெரிகின்ற பாலையாழை வாசித்தலைவல்ல பாணனாகியமகன் வாசிக்குமுறைமையை அறிந்து வாசிக்க,

இயஙகா வையத்து வளளியோா நசைஇ—வள்ளியோரின்மையின் பரிசிலா செல்லாத உலகத்தே பரிசில்தருவாரை விரும்பி,

இனி இயங்கும்வையம சகடமாகலின், உலகத்திறகு இயஙகாவையமென வெளிப்படை கூறிற்றுமாம்.

துனி கூர் எவ்வமொடு துயா ஆற்றுபபடுபப—தனனை வெறுததன்மிகக வருத்த த்தோடேகூடின வறுமை நின்னைக் கொண்டுபோகையினாலே,

முனிவு இகந்து இருந்த முது வாய் இரவல—வழிவருததந் தீாந்திருநத பேரறிவு வாய்த்தறறொழிலையுடையையாய இரவல,

துயர் ஆறறுப்படுக்கையினாலே போந்து (௩௧) விறலியர் தம்முடைய (௩௧) சீற டியை (௩௨) வெம்பரல (அ) அயிலுருபபனையவாகிக (எ) கிழிககையினாலே (அ) வரிநி ழலசைஇப (௧௨) பின்னும் ஆறறுநதகைபெற ஐதுநடந்து (எ) அந்நடையால் இளைத்து ஒயந்த அடியை (௩௨) இளையா தைவரப (௩௩) பாண்மகன் (௩௭) பாலையை (௩௬) பியக்க (௩௭) வள்ளியோா நசைஇச் (௩௮) சீறி யாழ இடவயிறறழீஇ (௩௫) முனிவிக ந்திருந்த இரவலவென முடிக்க

கொழு மீன் குறைய ஒதுஙகி வள் இதழ கழுநீர் மேய்ந்த கயவாய் எருமை— கொழுவிய மீன் துணியநடந்து வளவிய இதழையுடைததாகிய செஙகழுநீாப் பூவைத் தின்ற பெரிய வாயையுடைய எருமை,

பைஙகறி நிவநத பலவின நீழல மஞசள் மெலலிலை மயிாப் புறம் தைவர—பசிய மிளகுகொடிபடாநத பலாவினீழலிலே மஞ்சளினது மெல்லியவிலை தனது மயிரை புடைய முதுகைத்தடவ,

விளையா இளஙகள் நாற மெல்குபு பெயரா—முறறாத இளையதேன் நாறமென்று அசையிட்டு,

குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளும—காட்டுமல்லிகையாகிய படுக்கையிலே துயில்கொள்ளும்,

குடபுலம் காவலா மருமான—மேற்றிசைக்கணுள்ள நிலததைக காததற்றொழி லையுடைய சோா குடியிலுள்ளோன,

எருமை, நீழலிலே தைவரப பெயராக கொள்ளும குடபுலமென முடிகக

ஒன்னா வடபுல இமயதது வாங்கு வில் பொறித்த எழு உறழ திணி தோள் இயல் தோக குட்டுவன்—பகைவருடைய வடககின்கண உளளதாகிய நிலததிடத்தே நிற் கும் இமவானினகணணே வளையும் விலலைவைதத கணையத்தைமாறுபடுந் திணிந்த தோளினையும் நடக்கின்ற தேரினையுமுடைய குட்டநாட்டை யுடையோன்,

வரு புனல் வாயில வஞ்சியும வறிது—பெருகுகின்றநீரையும், கோபுரவாயிலை புமுடைய வஞ்சியென்னுமூரும் தரும்பரிசில் சிறிதாயிருககும்.

மருமான் (௪௭) குட்டுவன் (௪௯) அவனுடைய வஞ்சியும் வறிதெனமுடிக்க

அதா அன்று—அவ்வூரன்றி,

நறவு வாய் உறைக்கும் நாகு முதிர் நுணவத்து அறை வாய்க் குறுந்துணி—தேனைப் பூக்கள் தம்மிடத்தினின்று துளிக்கும் இளமைமுதிர்ந்த நுணாமரத்தினது வெட்டின வாயையுடைய குறியகுறட்டை,

[அயிலுளி பொருத, கைபுனை செப்பங் கடைந்த மார்பின்:] அயில் உளி கடைந்த கை புனை செப்பம் பொருந்த மார்பின் மந்தி (௫௬)—கூர்மையையுடைய உளிகள் உள்ளேசென்றுகடைந்த சாதிலிங்கந் தோய்ந்த சேப்புச்சேர்ந்த மார்பின்மந்தி,

செய் பூங் கண்ணி செவி முதல் திருத்தி—இடேச்சையாற்செய்த பூவினையுடைய மாலையைச் செவியடியிலே நெற்றிமாலையாகக் கட்டி,

நோன் பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த மந்தி (௫௬)—வலியினையுடைத்தாகிய எருத்தினையுடைய உப்புவாணிகருடைய சகடவொழுங்கோடே கூடவந்த மந்தி,

மகாஅர் அன்ன மந்தி—அவர்கள் வளர்த்தலின் அவர்கள் பிள்ளைகளை யொத்த மந்தி,

மடவோர் நகாஅர் அன்ன நளி நீர் முத்தம் வாள் வாய் எருந்தின் வயிற்றகத்து அடக்கி—அவ்விடத்து மடப்பத்தையுடைய மகளிருடைய எயிற்றையொத்த செறிந்த நீர்மையையுடைய முத்தை வாள்வாயபோலும் வாயையுடைய கிளிஞ்சிலின் வயிற்றிடத்தே இட்டுப் பொதிந்து,

[தோள்புற மறைக்கு நல்கூர் நுசுப்பி, னுளரிய லைம்பா லுமட்டிய ரீன்ற:]

நுசுப்பின் நல்கூர் புறம் தோள் மறைக்கும் உமட்டியர்—நுசுப்பினது நல்கூர்ந்த புறத்தைத் தோள் மறைக்கும் உமட்டியர்,

என்றது:—இடை தனது நுண்மையால் நெகிழமுயங்குங்காலத்து ஊற்றின்பம் பெறாது மிடிப்பட்ட புறத்தினைத் தோள் இறுகமுயங்கி அவ்வின்பத்தைக்கொடுத்தற்குக் காரணமான உமட்டியரென்றவாறு.

ஊற்றின்பம் பெறற்றியாதெனனும் புறங்கூற்றை யென்றுமாம்.

உளர் இயல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற—அசைகின்ற இயல்பினையுடைய ஐந்துபகுதியாகிய மயிரினையுடைய உப்புவாணிகத்தியர்பெற்ற,

கிளர் பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்—விளங்குகின்ற பூணையுடைய பிள்ளைகளுடனே தானும் கிலுகிலுப்பை கொண்டு விளையாடும்,

தத்து நீர் வரைப்பிற் கொற்கைக் கோமான்—முறிகின்ற நீரைத் தனக்கு எல்லையாகவுடைய கொற்கையென்னும் ஊர்க்கரசன்,

மந்தி முத்தையடக்கி உமட்டியரீன்ற புதல்வரோடே ஆடுங் கொற்கை யென முடிக்க.

தென் புலம் காவலர் மருமான்—தெற்கின்கண்ணதாகியநிலத்தைக் காத்தற்றொழிலையுடையார் குடியிலுள்ளோன்,

[ஒன்னார், மண்மாறு கொண்ட மாலை வெண்குடைக், கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்.]

ஒன்னார் மண் மாறு கொண்ட செழியன்—பகைவர்நிலத்தை மாறுபாட்டாலே கைக்கொண்ட பாண்டியன்,

மாலை வெண்குடைக் கண்ணார் கண்ணிக் கடுந் தேர்ச்செழியன்—முத்தமாலையையுடைய கொற்றக்குடையினையும் கண்ணிற்கு அழகுநிறைந்த கண்ணியினையும் கடிய தேரினையுமுடைய செழியன்,

[தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின், மகிழ்நனைமறுகின் மதுரையும் வறிதே:] நனை மகிழ் தாங்கரு* மரபின் தமிழ் நிலைபெற்ற மறுகின் மதுரையும் வறிது—தன்னிடத்துத் தோன்றிய மனமகிழ்ச்சி பொறுத்தற்கரிய முறைமையினையுடைய தமிழ் வீற்றிருந்த தெருவினையுடைய மதுரையும் வறிது,

நனைமகிழ்—வினைத்தொகை

கோமான் (சுஉ) மருமான் (சுரு) செழியன் (சுசு) அவனுடைய மதுரையும் தரும் பரிசில் சிறிதாயிருக்கும்

அதாஅன்று—அவ்வூரன்றி,

[நறுநீர்ப் பொய்கை யடைகரை நிவந்த:] பொய்கை நறு நீர் அடைகரை நிவந்த—பொய்கையிடத்து நறிய நீரடைகரையிலே நின்று வளர்ந்த,

துறுநீக் கடம்பின் துணை ஆர் கோதை—நெருங்குகின்ற தன்மையையுடைய கடம்பினுடைய இணைதனிறைந்த மாலை,

கோதைபோலப் பூத்தலிற் கோதையென்றார்.

[ஓவத் தன்ன வுண்டுறை மருங்கிற், கோவத் தன்ன கொங்குசோ புறைத்தலின்:] கோவத்து அன்ன கொங்கு உறைத்தலிற் சோபு ஓவத்து அன்ன உண் துறை மருங்கின்—தன்னிடத்து இந்திரகோபத்தையொத்த தாதையுதிர்த்தலின் அத்தாதுசேர்ந்து சித்திரத்தையொத்த உண்ணும்துறையிடத்தே நின்ற,

வரு முலை அன்ன வண முகை உடைந்து திருமுகம் அவிழ்ந்த தெய்வத் தாமரை—எழுகின்ற பெரியமுலையையொத்த பெரிய முகைநெகிழ்ந்து அழகினையுடைய முகம்போல மலர்ந்த தெய்வத்தன்மையையுடைய தாமரையிடத்து,

† "பொருளே யுவமஞ் செய்தனா" என்னுஞ் சூத்திரத்தாற் பொருளை யுவமஞ் செய்தார்.

ஆசு இல அங்கை அரக்குத் தோயந்தன்ன சேயிதழ் பொதிந்த செம் பொன் கொட்டை ஏம இன் துணை தழீஇ—குற்றமில்லாத அங்கையைச் சாதிலிங்கந்தோய்ந்தாலொத்த சிவந்த இதழ்சூழ்ந்த செம்பொனாற் செய்தாலொத்த பீடத்திலேதன்னுயிர்க்குக் காவலாகிய இனிய பெடையைத் தழுவித் துயில்கொண்டு,

இறகு உளர்ந்து காமர் தும்பி காமரம் செப்பும் தண்பணை தழீஇய தளரா இருக்கை—அத்துயிலெழுந்து விருப்பமருவின தும்பி சீகாமரமெனனும் பண்ணைப்பாடும் மருதநிலஞ்சூழ்ந்த அசையாத குடியிருப்பினையுடைய,

குணபுலம் காவலர் மருமான்—கிழக்கின்கண்ணதாகிய நிலத்தைக் காத்தற்றொழிலையுடையார் குடியிலுள்ளோன்,

[ஒன்னா ரோங்கெயிற் கதவ முருமுச்சுவல் சொறியுந், தூங்கெயி லெறிந்த தொடி விளங்கு தடக்கை] கதவம் ஒங்கு எயில உருமுச சுவல் சொறியும் ஒன்னார் தூங்கு எயில் எறிந்த தொடி விளங்கு தடக்கை—கதவத்தையுடைய உயர்ந்த மதிற்றலையிலே உருமேறு தன்கழுத்தைத் தினவாற்றேய்க்கும் பகைவர் தூங்கெயிலை அழித்த தொடிவிளங்கும் பெருமையையுடைய கையினையும்,

---

* "கடம்பு சூடிய கன்னி மாலைபோல்" என்றார் சிந்தாமணியிலும்; குணமாலையாரிலம்பகம், கசo.

† தொல்காப்பியம், பொருளதிகாரம், உவமவியல், க.

நாடா நல் இசை நற்றேர்ச் செமபியன்—ஐயுறறு ஆராயபபடாத உலகறிந்த நல் லபுகழினையும் நல்லதேரினையுமுடைய சோழனது,

ஓடாப் பூட்கை உறந்தையும் வறிது—தன்னிடத்திருந்தோர் ஓடாமைக்குக் காரணமாகிய மேற்கோளினையுடைய உறந்தையென்னும் ஊரும் தரும்பரிசில் சிறிதாயிருக்கும்,

அது *“ முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய - புறஞ்சிறை வாரணம புக்கனர் புரிந்தென” என்பதனுனுணர்க

அதாஅன்று—அவ்வூரன்றி,

வானம் வாயதத வளமலைக கவாஅன் கான மஞ்ஞைககுக கலிங்கம நல்கிய—மழை பருவம்பொய்யாமற பெய்கையினுலே உணடான செல்வததையுடைய மலைப் பக்கத்திற காட்டிடததேதிரியுமயில் கூவியதற்குக் குளிர்ந்துகூவிற்றென்று அருண் மிகுதியாற போர்வையைககொடுதத,

அருந திறல அணஙகின ஆவியர் பெருமகன்— பெறுதற்கரிய வலியையுடைததாகிய வடிவினையுடைய ஆவியாகுடியிற பிறந்த பெரியமகன்,

† பெருங கல் நாடன பேகனும்—பெரிய மலைநாட்டையுடைய பேகனென்னும் வள்ளலும்,

ல்கிய பெருமகனுகிய பேகனுமெனமுடிகக

ருமபு உண நறு வீ உறைககும நாக நெடுவழி — சுருமபுணணும்படிநறியபூத தேனைத்துளிககும் சுரபுன்னையையுடைத்தாகிய நெடிய வழியினின்ற,

சிறுவீ முல்லைககுப் பெருந் தேர் நல்கிய— சிறிய பூக்களையுடைய முல்லைக கொடி தடுத்தறகு அது வேணடிற்றுககருதிப் பெரிய ‡ தேரைககொடுத்த,

பிறஙகு வெள் அருவி வீழும் சாரற பறமபிற கோமான் பாரியும்—மிகுகின்ற வெளளிய அருவிகுதிககும் பககத்தினையுடைய பறம்பென்னும் மலைக்கரசனுகிய பாரியென்னும் வள்ளலும்,

கறங்கும மணி வால உளைப புரவியொடு வையகம் ஈர நன்மொழி மருள இரவலாக்கு ஈந்த காரி (கூடு)— ஒலிககும் மணியினையும வெள்ளிய தலையாட்டத்தினையுமுடைய குதிரையோடேதனதுநாட்டினையும, அருளினையுடையநன்றுகிய மொழியினையும் ஏனையோர்கேட்டுவியக்கும்படி யிரவலாககுக் கொடுத்த காரி,

ஈரநன்மொழிமருளவென்றுமாறுக

அழல் திகழ்ந்திமைககும் அஞ்சுவரு நெடு வேல கழல தொடித தடக்கைக காரியும்—தன்னிடததுறையுங கொறறவையுடைய கோபததின்மிகுதியினுலே தான் விளஙகும் அச்சந்தோன்றும் நெடியவேலினையும் உழலுந்தொடியினையணிந்த பெருமையையுடைய கையினையுமுடைய காரியென்னும்வளளலும்,

[நிழறிகழ், நீல நாக நல்கிய கலிங்க, மாலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த.] நாகம் நல்கிய நிழல் திகழ் நீலக் கலிஙகம் ஆல அமா செலவறகு அமாந்தனன் கொ

---

* சிலப்பதிகாரம், நாடுகாண்காதை,

† சிலபிரதிகளில், பெருங்கடனுடனென மூலத்தும் பெரிய கடனுடனென உரையிலும் வேறுபாடுணடு

‡ “முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையு, மெல்லைநீ ஞாலத் திசைவிளங்கத் தொல்லை - யிரவாம லீந்த விறைவர்போ னீயுங் - கரவாம லீகை கடன்” என்பது வெண்பாமாலை, பாடாண்படலம், சா

டுத்த ஆய (கக)— பாம்பு ஈன்றுகொடுத்த ஒளிவிளங்கும் நீலநிறத்தையுடைய உடையினை ஆலின்கீழிருந்த இறைவனுக்கு நெஞ்சுபொருந்திக் கொடுத்தஆய்,

ஈரவந் தாங்கிய சாந்து புலர் திணி தோள் ஆர்வ நன் மொழி ஆயும்—வில்லையெழுதச் சந்தனம் பூசிப்புலரும் திண்ணிய தோளினையும் கேட்டோர்க்கு விருப்பத்தைச் செய்யும் நன்றாகிய சொல்லினையுமுடைய ஆயெனனும் வள்ளலும்,

மால் வரைக் கமழ் பூஞ்சாரல் கவினிய நெல்லி அமிழ்து விளை தீங்கனி * ஔவைக்கு ஈந்தஅதிகன் (க0ௗ)—பெருமையையுடைய மலையிற் கமழும்பூக்களையுடைய பக்கமலையிலேநின்று அழகுபெற்ற கருநெல்லியினது அமிழ்தின்தன்மை தனனிடத்தேயுண்டான இனிய பழத்தைத் தான நுகர்ந்து உடம்புபெறாதே ஔவைக்குக் கொடுத்த அதிகன,

உரவுச் சினம் கனலும் ஒளி திகழ் நெடு வேல அரவக் கடல் தானை அதிகனும்—தன்னிடத்துறையும் கொற்றவையது வலியினையுடைய சினம் நின்றெரியும் ஒளிவிளங்கும் நெடிய வேலினையும் ஆரவாரத்தையுடைய கடல்போலும் படையினையுமுடைய அதிகமானெனனும் வள்ளலும்,

கரவாது நட்டோர் உவப்ப நடைப் பரிகாரம் முட்டாது கொடுத்த நள்ளியும் (கoஎ)— தனமனத்து நிகழ்கின்றனவற்றை மறையாதுகூறி நட்புச்செய்தோர் மனமகிழும்படி அவர்கள் இலலறம் நடத்துதற்கு வேண்டும்பொருள்களை நாடோறும் கொடுத்தநள்ளியும்,

முனை விளங்கு தடக் கைத் துளி மழை பொழியும் வளி துஞ்சு நெடுங் கோட்டு நளி மலைநாடன் நள்ளியும்— பகைப்புலத்தே கொலைத்தொழிலால் விளங்கும்பெருமையையுடைய கையினையுடைய துளியையுடையமழை பருவம்பொய்யாதுபெய்யும் உயர்ச்சியாற் காற்றுத்தங்கும் நெடிய சிகரங்களையுடைய செறிந்த மலைநாட்டையுடையனாகிய நள்ளியென்னும் வள்ளலும்,

நளி சினை நறும் போது கஞலிய நாகு முதிர் நாகத்துக் குறும் பொறை நன்னாடு கோடியர்க்கு ஈந்த ஓரி (கககக)—செறிந்த கொம்புகளிடத்தே நறிய பூக்களெருங்கின இளமையையுடைய முதிர்ந்த சுரபுன்னையையும், குறிய மலைகளையுமுடைய நன்றாகிய நாடுகளைக் கூத்தாடுவோர்க்குக்கொடுத்த ஓரி,

காரிக் குதிரைக் காரியொடு மலைந்த ஓரிக் குதிரை ஓரியும்—காரியென்னும் பெயரையுடைத்தாகிய குதிரையையுடைய காரியென்னும் பெயரையுடையவனுடனே போர்செய்த ஓரியெனனும் பெயரையுடைத்தாகிய குதிரையையுடைய ஓரியென்னும் வள்ளலும,

* ஔவை அதிகமானிடத்து நெல்லிக்கனி பெற்றமையைப் பின்வருஞ் செய்யுளானுமுணர்க: புறநானூறு, கூ0 "வலம்படு வாய்வா ளேந்தி யொன்னார், களம்படக் கடந்த கழறொடித் தடக்கை, யார்கலி நறவி னதியர் கோமான், போரடு திருவிற் பொலந்தார் அஞ்சி, பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி, நீல மணிமிடற் றொருவன் போல, மன்னுக பெரும நீயே தொன்னிலைப், பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட, சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா, தாத னின்னகத் தடக்கிச், சாத னீங்க வெமக்கீத் தனையே"

திணை பாடாண்டிணை துறை வாழ்த்தியல். அதிகமானெடுமானஞ்சியை ஔவையார் நெல்லிப்பழம்பெற்றுப் பாடியது.

காரி கரியகுதிரையென்றும், ஓரி பிடரிமயிரென்றுங் கூறுவாருமுளர்

[எனவாங், கெழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோ, ளெழுவர் பூண்ட வீகைச் செந்நுகம்.] .

என எழுவர் ஆங்குப் பூண்ட ஈகைச் செந்நுகம்— என்றுசொல்லப்பட்ட எழுவரும் அக்காலத்தே மேற்கொண்ட கொடையாகிய செவ்விய பாரத்தை,

எழு சமம் கடந்த எழு உறழ் திணி தோள் எழுவர்—தம்மேலே வருகின்ற போர்களைக்கடந்த கணையத்தோடு மாறுபடுகின்ற திணிந்த தோளினையுடைய எழுவர்,

[விரிகடல் வேலி வியலகம் விளங்க, வொருதான் ருங்கிய வுரனுடை நோன்ரு, ணறுவீ நாகமு மகிலு மாரமுந், துறையாடு மகளிர்க்குத் தோட்புணை யாகிய, பொருபுன றரூஉம் போக்கரு மரபிற், றொன்மா விலங்கைக் கருவொடு பெயரிய, நன்மா விலங்கை மன்ன ருள்ளும், மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வா, ளுறுபுலித் துப்பி னோவியர் பெருமகன், களிற்றுத் தழும்பிருந்த கழறயங்கு திருந்தடிப், பிடிக்கணஞ் சிதறும் பெயன்மழைத் தடக்கைப், பல்லியக் கோடியர் புரவலன் பேரிசை, நல்லியக் கோடனை நயந்த கொள்கையொடு]

விரி கடல் வேலி வியலகம் விளங்க ஒரு தான் தாங்கிய நல்லியக்கோடனை நயந்தனிர்செலின் (உகக)— பரந்த கடலாகிய வேலியையுடைய உலகமெல்லாம் விளங்கும்படி ஒருவனாகியதானே பொறுத்த நல்லியக்கோடனை விரும்பிச் செல்லின்,

மறு இன்றி விளங்கிய உரன் உடை நோன் தாள் வடு இல் வாய் வாள் உறு புலித் துப்பின் ஓவியர் பெருமகன்— குற்றமின்றி விளங்கிய அறிவையுடைத்தாகிய வலியையுடைய முயற்சியினையும் பகைவர்முகத்தினும் மார்பினும் வெட்டின வாய்த்த வாளையும் மிக்க புலிபோலும் வலியினையுமுடைய ஓவியருடைய குடியிலுள்ளோன்,

நறு வீ நாகமும் அகிலும் ஆரமும் துறை ஆடும் மகளிர்க்குத் தோட் புணை ஆகிய பொரு புனல் தரூஉம் இலங்கை— நறிய பூக்களையுடைய சுரபுன்னையையும் அகிலையும் சந்தனத்தையும் குளிக்குந்துறையிலே புனலாடுமகளிருடைய தோள்களுக்குத் தெப்பமாகக் கரையைக்குத்துகின்ற நீர்தருமிலங்கை,

கருவொடு போக்கரு மரபின் இலங்கை— கருப்பத்திற் முகூர்த்தத்தாலே ஒருவராலும் அழித்தற்கரிய முறைமையினையுடைய இலங்கை,

தொன் மா இலங்கைப் பெயரிய நன் மா இலங்கை—பழையதாகிய பெருமையினையுடைய இலங்கையினது பெயரைப்பெற்ற நன்றாகிய பெருமையையுடைய இலங்கை,

மன்னருள்ளும் ஓவியர் பெருமகன்— அவ்விலங்கைக்குரிய அரசர் பலருள்ளும் ஓவியர்குடியிற் பிறந்தோன்,

களிற்றுத் தழும்பு இருந்த கழல் தயங்கு திருந்து அடி— யானையைச்செலுத்துதலாலுளதாகிய தழும்புகிடந்த வீரக்கழல் கிடந்தசையும் பிறக்கிடாத அடியினையும்,

பிடிக் கணம் சிதறும் கை— பிடித்திரளைப் பலர்க்குங் கொடுக்குங்கை,

பெயல் மழைத் தடக்கை—பெய்தற்றொழிலையுடைய மழைபோன்ற பயனையுடைய பெரியகையினையுமுடைய,

பல்லியக் கோடியர் புரவலன்— பல வாச்சியங்களையுடைய கூத்தரைப் புரத்தலை வல்லவன்,

பேர் இசை நல்லியக்கோடனை நயந்த கொள்கையொடு— பெரிய புகழையுடைய நல்லியக்கோடனைக் காண்டற்குவிரும்பிய கோட்பாட்டுடனே,

பெருமகன் புரவலனாகிய நல்லியக்கோடனெனமுடிக்க,

தாங்கரு மரபின் தன்னும்— பிறரால் பொறுத்தற்கரிய குடிப்பிறந்தோர்க்குரிய முறைமைகளையுடைய தன்னையும்,

தந்தை வான் பொரு நெடு வரை வளனும் பாடி— அவன் றந்தையுடைய தேவருலகத்தைத்தீண்டும் நெடிய மலையிற் செல்வத்தையும்பாடி,

முன் நாள் சென்றனமாக—நாலுபத்துநாளைக்குமுன்னே போனேமாக,

இந்நாள்— இற்றைநாள்,

திறவாக் கண்ண சாய் செவிக் குருளை—விழியாத கண்ணையுடையவாகிய வளைந்த செவியினையுடையகுட்டி,

* "நாயே பன்றி புலிமுய னான்கும், மாயுங் காலைக் குருளை யென்ப."

கறவாப் பால் முலை கவர்தல் நோனாது— பிறரால் கறக்கப்படாத பாலினையுடைய முலையையுண்ணுதலைத் தன்பசிமிகுதியால் பொறுத்தலாற்றாது,

புனிற்று நாய் குரைக்கும் புல்லென் அட்டில— ஈன்றணிமையையுடைய நாய் கூப்பிடும் பொலிவழிந்த அடுக்களையில,

காழ் சோர் அட்டில (கஉஉ)— கழிகள் ஆக்கையற்று விழுகின்ற அட்டில்,

முழு சுவர்க் கணச் சிதல் அரித்த அட்டில (கஉஉ) — பழைய சுவரிடத்தெழுந்த திரண்ட கறையான் றின்ற அட்டில,

[பூழி பூத்த புழற்கா ளாம்பி] பூழி புழல் காளாம்பி பூத்த அட்டில—(கஉஉ) நனைந்தபுழுதி உட்பொய்யாகிய காளானைப் பூத்த அட்டில்,

[ஒல்குபசி யுழந்த வொடுங்குநுண் மருங்குல், வளைக்கைக் கிணைமகள்] ஒடுங்கு பசி உழந்த ஒல்கு நுண் மருங்குல் வளைக் கைக் கிணை மகள்— ஒடுங்குதற்குக் காரணமான பசியாலே வருந்திய நுடங்கும் நுண்ணிய இடையினையும் வளையலையணிந்த கையினையுமுடைய கிணைவனுடையமகள்,

வள் உகிர்க் குறைத்த குப்பை வேளை உப்பிலி வெந்ததை— பெரிய உகிரால் கிள்ளின குப்பையினின்ற வேளை உப்பின்றிய அட்டிலிலே (கஉஉ) வெந்தவதனை,

மடவோர் காட்சி நாணிக் கடை அடைத்து இரும் பேர் ஒக்கலொடு ஒருங்கு உடன் மிசையும்— வறுமையுறுதலும் இயல்பெனறறியாது புறங்கூறுவோர் காண்டற்கு நாணித் தலைவாசலையடைத்து மிடியால் கரிய பெரிய சுற்றத்தோடே கூடவிருந்து அடையத்தினனும்,

அழி பசி வருத்தம் வீட— அறிவுமுதலியன அழிதற்குக் காரணமான பசியாலுளதாகிய வருத்தங்கள் விட்டுப் போம்படி,

பொழி கவுள் தறுகண் பூட்கை மணி தயங்கும் மருங்கிற் சிறுகண் யானையொடு பெருந்தேர் எய்தி யாம் அவணின்றும் வருதும்— மதம் வீழ்கின்ற கதுப்பினையும் கடக்க கொல்லுதலாகிய மேற்கோளினையும் மணியசையும் பக்கத்தினையும் சிறியகண்ணையுமுடைய யானையுடனே பெரியதேரையும் பெற்று யாம் அவனிடத்துநின்றும் வாராநின்றேம்,

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், அ.

இது நிகழ்காலத்து வருதல், * "உம்மொடு வருஉங் கடதற" என்புழிக்கூறி னும்

நீயிரும் நயந்து இவண இருந்த இரும் போ ஒக்கல் செம்மல உள்ளமொடு செல்குவிராயின்— நீஙகளும் மூவேந்தாபாறபெறும் பரிசிலவிரும்பி இவ்விடத்திருந்த வறுமையாற கரியவாகிய பெரிய சுறறததினது தலைமையையுடைததாகிய நெஞ்சுடனே அவனிடத்தே போவீராயின்,

[அலைநீர்த தாழை யன்னம் பூபபவுந், தலைநாட் செருநதி தமனிய மருட்டவுங, கடுஞ்சூன முணடகங கதிாமணி கழாஅலவு, நெடுஙகாற புன்னை நித்திலம் வைப்பவுங, கானல வெணமணல கடலுலாய் நிமிர்தர]

கடல உலாய் நிமிர்தர அலைநீாக் கானல் வெணமணல— கடல்பரநது எறறிப பொருதலாலே அலையுநீரையுடைய கரையில வெள்ளிய மணலிடத்துநின்ற,

தாழை அன்னம் பூபபவும்— தாழை அன்னம்போலப் பூககையினுலும்,

தலை நாள் செருந்தி தமனியம் மருட்டவும்— இளவேனிறகாலந தொடஙகுகின்ற நாளிலே செருந்தி தன்னைககண்டாரைப பொனனெனறு மருளபபணணுகையினுலும்,

கடுஞ் சூல் முண்டகம கதிர் மணி கழாஅலவும்— முதறசூலையுடைய கழிமுள்ளி ஒளியையுடைய நீலமணிபோலப் பூககையினுலும்,

கண்ணியாய்நின்று அரும்புதலிற கடுஞ்சூல்

கழாஅல— கழறற,

நெடுங காற புன்னை நித்திலம் வைப்பவும— நெடிய தாளினையுடைய புன்னை நித்திலமபோல அருமபுகையினுலும்,

பாடல் சான்ற நெயதல் நெடுவழிப பட்டினம (கருக)—புகழ்தலமைந்த நெயதனிலததது நெடியவழியிற பட்டினம்,

மணிநீா வைபபுப பட்டினம் (சருக)—நீலமணிபோலும் கழிசூழ்ந்த ஊாகளையுடைய பட்டினம்,

மதிலொடு பெயரிய பட்டினம (கருக)—மதிலோடே பெயா பெறற பட்டினம்,

என்றது எயிற்பட்டின மென்றதாம்

பனி நீாப் படுவிற பட்டினம் படரின்— குளிாசசியையுடைய குளஙகளையுடைத்தாகிய எயிற்பட்டினததே செல்வீராயின்,

படு - மடுவுமாம.

ஓங்கு நிலை ஒட்டகம் துயில மடிந்தன்ன— உயாந்த தனமையையுடைய ஒட்டகம் உறக்கத்தே கிடந்தாலொதத,

வீஙகு திரை கொணாந்த விரை மர விறகின்—மிகுகின்ற திரைகொண்டுவநத மணத்தையுடைய அகிலாகிய விறகாலே,

கரும் புகைச் செந்தீ மாட்டி— கரிய புகையையுடைய சிவந்த நெருபபை யெரித்து,

பெருந் தோள் மதி ஏக்கறூஉம மாசு அறு திரு முகத்து நுதி வேல் நோக்கின் நுளைமகள் அரித்த— பெரிய தோளினையும் மதி இததன்மை பெற்றிலேமேயென்று

* தொல்காபபியம், சொல்லதிகாரம், வினையியல, ருக.

விரும்புதற்கு காரணமான மறுவறுகின்ற அமைதியினையுடைய முகத்தினையும் மூனையினையுடைத்தாகிய வேல்போலும் பார்வையினையுமுடைய நுளைச்சாதியிற்பிறந்த மகள் அரிக்கப்பட்ட,

பழம் படு தேறல் பரதவர் மடுப்ப— பழைதாகிய களிப்புமிகுகின்ற கட்டெளிவைப் பரதவர் எடுத்துவந்து வாயிடத்தே வைக்க,

கிளை மலர்ப் படப்பைக் கிடங்கில் கோமான் தளை அவிழ் தெரியல் தகையோன் பாடி— கொத்திலெழுந்த பூக்களையுடையவாகிய தோட்டங்களையுடைய கிடங்கிலென்னும் ஊர்க்கரசனுகிய அரும்புநெகிழ்ந்த மாலையினையுடைய அழகையுடையோனைப் பாடி,

அறல் குழல்·பாணி தூங்கியவரொடு—தாளவறுதியையுடைய குழலோசையின் தாளத்திற்கொப்ப ஆடின மகளிரோடே,

வறல் குழல் சூட்டின— உலர்தலையுடைய குழனமீனைச் சுட்டதனோடே,

வயின் வயின் பெறுகுவிர்- - மனைதோறும் மனைதோறும் பெறுகுவிர்,

பட்டினம் படரின் (௧௫௩) கிடங்கிற்கோமானுகிய (௧௬0) தகையோனைப்பாடி (௧௬௧) ஆடினமகளிரோடே (௧௬௨) நீங்களும் சூட்டோடே (௧௬௩) தேறலைப் பரதவர்மடுப்ப (௧௫௯) அவற்றை வயின்வயிற் பெறுகுவிரென முடிக்க.

பைங் கொடி அவரை பவழம் கோப்பவும்— பசுத்த அரும்புகளையுடைய அவரை பவழம்போலப் பூக்களை முறையே தொடாநிற்கவும்,

கரு நனைக் காயாக் கணம் மயில் அவிழவும்— கரிய அரும்பினையுடைய காயாக்கள் திரண்ட மயிலின் கழுத்துப்போலப் பூவாநிற்கவும்,

கொழுங் கொடி முசுண்டை கொட்டம்கொள்ளவும்—கொழுவிய கொடியினையுடைய முசுண்டை கொட்டம்போலும் பூவைத் தன்னிடத்தே கொள்ளாநிற்கவும்,

கொட்டை - நூற்கின்ற கொட்டையுமாம்

செழுங் குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்— வளவிய குலையினையுடைய காந்தள் கைவிரல்போலப் பூவாநிற்கவும்,

கொல்லை நெடுவழிக் கோபம் ஊரவும்— கொல்லையிடத்து நெடியவழிகளிலே இந்திரகோபம் ஊராநிற்கவும்,

இச் செயவெனெச்சமெல்லாம் ஈண்டு நிகழ்கால முணர்த்தியே நின்றன; ஞாயிறுபட வந்தானென்றாற்போல

முல்லை சான்ற முல்லையம் புறவின்— இவைகாலமுணர்த்தி இங்ஙனம் நிகழ்த்தாநிற்கவும் கணவன் கூறிய சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ்செய்து ஆற்றியிருந்த தன்மையமைந்த முல்லைக்கொடிபடர்ந்த அழகினையுடைய காட்டிடத்து,

இது, * "மாயோன் மேய" என்னும் சூத்திரத்தானுணர்க.

விடர் கால் அருவி வியன் மலை மூழ்கிச் சுடர் கான்மாறிய செவ்வி நோக்கி— முழைஞ்சுகளிலே குதிக்கும் அருவியினையுடைய பெரிய அத்தகிரியிலே ஞாயிறு மறைந்து அவன்கிரணங்கள்போன அந்திக்காலத்தைப் பார்த்து,

[திறல்வேல் நுதியிற் பூத்த கேணி, விறல்வேல் வென்றி வேலூ ரெய்தின்:] திறல் வேல் நுதியிற் கேணி பூத்த விறல் வேல் வென்றி வேலூர் எய்தின்— முருகன்கை

* தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், ௫

யில் வலியினையுடைத்தாகிய வேலினுக்குப்போலே கேணி பூக்கப்பட்ட வெற்றியையுடைய வேலாலே வெற்றியையுடைய வேலூரைச் சேரின,

என்றது நலலியக்கோடன் றன்பகைமிகுதிக்கஞ்சி முருகனைவழிபட்டவழி அவன் இக்கேணியிற்பூவைக்கொண்டு பகைவரை வெல்லென்று கனவிற்கூறி அதிற் பூவைத் தன்வேலாக நிருமித்தோனாகத்தைக்கூறிற்று இதனானே வேலூரென்று பெயராயிற்று

உறு வெயிற்கு உலைஇய உருப்பு அவிர் குரம்பை— மிகுகின்ற வெயிலுக்கு உள்ளுறைகின்றோர் வருந்தப்பட்ட வெப்பம் விளங்குகின்ற குடிலிலிருக்கின்ற,

எயிற்றியர் அட்ட இன் புளி வெஞ் சோறு— எயினக்குலத்தின் மகளிராலே அடப்பட்ட இனிய புளிங்கறியிடப்பட்ட வெவ்விய சோற்றை,

புளி - தித்திப்புமாம்

தேமா மேனிச் சில்வளை ஆயமொடு— தேமாவின் தளிர்போலும் மேனியையும் சிலவாகிய வளையினையுமுடைய நும்மகளிருடைய திரளுடனே,

ஆமான் சூட்டின்— ஆமானினது சூட்டிறைச்சியை யுடைய,

அமைவரப் பெறுகுவிர்— பசிகெடப் பெறுகுவிர்,

வேலூரெய்தின் (கஎரு) சூட்டினையுடைய (கஎஎ) சோற்றை (கஎ௬) ஆயத்தோடே (கஎசு) அமைவரப் பெறுகுவிரென முடிக்க

முல்லைப்புங் குறிஞ்சியுஞ் சொன்றிருந்தலிற் சேரக்கூறினார், இரண்டுங்கூடியல்லது பாலைத்தன்மை பிறவாமையின்

[நறும்பூங் கோதை தொடுத்த நாட்சினைக், குறுங்கால் காஞ்சிக் கொம்பர் ஏறி]

நாட் கோதை தொடுத்த நறும் பூஞ் சினைக் குறுங் கால் காஞ்சிக் கொம்பர் ஏறி— நாட்காலத்து மாலைகட்டினாற்போல இடையறாமற் றொடுத்த நறிய பூக்களையுடைய சிறிய கொம்புகளையும் குறிய தாளினையுமுடைய காஞ்சிமரத்திற் பெரியகொம்பரிலே யேறி,

நிலை அருங் குட்டம் நோக்கி நெடிது இருந்து— ஒருகாலத்தும் நிலைப்படுதல் அரிதாகிய ஆழத்திற்றிரிகின்ற மீன்களை யெடுக்கும் காலத்தைக்கருதி நெடும்பொழு திருந்து,

புலவுக் கயல் எடுத்த பொன் வாய் மணிச் சிரல் வள் உகிர் கிழித்த வடு ஆழ் பாசடை— புலானாற்றத்தையுடைய கயலை முழுகியெடுத்த பொன்னிறம்போலும் வாயையுடைய நீலமணிபோன்ற சிச்சிலியினது பெரிய உகிர்கிழிந்த வடுவழுந்தின பசிய இலையினையுடைய,

முள் அரைத் தாமரை முகிழ் விரி நாட்போது—முள்ளையுடைத்தாகிய தண்டினையுடைய வெண்டாமரையினது அரும்புவிரிந்த நாட்காலத்திற் பூவை,

கொங்கு கவர் நீலச் செங்கட் சேவல்—தேனை நுகர்கின்ற நீலநிறத்தினையும் சிவந்த கண்ணினையுமுடைய வண்டொழுங்கு,

பூவைத் தேனையென்றது, *“தெள்ளிது” என்றதனானுமுடிக்க

மதி சேர் அரவின் மானத் தோன்றும்—திங்களைச் சேர்கின்ற கரும்பாம்பை யொப்பத் தோன்றும்,

* “முதன்முனைவரிற் கண்ணென் வேற்றுமை, சினைமுன் வருதல் தெள்ளி தென்ப” என்பது தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமைமயங்கியல், ரு

மருதம் சான்ற மருதத் தண் பணை—ஊடியுங்கூடியும் போகநுகரும் தன்மைய மைந்த மருதநிலத்திற் குளிர்ந்த வயலிடத்து,

[அந்தண ரருகா வருங்கடி வியனகர், அந்தண் கிடங்கினவ னாமூ ரெய்தின்]

அம் தண் கிடங்கின் அருங் கடி வியன் நகர் அந்தணர் அருகா அவன் ஆமூர் எய்தின்—அழகினையுடைய குளிர்ந்த கிடங்கினையும் அரிய காவலையும் அகற்சியையுமுடைய அகங்களையுமுடைய அந்தணர் சுருங்காத அவனுடைய ஆமூரைச் சேர்வீராயின்,

[வலம்பட நடக்கும் வலிபுண ரெருத்தி, னுரனுடை நோன்பகட் டுழவர் தங்கை]

வலி புணர் எருத்தின் வலம் பட நடக்கும் நோன் பகட்டு உரன் உடை உழவர் தங்கை—இழுத்தற்குரிய வலிபொருந்தின கழுத்தினாலே வெற்றியுண்டாக நடக்கும் மெய்வலியினையுடைத்தாகிய எருத்தினையுடைய அறிவுபொருந்தின உழவருடைய தங்கையாகிய,

உரன் - அறிவு, *"உரவோ ரெனினு மடவோ ரெனினும்" என்றாற்போல

பிடிக் கை அன்ன பின் வீழ் சிறுபுறத்துத் தொடிக் கை மகடூஉ—பிடியினது கையை யொத்த பின்னின மயிர் வீழ்ந்து கிடக்கின்ற சிறிய முதுகினையும் தொடியணிந்த கையினையுமுடைய மகள்,

மக முறை தடுப்ப—உழவர் தங்கையாகிய (க௯௦) மகடூஉத் (க௯௨) தான் உள்ளேயிருந்து தன்பிள்ளைகளைக்கொள்ளும் நும்மை அடைவே எல்லாரையும் போகாது விலக்குகையினாலே,

இனிப் பிள்ளைகளை உபசரிக்குமாறுபோல உபசரித்து விலக்கவென்றுமாம்.

இருங் காழ் உலக்கை இரும்பு முகம் தேய்த்த அவைப்பு மாண் அரிசி அமலை வெண் சோறு—கரிய வயிரத்தையுடைய உலக்கையினது பூணினையுடைய முகத்தைத் தேயப்பண்ணின குத்துதல் மாட்சிமைப்பட்ட அரிசியாலாக்கின கட்டியாகிய வெள்ளியசோற்றை,

கவைத் தாள் அலவன் கலவையொடு பெறுகுவிர்—கவைத்த காலினையுடைய ஞெண்டும் பீர்க்கங்காயுங் கலந்த கலப்புடனே பெறுகுவிர்,

தண்பணையின் (க௮௫) ஆமூரெய்தின் (க௮௮), உழவர் தங்கையாகிய (க௯௦) மகடூஉத் தடுக்கையினாலே (க௯௨) சோற்றைக் (க௯௪) கலவையொடு பெறுகுவிரென முடிக்க

[எரிமறிந் தன்ன நாவி னிலங்கெயிற்றுக், கருமறிக் காதிற் கவையடிப்பேய்மக, ணிணனுண்டு சிரித்த தோற்றம் போலப், பிணனுகைத்துச் சிவந்த பேருகிர்ப் பணைத்தா, ளண்ணல் யானை யருவிதுக ளவிப்ப, நீரடங்கு தெருவினவன் சாறயர் மூதூர்]

எரி மறிந்து அன்ன நாவின்—மேனோக்கியெரிகின்ற நெருப்புச் சாய்ந்தாலொத்த நாவினையும்,

கரு மறிக் காதின் - வெள்யாட்டுமறிகளை அணிந்த காதினையும்,

† கவை அடிப் பேய் மகள்—கவைத்த அடியினையுமுடைய பேய்மகள்,

நிணன் உண்டு சிரித்த இலங்கு எயிற்றுத் தோற்றம் போல—நிணத்தைத்தின்று சிரித்த விளங்குகின்ற எயிற்றினது தோற்றரவு போல,

---

* பதிற்றுப்பத்து, எட்டாம்பத்து,

† "இருமபே ருவகையி னெழுந்தோர் பேய்மகள், *** கண்டொட் டுண்டு கவையடி பெயர்த்துத், தண்டாக் களிப்பி னாடுங் கூத்துக், கண்டனன்" என்றார் மணிமேகலையிலும், ௬-வது சக்கரவாளக்கோட்டம்புக்ககாதை.

பிணன் உகைத்துச் சிவந்த பேர் உகிர்ப் பணைத்தாள் அண்ணல் யானை அருவி துகள் அவிப்ப நீறு அடங்கு தெருவின் ஊர்—தாங்கொன்ற பிணங்களின்றலைகளைக் காலாலேதள்ளிச் சிவந்த பெரிய உகிரினையும் பெருமையையுடைய கால்களையுமுடைய தலைமையையுடையவாகிய யானைகளின் மதவருவி எழுந்ததுகளை அவிக்கையினாலே புழுதியடங்கின தெருவினையுடைய ஊர்,

அவன் சாறு அயர் மூதூர்—அவனுடைய விழாநடக்கின்ற பழைய ஊர்,

சேயத்தும் அன்று சிறிது நணியதுவே—தூரிய இடத்ததுமன்று; சிறிதாக அண்ணிய இடத்ததே

மூதூர் நணியதென்க.

[பொருநர்க் காயினும் புலவர்க் காயினு, மருமறை நாவி னந்தணர்க் காயினுங், கடவுண் மால்வரை கண்விடுத் தன்ன, வடையா வாயில வனருங்கடை குறுகி.]

பொருநர்க்கு அடையாவாயினும் புலவர்க்கு அடையாவாயினும் அரு மறை நாவின் அந்தணர்க்கு அடையாவாயினும் அருங் கடை வாயில குறுகி—கிணைப்பொருநர்க்கு அடைக்கப்படாவாயினும், அறிவுடையோர்க்கு அடைக்கப்படாவாயினும், அரிய வேதத்தையுடைத்தாகிய நாவினையுடைய அந்தணர்க்கு அடைக்கப்படாவாயினும் ஏனையோர்க்கு உள்ளே சேறற்கரிய தலைவாயிலையணுகி,

அடையாவென்றபன்மை நான்குவாயிலையுங்கருதி

கடவுள் மால் வரை கண் விடுத்தன்ன அவன் வாயில—அதுதான் தெய்வங்களிருக்குமுறை பெருமையையுடைய மேரு ஒருகண்ணை விழித்துப்பார்த்தாலொத்த அவனுடைய கோபுரவாசல்,

அன்றிப் பொருநர்க்காயினும் புலவர்க்காயினும் அருமறைநாவி னந்தணர்க்காயினும் அடையாவாயிலென்றுற பொருளின்மையுணர்க.

செய் நன்றி அறிதலும்—பிறர் தனக்குச்செய்த நன்றியை யறிந்து அவர்க்குத் தானும் நன்மைசெய்தலையும்,

சிற்றினம் இன்மையும்—அறிவும் ஒழுக்கமுமில்லாத மாக்கட்டிரள் தனக்கில்லாமையையும்,

இன் முகம் உடைமையும்—நோக்கினார்க்கு இனியமுகத்தை எக்காலமும் உடையனாதலையும்,

இனியன் ஆதலும்—*முகத்தினினிய நகாஅ அகத்து இன்னாதவனாகாமல் நெஞ்சுமுகத்திற்கேற்ப இனியனாதலையும்,

செறிந்து விளங்கு சிறப்பின் அறிந்தோர் ஏத்த—எக்காலமுந் தன்னுடனே செறிந்து விளங்குகின்ற தலைமையினையுடைய பலகலைகளையுணர்ந்தோர் புகழ,

அஞ்சினர்க்கு அளித்தலும்—தன்வீரத்தைச்கண்டு அஞ்சிவந்து அடிவீழ்ந்தார்க்கு அருள்செய்தலையும்,

வெஞ்சினம் இன்மையும்—கொடிய சினமில்லாமையையும்,

கோபம் நீட்டித்து நிற்கின்றது சினம்.

ஆண் அணி புகுதலும்—வீரரணிநின்ற அணியிலேசென்று அவ்வணியைக் குலைத்தலையும்,

---

* திருக்குறள், கூடாநட்பு, ௪. "முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா, வஞ்சரை யஞ்சப் படும்"

* "ஆணபா லெலலா மாணெனற குரிய" என்றுகூறிப †"பெண்ணு மாணும் பிள்ளேயு மவைவயே" எனறதனுல ஆணெனறது ஆண்பாலேயே யுணாத்துமேனும் அணி புகுதலென்றதனல் ஈணடு வீரரை யுணாததிறறு.

அழி படை தாஙகலும—தனது கெட்ட படையிடததே தான்சென்று பகைவரைப பொறுததலேயும,

வாள மீக கூறறதது வயவா ஏதத—வாளவலியாலே மேலாகிய சொல்லேயுடைய வீரா புகழ,

கருதியது முடிததலும் — தனனெஞ்சுகருதிய புணாசசியைக குறைகிடவாமல முடிககவலல தனமையையும,

நுகர்தற்குரிய மகளிரை நுகாநது பறறுககாற பிறபபறுமையிற கருதியதுமுடிககவேணடு மென்றா.

காமுறப படுதலும—அஙஙனந தானே யினபமுறுதே அமமகளிருந் தம்மாலே மிககவின்பததைபபெறும் தனனே விருமபபபட்டிருததலேயும்,

ஒருவழிப படாமையும—அவாகள அஙஙனம விருமபினாகளெனறு அவாகள் வசததனுகாமையையும்,

ஒடியது உணாதலும்—தான அவாவசததனுகாமையின அவா வருநதியதன்மையையுணர்நது அவரைபபாதுகாததலேயும்,

இனி அவர்கள் நெஞ்சில நிகழநததனேயுணாநது அவா குறைமுடித்தலென்று மாம

அரி ஏா உண கண அரிவையா ஏதத—செவவரிபொருந்தின மையுணகணணி னேயுடைய மகளிாபுகழ,

அறிவு மடம படுதலும் -- தானகூறுகினறவறறையுணரும அறிவிலலாதாாமாட்டுத தான அறியாமைபபட்டிருததலேயும,

அறிவு நன்கு உடைமையும—தன்னேபபோல அறிவுடையாாமாட்டு நன்றாக அறிவுடையனுயிருததலேயும்,

‡ "ஒளியாாமு னொள்ளிய ராதல வெளியாாமுன - வானசுதை வணணங கொளல" எனறாாபிறரும

வரிசை அறிதலும—பரிசிலருடைய தரமறிநது அவாபெறுமுறைமையே கொடுகொடுததல இதறகுங கூடடுக

வரையாது கொடுததலும—அஙஙனம கலவிமிகுதியிலலாத பரிசிலாககுக கொடாதிருத்தலே மேறகொளளாதே அவாகளளவிற்குத தககனவற்றைக கொடுத்தலேயும்,

இனித் தனககென ஒன்றும் வரைநதுவையாமற் கொடுத்தலென்றுமாம்

பரிசில் வாழ்க்கைப் பரிசிலா ஏதத—பிறாகையிலேற்ற பொருளால் இலவாழ்க்கை நடததுதலேயுடைய பாணா கூததா முதலியோா புகழ,

பன்மீன நடுவட் பானமதி போல—பலமீனகளுககு நடுவிருந்த பால்போலும் ஒளியையுடைய கலேநிறைந்த மதிபோல,

இன்னகை ஆயமோடு இருநதோற குறுகி—இயலிசைநாடகத்தாலும், இனிய மொழிகளாலும் இனியமகிழ்ச்சியைச செய்யும் திரளோடே இருந்தவனேயடு

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௩௦

† ,, ,, ,, சுக.

‡ திருக்குறள், அவையறிதல், ௪.

கலைகள் நிறைந்திருந்தமைபற்றித தலைவறகு ஈண்டு மதி உவமையாயிறறு

பைஙகண ஊகம் பாம்பு பிடித்தன்ன அம் கோட்டுச் செறிந்த அவிழ்ந்து வீங்கு திவவின்—பசியகண்களையுடைய கரியகுரஙகு பாம்பின்றலையைப பிடித்தகாலத்து அப்பாம்பு ஒருகாலிறுகவும் ஒருகால் நெகிழவும் அதன்கையைச் சுற்றுமாறுபோன்ற அழகினையுடைய தண்டிடத்தே செறியச் சுற்றின நெகிழவேணடுமிடத்து நெகிழந் தும் இறுகவேண்டுமிடத்து இறுகும் நரம்புதுவகரும் வாரககட்டினையும,

[மணிநிரைத் தன்ன வனப்பின்வா யமைதது ]

மணி நிரைத்து அன்ன வனப்பின்—இரணடுவிளிம்புஞ் சேரததைத்து முடுக் கின ஆணிகளாலே மணியை நிரைததுவைத்தாலொத்த அழகினையும்,

வாயமைத்து—பொருந்தப்பண்ணி,

வயிறு சேர்பு ஒழுகிய வகை அமை அகளத்து—வயிறுசோந்து ஒழுஙகுபட்ட தொழில்வகை யமைந்த பத்தரினையும்,

வயிறு - பத்தரினடுவு தாழிபோலப புடைபட்டிருத்தலின், அகளமென்றூர்

கானக் குமிழின் கனி நிறங் கடுப்பப புகழ வினைப் பொலிந்த பசசையொடு—கா ட்டிடத்துக் குமிழினுடைய பழத்தினது நிறத்தையொபபப புகழப்படுந் துவருட் டின கைத்தொழிலாற் பொலிவுபெறற போாவையோடே,

[தேம்பெய், தமிழதுபொதிந் திலிற்று மடஙகுபுரி நரம்பின்.]

தேம் பெய்து புரி அடஙகு நரமபின்—தேனொழுகுகின்ற தனமையைத தனனி டத்தே பெய்துகொண்டு முறுககடஙகின நரம்பினையுமுடைய,

அமிழது பொதிந்து இலிற்றும் நரம்பு—அமிழ்ததததைத தனனிடத்தே பொதி ந்து துளிககும் நரம்பு,

இஃது ஓசையினிமைக்குக கூறிறறு *"தீநதே - னணிபெற வொழுகி யன்ன வமிழ்துறழ் நரம்பி னல்யாழ்" எனறூா பிறரும்

பாடுதுறை முற்றிய—நீர் பாடுந்துறைகளெலலாம் முடியபபாடுதறகு,

முற்றிய - செய்யியவென்னும வினையெசசம

பயன் தெரி கேள்விக கூடுகொள் இனனியம—தனது பயனவிளஙகுகினற இசைகளைத் தான் கூடுதலகொணட இனியயாழை,

பச்சையோடே (உஉ௬) வாயமைககபபட்டு வனபபினையும (உஉ௫), திவவினை யும் (உஉ௨), அகளத்தினையும் (உஉ௪), நரம்பினையுமுடைய (உஉ௭) இன்னியமெண முடிக்க

[குரலகுர லாக, நூனெறி மரபிற பணணி.] நூல நெறி மரபிற குரல குரலாகப பண்ணி—இசைநூல் கூறுகின்ற முறைமையாலே செம்பாலையாக வாசிதது,

பாடுதுறை முறறுதற்கு இன்னியத்தைக குரல குரலாகப் பணணியெனமுடிகக.

[ஆறுது, முதுவோர்ககு முகிழதத கையினை யெனவும் ] முதுவோாககு ஆறுது

---

* சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், உ௬0: "பணிவரும் பை ம்பொற பத்தா பல்வினைப பவள வாணி, மணிகடை மருபபின் வாளாா மாடக வயிர த்தீந்தே, னணிபெற வொழுகி யன்ன வமிழதுறழ் நரம்பி னல்யாழ, கணிபுகழ் காளை கொண்டு கடலகம் வணகக லுறறூன."

முகிழ்தத கையினை எனவும்—* அரசன் உவாத்தியாயன் தாய தந்தை தமமுன்முத லியோர்க்குப், பலகாலுங குவித்த கைகளையுடையையென்றும்,

இளையோாககு மலாந்த மாாபினை எனவும—வீரரெறிதறகு மனமகிழநது கொடு தத மார்பினையுடையையென்றும்,

† "வணங்குசிலை பொருதநின மணஙகம ழுகல - மகளிாக கல்லது மலைப்பறி யலையே" ‡"மகளிா மலைத்த லல்லது மளளா - மலைததல் போகிய சிலைததா மாாப" §"விருந்தாயினை யெறிநீயென விைாமாாபகங கொடுத்தாற் - கருமபூணற வெறிந்தா ங்கவ னினதூழினி யெனவே" என்றுா பிறரும்.

மகளிருமாம்

ஏரோாககு நிழனற கோலினை எனவும—ஏரினையுடைய குடிமக்களுககு நிழல செயத செஙகோலையுடையையென்றும,

தேரோாககு அழன்ற வேலினை எனவும்—தேரினையுடைய அரசாககு வெம்மை செய்த வேலையுடையை யென்றும்,

நீ சில மொழியா அளவை—நீ சிலபுகழினைக கூறுதறகு முன்னே,

[மாசில, காம்புசொலித தனன வறுவை யுடீஇ] காம்பு சொலிதது அன்ன மாசு இல் அறுவை உடீஇ—மூஙகில ஆடையையுரிததாலொதத மாசில்லாத உடை யினை உடுககபபணணி,

இனி மூங்கின்முளையிற் பட்டையுமாம்.

பாம்பு வெகுணடு அன்ன தேறல நலகி—பாமபேறி மயக்கினாற்போல மயக்கின சட்டெளிவைத தந்து,

[காவெரி யூட்டிய கவாகணைத தூணிப், பூவிரி கச்சைப புகழோன் றன்முன்,

---

* ஆசாரக்கோவை, கஎ—"அரசனு வாததியாயன் றாய்தந்தை தம்மு, னிக ரில குரவ ரிவரிவரைத, தேவரைப போலத தொழுதெழுக வென்பதே, யாவருங நெறி"

† பதிற்றுப்பத்து, ஏழாம்பத்து, ங—"பாாபபாாக கல்லது பணிபறி யலை யே, பணியா வுளளமொ டணிவரக கெழீஇ, நட்டோாக்கல்லது கணணஞ் சலையே, வணங்குசிலை பொருதநின் மணங்கம ழுகல, மகளிர்க்கல்லது மலைப்பறி யலையே, நிலந்திறம் பெயருங் காலை யாயினுங், கிளந்த சொன்னீ பொயப்பறி யலையே"

‡ புறநானூறு, கo—"வழிபடு வோாை வல்லறி தீயே, பிறாபழி கூறுவோா மொழிதே றலையே, நீமெய கணட தீமை காணி, னொபப நாடி யத்தக வொறுத்தி, வந்தடி பொருந்தி முந்தை நிற்பிற, றணடமுந் தணிதிநீ பணடையிற் பெரிதே, யமி ழ்தட் டானாக் கமழகுய் யடிசில, வருநாக்கு வரையா வசையில வாழ்க்கை, மகளிா மலைத்த லல்லது மள்ளா, மலைத்தல போகிய சிலைததா மார்ப, செய்திரங் காவினைச் சேணவிளங குமபுகழ, நெய்தலங் கான னெடியோ, யெயதவந் தனம்யா மேததுகம் பலவே."

திணை - பாடாணடிணை. துறை - இயனமொழி சோழன் நெயதலங் கான லிளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையாா பாடியது.

§ சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகம், கசுசு:—"விருந்தாயினை யெறிநீ யென விைாமார்பகங கொடுததாற், கரும்பூணற வெறிந்தாங்கவ னினதூழினி யென வே, யெரிந்தாரயி லிடைபோழ்ந்தமை யுணராதவ னின்றுன், சொரிந்தார்மல ரமங் கையர் தொழுதாாவிசும படைந்தான்."

பனிவரை மார்பன் பயந்த:] கா எரி ஊட்டிய கணைகவா தூணிப் பூ விரி கச்சைப புக ழோன் தன்முன் பயந்த பனிவரை மார்பன்— காண்டாவனத்தை நெருப்புண்ணும் படி யெய்த கணையை உள்ளடக்கின ஆவநாழிகையினையும் பூத்தொழில் பரந்த கச் சையினையுமுடைய அருச்சுனற்றமையனாகிய வீமசேனன்கண்ட இமவான்போலு மார்பன்,

நுண் பொருட் பனுவலின் வழாஅப பல வேறு அடிசில— கூரியபொருளையு டைய மடைநூனெறியிற் றப்பாத பலவேறுபாட்டையுடைய அடிசிலை,

[வாணிற விசும்பிற் கோணமீன் சூழந்த, விளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற றத்து, விளங்குபொற கலத்தில.] விசும்பில் வாள் நிறக் கோள் மீன் சூழ்ந்த இளங கதிர் ஞாயிறு எள்ளும் தோற்றத்து விளங்கு பொற கலத்தில்—ஆகாயத்தில ஒளியை யுடைத்தாகிய நிறத்தினையுடைய கோளாகிய மீன்கள்சூழ்ந்த இளைய கிரணங்களையு டைய ஞாயிற்றை இகழுந் தோற்றரலையுடைய விளங்குகின்ற பொற்கலத்திடத்தே,

விரும்புவன பேணி— நீவிரும்புவனவற்றை விரும்பி உட்கொண்டு,

ஆனு விருப்பின் தான நின்று ஊட்டி— நும்மிடத்து மிகுகின்ற விருப்பத்தாலே தான் நின்று உண்ணப்பண்ணுவித்து,

ஆனுமரபினென்றும் பாடம்

நீ சிலமொழியாவளவை (உகூ) விரும்புவன பேணி(உசச) உடீஇ (உகூ) நல்கி (உகூள) அடிசிலைக் (உசக) கலத்தேயிட்டுத (உசச) தான்நின்று ஊட்டியென்க

திறல் சால் வென்றியொடு தெவ்வுப புலம் அகற்றி— வலியமைந்த வெற்றியோ டே பகையத தத்தநிலத்தைக் கைவிட்டுப் போகப்பண்ணி,

விறல் வேல மன்னா மன் எயில முருக்கி — வெற்றியையுடைத்தாகிய வேலி னையுடைய முடிவேந்தர்மனனும அரணகளை யழித்து,

நயவர் பாணர் புன்கண தீர்த்தபின்—அவ்விடஙகளிற்பெற்ற பொருளாலே விரு ம்பிவந்தவர் புன்கணமையையும், பாணா புனகணமையையும் போக்கினபின்பு,

வயவர் தந்த வான் கேழ நிதியமொடு— தன்படைத்தலைவர் மிக்கனவாயக் கொணடுவந்துதந்த நன்றாகிய நிறத்தினையுடைய பொருட்டிரளுடனே,

தன்படைத்தலைவர் குறுநிலமன்னரையும, அரசரையுமழித்து, நயவாக்கும பாண ர்க்குங்கொடுத்து, மிக்குககொணடுவந்த நிதியமென்க

[பருவ வானத்துப் பாற்கதிர் பரப்பி, யுருவ வான்மதி யூர்கொண டாஙகு.] பருவ வானத்து உருவ வான் மதி பால கதிர பரப்பி ஊர் கொண்டாஙகு— கூதிர்க்கால த்தையுடைய வானிடத்தே வடிவுநிறைதலையுடைய வெள்ளிய மதி பாலபோலுங கிரணங்களைப் பரப்பிப பரத்தலைக கொண்டாற்போல,

கூர் உளி பொருத வடு ஆழ் நோன குறட்டு ஆரம் சூழ்ந்த அயிலவாய் நேமி யொடு — கூரிய சிற்றுளிகள் சென்று செதுக்கின உருக்களழுந்தின வலியினையுடைய குறட்டிடத்திற்றைத்த ஆர்களைச்சூழ்ந்த சூட்டினையுடைய உருளையோடே,

குறடு - அச்சுக்கோக்குமிடம். அயில்வாய - கூரியவாய்; என்றது சூட்டிறகு ஆகுபெயா.

[சிதாநனை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத், ததாபிணி யவிழந்த தோற்றம் போல:] முருக்கின் சேண் ஓங்கு நெடுஞ்சினைத ததர் நனை சிதர் பிணி அவிழ்ந்த தோற றம் போல—முருக்கினுடைய விசும்பிலே செல்லவளர்ந்த நெடிய கொம்பிற்செறிந்த அரும்புகள் வண்டிற்குப் பிணியவிழ்ந்த தோற்றரவுபோல,

ததர் - கொத்துமாம் சிதா - சிந்துதலுமாம், சிச்சிலியுமாம்.

[உள்ளரக் கெறிந்த வுருக்குறு போரவைக், கருந்தொழில வினைஞா கைவினை முற்றி, யூர்ந்துபெயர் பெற்ற வெழினடைப பாகரொடு.]

கருந்தொழில் வினைஞா கை வினை முறறி உருககுறு அரககு உள் எறிந்த போரவைப் பாகா— வலிய தொழிலைசசெயயுந் தசசருடைய கையாறசெயயும் உருக்களெல்லாம முற்றுபபெற்று உருககபபடுஞ் சாதிலிஙகம உள்ளேஎறிரமபவழிதத பலகையையுடைய பாகா,

தேர்த்தட்டுவெளி மறையப பாவின பலகையைப போரவையெனறா. அதன மேலே சுற்றுசசுவராகப பலகையாறசெய்த சுவரைப் பாகரென்றா பாகரையுடைய தேரைப்பாகரென்றா, ஆகுபெயரால

ஊர்ந்து பெயா பெறற எழில் நடைப பாகரொடு— ஏறிபபாாதது உணமையாக ஓட்டமுணடென்று பெயாபெறற அழகினையுடைத்தாகிய நடையினையுடைய தேரோடே,

நேமியோடே (உ௫௩) போரவையையுடைய (உ௫௬) பாகரெனமுடிகக

மா செலவு ஒழிககும் மதன் உடை நோன் தாள் வாள் முகப் பாணடில— தன் கடுமையாற குதிரையின்செலவைப பின்னேநிறுததும் வனபபுடைததாகிய வலியினையுடைய தாளினையும, ஒளியினையுடைததாகிய முகததினையுமுடைய நாரையெருததையும்,

வலவனொடு— அதனைச செலுததும் பாகனோடு,

[தரீஇ, யனறே விடுககுமவன் பரிசில ] பரிசில தரீஇ அவன அனறே விடுககும —யானை குதிரை அணிகலமுதலியபரிசிலகளையுந்தநது அவன் அன்றேவிடுக்கும்

நிதியத்தோடே (உ௪௩) பாகரோடே (உ௫அ) வலவனோடே பாண்டிலையும்(உ௬௦) பரிசிலையுந் (உ௬௧) தரீஇ (உ௬௦) அவன் அன்றேவிடுக்குமெனா முடிகக

மென் தோள் துகில அணி அல்குல துளங்கு இயல் மகளிர் அகில் உண விரீதத அம் மென் கூந்தலின் —மெலலிய தோளினையும், துகில்சூழ்ந்த அலகுலினையும், அசைந்த இயலபினையுமுடைய மகளிர் அகிற்புகையை உணணுமபடியாக விரித்த அழகையுடைய மெல்லிய கூந்தலபோலே,

[மணிமயிற் கலாப மஞ்சிடைப பரபபித, துணிமழை தவழுந துயல்கழை நெடுங கோட்டு:]

துணி மழை மணி மயில கலாபம் இடை மஞ்சு பரபபித தவழும் கோடு—தெளிந்தமேகம நீலமணிபோலும் மயிலினுடைய விரிந்த தோகைககு நடுவே தனது மஞ்சைபபரபபித தவழுமலை,

சிறிதுநீா உட்கொணடு பககம வெளளியமாசாயிருததலின, மேகம மஞ்சைபபரப்பியென்றா

இனி 'மணிமயில கலாபம' என்று பாடமாயின, மயில் தனகலாபததை மஞ்சிடையிலே பரப்புதலைச்செயது துயல்கோடெனக. துயலல் - ஆடுதல்

துயல் கழை நெடுங கோடடு— அசைகின்ற மூஙகிலையுடைய நெடிய மலையிடத்தையுடைய குறிஞ்சி (உ௬எ)

[எறிந்துரு மிறந்த வேற்றருஞ் சென்னி·] ஏறறரும் உரும் எறிந்து இறந்த சென்னிக் கோடு (உ௬௫)—ஏறுதறகுாிய அரிதாகிய உருமேறு தான்ஏறுதற்காக இடித்து வழியாக்கிப்போன சிகரத்தையுடையமலை

இக்குதிரையேற்றரிதென்ப.

குறிஞ்சிக கோமான்— குறிஞ்சியாகிய ஒழுக்கத்தையுடைய நிலத்திற்கரசன்,

*கொய் தளிர்க் கண்ணிச் செல் இசை நிலைஇய பண்பின் நல்லியக்கோடனை*— கொய்யப்பட்ட தளிர்விரவின மாலையினையும், பிறரிடத்து நில்லாமற் போகின்றபுகழ் தன்னிடத்தே நிற்றறகுக காரணமான குணத்தினையுமுடைய நல்லியககோடனை

*நயந்தனிர் செலின்*— விரும்பிச்செல்லின்,

முதுவாயிரவல (௪0) பெருமகன் (கஉஉ) புரவலனாகிய (கஉரு) நல்லியக்கோடனை நயந்தகொளகையோடே (கஉசு) முன்னாட்சென்றனமாக, இந்நாள் (கஉகூ), அழி பசிவருததமவீட (க௪0) யானையோடே தெரெய்தி (க௪உ) யாம் அவணின்றும்வருகின்றேம்; இனி நீயிரும் (க௪௩) மூவேந்தரிடத்துச செல்குவிராயின் (க௪ரு), வஞ்சியும வறிது, அதுவன்றி (ரு0) மதுரையும்வறிது, அதுவன்றி (சுஎ) உறந்தையும் வறிது; அதுவன்றி (அ௩) எழுவர்பூணட ஈகைசசெந்நுகம (கக௩) ஒருதான்றாங்கிய (ககரு) குறிஞ்சிக் கோமானாகிய (உசுஎ) நல்லியக்கோடனை நயந்தனிாசெலின் (உசுகூ), வழியிற் பெறுமவறறை யாங்கூறக்கேணமின், பட்டினம்படரின் (கரு௩), வயின் வயிற பெறுகுவிா (கசு௩); அதன்பின்னா வேலூரெய்தின் (கஎ௩) அமைவரப் பெறுகுவிர் (கஎஎ); அதன்பினனா அவன ஆமூரெய்திற்(கஅஅ)கலவையொடுபெறுகுவிர் (ககூரு), அவற்றைப்பெற்றபின், அவன் மூதூா (உ0க) சேய்ததுமனறு; சிறிது நணியதுவேயாயிருக்கும் (உ0உ), ஆண்டுசசென்று முன்னா அவன கடைவாயிலைககுறுகிப (உ0சு) பின் அறிந்தோரேத்த (உ0கூ) வயவரேதத (உகஉ) அரிவையரேததப் (உகரு) பரிசிலரேதத (உகஅ) இருநதோளையணுகிப (உஉ0) பாடுதுறைமுறறுதற்கு (உஉஅ) இன்னியத்தைப (உஉகூ) பணணிக (உ௩0) கையினையென்றும் (உ௩க), மார்பினையென்றும் (உ௩உ), கோலினையெனறும (உ௩௩), வேலினையென்றும் (உ௩௪) நீசிலமொழியா அளவை (உ௩ரு) அவன் நீவிருமபுவனபேணி (உ௪௪) உடீஇ (உ௩சு) நல்கி (உ௩எ) அடிசிலைக்(உ௪க) கலததேயிட்டுத (உ௪௪) தான்நின்று ஊட்டி (உ௪ரு) நிதியத்தோடே (உ௪கூ) பாகரோடே (உருஅ) வலவனோடே பாணடிலையும் (உசு0) பரிசிலையும் (உசுக) தரீஇ (உசு0) அவன் அன்றேவிடுகெகும (உசுக) என வினைமுடிவுசெய்க.

**ஏறுமாநாட்டு நல்லியக்கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்பாடிய சிறுபாணாற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று**

வெணபா

க அணியிழையாரக காரணங காகிமற றந்நோய
தணிமருநதுந தாமேயா மென்ப—மணிமிடைபூ
ணிமமென முழவி னெயிற்பட டினநாடன்
செமமல சிலைபொருந தோள்.

உ நெடுவரைச சந்தன நெஞசங குளிர்பபப
படுமெமும் பாம்போ மருங்கு—விடுகொடி
யோடிய மாரப னுயாநல் லியககோடன்
சூடிய கண்ணி சுடும.

## நான்காவது

# பெரும்பாணாற்றுப்படை.

அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி
காய்சினந் திருகிய கடுந்திறல் வேனிற்
பாசிலை யொழித்த பராரைப் பாதிரி
௫ வள்ளிதழ் மாமலர் வயிற்றிடை * வகுத்தத்
னுள்ளகம் புரையு மூட்டுறு பச்சைப்
பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூக்
கருவிருந் தன்ன கண்கூடு செறிதுளை
யுருக்கி யன்ன பொருத்துறு போர்வைச்
௧௦ சுனைவறந் தன்ன விருடூங்கு வறுவாய்ப்
பிறைபிறந் தன்ன பின்னேந்து கவைக்கடை
நெடும்பணைத் திரடோண் மடந்தை முன்கைக்
குறுந்தொடி யேய்க்கு மெலிந்துவீங்கு திவவின்
மணிவார்ந் தன்ன மாயிரு மருப்பிற்
௧௫ பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
றொடையமை கேள்வி யிடவயிற் றழீஇ
வெந்தெறற் கனலியொடு மதிவலந் திரிதருந்
தண்கடல் வரைப்பிற் றாங்குநர்ப் பெறாது
பொழிமழை துறந்த புகைவேய் குன்றத்துப்
௨௦ பழுமரந் தேருமப் பறவை போலக்
கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்
புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண
பெருவறங் கூர்ந்த கானங் கல்லெனக்
கருவி வானந் துளிசொரிந் தாங்குப்
௨௫ பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கலொடு
வழங்கத் தவாஅப் பெருவள னெய்தி
வாலுளைப் புரவியொடு வயக்களிறு முகந்துகொண்
டியாமவ ணின்றும் வருது நீயிரு
மிருநிலங் கடந்த திருமறு மார்பின்
௩௦ முந்நீர் வண்ணன் புறங்கடை யந்நீத்

* வகிர்ந்தகனென்றும் பாடம்

திரைதரு மரபி னுரவோ னும்பல்
மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கு
முரசுமுழங்கு தானை மூவ ருள்ளு
மிலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
௩௫ வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பி
னல்லது கடிந்த வறம்புரி செங்கோற்
பல்வேற் றிரையற் படர்குவி ராயிற்
கேளவ ணிலையே கெடுகநின் னவலம்
மத்தஞ் செல்வோ ரலறத் தாக்கிக்
௪0 கைப்பொருள் வெளவுங் களவே ராழ்க்கைக்
கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புல
முருமு முரறா தரவுந் தப்பா
காட்டுமாவு முறுகண் செய்யா வேட்டாங்
கசைவுழி யசைஇ நசைவுழித் தங்கிச்
௪௫ சென்மோ விரவல சிறக்கநின் னுள்ளங்
கொழுஞ்சூ டருந்திய திருந்துநிலை யாரத்து
முழவி னன்ன முழுமர வுருளி
யெழூஉப்புணர்ந் தன்ன பரூஉக்கை நோன்பார்
மாரிக் குன்ற மழைசுமந் தன்ன
௫0 வாரை வேய்ந்த வறைவாய்ச் சகட
மேழ்ங் காவலர் குரம்பை யெய்ப்பக்
கோழி சேக்குங் கூட்டுடைப் புதவின்
முளையெயிற் றிரும்பிடி முழந்தா ளேய்க்குந்
துளையமை சீறுர றாங்கத் தூக்கி
௫௫ நாடக மகளி ராடுகளத் தெடுத்த
விசிவீங் கின்னியங் கடுப்பக் கயிறுபிணித்துக்
காடி வைத்த கலனுடை மூக்கின்
மகவுடை மகடூஉப் பகடுபுறந் துரப்பக்
கோட்டிணர் வேம்பி னேட்டிலை மிடைந்த
௬0 படலைக் கண்ணிப் பரேரெறுழ்த் திணிதோண்
முடலை யாக்கை முழுவலி மாக்கள்
சிறுதுளைக் கொடுநுகந் தெறிபட நிரைத்த
பெருங்கயிற் றொழுகை மருங்கிற் காப்பச்
சிலம்பி னுணவின் கொள்ளை சாற்றிப்
௬௫ பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி
யெல்லிடைக் கழியுநர்க் கேம மாக
மலையவுங் கடலவு மாண்பயந் தரூஉம்

மரும்பொரு ளருத்துந் திருந்துதொடை நோன்ஞா
ணடிபுதை யரண மெய்திப் படம்புக்குப்
ஏ0 பொருகணை தொலைச்சிய புண்டேர் மார்பின்
விரவுவரிக் கச்சின் வெண்கை யொள்வாள்
வலையூர் பாம்பிற் பூண்டுபுடை தூங்கச்
சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடைக்
கருவி லோச்சிய கண்ணக னெறுழ்த்தோட்
ஏரு கடம்பமர் நெடுவே ளன்ன மீளி
யுடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்
தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட
சிறுசுளைப் பெரும்பழங் கடுப்ப மிரியற்
புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்
அ0 தணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கு
முல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்
வில்லுடை வைப்பின் வியன்காட் டியவி
னீளரை யிலவத் தலங்குசினை பயந்த
பூளையம் பசுங்காய் புடைவிரிந் தன்ன
அரு வரிப்புற வணிலொடு கருப்பை யாடா
தியாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்
வேற்றலை யன்ன வைந்நுதி *நெடுந்தக
ரீத்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை
மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி
கூ0 மீன்பிணை யொழியப் போகி நோன்கா
ழிரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோ
லுளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி
யிருநிலக் கரம்பைப் படுநீ றாடி
நுண்புல னடக்கிய வெண்ப லெயிற்றியர்
கூரு பார்வை யாத்த பறைத்தாள் விளவி
னீழன் முன்றி னில்லுரற் பெய்து
குறுங்கா ழுலக்கை யோச்சி நெடுங்கிணற்று
வல்லூற் றுவரித் தோண்டித் தொல்லை
முரவுவாய்க் குழிசி முரியடுப் பேற்றி
க00 வாரா தட்ட வாடூன் புழுக்கல்
வாடாத் தும்பை வயவர் பெருமக
னோடாத் தானை யொண்டொழிற் கழற்காற்
செவ்வரை நாடன் சென்னிய மெனினே

* நெடுந்திட ரென்றும் பாடம்.

தெய்வ மடையிற் றேக்கிலைக் குவைஇநும்
கoரு பைதீர் கடும்பொடு பதமிகப் பெறுகுவிர்
மானடி பொறித்த மயங்கதர் மருங்கின்
வானமடி பொழுதி னீர்நசைஇக் குழித்த
வகழ்சூழ் பயம்பி னகத்தொளித் தொடுங்கிப
புகழா வாகைப் பூவி னன்ன
கக0 வளைமருப் பேனம் வரவுபார்த் திருக்கு
மனைநாள் வேட்ட மழுங்கிற பகனாட்
பகுவாய் ஞமலியொடு பைம்புத லெருக்கித
தொகுவாய வேலித் தொடர்வலை மாட்டி
முள்ளரைத் தாமரைப் புல்லிதழ் புரையு
ககரு நெடுஞ்செவிக் குறுமுயல் போக்கற வளைஇக்
கடுங்கட் கானவர் கடறுகூட் டுண்ணு
மருஞ்சுர மிறந்த வம்பர்ப் பருந்துபட
வொன்னாத் தெவ்வ ரடுங்க வோச்சி
வைந்நுதி மழுங்கிய புலவுவா யெஃகம
க௨0 வடிமணிப் பலகையொடு நிரைஇ முடிநாட்
சாபஞ் சாத்திய கணைதுஞ்சு வியனக
ரூகம் வேய்ந்த வுயர்நிலை வரைப்பின்
வரைத்தேன் புரையுங் கவைக்கடைப் புதையொடு
கடுந்துடி தூங்குங் கணைக்காற் பந்தர்த
க௨ரு தொடர்நா யாத்த துன்னருங் கடிநகர்
வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பைக
கொடுநுகந் தழீஇய புதவிற் செந்நிலை
நெடுநுதி வயக்கழு நிரைதத வாயிற்
கொடுவி லெயினர் குறும்பிற் சேப்பிற
கஙo களர்வள ரீந்தின் காழ்கண் டன்ன
சுவல்விளை நெல்லின் செவ்வவிழ்ச் சொன்றி
ஞமலி தந்த மனவுச்சூ லுடும்பின்
வறைகால் யாத்தது வயின்றொறும பெறுகுவிர்
யானை தாக்கினு மரவுமேற் செலினு
கஙரு நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினுஞ்
சூன்மகண் மாறா மறம்பூண் வாழ்க்கை
வலிக்கூட் டுணவின் வாட்குடிப் பிறந்த
புலிப்போத் தன்ன * புல்லணற் காளைச்
சென்னா யன்ன கருவிற் சுற்றமொடு

* புல்லணர்க் காளையென்றும் பாடம்

௧௪௦ கேளா மன்னர் கடிபுலம் புக்கு
நாளா தந்து நறவுநொடை தொலைச்சி
யில்லடு கள்ளின் றோப்பி பருகி
மல்லன் மன்றத்து * மதவிடை கெண்டி
மடிவாய்த் தண்ணுமை நடுவட் சிலைப்பச்
௧௪௫ சிலைநவி லெறுழ்த்தோ ளோச்சி வலன்வளையூஉப்
பகன்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை
†முரண்டலை கழிந்த பின்றை மறிய
குளகுமறை யாத்த குறுங்காற் குரம்பைச்
செற்றை வாயிற் செறிகழிக் கதவிற்
௧௫௦ கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பி
னதளோன் றுஞ்சுங் காப்பி னுதள
நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றிற்
கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கு
மிடுமுள் வேலி யெருப்படு வரைப்பி
௧௫௫ னள்ளிருள் விடியற் புள்ளெழப் போகிப்
புலிக்குரன் மத்த மொலிப்ப வாங்கி
யாம்பி வான்முகி ழன்ன கூம்புமுகைப்
புறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து
புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ
௧௬௦ நாண்மோர் மாறு நன்மா மேனிச்
சிறுகுழை துயல்வருங் காதிற் பணைத்தோட்
குறுநெறிக் கொண்ட கூந்த லாய்மக
ளளைவிலை யுணவிற் கிளையுட னருத்தி
நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளா
௧௬௫ ளெருமை நல்லான் கருநாகு பெறூஉ
மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பி
னிருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப் பன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்
தொடுதோன் மரீஇய வடுவாழ் நோனடி
௧௭௦ விழுத்தண் டூன்றிய மழுத்தின் வன்கை
யுறிக்கா வூர்ந்த மறுப்படு மயிர்ச்சுவன்
மேம்பா லுரைத்த வோரி யோங்குமிசைக்
கோட்டவுங் கொடியவும் விரைஇக் காட்

---

* மதவிடைதெண்டியென்றும் பாடம்

† முனைதலையிருக்கையென்றும் பாடம்.

*பல்பூ மிடைந்த படலைக் கண்ணி
௧௭௫ யொன்றம ருடுக்கைக் கூழா ரிடையன்
கன்றமர் நிரையொடு கானத் தல்கி
யந்நு ணவிர்புகை † கமழக் கைமுயன்று
ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழிச்
செந்தீத் தொட்ட கருந்துளைக் குழலி
௧௮0 னின்றீம் பாலை முனையிற் குமிழின்
புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
வில்யா ழிசைக்கும் விரலெறி குறிஞ்சிப்
பல்காற் பறவை கிளைசெத் தோர்க்கும்
புல்லார் வியன்புலம் போகி முள்ளுடுத்
௧௮௫ தெழுகா டோங்கிய தொழுவுடை வரைப்பிற்
பிடிக்கணத் தன்ன குதிருடை முன்றிற்
களிற்றுத்தாள் புரையுந் திரிமரப் பந்தர்க்
குறுஞ்சாட் டுருளையொடு கலப்பை சார்த்தி
நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டிற்
௧௯0 பருவ வானத்துப் ‡ பாமழை கடுப்பக்
கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்
நெடுங்குரற் பூளைப் பூவி னன்ன
குறுந்தாள் வரகின் குறளவிழ்ச் சொன்றி
புகரிணர் வேங்கை வீகண் டன்ன
௧௯௫ வவரை வான்புழுக் கட்டிப் பயில்வுற
றின்சுவை மூரற் பெறுகுவிர் ஞாங்கர்க்
குடிநிறை வல்சிச் செஞ்சா லுழவர்
நடைநவில் பெரும்பகடு புதவிற் பூட்டிப்
பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சி
௨00 லுடுப்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றித்
தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை
யரிபுகு பொழுதி னிரியல் போகி
வண்ணக் கடம்பி னறுமல ரன்ன
வளரிளம் பிள்ளை தழீஇக் குறுங்காற்
௨0௫ கறையணற் குறும்பூழ்க் கட்சி சேக்கும்
வன்புல மிறந்த பின்றை மென்றோன்
மிதியுலைக் கொல்லன் முறிகொடிற் றன்ன

* பன்மல ரடுக்கிய வென்றும், பன்மலர் மிடைந்த வென்றும் பாடம்.
† பிறப்பகைக் கைமுயன்றென்றும் பாடம்.
‡ பாய்மழையென்றும் பாடம்.

கவைத்தா ளலவ னளற்றளை சிதையப்
பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பிற்
௨௧0 காரேறு பொருத கண்ணகன் செறுவி
னுழாஅ நுண்டொளி நிரவிய வினைஞர்
முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறுவிற்
களைஞர் தந்த கணைக்கா னெய்தற்
கட்கமழ் புதுப்பூ முனையின முட்சினை
௨௧௫ முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக்
கொடுங்கான் மாமலர் கொய்து கொண்டவண்
பஞ்சாய்க் கோரை பல்லிற் சவட்டிப்
புணர்நார்ப் பெய்த புனைவினைக் கண்ணி
யீருடை யிருந்தலை யாரச் சூடிப்
௨௨0 பொன்காண் கட்டளை கடுப்பச் சண்பின்
புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பி
னிரும்புவடித் தன்ன மடியா மென்றோட்
கருங்கை வினைஞர் காதலஞ் சிறாஅர்
பழஞ்சோற் றமலை முனைஇ வரம்பிற்
௨௨௫ புதுவை வேய்ந்த கவிகுடின் முன்றி
லவலெறி யுலக்கைப் பாடுவிறந் தயல
கொடுவாய்க் கிள்ளை படுபகை வெரூஉ
நெடுங்கா லாணர் வாங்குகதிர்க் கழனிக்
கடுப்புடைப் பறவைச் சாதி யன்ன
௨௩0 பைதற விளைந்த பெருஞ்செந் நெல்லின்
றூம்புடைத் திரடாட் டுமித்த வினைஞர்
பாம்புறை மருதி னோங்குசினை நீழற்
பலிபெறு வியன்களம் மலிய வேற்றிக்
கணங்கொள் சுற்றமொடு கைபுனைந் தாடுந்
௨௩௫ துணங்கையம் பூதந் துகிலுடுத் தவைபோற்
சிலம்பி வானூல் வலந்த மருங்கிற்
குழுமுநிலைப் போரின் முழுமுதற் றொலைச்சிப்
பகடூர் பிழிந்த பின்றைத் துகடப
வையுந் துரும்பு நீக்கிப் பைதறக்
௨௪0 குடகாற் றெறிந்த குப்பை வடபாற்
செம்பொன் மலையிற் சிறப்பத் தோன்றுந்
தண்பணை தழீஇய தளரா விருக்கைப்
பகட்டா வீன்ற கொடுநடைக் குழவிக்
கவைத்தாம்பு தொடுத்த காழூன் றல்கு

௨௪௫ லேணி யெய்தா நீணெடு மார்பின்
முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்
குமரி மூத்த கூடோங்கு நல்லிற்
றச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
வூரா நற்றே ருருட்டிய புதல்வர்
௨௫௦ தளர்நடை வருத்தம் வீட வலர்முலைச்
செவிலியம் பெண்டிர்த் தழீஇப் பாலார்ந்
தமளித் துஞ்சு மழகுடை நல்லிற்
றொல்பசி யறியாத் துளங்கா விருக்கை
மல்லற் பேரூர் மடியின் மடியா
௨௫௫ வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி
மனைவா ழளகின் வாட்டொடும் பெறுகுவிர்
மழைவிளை யாடுங் கழைவள ரடுக்கத்
தணங்குடை யாளி தாக்கலிற் பலவுடன்
கணஞ்சால் வேழங் கதழ்வுற் றாஅங்
௨௬௦ கெந்திரஞ் சிலைக்குந் துஞ்சாக் கம்பலை
விசய மடூஉம் புகைசூ ழாலைதொறுங்
கரும்பின் றீஞ்சாறு விரும்பினிர் மிசைமின்
வேழ நிரைத்து வெண்கோடு விரைஇத்
தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த
௬௫ குறியிறைக் குரம்பைப் பறியுடை முன்றிற்
கொடுங்காற் புன்னைக் கோடுதுமித் தியற்றிய
பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்த
ரிளையரு முதியருங் கிளையுடன் றுவன்றிப்
புலவுநுனைப் பகழியுஞ் சிலையு மானச்
௨௭௦ செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழு
மையிருங் குட்டத்து மகவொடு வழங்கிக்
கோடை நீடினுங் குறைபட லறியாத்
தோடாழ் குளத்த கோடுகாத் திருக்குங்
கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பி
௨௭௫ னவையா வரிசி யங்களித் துழவை
மலர்வாய்ப் பிழாவிற் புலர வாற்றிப்
பாம்புறை புற்றிற் குரும்பி யேய்க்கும்
பூம்புற நல்லடை யளைஇத் தேம்பட
வெல்லையு மிரவு மிருமுறை கழிப்பி
௨௮௦ வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த
வெந்நீ ரரியல் விரலலை நறும்பிழி

தண்மீன் சூட்டொடு தளாதலும் பெறுகுவிர்
பச்சூன் பெய்த சுவல்பிணி பைந்தோற
கோள்வல பாண்மகன் றலைவலித் தியாதத
௨௮௫ நெடுங்கழைத் தூண்டி னடுங்க நாண்கொளீஇக
கொடுவா யிரும்பின் மடிதலை புலம்பப
பொதியிரை கதுவிய போழ்வாய வாளை
நீர்நணிப பிரம்பி னடுங்குநிழல வெரூஉ
நீததுடை நெடுங்கயந தீப்பட மலாநத
௨௯0 கடவு ளொண்பூ வடைத லோமபி
யுறைகான் மாறிய வோங்குயர் நனந்தலை
யகலிரு வானததுக குறைவி லேயபப
வரககிதழ்க குவளையொடு நீல நீடி
முரட்பூ மலிநத முதுநீரப பொயகைக
௨௯௫ குறுந ரிட்ட கூமபுவிடு பன்மலா
பெருநா ளமயததுப பிணையினிா கழிமின
செழுங்கன் றியாதத சிறுதாட் பநதாப
பைஞசேறு மெழுகிய படிவ நன்னகா
மனையுறை கோழியொடு ஞமலிதுன் ஞது
௩00 வளைவாயக் கிளளை மறைவிளி பயிற்று
மறைகாப பாள ருறைபதிச சேபபின
பெருநல வானதது வடவயின் விளங்குஞ
சிறுமீன புரையுங கறபி னறுநுதல
வளைககை மகடூஉ வயினறிந தட்ட
௩0௫ சுடர்க்கடைப பறவைப பெயாபபடு வததஞ
சேதா நறுமோா வெண்ணெயின மாதுளத
துருப்புறு பசுங்காயப போழொடு கறிகலநது
கஞ்சக நறுமுறி யளைஇப பைநதுணா
நெடுமரக் கொக்கி னறுவடி விதிர்தத
௩௧0 தகைமாண் காடியின் வகைபடப பெறுகுவிா
வண்ட லாயமொ டுண்டுறைத தலைஇப
புனலாடு மகளி ரிட்ட பொலங்குழை
யிரைதேர் மணிசசிர விரைசெத தெறிந்தெனப
புள்ளார் பெண்ணைப புலம்புமடற செலலாது
௩௧௫ கேள்வி யந்தண ரருங்கட னிறுதத
வேள்வித தூணத் தசைஇ யவன
ரோதிம விளக்கி னுயர்மிசைக் கொண்ட
வைகுறு மீனிற் பையத தோன்று

*நீர்ப்பெயற் றெல்லைப் போகிப் பாற்கேழ்
௩௨0 வாலுளைப் புரவியொடு வடவளந் தரூஉ
நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை
மாட மோங்கிய மணன்மலி மறுகிற்
பரதர் மலிந்த பல்வேறு தெருவிற்
சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பி
௩௨௫ னெல்லுழு பகட்டொடு கறவை துன்னு
மேழகத் தகரோ டெகினங் கொட்குங்
கூழுடை நலவிற் கொடும்பூண் மகளிர்
கொன்றை மென்சினைப் பனிதவழ் பவைபோற்
பைங்கா ழல்கு னுண்டுகி லுடங்க
௩௩0 மால்வரைச் சிலம்பின் மகிழ்சிறந் தாலும
பீலி மஞ்ஞையி னியலிக் கால
தமனியப் பொற்சிலம் பொலிப்ப வுயர்நிலை
வான்றோய் மாடத்து வரிப்பந் தசைஇக்
கைபுனை குறுந்தொடி தத்தப் பைப்பய
௩௩௫ முத்த வார்மணற் பொற்கழங் காடும்
பட்டின மருங்கி னசையின் முட்டில
பைங்கொடி நுடங்கும் பலர்புகு வாயிற்
செம்பூத் தூய செதுக்குடை முன்றிற்
கள்ளடு மகளிர் வள்ளம் நுடக்கிய
௩௪0 வார்ந்துகு சின்னீர் வழிந்த குழம்பி
னீருஞ்சே றாடிய விரும்பல் குட்டிப்
பன்மயிர்ப் பிணவொடு பாயம் போகாது
நென்மா வல்சி தீற்றிப் பன்னாட்
குழிநிறுத் தோம்பிய குறுந்தா ளேற்றைக்
௩௪௫ கொழுநிணத் தடியொடு கூர்நறாப் பெறுகுவிர்
வான மூன்றிய மதலை போல
வேணி சாத்திய வேற்றருஞ் சென்னி
விண்பொர நிவந்த வேயா மாடத்
திரவின் மாட்டிய விலங்குசுடர் ஞெகிழி
௩௫0 யுரவுநீ ரழுவத் தோடுகலங் கரையுந்
துறைபிறக் கொழியப் போகிக் கறையடிக்
குன்றுறழ் யானை மருங்கு லேய்க்கும்
வண்டோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த

* நீர்ப்பெயர்த்தென்றும் பாடம்.

மஞசண முனறின மணநா றுபடபபைத
௱ருரு தண்டலை யுழவா தனிமனைச சேபபிற
தாழ்கோட் பலவின் சூழ்சுளைப பெருமபழம
வீழி தாழைக் குழவித தீநீர
கவைமுலை யிருமபிடிக கவுணமருப பேயக்குங
குலைமுதிர வாழைக கூனி வெணபழந
௱சூ0 திரளரைப பெண்ணை நுஙகொடு பிறவுந
தீமபல தார முனையிற சேமபின
முளைபபுற முதிாகிழங காாகுவிர பகறபெயன
மழைவீழ்ந தன்ன மாததாட கமுகின
புடைசூழ் தெஙகின முபபுடைத திரளகாய
௱சூரு யாறுசெல வமபலா காயபசி தீரச
சோறடு குழிசி யிளக விழூஉம
வீயா யாணா வளஙகெழு பாக்கததுப
பனமர நீளிடைப போகி நனனகா
விணடோய மாடதது விளஙகுசுவ ருடுதத
௱எ0 வாடா வளளியின வளமபல தரூஉ
நாடுபல கழிநத பினறை நீடுகுலைக
காநதளஞ சிலமபிற களிறுபடிந தாஙகுப
பாமபணைப பளளி யமாநதோ ஞஙகண
வெயினுழை பறியாக குயினுழை பொதுமபாக்
௱எரு குறுஙகாற காஞசி சுறறிய நெடுஙகொடிப
பாசிலைக குருகின புனபுற வரிபபூக
காாகற கூவியன பாகொடு பிடிதத
விழைசூழ வடடம பாலகலந தவைபோ
னிழறூழ வாரமண னீாமுகதது துறைபபப
௱அ0 புனலகால கழீஇய பொழிறொறுந திரளகாற
சோலைக கமுகின சூலவயிற றனன
நீலப பைஙகுடந தொலைசசி நாளும
பெருமகி ழிருக்கை மரீஇச சிறுகோடடுக
குழவித திஙகட கோணோந தாஙகுச
௱அரு சுறவுவா யமைதத சுருமபுசூழ் சுடாநுதல
நறவுபெயாத தமைதத நலலெழின மழைக்கண
மடவரன மகளிரொடு பகலவிளை யாடிப
பெறறகருந தொலசீாத துறகக மேயக்கும
பொயயா மரபிற பூமலி பெருநதுறைச
௱கூ0 செவ்விகொள பவரோ டசைஇ யவவயி

னருந்திறற் கடவுள் வாழ்த்தச் சிறிதுநுங்
கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்
காழோ ரிகழ்பத நோக்கிக் கீழ
நெடுங்கை யானை நெய்ம்மிதி கவளங
௩௯௫ கடுஞ்சூன் மந்தி கவருங் காவிற்
களிறுகத னடக்கிய வெளிறில கந்திற
றிண்டேர் குழித்த குண்டுநெடுந் தெருவிற
படைதொலை பறியா மைந்துமலி பெரும்புகழ்க்
கடைகால் யாத்த பலகுடி கெழீஇக
௪௦௦ கொடையுங் கோளும வழங்குநர்த் தடுத்த
வடையா வாயின் மிளைசூழ் படப்பை
நீணிற வுருவி னெடியோன் கொப்பூழ்
நான்முக வொருவற் பயந்த பல்விதழ்த்
தாமரைப பொகுட்டிற் காண்வரத் தோன்றிச
௪௦௫ சுடும ணோங்கிய * நெடுநகர் வரைப்பி
னிழுமென் புள்ளி னீண்டுகிளைத் தொழுதிக
கொழுமென் சினைஇய கோளி யுள்ளும
பழமீக் கூறும பலாஅப போலப
புலவுக் கடலுடுத்த வானஞ் சூடிய
௪௧௦ மலர்தலை யுலகத் துள்ளும பலர்தொழ
விழவுமேம பட்ட பழவிறன மூதூ
ரவ்வாய் வளர்பிறை சூடிச செவ்வா
யந்தி வானத் தாடுமழை கடுப்ப
வெண்கோட் டிரும்பிணங் குருதி யீர்ப்ப
௪௧௫ வீரைம் பதின்மரும பொருதுகளத் தவியப்
பேரமர்க் கடந்த கொடுஞ்சி நெடுந்தே
ராராச் செருவி னைவர் போல
வடங்காத் தானையோ டுடன்றுமேல் வந்த
வொன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்துக
௪௨௦ கச்சி யோனே கைவண் டோன்ற
னச்சிச சென்றோர்க † கேம மாகிய
வளியுந் தெறலு மெளிய வாகலின
மலைந்தோர் தேஎ மன்றம பாழ்பட
நயந்தோர் தேஎ நன்பொன் பூப்ப
௪௨௫ நட்புக்கொளல் வேண்டி நயந்திசி னோருந்

* நெடுமதில் வரைப்பென்றும் பாடம்.

† ஏமமாக வென்றும் பாடம.

துப்புக்கொளல் வேண்டிய துணையி லோருங்
கலவீ ழருவி கடற்படர்ந் தாங்குப்
பல்வேறு வகையிற் பணிந்த மன்ன
ரிமையோ ருறையுஞ் சிமையச் செவ்வரை
௪௩0 வெண்டிரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப்
பொன்கொழித் திழிதரும் போக்கருங் கங்கைப்
பெருநீர்ப் போகு மிரியன் மாக்க
ளொருமரப் பாணியிற் றூங்கி யாங்குத்
தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇச்
௪௩௫ செவ்வி பார்க்குஞ் செழுநகர் முற்றத்துப்
பெருங்கை யானைக் கொடுந்தொடி படுக்குங்
கருங்கைக் கொல்ல னிரும்புவிசைத் தெறிந்த
கூடத் திண்ணிசை வெரீஇ மாடத்
திறையுறை புறவின் செங்காற் சேவ
௪௪0 லின்றுயி லிரியும் பொன்றுஞ்சு வியனகர்க்
குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பட்
பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு
முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி
௪௪௫ யிடைதெரிந் துணரு மிருடீர் காட்சிக்
கொடைக்கட னிறுத்த கூம்பா வுள்ளத்
துரும்பில் சுற்றமோ டிருந்தோற் குறுகிப்
பொறிவரிப் புகர்முகந் தாக்கிய வயமான்
கொடுவரிக் குருளை கொளவேட் டாங்குப்
௪௫0 புலவர் பூண்கட னாற்றிப் பகைவர்
கடிமதி லெறிந்து குடுமி கொள்ளு
வென்றி யல்லது வினையுடம் படினு
மொன்றல் செல்லா வுரவுவாட் டடக்கைக்
கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக
௪௫௫ மள்ளர் மள்ள மறவர் மறவ
செல்வர் செல்வ செருமேம் படுந
வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற
பைம்பூட் சேஎய் பயந்தமா மோட்டுத்
துணங்கையஞ் செல்விக் கணங்குநொடித் தாங்குத்
௪௬0 தண்டா வீகைநின் பெரும்பெய ரேத்தி
வந்தேன் பெரும வாழிய நெடிதென
விடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பிக்

கடனறி மரபிற் கைதொழூஉப் பழிச்சி
நின்னிலை தெரியா வளவை யந்நிலை
௭௬௫ நாவலந் தண்பொழில் வீவின்று விளங்க
நில்லா வுலகத்து நிலைமை தூக்கி
யந்நிலை யணுகல் வேண்டி நின்னரைப்
பாசி யன்ன சிதாவை நீக்கி
யாவி யன்ன வவிர்நூற் கலிங்க
௭௭௦ மிரும்பே ரொக்கலொ டொருங்குட னுடீஇக்
கொடுவாள் கதுவிய வடுவாழ் நோன்கை
வல்லோ னட்ட பல்லூன் கொழுங்குறை
யரிசெத் துணங்கிய பெருஞ்செந் நெல்லின்
றெரிகொ ளரிசித் திரணெடும் புழுக்க
௭௭௫ லருங்கடித் தீஞ்சுவை * யமுதொடு பிறவும்
விருப்புடை மரபிற் கரப்புடை யடிசின்
மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி
மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்
தானா விருப்பிற் றானின் றூட்டி
௭௮௦ மங்குல் வானத்துத் திங்க ளேய்க்கு
மாடுவண் டிமிரா வழலவிர் தாமரை
நீடிரும் பித்தை பொலியச் சூட்டி
†யுரவுக்கடன் முகந்த பருவ வானத்துப்
பகற்பெய லுளியின் மினனுநிமிர்ந் தாங்குப்
௭௮௫ புனையிருங் கதுப்பகம் பொலியப் பொன்னின்
றுனையமை மாலை விறலியர் மலைய
நூலோர் புகழ்ந்த மாட்சிய மால்கடல்
வளைகண் டன்ன வாலுளைப் புரவி
துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி
௭௯௦ யரித்தேர் நல்கியு மமையான் செருத்தொலைத்
தொன்னார் தெவ்வர் தலைவிடத் தொழித்த
விசும்புசெ லிவுளியொடு பசும்படை தரீஇ
யன்றே விடுக்குமவன் பரிசின் மென்சீர்க்
கின்னா முழவு மணங்கடைச் சாரன்
௭௯௫ மஞ்ஞை யாலு மரம்பயி லிறும்பிற்
கலைபாய்ந் துதிர்த்த மலரவிழ் புறவின்
மந்தி சீக்கு மாதுஞ்சு முன்றிற்

---

* அயிரொடு பிறவுமென்றும் பாடம்.
+ பலவுக்கடன்முகந்த வென்றும்பாடம்.

செந்தீப் பேணிய முனிவர்வெண் கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கு
௫00 மொளிறிலங் கருவிய மலைகிழ வோனே

## இதன்பொருள்.

அகல் இரு விசும்பிற பாய் இருள பருகி—தன்னையொழிந்த நான்குபூதமுந தன்னிடத்தே அகன்று விரிதறகுக காரணமாகிய பெரிய ஆகாயத்திடத்தே தோனறிப பரந்த இருளை விழுஙகாநின்று,

அகலிருவிசும்பென்பது, *"நோயதீருமருநது" போனின்றது பருகியெனனுஞ் செய்தெனெசசம் நிகழ்காலம் உணாததிநின்றது

பகல் காான்று எழுதரு பல் கதிாப பரிதி—மறைந்த பகற்பொழுதை உலகததே தோற்றுவித்து எழுதலைசசெயயும் பலகிரணஙகளையுடைய கனலி,

காய் சினந் திருகிய கடுந திறல் வேனில—கோபிககின்ற சினமுறுகிய கடிய வலியையுடைய முதுவேனிறகாலத்தே,

பாசிலை யொழித்த பராரைப் பாதிரி—பின்பனிககாலததே பசிய இலைகளையுதிர்தத பரிய தாளினையுடைய பாதிரியினது,

வள் இதழ மா மலர் வயிறறிடை வகுததஅன் உள்ளகம புரையும ஊட்டுறு பச்சை—பெருமையையுடைய இதழையுடைததாகிய வணடையுடைய பூவினுடைய வயிற்றிடத்தைப்பிளநத † புலாலினுடைய உள்ளிடததையொககும் நிறமூட்டுதலுற்ற தோல்,

பரியரைக கமுகின் பாளை அம் பசும் பூக் கரு இருநதன்ன கண கூடு செறிதுளை—பரிய தாளினையுடைய கமுகினது [illegible] பூவினையுடைய பசியபூ விரியாமற கருவாயிருநதாலொத்த இரண்டுகணணும் கூடின செறிநத துளை,

உருககி அனன பொருநதுபு போர்வை—உருகி [illegible] வார்த்தாற்போன்ற தோல்களின் வேறுபாடுதெரியாமல இசைததலுறும போர்வையினையும்,

பச்சைப்போர்வை, பொருநதுபோர்வை, துளையினையுடையபோர்வை.

சுனை வறந்தனன இருள் தூங்கு வறுவாய—சுனை வறநது உள்ளிருணடாலொத்த இருள்செறிநத உண்ணுககினையில்லாத வாயினையும,

பிறை பிறந்தன்ன பின் ஏந்து கவைக கடை—முததறபிறை பிறந்து ஏநதியிருந்தாறபோன்ற பின்பு ஏந்தியிருககின்ற கவைததலையுடைய கடையினையும்,

நெடும் பணைத திரள் தோள் மடநதை முன் கைக் குறுந் தொடி ஏய்க்கும் மெலிந்து வீங்கு திவவின்—நெடிய மூஙகிலையொதத திரணட தோளினையுடைய மகளுடைய முன்கையிற குறிய தொடியையொக்கும் நெகிழவேணடியவழிநெகிழ்ந்து இறுகவேண்டியவழியிறுகும் வாரககட்டினையும,

மணி வாார்ந்தன்ன மா இரு மருப்பின்—நீலமணி ஒழுகினாலொத்த கருமைநிறத்தையுடைய பெரிய தணடினையுமுடைய,

---

* கலித்தொகை, இரண்டாவதுகுறிஞ்சிக்கலி, உ௪. "அலாமுலை யாயிழை நல்லாய் கதுமெனப், பேரம ருண்கணென் றோழி யுறீஇய, வாரஞ ரெவ்வ முயிர்வாங்கு, மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீஇ"

† பூவினுடையவென்றும்பிரதிபேதமுண்டு.

பொன் வார்ந்து அன்ன புரி அடங்கு நரம்பின் தொடை அமை கேள்வி—பொன் கம்பியாய் ஒழுகினுலொத்த முறுக்கடங்கின நரம்பின்கட்டமைந்த யாழை,

கேள்வி - ஆகுபெயர்

போர்வையினையும் (௯), வாயினையும் (௧0), கடையினையும் (௧௧), இவ்வினையும் (௧௩), மருப்பினையுமுடைய யாழையெனமுடிக்க.

இடவயின் தழீஇ—இடத்தோட்பக்கத்தே அணைத்து,

வெந் தெறற் கனலியொடு மதி வலம் திரிதரும்—வெய்ய தெறுதற்றொழிலையுடைய ஞாயிற்றோடே திங்களும் மேருவை வலமாகத் திரிதலைச்செய்யும்,

தண் கடல் வரைப்பில் தாங்குநாப் பெருது—குளிர்ந்த கடல்சூழ்ந்த உலகில் நின்னைப் புரப்பாரைப் பெருமல்,

பொழி மழை துறந்த புகை வேய் குன்றதது—பெய்கின்ற மழைதுறத்தலால் நிலத்தின்கணணெழுந்த ஆவிசூழ்ந்த மலையிடத்தே,

பழு மரம் தேரும் பறவை போல— பழுத்த மரத்தைத் தேடித்திரியும் பறவைகளைப்போல,

கல்லென் சுற்றமொடு கால கிளாந்து திரிதரும— பசிமிகுதியால் அழுகின்ற சுற்றத்தாருடனே ஓரிடத்திராமற் பயனின்றி ஓடித் திரிதலைச்செய்யும,

புல்லென் யாககைப் புலவு வாய்ப் பாண— பொலிவழிந்த வடிவினையும் கற்ற கல்வியை வெறுத்துக்கூறுகின்ற வாயினையுமுடைய பாண,

"சில்செவித் தாகிய கேள்வி நொந்து" என்றூபிறரும். புலால்நாறுகின்றவாயுமாம்.

கேள்வியைத்தழீஇத (௧௩) தாங்குநர்பெருது (௧௮) குன்றத்தே (௧௬) கடுந்திறல் வேனிற்காலத்தே (௫) பறவைபோலத் (௨0) திரிதரும் பாணவெனமுடிக்க

பெரு வறம் கூர்ந்த கானம கல்லெனக கருவி வானந துளி சொரிந்தாங்கு—பெரிய *வற்கடமிக்க காடு உழவுத்தொழில் முதலியவற்றால் ஆரவாரமிகும்படி தொகுதியையுடைய மேகம துளியைச் சொரிந்தாற்போல,

பழம் பசி கூர்ந்த எம் இரும் பேர் ஒக்கலொடு வழங்கத் தவாஅப் பெரு வளன் எய்தி— தொன்றுதொட்ட பசிமிக்க எம்முடைய கரிய பெரிய சுற்றத்தோடே யாங்கள் பிறர்க்குககொடுக்கவும் மாளாத பெரிய செல்வத்தைப்பெறறு,

வால் உளைப் புரவியொடு வயக களிறு முகந்துகொணடு யாம் அவணின்றும் வருதும்— வெள்ளிய தலையாட்டத்தையுடைய குதிரையோடே வலியினையுடைய யானைகளையும வாரிக்கொண்டு யாம் அவனூரினின்றும் வாராநின்றேம்,

நீயிரும்— நீங்களும,

[இருநிலங் கடநத திருமறு மாாபின், முந்நீா வண்ணன புறங்கடை யந்நீாத், திரைதரு மரபி னுரவோ னும்பல், மலர்தலை யுலகதது மன்னுயிர் காக்கு, முரசு முழங்குதானை மூவ ருள்ளு, மிலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும், வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பி, னல்லது கடிநத வறமபுரி செஙகோற், பல்வேற் றிரையற படர்குவி ராயின் ]

மலர் தலை உலகதது மன உயிா காககும் முரசு முழங்கு தானை மூவருள்

* வறட்காலம் ககவென்றும பிரதிபேதமுண்டு

ளும்—அகன்ற இடத்தையுடைய உலகத்தில் நிலைபெற்ற உயிர்களைப்புரக்கும் முரசுமு ழங்குகின்ற நாற்படையினையுமுடைய சேரசோழபாண்டியரென்னுமூவரிலும்,

இலங்கு நீர்ப் பரப்பின் வளை மீக்கூறும் வலம்புரி அன்ன வசை நீங்கு சிறப்பின் — விளங்குகின்ற நீரையுடைய கடலிடத்துப்பிறந்த சங்கில் மேலாக உலகங்கூறும் வலம்புரிச்சங்கையொத்த குற்றநீங்குந் தலைமையினையும்,

அல்லது கடிந்த அறம் புரி செங்கோல—மறத்தைப்போக்கின அறத்தைவிரும் பின செங்கோலினையுமுடைய,

இரு நிலம் கடந்த திரு மறு மார்பின் முந்நீர் வண்ணன் புறங்கடை உரவோன் உம்பல்— பெரிய நிலத்தையளந்த திருவாகிய மறுவையணிந்த மார்பினையுடைய கடல்போலுநிறத்தையுடையவன் பின்னிடத்தேதோன்றிய சோழன்குடியிற்பிறந்தோன்,

மூவருள்ளுஞ் சிறப்பினையுஞ் செங்கோலினையுமுடைய உரவோனென்க.

திருமால்குடியிற்றோன்றிய உரவோன.

அந்நீர்த் திரை தரும் மரபின பல வேல் திரையன்— அக்கடலின திரைகொ ண்டுவந்து ஏறவிட்டமரபாற் பலவேற்படையினையுடைய திரையனென்னும் பெய ரையுடையவன்,

என்றதனால், நாகபட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால நாகலோகத்தே சென்று நாககன்னியைப்புணர்ந்தகாலத்து அவள் யான்பெற்றபுதல்வனை என்செய் வேனென்றபொழுது, தொண்டையை அடையாளமாகக்கட்டிக் கடலிலேவிட அவ ன்வந்து கரையேறின் அவற்கு யான் அரசவுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடு ப்பலென்று அவன்கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிட்ட திரைதருதலின், திரையனென்று பெயர்பெற்றகதை கூறினார்

திரையற் படர்குவிராயின் நின உள்ளஞ் சிறக்க— திரையனை நினைப்பீரா யின் அவனைநினைத்தலின், நின் நெஞ்சு சிறப்புக்களைப்பெறுக,

சிறக்கநின்னுள்ள (சுஎ) மெனமேலவருவதனை இதனோடுங்கூட்டுக.

[கேளவ னிலையே கெடுகநின னவலம]

நின் அவலம் கெடுக— நினது மிடி கெடுவதாக,

அவன் நிலை கேள்—அங்ஙனம அவனை நினைத்துபோகின்றநீ அவன்றன்மையைக் கேட்பாயாக;

[அத்தஞ் செலவோ ரலறத் தாக்கிக், கைப்பொருள் வெளவுங் களவோ வாழ்க கைக், கொடியோ ரின்றவன கடியுடை வியன்புலம்] அவன் கடி உடை வியன் புலம் அத்தஞ் செலவோர்அலறத் தாக்கிக் கைப்பொருள் வெளவும் களவு ஏர் வாழ்க்கைக் கொடியோர் இன்று— அவனுடைய காவலையுடைத்தாகிய அகலத்தையுடையநிலம், வழிபோவாரைக் கூப்பிடும்படி வெட்டி அவர்கள் கையிலுள்ள பொருள்களைக் கைக் கொள்ளும் களவே உழவுபோலும் இல்வாழ்க்கைப்பொருளாகவுடைய கொடுமை யையுடையோரில்லை,

உருமும் உரறாது அரவுந் தப்பா காட்டு மாவும் உறுகண் செய்யா— உருமே றும் இடியாது; பாம்புகளுங் கொல்லுதலைச்செய்யா, காட்டிடத்துப் புலிமுதலியன வும் வருத்தஞ்செய்யா; ஆகலின்,

[வேட்டாங், கசைவழி யசைஇ நசைவழித் தங்கிச், சென்மோ:]

ஆங்கு அசைவுழி அசைஇ — அக்காட்டின்கண் இளைத்தவிடத்தே இளைப்பாறி,

நசைவுழி வேட்டுத் தங்கிச் சென்மோ — எங்களிடத்தே நீ தங்கிப்போக வேண்டுமென்று நச்சினவிடத்தே நீயும் அதற்கு விரும்பித் தங்கிச் செல்வாயாக.

இரவல — இரத்தற்றொழிலை வல்லோய்,

[சிறக்கநின் னுள்ளம், கொழுஞ்சூட் டருந்திய திருந்துநிலை யாரத்து, முழவி னன்ன முழுமர வுருளி]

முழவின் அன்ன முழுமரம் திருந்து நிலை ஆரத்துக் கொழுஞ் சூட்டு அருந்திய உருளி — மத்தளத்தையொத்த குறட்டிடத்தே தைத்த சிக்கென்ற தன்மையையுடைய ஆரிடத்தே நன்றாகிய வளைந்த மரஞ் சூழ்ந்து கிடக்கப்பட்ட உருளையையும்,

அச்சுக்கோக்கின்ற இடமுமாம் அக்குறட்டிலே தைத்துக்கிடக்கின்றது ஆரம். சூட்டு - விளிம்பிலே வைத்த வளைந்தமரம்.

எழூஉப் புணர்ந்தன்ன பரூஉக் கை நோன் பார் — கணையமரம் இரண்டு சேர்ந்தாலொத்த பருத்த கைகளையுடைய வலிய பாரையுமுடைய,

அச்சுமரத்தின்மேலே நெடியவாய் இரண்டுபக்கத்தும் நெடுகக்கிடக்கின்ற பருமரங்களைப் பரூஉக்கையென்றார். அம்மரங்களிரண்டினையும் நெருங்கத் துளைத்துக் குறுக்கே ஏணிபோலக் கோத்தனைப் பாரென்றார்.

[மாரிக் குன்ற மழைசுமந் தன்ன, ஆரை வேய்ந்த வறைவாய்ச் சகடம்]

குன்றம் மாரி மழை சுமந்தன்ன ஆரை வேய்ந்த அறை வாய்ச் சகடம் — மலை மாரிக்காலத்து மேகத்தைச் சுமந்தாற்போன்ற தோற்றத்துளிப்பாயாலே வேய்ந்த ஒலிக்கின்ற வாயையுடைய சகடம்,

ஆர்வை வேய்ந்த வென்றுபாடமாயின், நிறைந்த வரகுவைக்கோலாலே வேய்ந்தவென்க.

அந்த இரண்டுமரத்திலுங் கால்களை நட்டுக் குடிலாகக்கட்டி மேலே வசம்புமுதலியனவற்றாற் கயிற்றாலேகோத்த பாயை வேய்தலைக்கூறினார்.

உருளையையும், பாரையுமுடைய சகடமென்க.

வேழம் காவலர் குரம்பை எய்ப்பக் கோழி சேக்கும் கூடு உடைப் புதவின் — யானையைப் புனத்திற்றின்றுமறக் காக்கின்ற தொழிலையுடையார் இதணமேலே கட்டின குடிலையொப்பச் சிறுகக்கட்டின கோழிகிடக்குங் கூட்டையுடைத்தாகிய குடிலின் வாசலிலே,

முன்னை எயிற்று இரும் பிடி முழந்தாள் ஏய்க்குந் துளை அரைச் சிறால் தூங்கத் தூங்கி — மூக்கின்முனைப் பாலுக் கொம்பினையுடைய கரிய பிடியினது முழந்தாளையொக்குந் துளையைத் தன்னிடத்தேயுடைய சிறிய உரலை அசையும்படி தூக்கி,

கோத்துநாற்றுதற்குத் துளையிடுதலின், துளையரைச் சிறாலென்றார்.

நாடகம் மகளிர் ஆடு களத்து எடுத்த விசி வீங்கு இன்னியம் கடுப்ப — நாடகமாமகளிர் ஆடுங்களத்தே கொண்டுவந்த வாராற்பிணித்தலிறுகின இனிய முழவையொப்ப,

கயிறு பிணித்துக் காடி வைத்த கலம் உடை மூக்கின் — தகராதபடி கயிற்றாலே வரிந்து காடிவைத்த மிடாவையுடைய அப்பாரிற்றலையிலே,

புளியங்காய் நெல்லிக்காய்முதலியன ஊறவிட்டு வைத்ததனைக் காடியென்றார். இனிக் காடி நெய்யென்பாருமுளர்.

இனிப் பாரிற் கழுத்தானவிடத்தேவைத்த மிடாவென்றுமாம்.

மக உடை மகடூஉப் பகடு புறந் துரப்ப—குழவியைக கைககொண்ட மகளிரு பூண்ட எருத்தை முதுகிலேயடிப்ப,

சகடத்து (௫0) புதவின் (௫உ) மூக்கினகண்ணே (௫எ) வேயபூிலைமிடைந்த (௫௧) மகடூஉ இருந்து துரப்பவெனமுடிக்க

கோட்டு இணா வேம்பின் ஏட்டிலை மிடைநத மகடூஉ (௫அ) — கொம்பிடத்தே பூஙகொததையுடைய வேம்பினுடைய மென்மையையுடைய இலையைப் பிள்ளைக்குக் காவலாககொண்டிருககின்ற மகடூஉ,

படலைக் கணணி—தழைவிரவின மாலையையும்,

பரோ எறுழ்த் திணி தோள்—பரிய அழகினையும் வலியினையுமுடைய இறுகின தோளினையும,

முடலை யாககை—முறுககுணட உடம்பினையும,

முழு வலி மாக்கள்—நிரம்பிய மெய்வலியினையுமுடையோர,

[சிறுதுளைக் கொடுநுக நெறிபட நிரைதத, பெருங்கயிற ொழுகை] சிறு துளைக கொடுநுகம் பெருங கயிறு நெறிபட நிரைதத ஒழுகை— சிறிய துளையினையுடைய கொடிய நுகததினகணணே பெரியகயிறறாலே எருதுகளை ஒருவழிப்பட நிரைத்துக் கட்டின சகடவொழுஙகினை,

துளைகளிற செருகினகழிகள கழுததசையப பட்டுநிற்றலின, கொடுநுகமென றார ஒருசகடததிற பலபூட்டுதல கூறினார.

மருஙகிற காபப— எருதுகள்திருகாமல அசசுமுறியாமற பககததே காத்துசசெல்ல,

சில பத உணவின— இடபபடும பொருள்களுககுச சிறியவாக இடப்படுமுண வினது,

என்றது உபபை பதம் - பககுவம

கொளளை சாறறி— விலைசொலலி,

பல எருதது உமணர பதி போகு நெடு நெறி— இளைததாற பூட்டுதற்குப பல வெருததையுமடிததுககொண்டுபோம் உப்புவாணிகர ஊர்கள்தோறும் செல்லும் நெடிய வழியினையும,

பதிபோலப போகுமெனறுமாம.

மகடூஉததுரபப மாககளகாபபச சாறறிபபோம நெடுநெறியையுமெனக

எல இடைக கழியுநாககு ஏமமாக—பகறபொழுதுபோவார்க்கு இளைப்புத்தீர,

[மலையவுங கடலவு மாணபயன் றரூஉ, மருமபொருளருததுந் திருந்துதொடை நோன்றா, ளடிபுதை யரண மெய்திப படமபுககுப், பொருகணை தொலைச்சிய புணர்ர் மார்பின், விரவுவரிக கசசின வெண்கை யொள்வாள், வரையூர் பாம்பிற் பூண்டுபுடை தூஙகச, சுரிகை நுழைந்த சுற்றுவீஙகு செறிவுடைக, கருவி லோச்சிய கணணக னெறுழ்த்தோட், கடமபமர் நெடுவே ளன்ன மீளி, யுடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்.]

மலையவும கடலவும் மாண பயன தரூஉம் அரும பொருள அருததும் ஓடா வம்பலர்—மலையிலுள்ளனவும் கடலிலுள்ளனவுமாகிய மாட்சிமையையுடைய பயனைக்

கொடுக்கும் பெறுதற்கரிய பொருள்களை உலகத்தோரெல்லாரையும் நுகரப்பண்ணும் பிறக்கிடாத புதியோர்,

என்றது - மாணிக்கமும், முத்தும், சந்தனமுமுதலியன கொண்டுபோய் விற்றுத் திரிவாரைக்கூறிற்று.

பொரு கணை தொலைச்சிய புண் தீர் மார்பின்—பொருகின்ற அம்புகள் தசையை ப்போக்கின புண்கள் தீர்ந்த மார்பினையும்,

சுரிகை நுழைந்த சுற்று வீங்கு செறிவுடை—பத்திரம் செருகப்பட்ட கட்டுதலுறும் சேலையினையும்,

கரு வில் திருந்து தொடை ஓச்சிய கண் அகன் எறுழ்த் தோள—கொடியவில்லைத் தப்பாததொடையிலே நிரம்பவாங்கின இடமகன்ற வலியினையுடைத்தாகிய தோளினையுமுடைய,

கடம்பு அமர் நெடு வேள் அன்ன வம்பலர்— கடம்பிடத்தேயிருந்த நெடிய முருகனையொத்த வம்பலர்,

மீளி உடம்பிடித் தடக் கை ஓடா வம்பலர்— கூற்றுவனையொத்த வேலைப் பெருமையையுடைய கையிலேயுடைய பிறக்கிடாதவம்பலர்,

மார்பினையும், உடையினையும், தோளினையுமுடைய வம்பலர்

வரை ஊர் பாம்பின் வெண் கை ஒள் வாள் விரவு வரிக் கச்சின் பூண்டு புடை தூங்க— மலையிடத்தே யூர்கின்ற பாம்புபோலே யானைக்கொம்பாற் கடைந்திட்ட வெள்ளிய பிடியினையுடைய ஒளியவாள் தன்னிடத்திலவிரவின வரியையுடைய கச்சினாலே தோளிலேகோக்கப்பட்டு ஒருபக்கத்தே தூங்காநிற்க,

கோள் தாள் அடிபுதை அரணம் எய்தி—நடந்து வலியையுடையவாகிய காலில் அடியைமறைக்கின்ற செருப்பைக்கோத்து,

படம் புக்கு—சட்டையிட்டு,

வம்பலர் தூங்க எய்திப் புக்கு வழங்கும் (அ0) பெரியவழி (அக) யென்க.

தடவு நிலைப் பலவின் முழுமுதற் கொண்ட சிறு சுளைப் பெரும் பழம் கடுப்ப—பெருமையையுடைய நிலையினையுடைய பலாவினடியிலே குலைகொண்ட சிறியவாகிய சுளையினையுடைய பெரிய பழத்தையொப்ப,

நல்லபழம் சுளைமிக இராதென்றுரா.

[நெரியற், புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்த, தணர்ச்செவிக் கழுதை:]

நெரியற் புணர்ப் பொறை தாங்கிய கழுதை—மிளகினது ஒத்தகனமாகச்சேர்த்த பாரத்தைத் தாங்கிய கழுதை,

வடு ஆழ் நோன் புறத்து அணர்ச் செவிக் கழுதை—வடுவழுந்தின வலியினையுடைய முதுகினையும் எடுத்தசெவியினையுமுடைய கழுதை,

கழுதைச் சாத்தொடு வழங்கும் உல்குடைப் பெரு வழிக் கவலை காக்கும்—கழுதையிலே மிளகெடுத்துக் கொண்டுபோகின்ற திரளோடே வம்பலர் (எசு) வழங்கும் பெரியவழியில் கவர்த்தவழிகளையும் காத்திருக்கும்,

உல்கு - சுங்கம்.

வப்பின்— விற்படையிருக்கின்ற ஊர்களில்,

வியன் காட்டு இயவின்— அகன்ற காட்டுவழிகளில,

நீள் அரை இலவத்து அலங்கு சினை பயந்த பூளை அம் பசுங்காய் புடை விரிந்தன்ன வரிப் புற அணிலொடு— நீண்ட தாளினையுடைய இலவத்தினது அசைகின்ற கொம்பு காய்த்த பஞ்சியினையுடைய அழகினையுடைத்தாகிய பசிய காயினது முதுகு விரிந்து பஞ்சுதோன்றினாலொத்த வரியைமுதுகிலேயுடைய அணிலோடே,

கருப்பை ஆடாது— எலியுந் திரியாதபடி,

[யாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல, வேற்றலை யன்ன வைந்நுதி நெடுந்தக, ரீத்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை]

யாறு அறல புரையும் வெரிந் கொழு மடல் உடை நெடுந் தகா ஈந்து— யாற்றினது அறலையொக்கும் முதுகினையும் கொழுவிய மடலினையுமுடைய நெடிய மேட்டுநிலத்தினின்றவீந்து,

மடலினடி தன்னிடத்தேநிற்க மேலறுப்புண்டஈந்து அறல்போன்றிருக்குமாறு உணர்க

வேல் தலை அன்ன வை நுதி ஈந்து இலை வேய்ந்த எய்ப் புறக் குரம்பை—வேலின்முனையையொத்த கூர்மையினையுடைய முனையினையுடைய ஈந்தினுடைய இலையாலேவேய்ந்த எய்ப்பன்றிமுதுகுபோலும் புறத்தினையுடைய குடிலில,

[மான்றோற் பளளி மகவொடு முடங்கி, யீனபிண வொழியப் போகி.] ஈன் பிணவு மான் தோல பள்ளி மகவொடு முடஙகி ஒழியப போகி—பிள்ளைப்பெற்றஎயிறறி மான்றோலாகிய படுக்கையிலே அப்பிள்ளையோடே முடஙகிக்கிடக்க ஒழிந்தோர் போய்,

* "பெண்ணும பிணவு மககட் குரிய" என்பதனால வந்தபிணவென்னும் ஆகாரவீறு அல்வழிககண வன்கணமன்மையிற † குறியதன் இறுதிச்சினைகெட்டு உகரம் பெறாதுநின்றது.

[நோன்காழ, இரும்புதலை யாத்த திருநதுகளை விழுக்கோ, லுளிவாய்ச் சுனையின் மிளிர மிண்டி:] இரும்பு தலை யாத்த திருந்து கணை நோன்காழ் விழுக் கோல் உளி வாய்ச சுனையின் மிளிர மிணடி—பூண தலையிலேயழுத்தின நன்றாகிய திரட்சியையும் வலியையுமுடைததாகிய வயிரத்தினையுமுடைய சீரிய கோல்செருகின உளிபோலும் வாயினையுடைய பாரைகளாலே கட்டிகள் கீழமேலாகக் குத்துகையினாலே,

கோல்செருகபபடுகின்ற சுனையையுடைமையிற சுனையென்றார்; ஆகுபெயர். சுனை - குழைச்சு

இரு நிலக் கரம்பைப படு நீறு ஆடி—கருநிலமாகிய கரம்பை நிலத்திலுண்டாகிய புழுதியைஅளைந்து,

நுண் புல அடக்கிய வெண் பல் எயிறறியர்—மெல்லிய புல்லரிசியை வாரியெடுத்துக்கொணட வெள்ளிய பல்லையுடைய எயிற்குடியிற்பிறந்தமகளிர,

போய் மிணடுகையினாலே ஆடி அடக்கிய எயிறறியரென்க

மிகவிளைந்துதிர்நதபுலலை எறும்பிழுத்துச் சேரவிட்டுவைத்த இடமறிந்தெடுத்தல் அந்நிலப்பண்பு.

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், சுக.

† " எழுத்ததிகாரம், உயிர்மயங்கியல், கூஉ.

பார்வை யாத்த பறைத் தாள் விளவின் நீழல் முன்றில் நிலவுரற் பெய்து—பார் வைமான்கட்டிநின்ற தேய்ந்ததாளினையுடைய விளவினது நிழலையுடைய முற்றத்தி டத்துத் தோண்டின நிலவுரலிலே அப்புல்லரிசியைச் சொரிந்து,

குறுங் காழ் உலக்கை ஓச்சி—குறிய வயிரமாகிய உலக்கையாலேகுத்தி,

நெடுங் கிணற்று வல்லூற்று உவரி தோண்டி—ஆழ்ந்த கிணற்றிற் சில்லூறலாகிய உவரிநீரை முகந்துகொண்டு,

தொல்லை முரவு வாய்க் குழிசி முரி அடுப்பு ஏற்றி—பழைய ஒறுவாயபோன பானையிலே வார்த்தவுலையை முரிந்த அடுப்பிலேவைத்து,

[வாராது அட்ட வாடூன் புழுக்கல்]

வாராது அட்ட புழுக்கல்—அரியாதாக்கின சோற்றை,

எயிற்றியர் பெய்து ஓச்சித் தோண்டி ஏற்றி அட்ட புழுக்கலெனமுடிக்க

வாடூன்—உப்புக்கண்டத்தோடே,

[வாடாத் தும்பை வயவர் பெருமகன், ஓடாத் தானை] ஓடாத் தானை வாடாத் தும்பை வயவர் பெருமகன்—முதுகிடாதபடையினையுடைய கெடாத தும்பைசூடின போரைவல்ல வீரருடைய தலைவனாகிய,

ஒன்னாத் தொழிற் கழற் கால் செவ் வரைநாடன் சென்னியம் எனின் — ஒள்ளிய தொழில்களையுடைத்தாகிய வீரக்கழலணிந்த காலினையுடைய செவ்விய மலைநாட்டையுடையவனுடைய பாணச்சாதியேமென்று கூறுவீராயின்,

தெய்வ மடையின் தேக்கிலைக் குவைஇ—தெய்வங்களுக்குச் சேரஇட்டுவைத்த பலிபோலே புழுக்கலையும் வாடூனையும் (கரு0) தேக்கிலையிலே குவிக்கையினாலே,

[நும், பைதீர் கடும்பொடு பதமிகப் பெறுகுவிர்] பதம் நும பை தீர் கடும் பொடு மிகப் பெறுகுவிர்—அவ்வுணவை நும்முடைய பசுமைதீர்ந்த சுற்றத்தோடே மிகப்பெறுகுவிர்;

வியன்காட்டியவுகளில் (அஉ) உலகுடைத்தாகிய (அக) நெடுநெறியையும் (சுரு) வம்பலர் (எசு) கழுதைச்சாத்தொடுவழங்கும் (அ0) உலகுடைப்பெருவழிக்கவலையையுங் காத்திருக்கும் (அக) விலலுடைவைப்பின (அஉ) குரம்பையில (அஅ) எயிற்றியா (கூ௪) தாங்களட்டபுழுக்கலையுமவாடூனையும் (க00) எல்லிடைக்கழியுநாக்கேமமாகத் (கூகூ) தேக்கிலையிலே குவிக்கையினாலே (க0௪) அபபத்தைப் (கரு௫) பெருமகனாகிய (க0க) வரைநாடன் சென்னியமெனின் (க0௩) நும (கரு௪) கடும்பொடு மிகப்பெறுகுவிர் (க0௫) எனமுடிக்க

உல்கு-இரண்டுவழிக்குங்கொள்க குவைஇ யென்னும செயதெனெச்சம் காரணகாரியப்பொருட்டு

[மானடிபொறித்த மயங்கதர் மருங்கின்] மயங்கு மான் அடி பொறித்த அதர் மருங்கின்—நீரின்மையின மயங்கித்திரியும் மானடி அழுந்திக்கிடக்கின்ற வழியிடத் திலே,

வானம் மடி பொழுதில் நீர் நசைஇக் குழித்த அகழ—மழை பெய்தலைத்தவிர்ந்த காலத்தே நீர்பெறவேண்டுமென்று நச்சுதலாலே குழித்தகுளம்,

அகழப்படுதலின், அகழென்றது ஆகுபெயா

சூழ் பயம்பின் அகத்து ஒளித்து ஒடுங்கி—அதனைச் சூழப்பறித்துக்கிடக்கின்ற மட்டுக்குழிகளினுள்ளே மறைந்தொதுங்கி,

தண்ணீர்குடிக்கவருமென்று குளத்தைசசூழப்பறித்தகுழி

புகழா வாகைப் பூவின்அன்ன வளை மருப்பு ஏனம் வரவு பாாதது இருக்கும்—அக த்திப்பூவினையொதத வளைந்த கொம்பினையுடைய பன்றியினது நீருண்ணவரும் வர வைப்பார்த்திருக்கும்,

அனாநாள் வேட்டம அழுங்கின்—நடுவியாமதது வேடடை ஒழிந்தார்களாயின்,

பகல் நாள்—அதன் பிறறைநாளிலே,

[பகுவாய் ஞமலியொடு பைமபுத லெருககித, தொகுவாய வேலித தொடர்வலை மாட்டி, முள்ளரைத் தாமரைப புலவிதழ் புரையும, நெடுஞ்செவிக் குறுமுயல் போக கற வளைஇ]

முள் அரைத தாமரைப புல இதழ் புரையும நெடுஞ செவிக குறு முயல போக்கு அற—முள்ளைத் தண்டிலேயுடைய தாமரையினது புறவிதழையொக்கும் நெடிய செவியினையுடைய குறிய முயலை ஓரிடததுமபோககில்லாதபடி,

தொகு வாய வேலித் தொடா வலை மாட்டி வளைஇ—குவிநத இடததையுடைய வேலியிடத்தே ஒன்றோடொனறுபிணைத்த வலைகளை * மாடடிவளைதது,

பகு வாய் ஞமலியொடு பைமபுதல் எருககி—அஙகாந்த வாயையுடைய நாயுட னேசென்று பசியதூறுகளையடிதது அவற்றிறகிடவாமலோட்டி,

[கடுஙகட் கானவா கடறுகூட் டுணணு, மருஞ்சுரம்]

கடறு கூட்டுணணும அருஞ சுரம்—காட்டிலுள்ளமுயல்களைக் கொள்ளைகொண் டுண்ணும் அரிய பாலைநிலம,

கடுங்கட் கானவா—தறுகணமையையுடைய கானவா,

கானவா (ககசு) பயமபின் ஒடுஙகிப் (கா௮) பாாததிருககும (கக௦) இராவேட் டமழுங்கிற பகனளிலே (ககக) முயலைப போககறவளைதது (கக௫) எருககிக (கக௨) கூட்டுண்ணும் (ககசு) அருஞசுரமெனமுடிகக

அருஞ் சுரம இறநத அமபாக குறும்பிற சேபபின—இவவரியநிலததைக கைவி ட்ட மற்றைநிலத்திற் குறுமபிறறஙகில,

குறும்பிறசேபபின (க௨கூ) எனபதனை இவவிடததுககூட்டுக.

இதனால நணபகலும் வேனிலுமாகிய பாலைநிலஙகூறி அதனைக கலநதநிலமுங் கூறினா.

இனி நீஙகள் அருஞ்சுரததை நககடநதபினனரென்றுமுரைபபா.

[பருந்துபட, வொன்னாத் தெவ்வா நடுஙக வோசசி] ஒனனாத தெவ்வா நடுஙகப் பருந்து பட ஓச்சி—பொருந்ாதபகைவா அஞ்சப பருந்துகள்படியக குததி,

வை நுதி மழுங்கிய புலவு வாய் எஃகம் வடி மணிப பலகையொடு நிரைஇ—கூா மையையுடைய முனைமழுஙகின புலானறும் வாயையுடையவேலை வடித்த மணிகட் டின பலகைகளோடே நிரைததுவைதது,

முடி நாட் சாபஞ் சாத்திய கணை துஞசு வியன நகா—தலையிலே முடிந்தநாணை யுடைய வில்லைச்சாததிவைத்த அம்புதஙகும் அகற்சியையுடைய வீடுகளையும்,

ஊகம் வேய்ந்த உயர் நிலை வரைப்பின்—ஊகமபுலலாலேவேய்ந்த உயாநத நிலை மையினையுடைய மதிலையும்,

* மாட்டிவளைத்தென்றும் சிலபிரதிகளிலுள்ளது.

வரைத் தேன் புரையுங் கவைக் கடைப் புதையொடு கடுந் துடி தூங்கும் கணைக் கால் பந்தர்—மலையிற் றேனிறாலையொக்கும் குதையினையுடைத்தாகிய அடியினையுடைய அம்புக்கட்டுக்களுடனே ஓசைகடிய துடியுந்தூங்குந் திரண்ட காலையுடைய பந்தரினையும்,

தொடர் நாய் யாத்த துன்னருங் கடி நகர்—சங்கிலிகளாலே நாய்களைக்கட்டிவைத்த கிட்டுதற்கரிய காவலையுடைய வீட்டினையும்,

[வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பை] முள் வாழ் வேலிச் சூழ் மிளைப் படப்பை—முள்ளையுடைய வாழ்வேலியினையும் அதனைச்சூழ்ந்த காவற்காட்டினையுமுடைத்தாகிய பக்கத்தினையும்,

கொடு நுகந் தழீஇய புதவின்—கொடிய கணையமரம் ஏறட்ட உட்கதவையுடைய வாயிலினையும்,

செந்நிலை நெடு நுதி வயக் கழு நிரைத்த வாயில்—செவ்விய நிலையினையும் நெடிய முனையினையுமுடைய வலியையுடைய கழுக்கள் நிரைத்த ஊர்வாசலினையுமுடைய,

பகைவரைக்குத்துதற்குக்கழுவைத்தார்

கொடு வில் எயினர் குறும்பிற் சேப்பின்—கொடிய வில்லையுடைய எயினச்சாதியிலுள்ளாருடைய அரணிலேதங்கின்,

கணைதுஞ்சுவியனகர் (கஉக) முதலியவற்றையுடைய குறும்பென்க

களர் வளர் ஈந்தின் காழ் கண்டன்ன சுவல் விளை நெல்லின் செவ்வவிழ்ச் சொன்றி—களர்நிலத்தேவளர்ந்த ஈந்தினது விதையைக் கண்டாற்போன்ற மேட்டுநிலத்தேவிளைந்த நெல்லினது சிவந்த அவிழாகியசோற்றை,

ஞமலி தந்த மனவுச் சூல் உடும்பின் வறை கால் யாத்தது வயின்றொறும் பெறுகுவிர்—நாய்கடித்துக்கொண்டுவந்த அக்குமணிபோலும் முட்டைகளையுடைய உடும்பினது பொரியலாலே மறைத்ததனை மனைகடோறும்பெறுகுவிர்;

சேப்பிற் பெறுகுவிரென்க

யானை தாக்கினும் அரவு மேற் செலினும் நீல நிற விசும்பின் வல்லேறு சிலைப்பினும் சூல் மகள் மாறா மறம் பூண் வாழ்க்கை—யானை தன்னெதிரே செல்லினும் பாம்பு தனமேலே செல்லினும் நீலநிறத்தையுடைய மேகத்திடத்தே வலிய உருமேறு இடிப்பினும் சூற்கொண்டமகள் அவையிற்றிற்கஞ்சி மீளா மறத்தைப்பூண்ட வாழ்வினையும்,

வலிக் கூட்டுணவின் வாட் குடிப் பிறந்த—தமது வலியாற் கொள்ளைகொண்டுண்ணும் உணவினையுடைய வாட்டொழிலேசெய்யுங் குடியிற்பிறந்த,

புலிப் போத்தன்ன புல் அணர்க் காளை—புலியினது போத்தையொத்த புல்லென்ற தாடியையுடைய அந்நிலத்துத்தலைவன்,

செல் நாய் அன்ன கரு விற் சுற்றமொடு கேளா மன்னர் கடி புலம் புக்கு—தான் குறித்தவிலங்கின்மேலே செல்கின்றநாய் அதனைத் தப்பாமற் கொள்ளுமாறுபோன்ற கொடியவில்லையெடுத்த காவலாளருடனே தன்வார்த்தைகேளாத பகைவருடைய காவலையுடைய நிலத்தேசென்று,

நாள் ஆ தந்து நறவு நொடை தொலைச்சி—விடியற்காலையிலே அவர்கள்பசுக்களைஅடித்துக்கொண்டுபோந்து அவற்றைக் கள்ளுக்கு விலையாகப்போக்கி,

இல் அடு கள் இன் தொப்பி பருகி—அதற்குப் பின்பாகத் தமதில்லிலே சமைத்த கள்ளுக்களில் இனிதாகிய நெல்லாற்செய்த கள்ளையுண்டு,

மல்லல் மன்றத்து மத விடை கெண்டி—வளப்பத்தினையுடைய மன்றிலே வலியையுடைய ஏற்றை அறுத்துத்தின்று,

மடி வாய்த் தண்ணுமை நடுவட் சிலைப்ப—தோலை மடித்துப்போர்த்த வாயையுடைய மத்தளந் தங்களுக்குநடுவே முழங்காநிற்ப,

[சிலைநவி லெறுழ்த்தோ ளோச்சிவலன் வளையூஉப், பகன்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை, முரண்டலை கழிந்த பின்றை] சிலை நவில் எறுழ்த் தோள் ஓச்சி வலன் வளையூஉப் பகல் மகிழ் தூங்கும் தூங்கா முரண் தலை இருக்கை கழிந்த பின்றை—வில் லொப்பயின்ற வலியையுடைய இடத்தோளையெடுத்து வலப்பக்கத்திலேவளைந்து பகற்பொழுதிலே மகிழ்ச்சியுடனேயாடும் அசையாப்பொருதலையுடைய குடியிருப்பினைக் கடந்தபின்பு,

இதனாற் குறிஞ்சிநிலம் முற்கூறி அதன்பகைப்புலமும் பிற்கூறினார்.

மறிய குளகு அரை யாத்த குறுங்கால்— ஆட்டுமறிகள் நின்றுதின்னுந் தன்மையையுடைய தழைகளைத் தம்மிடத்தேகட்டின குறிய கால்களையும்,

[குரம்பைச், செற்றை வாயில்]

செற்றை வாயில்—சிறுதூற்றையுடைய வாயிலினையும்,

குரம்பை— குரம்பையினையும்,

செறி கழிக் கதவின்— கழிகளாற் கட்டப்பட்ட கதவினையும்,

[கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்] கழித் தலைக் கற்றை வேய்ந்த சாம்பின்— வரிந்த கழிகளிடத்தே வரகுகற்றைகளாலே வேய்ந்த சேக்கையையும்,

[அதளோன் றுஞ்சுங் காப்பி னுதள] உதள அதளோன் துஞ்சும் காப்பின்—கிடாயினுடைய தோலகளைப் பாயலாகவுடைய முதியோன் துயில்கொள்ளுங் காவலையுமுடைய,

"மாத்தையுந் தகரு முதனு மப்பரும், யாத்த வென்ப யாட்டின் கண்ணே" என்றார்மரபியலில்

காலினையும் (கசஅ) வாயிலினையும் கதவினையும் (கசகூ) சாம்பினையும் (கரு௦) காப்பினையு (கருக) முடைய குரம்பை (கசஅ) யெனக

நெடுந் தாம்பு தொடுத்த குறுந் தறி முன்றில்—தாமணிதொடுத்த நெடிய தாம்புகள்கட்டின குறியமுளைகளையுடைய முற்றத்தினையும்,

கொடு முகத் துருவையொடு வெள்ளை சேக்கும் இடு முள் வேலி எருப் படு வரைப்பின்—வளைந்த முகத்தினையுடைய செம்மறியாட்டுடனே வெள்ளாடுங்கிடக்குங் கட்டுமுள்ளாகிய வேலியினையுமுடைய எருமிகுகின்ற ஊரிடத்து,

குரம்பையினையும் (கசஅ) முற்றத்தினையும் (கருஉ) வேலியினையுமுடைய வரைப்பென்க.

[நள்ளிருள் விடியற் புள்ளெழப் போகி]

நள் இருள் விடியற் புள் எழ—செறிந்த இருள்போகின்றகாலத்தே பறவைகள் துயிலெழாநிற்க,

போகியென்பதனைமேலேகூட்டுக.

புலிக் குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி—புலியினது முழக்கம்போலும் முழக்கத்தையுடைய மத்தை ஆரவாரிக்கும்படி கயிற்றைவலித்து,

ஆம்பி வால் முகிழ் அன்ன கூம்பு முகை உறை அமை தீந்தயிர் கலக்கி—குடைக்காளானுடைய வெள்ளிய முகைகளையொத்த குவிந்த முகிழ்களையுடைய உறையாலே இறுகத்தோய்ந்த இனியதயிரைக்கடைந்து,

முகை - மொட்டு முகிழ - ஆடையின்மேற புடைத்துநின்றது

நுரை தெரிந்து—வெண்ணெயையெடுத்து,

புகா வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇப் போகி (கருகு)—தயிர் புள்ளியாகத்தெறித்த வாயையுடைய மோரப்பானையைப் பூவாறசெய்த சுமட்டைத்தலையிலேவைத்து 10 முற்கூறிய குறிஞ்சிநிலததேறப்போய்,

நாள் மோர் மாறும்—காலையிலே மோரைவிறகும்,

நல மா மேனி—நன்முகிய மாமையாகிய நிறததினையும்,

சிறுகுழை துயல்வரும காதின்—தாளுருவியசையுங காதினையும,

பணைத் தோள—மூங்கிலபோலுந் தோளினையும்,

15 குறு நெறிக கொண்ட கூந்தல்—குறிதாகிய அறலைத் தன்னிடத்தேகொண்ட மயிரினையுமுடைய,

ஆய்மகள்—ஆய்ச்சாதியிறபிறந்தமகள,

மேனிமுதலியவற்றையுடையமகள

அளை விலை உணவிற் கிளை உடன அருததி—மோரவிற்றதனுலுண்டாகிய நென் 20 முதலியவறருலே சுறறத்தாரெலலாரையும் உணணபபணணி,

நெய் விலைக கட்டிப பசும் பொன் கொளளாள்—பின்பு தான் நெய்யைவிறகின்றவிலைககுக் கட்டியாகப பசும்பொனனை வாஙகாளாய,

எருமை நலலான் கரு நாகு பெறூஉம் குடி (கசுசு)—பாலெருமையையும், நல்லபசுவையும், கரிய எருமைநாகினையும் நெய்ககொபபாகசசொலலி வாஙகுங்குடி,

25 அட்டியென்றபாடமோதி வாரதெென்றுகூறுதலுமாம

குறிஞ்சிநிலததே நெயயைவிறறுஅவாகள் அடிததுக்கொணட எருமைமுதலாயவறறை விலையாகவாங்கினுளென்க

மடி வாய்க கோவலர்—சீழ்ககைபிடிததலாலே மடிதத வாயையுடைய இடையா,

குடி வயிற் சேப்பின்—குடியிருபபிலே தஙகுவீராயின்,

[இருங்கிளை ஞெண்டின் சிறுபாாப பனன, பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்:] ஞெணடின் இருங கிளைச சிறுபாாபபு அனன பசுந் தினை மூரல் பாலொடும் பெறுகுவிர—ஙணடினது பெரிய சுற்றமாகிய சிறிய பாாபபையொத்த செவ்வித்தினையரிசியாலாக்கின சிலுத்தசோறறைப் பாலுடனேபெறுகுவிர;

புள்ளெழாநிற்க (கருகு) வாஙகிக் (கருசு) கலககித தெரிந்து (கருஅ) இரீஇப் 35 (கருக) போகி (கருரு) மாறும் (கசுo) ஆய்மகள் (கசுஉ) என்க.

மடிவாய்க்கோவலா (கசுசு) வரைப்பிடநது (கருச) ஆய்மகள் (கசுஉ) அருத்திக் (கசுக) கொள்ளாளாயப் (கசுச) பெறூஉங (கசுரு) குடிவயிறசேப்பின் (கசுசு) மூரல் பாலொடும்பெறுகுவிரெனமுடிகக.

தொடு தோல் மரீஇய வடு ஆழ் நோன் அடி—செருப்புவிடாமற்கிடந்த வடுவழுந்தின வலியையுடைய அடியினையும்,

விழுத் தண்டு ஊன்றிய கை—பசுக்களுக்கு வருத்தஞ்செய்யும தடியையூன்றின கை,

மழுத் தின வன் கை—மரங்களை ஒடியெறிந்துகொடுக்கும் கோடாரியாற் றழும்பிருந்த வலியகையினையும்,

உறிக் கா ஊர்ந்த மறுப் படு மயிர்ச் சுவல—இரண்டுதலையினும உறியினையுடைய காக்கள் மேலேயிருந்ததனால் உண்டாகிய தழும்புமிக்க மயிரொழிந்த தோட்கட்டினையும்,

மேம் பால் உரைத்த ஓரி—எல்லாமணமும் பொருந்தும பசுக்கறந்த பாற்கையைத் தடவின மயிரையும்,

[ஓங்குமிசைக், கோட்டவுங் கொடியவும விரைஇக் காட்ட, பல்பூ மிடைந்த படலைக் கண்ணி:] காட்ட ஓங்கு மிசைக் கோட்டவும் கொடியவும் பல பூ விரைஇ மிடைந்த படலைக் கண்ணி— காட்டிடத்தனவாகிய உயர்கின்றஉச்சியினையுடைய கொம்புகளிலுள்ளவும் கொடிகளிலுள்ளவுமாகிய பலபூக்கள் கலந்துநெருங்கிய கலம்பகமாகிய மாலையினையும்,

ஒன்று அமர் உடுக்கை—ஒன்றாயப்பொருந்திய உடையினையுமுடைய,

கூழ் ஆர் இடையன்—பாற்சோற்றையுண்கின்ற இடையன்,

அடிமுதலியவற்றையுடையஇடையன

கன்று அமர் நிரையொடு கானத்து அலகி—கன்றுகள்பொருந்தின பசுத்திரளோடே காட்டிலேதங்கி,

[அந்நு ணவிர்புகை கமழக் கைம்முயன்று, ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழிச், செந்தீத் தொட்ட கருந்துளைக் குழலின்]

ஞெலிகோல அம் நுண் அவிர் புகை கமழக் கை முயன்று கொண்ட செந் தீ ஞெகிழி தொட்ட கருந் துளைக் குழலின—தீக்கடைகோலாலே அழகிய நுண்ணிய தாய்விளங்கும் புகைமுற்படப்பிறக்கும்படி கையாலேகடைந்துகொண்ட சிவந்த நெருப்பினையுடைய கடைக்கொள்ளியாற்றுளையிட்ட கரிய துளையினையுடைய குழலாலெழுப்பின,

பெருவிறலெனபதனை இடையனெனபதனொடு முன்னேகூட்டியெணணுக

இனி ஞெலிகோல் - படுத்தகோல், ஞெகிழி - கடைகின்றகோலென்றுமுரைப்பர

இன் தீம் பாலை முனையின்—மிகவுமினிய பாலையெனகின்றபணணைத் தான் வெறுக்கில்,

[குமிழின், புழற்கோட்டுத தொடுத்த மரற்புரி நரம்பின், வில்யா ழிசைக்கும் விரலெறி குறிஞ்சி:] குமிழின் புழற் கோட்டுத் தொடுத்த மரற் புரி விரல் எறி நரம்பின் வில் யாழ் இசைக்குங் குறிஞ்சி— குமிழினது உட்பொய்யாகிய கொம்பிடத்தே வலித்துக்கட்டின மரற்கயிறாகிய விரலாலேதெறித்தலாசிக்கும் நரம்பினையுடைய வில்லாகிய யாழொலிக்கும் குறிஞ்சியென்கின்றபண்ணை,

பல் கால் பறவை கிளை செத்து ஓர்க்கும்— பலகாலினையுடைய வண்டுகள் தஞ் சுற்றத்திரைச்சையாகக்கருதிச் செவிகொடுத்துக்கேட்கும்,

* "ஐம்பொறியும்" என்னுஞ் சூத்திரத்திற் செவிப்பொறியான் இவையுணர் தல்கூறினும்..

புல் ஆர் வியன் புலம் போகி— புல்லுநிறைந்த அகற்சியையுடைய நிலத்தைக்க டந்துபோய்,

5 முன்னா இடையர்குடியிருப்புக்கூறிப் பின்னர் அவர்பசுக்கள்முதலியன நிற்கி ன்ற முல்லைநிலமுங்கூறினர்.

முள் உடுத்து எழு காடு ஓங்கிய தொழு உடை வரைப்பின்— முள்ளுத் தன்னி டத்தேசூழ்ந்து எழுகின்ற விடத்தேரொடரி முதலிய காடுகள்சூழவளர்ந்த தொழு க்களையுடையவூர்களில்,

10 இது, பசுக்கள்முதலியனமேயாமற் காக்கின்ற இளங்காட்டையுடைய படைத்த லைவரிருப்புக்கூறிற்று.

பிடிக் கணத்து அன்ன குதிர் உடை முன்றில்— பிடித்திரளினையொத்தபோன்ற வரகுமுதலியனநிறைக்கும் குதிர்களையுடைய முன்றிலினையும்,

களிற்றுத் தாள் புரையும் திரி மரப் பந்தர்— யானையினது காலையொக்கும் வர 15 குதிரிகை நட்டுநிற்கும் பந்தரினையும்,

குறுஞ் சாட்டு உருளையொடு கலப்பை சார்த்தி நெடுஞ் சுவர் பறைந்த புகை சூழ் கொட்டில்— குறிய சகடத்தினுருளைகளோடே கலப்பையையும் சார்த்திவைக்கையி னாலே நெடிய சுவரிடத்திற்றேய்ந்த புகைசூழ்ந்த கொட்டிலினையுமுடைய,

நெடுக்கக்கட்டி ஒருபக்கத்திலே அடுப்பெரித்து ஒருபக்கத்திலே தொழிலொழிந்த 20 நாளில் சகடையினுருளையையும் கலப்பையையுஞ்சார்த்தி எருதுகளும் கட்டிநிற்றலிற் கொட்டிலென்றார்.

பருவ வானத்துப் பா மழை கடுப்பக் கருவை வேய்ந்த கவின் குடிச் சீறூர்— மாரிக்காலத்தையுடைய விசும்பிடத்தே பரந்த மேகத்தையொப்ப வரகுவைக்கோலா லேவேய்ந்த அழகினையுடைய குடியிருப்பினையுடைய சிறியவூர்களிலே,

25 சீறூர்— அம்முல்லைநிலத்து உழுதுண்பாரிருப்பு.

நெடுங் குரற் பூளைப் பூவின் அன்ன குறுந் தாள் வரகின் குறள் அவிழச் சொன் றி— நெடிய கொத்தினையுடைய சிறுபூளையினது பூவையொத்த குறிய தாளினையு டைய வரகினது சிறிய அவிழ்களாகிய சோற்றை,

புகர் இணர் வேங்கை வீ கண்டன்ன அவரை வான் புழுக்கு அட்டி— நிறத் 30 தையுடைய கொத்தினையுடைய வேங்கைப்பூவைக் கண்டாலொத்த அவரைவிதையி னது நன்றாகியபருப்பை மிகவிட்டு,

வேங்கைப்பூ-வரிகளையுடைய விதைக்கு உவமை. புழுக்கு - புழுங்கவெந்தது, கும்மாயமுமாம் பருப்புச்சோறுமெனப

† [பயில்வுற், றின்சுவை மூரற் பெறுகுவிர்.]

35 இடையன் (௧௬௩) அல்கிப் (௧௬௬) பாலையைத்தான்முனையின் (௧௭௦) அதனைக் கைவிட்டு விரலாலே வாசிக்குங்குறிஞ்சியைப் (௧௭௨) பறவையோக்கும் (௧௭௩) புல

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௬௧

† இதற்கு ஒருபிரதியிலும் உரைகிடைத்திலது. கலத்தலினாலே இனிய சு வையினையுடைத்தாகிய மூரலோடே பெறுகுவிரென்க.

த்தைப் போய் (கஅ௪) வரைப்புக்களின் (கஅ௫) முன்றின் (கஅ௬) முதலியவற்றையு டைய சீறூர்களிலே (கசுக) வரகின்சொன்றியைப் (கசுரு) புழுக்கையட்டி (கசு௫) ஆரலோடேபெறுகுவிரெனமுடிக்க.

ஞாங்கா— அந்நிலத்திறகுமேல,

குடி நிறை வல்சி செஞ் சால உழவா— அககுடியிருப்புநிறைந்த உணவினை யுடைய செவ்விய சாலாகவுழுகின்ற உழவுத்தொழிலையுடையோர்,

ஒருசால இருசாலெனறல உழவுதறொழிற்குமரபு

நடை நவில் பெரும் பகடு புதவிற் பூட்டி—உழவுதறொழிலிலேபயின்ற பெரிய எருதுகளை வாயிலிலே நுகததைப பூட்டிக கொணடுசென்று,

பிடி வாய அன்ன மடி வாய நாஞசில் உடுபபு முக முழுககொழு மூழக ஊன்றி —பிடியினது வாயையொதத வளைந்தவாயையுடைய கலபபையினுடைய உடும்பி னது முகததையொதத பெருஙகொழு மறைய அமுககி,

தொடுப்பு எறிநது உழுத துளா படு துடவை—முற்பட வளையவுழுது விதைத்த பின்னா இடையே உழுத களைகளைக கொட்டுசெசெததிய தோட்டததை,

அரி புகு பொழுதின— அறுககுமபருவம் வருஙகாலததே,

[இரியல போகி, வணணக் கடமபி னறுமல ரன்ன, வளரிளம் பிள்ளை தழீஇக் குறுங்காற, கறையணற குறும்பூழ கட்சி சேக்கும ]

குறுங காற் கறை அணற குறும்பூழ் — அதன்கட்டஙகுங குறுஙகாலினையும் கருமையையுடையகழுததினையுமுடைய குறும்பூழ,

வணணக கடம்பின் நறு மலா அன்ன வளா இளம் பிள்ளை தழீஇ— வெள்ளியு நிறத்தையுடைய கடமபினது நறுநாறறததினையுடைய பூவையொதத வளருகின்ற இளையபிள்ளைகள மிகவும் பறததலாறறாதனவற்றையும கூட்டிககொணடு,

* "பாாப்பும் பிள்ளையும் பறபபவற றிளமை" என்றார்

இரியல போகிக கட்சி சேககும் — அவாகளாரவாரத்திறகஞ்சிக் கெடுதற்றன் மையையுடையவாய் ஆணடுநின்றுங் காட்டிலேதங்கும்,

வன்புலம் இறந்த பின்றை— முல்லைநிலத்தைப் போனபின்பு,

முற்றுங்குடிச்சீறூருழவரால் உழுதற்குரிய முல்லைநிலமுஙகூறினார். இது மரு தநிலததைச்சேர்ந்த முல்லைநிலம்.

உழவா பூட்டி ஊன்றி உழுததுடவை அரிபுகுபொழுதில் குறும்பூழ் பிள்ளைதழீ இப் போகிச் சேககும் வன்புலமென்க

மென்தோல் மிதி உலைக் கொலலன முறி கொடிறு அன்ன — மெத்தென்றதுருத் தியை அமுக்கியூதுகினற உலையிற் கொற்றொழில்செய்கின்றவனுடைய முறிந்த கொ டிற்றையொத்த,

கவைத் தாள் அலவன் அளற்று அளை சிதைய— கப்பித்தகாலையுடைய ஞெண் டினது சேற்றின்கணணுணடாகிய முழைகெடும்படி,

பைஞ் சாய் கொன்ற மண் படு மருப்பிற் கா ஏறு பொருத கண் அகன் செறு

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௪.

வின்— பசியகோரையை அடியிலே குத்தியெடுத்த மண்கிடக்கின்ற கொம்பையுடைய கரிய கடாக்கள் தம்மிற்பொருத இடமகன்ற செய்யின்கண்,

உழாஅ நுண் தொளி நிரவிய வினைஞர் — தாம் உழப்படாத அந்த நுண்ணிய சேற்றை ஒக்கமிதித்தஉழவர்,

முடி நாறு அழுத்திய நெடு நீர்ச் செறுவில்— முடியாகக்கிடக்கின்ற நாற்றைநட்ட கெடியநீரையுடைய செய்களில்,

சிலையக் கொன்ற மருப்பின் ஏறுபொருத செறுவிற தொளியைநிரவிய வினைஞர் நாற்றையழுத்திய செறுவென்க.

களைஞர் தந்த கணைக் கால் நெய்தற் கட் கமழ் புதுப் பூ முனையின்—அச்செய்யில் களைகளைப்பறிப்பார் பறித்து ஏறட்ட திரண்டதாளினையுடைய நெய்தலினது தேனாறுகின்ற புதியபூவை வெறுத்ததாயின்,

[முட்சினை, முகைசூழ் தகட்ட பிறழவாய முள்ளிக், கொடுங்கான் மாமலர் கொய்து கொண்டு:] முகை சூழ் முள் சினை முள்ளித தகட்ட கொடுங காலா பிறழ் வாய மா மலர் கொய்து கொண்டு—அரும்புகள் சூழ்ந்த முள்ளையுடைய கொம்புகளையுடைய முள்ளியின் இதழையுடையவாகிய வளைந்த காலையும் மறிந்தவாயையும் கருமையையுமுடைய பூவைபபறித்துககொண்டு,

அவண பஞ்சாய்க் கோரை பலலிற சவட்டிப புணா நாப பெய்த புனைவு இன கணணி— அந்நிலத்திலுண்டாகிய தண்டானகிய கோரையைப பல்லாலே மென்று மென்றுகிழித்து முடிந்த நாராற்கட்டின புனைதற்கினியமாலையை,

ஈா உடை இருந் தலை ஆாச சூடி —ஈருடைத்தாகிய கரிய தலைநிறையும்படி சூடி,

பொன் காண் கட்டளை கடுப்பச சண்பின்—பொன்னையுரைதது மாறறுக்காணும் உரைகல்லையொப்பச் சண்பினது,

புன் காய்ச் சுணணம் புடைதத மாாபின — புல்லிய காயிற்றூளறினதாதை அக்கதிரைமுறித்து அடிததுக்கொணட மாாபினையும்,

தாதுநீளக்கிடந்தது உரைத்தாற்போன்றது.

இருமபு வடித்தன்ன மடியா மெனதோல்— இரும்பைத தகடாககினலொதத திரையாத மெல்லிய தோலினையுமுடைய,

கருங் கை வினைஞர் காதல அம சிறாஅா — வலிய கையாற றொழில்செய்வாருடைய விருபபதலதயுடைய அழகிய சிறுபிள்ளைகள்,

பழஞ்சோறறு அமலை முனைஇ—பழைய சோறறினது கட்டியைவெறுதது,

வரம்பிற் புது வை வேய்ந்த கவி குடில் முனறில அவல் எறி உலககைப் பாடுவிறந்து—வரம்பிடத்துப் புதிய வைககோலாலேவேயநத கவிந்த குடிலினுடைய முற்றத்தே அவலையிடிக்கும் உலக்கையினது ஓசைசெறிகையினலே,

குடில்கள-பன்றிமுதலியனவறறைக் காத்தறகுக் கட்டினவை.

அயல கொடு வாய்க் கிள்ளை படு பகை வெரூஉம — அதற்கு அயலிடத்தனவாகிய வளைந்த வாயையுடைய கிளிகள் தமக்குணடாகின்ற பகையாக நினைத்தஞ்சும்,

நீங்கா யாணர் வாங்கு கதிாக கழனி — இடையறாத புதுவருவாயினையுடைய வளையுங்கதிரினையுடைத்தாகிய கழனியிடதது,

கடுப்புஉடைப் பறவைச் சாதி அன்ன — எறியப்பட்டார்க்குக் கடுக்குந்தன்மையைக் கொடுத்தலை யுடைத்தாகிய குளவித்திரளையொத்த,

பைதற விளைந்த பெருஞ் செந் நெல்லின் — பசுமையறும்படி முற்றின பெரிய செந்நெல்லினுடைய,

தூம்பு உடைத் திரள் தாள் துமித்த வினைஞர்—உள்ளுப்பொய்யையுடைத்தாகிய திரண்டதாளையறுத்த தொழில்செய்வார்,

பாம்பு உறை மருதின் ஓங்கு சினை நீழல்— பாம்புகிடக்கின்ற மருதின் உயர்ந்த கொம்பாலுண்டாகிய நிழலிலே,

பழையமரமாதலிற் பாம்புகிடக்குமென்றார்

பலி பெறு வியன் களம் மலிய ஏற்றி— ஆண்டுதோறுந்தெய்வங்கள் பலிபெறுகின்ற அகன்ற களங்களிலே மிகவுநிறையப் போராகவிட்டு,

[கணங்கொள் சுற்றமொடு கைபுணர்ந் தாடுந், துணங்கையம் பூதந் துகிலுடுத்தவைபோல்:] கணங் கொள் சுற்றமொடு கை புணர்ந்து துணங்கை ஆடும் அம் பூதந் துகில் உடுத்தவைபோல்—திரட்சிகொண்ட தம்முடைய சுற்றத்தோடே ஒழுங்காகச்செறிந்து நின்று துணங்கைக்கூத்தாடுகின்ற அழகினையுடையபூதங்கள் வெள்ளிய துகிலையுடுத்துநின்றவைபோல,

என்றது - தம்மில் விளையாடுவதற்குத்திரண்ட பூதமென்றவாறு.

சிலம்பி வால் நூல் வலந்த மருங்கிற் குழூஉ நிலைப் போரின் முழு முதல் தொலைச்சி—சிலந்தியினது வெள்ளியநூல்சூழ்ந்த பக்கத்தினையுடைய பலவாகத்திரண்ட தன்மையினையுடைய போர்களினுடைய பெரிய அடியை வாங்கிவிரித்து,

பகடு ஊர்பு இழிந்த பின்றை—எருதுகள் கடாவிட்டுப் போனபின்பு,

துகள் தப வையுந் துரும்பு நீக்கி—குற்றமறும்படி வைக்கோலையுங் கூளத்தையும் அதனிடத்துநின்றுநீக்கி,

பைதற—ஈரம் உலராநிற்க,

குடகாற்று எறிந்த குப்பை—மேலகாற்றாலே கையாலே தூவித்தூற்றின பொலி,

வடபாற் செம்பொன் மலையிற் சிறப்பத் தோன்றும்—வடதிசைக்கணுளதாகிய மேருவாகிய மலைபோலே மிகும்படி தோன்றும், 2

தண் பணை தழீஇய தளரா இருக்கை—மருதநிலஞ்சூழ்ந்த அசையாத குடியிருப்புக்களில்,

மார்பினையும் (உஉக) தோலினையுமுடைய (உஉஉ) வினைஞர்சிறார் (உஉங) முனை இ (உஉச) அவலெறியுலக்கைப்பாடுவிறக்கையாலே (உஉரு) கிள்ளைவெரூஉம் (உஉள) கழனிகளில் (உஉஅ) விளைந்த நெல்லினைத (உஙo) துமித்தவினைஞர் (உஙக) ஏற்றித் (உஙரு) தொலைச்சி (உஙள) நீக்கி (உஙகூ) எறிந்தகுப்பை (உசo) தோன்றும இருக்கை யெனக்கூட்டுக

பகட்டு ஆ ஈன்ற கொடு நடைக் குழவிக் கவைத் தாம்பு தொடுத்த காழ் ஊன்று அலகுல் —பெருமையையுடைய பசுக்களீன்ற வளைந்த அடியையுடைய கன்றுகளைக் கட்டின தாமணியையுடைய நெடியதாம்புகள் கட்டிக்கிடக்கின்ற தறிகள்நட்ட பக்கத்தினையும,

* "முழுவலி துஞ்சும நோய்தபு நோன்றொடை, நுணகொடி யுழிஞை வெல்போ ரறுகை" என்றார்பிறரும் கவை-ஆகுபெயர்

* பதிற்றுப்பத்து, ஐந்தாம்பத்து, ௫: "முழுவலி துஞ்சு நோய்தபு நோன்றொடை, நுண்கொடி யுழிஞை வெல்போ ரறுகை, சேண னாயினுங் கேளென மொழிந்து". அறுகையென்பான் ஓர்குறுநிலமன்னன்.

[ஏணி யெய்தா நீணெடு மார்பின்:] நீள் ஏணி எய்தா நெடு மார்பின்—நீண்ட ஏணிக்கெட்டாத நெடிய வடிவினையும்,

முகடு துமித்து அடுக்கிய பழம் பல் உணவின் — தலையைத்திறந்து உள்ளே சொரியப்பட்ட பழையவாகிய பல நெல்லினையுமுடைய,

5 பல்லுணவென்றார், செந்நெல்முதலிய சாதிப்பன்மைகருதி.

குமரி மூத்த கூடு ஓங்கு நல்லில்—அழியாத்தன்மையவாய் முதிர்ந்த கூடுகள் வளர்ந்த நல்ல இல்லினையும்,

அல்குலினையும், மார்பினையும், உணவினையுமுடைய கூடெனக.

தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த ஊரா நற்றேர் உருட்டிய புதல்வர்—தச்சசாதியிற்பிறந்த தொழில்செய்தற்குரிய சிறியோர் பிறர்விரும்பும்படி பண்ணின பிறராலே ஏறப்படாத நல்ல சிறுதேரை உருட்டிக்கொண்டுதிரிந்த பிள்ளைகள்,

தளர் நடை வருத்தம் வீட—தமது தளர்நடையாலுண்டானவருத்தந் தம்மைவிட்டு நீங்கும்படி,

அலர் முலைச் செவிலி அம் பெண்டிர் தழீஇப் பால் ஆர்ந்து அமளித் துஞ்சும் அழகு உடை நல்லில்—பால்சுரந்த முலையினையுடைய செவிலித்தாயராகிய அழகினையுடைய மகளிரைத் தழுவிக்கொண்டு அம்முலையிற் பாலை நிறையவுண்டு தமது படுக்கையிலே துயில்கொள்ளும் அழகையுடைத்தாகிய நல்ல இல்லினையும்,

செவிலியம் பெண்டிரென்பது ஒருமைபன்மைமயக்கம்

தொல் பசி அறியாத் துளங்கா இருக்கை மல்லற் பேர் ஊர் மடியின்—ஏனைநாட்டிற்குஇயல்பாகிய பழையமிடியையறியாத அசையாத குடியிருப்பினையுமுடைய வளப்பத்தையுடைத்தாகிய பெரிய ஊரின்கண்ணே தங்கின்,

மடியா வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி மனை வாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவிர்—தொழிலொழிந்திராத தொழில்செய்வார் கொணர்ந்த வெள்ளிய நெற்சோற்றை மனையின்கண்ணேவாழும் கோழிப்பெடையின்றற சமைத்த பொரியலோடு பெறுகுவிர்;

* "கோழி கூகை யாயிரண் டல்லவை, சூழுங் காலை யளகெண லமையா" என்றார்.

செறுவிற் (உ௩உ) புதுப்பூவினையின் (உ௩ச) மாமலர் கொய்துகொண்டு (உ௩௬) சவட்டிப் (உ௩எ) பெய்தகண்ணியைச் (உ௩அ) சூடித் (உ௩௯) தளராவிருக்கைகளிற் (உ௪உ) கூடோங்கு நல்லஇல்லையும் (உ௪எ) அழகினையுடைய நல்லவில்லையும் (உ௫உ) துளங்காவிருக்கை யினையுமுடைய (உ௫௩) பேரூரிலே தங்குவீராயின் (உ௫ச) வல்சியை (உ௫௫) வாட்டொடும்பெறுகுவிரெனக் கூட்டுக

[மழைவிளை யாடுங் கழைவளர் அடுக்கத், தணங்குடை யாளி தாக்கலிற் பலவுடன், கணஞ்சால் வேழங் கதழ்வுற் றாஅங்கு:] மழை விளையாடும் கழைவளர் அடுக்கத்து அணங்கு உடை யாளி தாக்கலிற் கணஞ் சால் வேழம் பலஉடன் கதழ்வு உற்று ஆங்கு—மேகங்கள் விளையாடித்திரியும் மூங்கில்வளர்கின்ற பக்கமலையிலே தம்மைவருத்துதலையுடைய யாளிபாய்கையினாலே திரட்சியமைந்த யானைபலவுங்கூடிக் கலங்கிக் கூப்பிட்டாற்போல,

எந்திரம் சிலைக்கும் துஞ்சாக் கம்பலை விசயம் அடூஉம் புகை சூழ் ஆலைதொ

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௬௯.

றும்—ஆலையாரவாரிக்கும் மாறாத ஓசையையுடைய கருப்பஞ்சாறறைக் கட்டியாகக காய்ச்சும் புகைசூழ்ந்த கொட்டில்கடோறும்,

ஆலை - ஆகுபெயர்

கரும்பு இன் தீஞ்சாறு விருமபினிர மிசைமின்—கரும்பினது இனிய சாறறை முற்படககுடித்துப பின்னர் அககரும்பின்கட்டியைத் தின்பீராக

* "மூங்கின் மிசைந்த முழந்தா ளிரும்பிடி," †"வீழ்களிறு மிசையாப புலியி னும்" என மிசைதல தின்றறபொருளின மேனின்றது

[வேழ நிரைதது வெண்கோடு விரைஇத், தாழை முடிததுத் தருப்பை வேய்நத, குறியிறைக் குரம்பை:] வெணகோடு விரைஇ வேழம் நிரைததுத் தாழை முடித்துத்தரு ப்பை வேய்நத குறியிறைக் குரம்பை—வஞ்சிமரமும் காஞ்சிமரமுமாகிய வெள்ளிய கொம்புகளைக் கைகளுககுநடுவே கலந்துநாறறி வேழக்கோலை வரிசசாகநிரைததுத் தாழைநாராறகட்டித் தருப்பைபபுலலாலே வேயபபட்ட குறியவிறப்பையுடைய குடிலினையும்,

முடிந்து - முடிதடதெனவிகாரம குறியிறை - பணபுததொகையாதலின், மரு வின்பாததியதாய் நினறது

பறி உடை முன்றில்—மீனைவாரியெடுக்கும பறிகளையுடைய முறறததினையு முடைய,

கொடுங் கால புன்னைக கோடு துமிதது இயறறிய பைஙகாய தூங்கும பாய் மணற பந்தர்—வளைநத காலையுடைய புன்னைகளினது கொம்புகளை வெட்டியிட்ட பசியகாய்கள்நாலும் பரந்த மணலையுடைய பந்தரிலே,

பைஙகாய - சுரைக்காயமுதலியன, புனனைஙகாயுமாம

இளையரும முதியரும் கிளையுடன துவன்றி—இளையவர்களும் முதிர்நதவர்களும சுற்றத்துடனே நிறைந்திருந்து பின்பு,

புலவு நுனைப் பகழியும் சிலையும மானச செவ்வரிக கயலொடு பச்சிறாப் பிறழும் மை இருங் குட்டதது மகவொடு வழஙகி — புலாறுறுமுனையினையுடைய அம்பை யும்வில்லையுமொப்பச சிவந்தவரியினையுடைய கயல்களோடே பசியஇறாப் பிறழும் கருமையையுடைய பெரிய ஆழ்ந்த குளங்களைப பிள்ளைகளோடேயுலாவி மீனைப் பிடித்து,

கோடை நீடினுங் குறைபடல் அறியாத தோள தாழ குளத்த கோடு காத்திருக் கும்—கோடைககாலம் நீட்டித்துநினறதாயினும வற்றுதலையறியாத கையை மேலே கூப்பிமுழுகி நீர்நிலைகாட்டுங்காலததுக் கையமிழுந்துங குளஙகளினுடைய கரை யைக்காத்திருககும்,

---

* கலித்தொகை, இரண்டாவது குறிஞ்சி, கச:—"வாங்குகோ னெல்லொடு வாங்கிவரு வைகன், மூங்கின் மிசைந்த முழந்தா ளிரும்பிடி, தூங்கிலை வாழை கனி புக்கு ஞாங்கர், வருடை மடமறி யூரவிடைத் துஞ்சு, மிருவேங்கு சோலை யிலங்குநீர் வெறப".

† அகநானூறு, களிற்றியானைநிரை, உக:—"தொடங்குவினை தவிரா வசை யி னனுஞ்றுட், இடந்துபிற மறுகுவ தாயினு மிடம்படின்—வீழ்களிறு மிசையாப் புலியினுஞ் சிறந்த—தாழ்வி லுள்ளந் தலைத் தலைச் சிறப்ப"

* "வெளிற்றுடற் குருதிவெள்ள நிலையிது வென்பவேபோற், களிற்றுகிர்ப் பிறழ்பற் பேய்கள் கைகளை யுச்சிக கூப்பி, யளித்தவை பாடியாட" என்றார்பிறரும்.

கொடு முடி வலைஞர் குடிவயிற சேப்பின்—வளைந்த முடியினையுடைய வலையை வீசுவாருடைய குடியிருப்பிலே தங்குவீராயின்,

பந்தரிலே (உசுஎ) துவன்றி (உசுஅ) வழங்கிக் (உஎக) காத்திருக்கும் (உஎங) வலைஞரெனமுடிக்க.

குரம்பையினையும், முன்றிலினையு (உசுரு) முடைய குடி (உஎச) யென்க

அவைப்பு ஆர் அரிசி அம் களித் துழவை—குத்தாத கொழியலரிசியை அழகினையுடைய களியாகத் துழாவி யட்ட கூழை,

மலர் வாய்ப பிழாவிற் புலர ஆற்றி—அகன்ற வாயையுடைய தட்டுப்பிழாவிலே உலரவாற்றி,

பாம்பு உறை புறறின் குரும்பி எய்க்கும் பூம்புறம் நல்லடை அளைஇ—பாம்புகிடக்கின்ற புற்றின்கட்கிடக்கும் புற்றாம்பழஞ்சோறறையொக்கும் பொலிவுபெற்ற புறத்தினையுடைய நல்ல முளையையிடித்துச் சேரஅதனை அதிலேகலந்து,

நெல்லடையும் பாடம்

[தேம்பட, எல்லையும இரவும் இருமுறை கழிப்பி] தேம் பட இரு எல்லையும் இரு இரவும் முறை கழிப்பி—இனிமைபிறக்கும்படி இரண்டுபகலும் இரண்டிரவும் அரியாமல் வைத்து,

[வல்வாய்ச் சாடியின வழைச்சற விளைந்த, வெந்நீ ரரியல் விரலலை நறும்பிழி:]

வல் வாய்ச் சாடியின் வழைச்சு அற விளைந்த—வலியவாயினையுடைய சாடியின் கண்ணே யிளமையறும்படி முற்றின,

விரல் அலை அரியல் வெந்நீர் நறும்பிழி—விரலாலே அலைத்து அரிக்குந்தன்மையை யுடைத்தாகிய வெவ்விய நீர்மையையுடைய நறியகள்ளை,

தண்மீன் சூட்டொடு தளர்தலும் பெறுகுவிர்—மிகவும் உலராத மீனைச் சுட்டதனோடே இளைத்தவளவிலே பெறுகுவிர்;

ஆற்றி (உஎசு) அளைஇக் (உஎஅ) கழிப்பி (உஎக) விளைந்த (உஅ0) பிழியென்க குடிவயிற சேப்பின் (உஎச) பிழியைப் பெறுகுவிரெனமுடிக்க

பசுஞ்ன் பெய்த சுவல் பிணி பைந்தோல—செவ்வியான இறைச்சி யிட்டுவைத்த தோளிடத்தே கோத்து நாற்றின பசியதோலினையுடைய,

என்றது - தூண்டிலிற்கோக்கும் இரையிட்டுவைக்குந் தோற்பையை

கோள் வல் பாண மகன்—மீனைத் தப்பாமறபிடிக்கவல்ல பாண்சாதியிற்பிறந்தவன்.

தலைவலித் தியாத்த, நெடுங்கழைத் தூண்டி னடுங்க நாணகொளீஇக், கொடுவாயிரும்பின் மடிதலை புலம்பப், பொதியினா கதுவிய போழ்வாய் வாளை:

---

* சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், ௬௪உ:— "வெளிற்றுடற் குருதி வெள்ள நிலையிது வென்ப வேபோற், களிற்றுகிர்ப் பிறழபற் பேய்கள் கைகளை யுச்சிக் கூப்பி, யளித்தவை பாடி யாடக் குறுநரி நக்கு வேழம், விளித்தன வழுங்கும் பாறும் விலாவிறுக் கிடந்த வன்றே"

நெடுங் கழை தலை வலித்து யாத்த நாண துண்டில் கொளீஇப் பொதி இரை—நெடிய மூங்கிற்கோலைத் தலையிலேவலித்துக்கட்டின கயிற்றிடத்தே தூண்டிலைக் கொளுத்தி அதனைமறையப் பொதிந்த இரையை,

கொடு வாய இரும்பின் மடி தலை புலமப நடுங்கக் கதுவிய நீரோழ் வாய் வாளை—வளைந்த வாயினையுடைய தூண்டிலினது மடித்ததலை இரையின்றித் தனிக்கும்படியாகக் கயிறுநடுங்க கௌவி அகப்படாதுபோன அங்காந்தவாயையுடையவாளைமீன்,

நீர் நணிப பிரமபின் நடுஙகு நிழல வெரூஉம் நீதது உடை நெடுங்கயம் — நீர்க்கு அணிததாயநின்ற பிரமபினது காறறுலைசையுநிழலை நீரிற்கணடஞ்சும் பெருக்கினையுடைய நெடியகுளததிலே,

தீப் பட மலாநத கடவுள் ஒணபூ அடைதல ஓமபி— நெருப்பின்றன்மை நீரிலேயுண்டாகபபூத்த கடவுள்சூடுதறகுரிய ஒள்ளிய தாமரைப்பூவைப் பறித்துமுடித்தலைப் பரிகரித்து,

[உறைகான் மாறிய வோஙகுயா நனந்தலை, யகலிரு வானத்துக குறைவி லேய்ப்ப]

ஓங்கு உறை கானமாறிய உயா அகல இரு வானததுக குறைவில் ஏயப்ப—ஓஙகுகின்ற துளி காலவிழுதலதவிர்ந்த உயாசசியையுடைய அகன்ற பெரிய வானத்திடததுக் குறைவில்லாகிய இந்திரவில்லையொபப,

[அரககிதழக குவளையொடு நீல நீடி, முரட்பூ மலிந்த முதுநீர்ப் பொய்கை:] அரககு இதழ்க் குவளையொடு நீலம் நீடி முரண பூ மலிந்த முதுநீா நனந்தலைப் (உகூக) பொயகை— சாதிலிஙகம்போன்ற இதழையுடைய குவளையோடே நீலப்பூவும்வளர்ந்து ஒன்றறகொனறு நிறம மாறுபடுதலையுடைய ஏனைப்பூக்களுமிகக முதிய நீரையுடைததாகிய அகன்றவிடததையுடைய பொய்கைகளிடததே,

குறுநா இட்ட கூமபு விடு பல மலா பெரு நாள் அமயத்துப் பிணையினிர் கழிமின— பறிபபாா நுஙகளுககிட்ட குவிதலநெகிழ்ந்த பலபூககளைப பெரிதாகிய நாட்காலததேசூடிப போமின,

வாளை (உஅஎ) வெரூஉங (உஅஅ) கயததிலே மலாந்த (உஅகூ) பூவை ஓம்பிக் (உகூ0) குறைவிலேயபபப் (உகூஉ) பூமலிந்த பொயகைகளிடததே (உகூச) குறுநரிட்டமலரைப (உகூரு) பிணையினிாகழிமினெனமுடிகக.

செழுங கனறு யாதத சிறு தாள பநதா—வளவிய கன்றைக்கடடின சிறியகால்களையுடைய பநதரினையும்,

[பைஞ்சேறு மெழுகிய படிவ நனனகா.]

பைஞசேறு மெழுகிய நனனகா—ஆப்பியான் மெழுகிய நன்றாகிய அகங்களையும்,

படிவம்—தாம வழிபடுந்தெயவஙகளையுமுடைய உறைபதி (கூ0க) யென்க.

மனை உறை கோழியொடு ஞமலி துன்னாது — மனைகளிலேதஙகுங்கோழிகளுடனே நாயுஞசேராமல,

வளை வாயக் கிளளை மறை விளி பயிறறும — வளைநதவாயினையுடைய கிளிக்கு வேததின் ஓசையைக் கறபிககும்,

மறை காப்பாளர் உறை பதிச் சேப்பின்—வேததைதைக் காத்தற்றொழிலைச் செய்வாா இருக்கின்ற ஊரிடததே தஙகுவீராயின்,

துன்னமல் (உகூகூ) உறையும்பதியென்க.

பெரு நல் வானத்து வடவயின் விளங்கும்— பெரிய நன்றாகிய விசும்பிடத்து வடதிசைக்கண்ணே நின்றுவிளங்கும்,

சிறுமீன் புரையும் கற்பின்—அருந்ததியையொக்குங் கற்பினையும்,

நறு நுதல்— நறிய நுதலினையுமுடைய,

வளைக் கை மகடூஉ வயின் அறிந்து அட்ட— வளையையுடையவாகியகையையுடைய பார்ப்பினி பதமறிந்தட்டனவற்றை,

என்றது - பாற்சோறு பருப்புச்சோறு முதலியவற்றை

சுடர்க் கடை— ஞாயிறுபட்ட காலத்தே,

பறவைப் பெயர்ப்படு வத்தம்—பறவையினது பெயரைப்பெறுநெல்லு,

என்றது-இராசான்னமெனனும் பெயர்பெறுகின்ற நெல்லென்றவாறு ஆகுதி பண்ணுதற்கு இந்தநெல்லுச்சோறே சிறந்ததென்று இதனைக்கூறினார் இனி மின்மினி நெல்லென்பாருமுளர், இப்பெயர் வழக்கினமையையும், ஆகுதிக்குச் சிறவாமையையு முணர்க.

[சேதா நறுமோர் வெண்ணெயின மாதுளத், துருப்புறு பசுங்காயப் போழொடு கறிகலந்து, கஞ்சக நறுமுறி யளைஇ] மாதுளத்துப் பசுங்காய் கறி கலந்து கஞ்சக நறு முறி அளைஇச் சேதா நறு மோர் வெண்ணெயின் உருப்பு உறு போழொடு— கொம்மட்டிமாதுளையினுடைய பசியகாய மிளகுபொடிகலக்கப்பட்டுக் கருவேம்பினது நறியஇலையளாவப்பட்டுச் சிவந்தபசுவினது நறியமோரிற்கடைந்த வெண்ணெயின்கணணேகிடந்து வேகலின் வெம்மையுறுகின்ற வகிரோடே,

[பைந்துணர், நெடுமரக் கொக்கி னறுவடி விதிர்த்த, தகைமாண் காடியின்] நெடுமரக் கொக்கின் பைந்துணர் நறு வடி விதிர்த்த தகை மாண் காடியின்—நெடிய மரமாகிய மாவினது பசியகொத்திடத்து நறிய வடுவினைப் பலவாகப்போகட்ட அழகுமாட்சிமைப்பட்ட ஊறுகறியோடே,

வகைப்படப் பெறுகுவிர்—சோற்றின்கூறுகளுண்டாகப் பெறுகுவிர்,

சேப்பின் (கூ0க) மகடூஉ (கூ0ச) வத்தத்தானுண்டான அரிசியை (கூ0கு) அட்டனவற்றைச் (கூ0ச) சுடர்க்கடையிலே (கூ0கு) போழொடே (கூ0எ) காடியோடே பெறுகுவிரென்க.

வண்டல் ஆயமொடு உண்டுறைத் தலைஇப் புனல் ஆடும் மகளிர் இட்ட பொலங்குழை — விளையாட்டினையுடைய திரள்களோடே நீருண்ணுந்துறையிலேகூடி நீராடுகின்றமகளிர் போகட்டுப்போன பொன்னாற்செய்த மகரக்குழையினை,

இரை தேர் மணிச் சிரல் இரை செத்து எறிந்தென — இரையைத்தேடுகின்ற நீலமணிபோலும்சிச்சிலி தனக்கு இரையாகத்தேணிந்தெடுத்ததாக,

புள் ஆர் பெண்ணைப் புலம்பு மடற் செல்லாது —பறவைகள் நிறைந்திருக்கின்ற பனையில் தனித்தமடலிற்போகாமல்,

கேள்வி அந்தணர் அருங்கடன் இறுத்த வேள்வித் தூணத்து அசைஇ-யூற் கேள்வியையுடைய அந்தணர் செய்தற்கரிய கடனைச் செய்துமுடித்த யாகசாலையிடத்துநட்ட யூபத்தின்மேலேயிருந்து,

[யவனர், ரோதிம விளக்கி னுயாமிசைக் கொண்ட] யவனர் உயர்மிசைக் கொண்ட ஓதிம விளக்கின்— சோனகர் கூம்பின்மேலிட்ட அன்னவிளக்குப்போல,

ஈண்டுக் காரன்னமென்றுணர்க.

வைகுறும் மீனின்— இராககாலம் விடிதற்குக்காரணமான * வெள்ளியாகிய மீன்போல,

பையத் தோன்றும்—ஒளி விட்டுவிளங்காது தோன்றும்,

நீர்ப்பெயற்று எல்லைபபோகி—நீரபபெயற்றென்னும் ஊரினெல்லையிலேபோய்,

அசைஇ விளக்கின மீனிறற்றேனறும் நீரபபெயற்றென்க.

பாற கேழ் வால உளைப புரவியொடு வடவளந் தரூஉம் நாவாய் சூழ்ந்த நளி நீர்ப படப்பை — பாலபோலும் வெள்ளியநிறத்தினையும வெள்ளிதாகிய தலையாட்டத்தினையுமுடைய மேற்றிசைக்கணுள்ளவாகிய குதிரைகளுடனே வடதிசைக்கணுள்ளவாகிய நுகரப்படும்பொருள்களைக் கொண்டுவந்துதரும மரக்கலங்கள்சூழ்ந்துகிடக்கப்பட்ட பெருமையையுடைய கடற்பக்கத்தினையும்,

[மாட மோங்கிய மணனமலி மறுகிற், பரதா மலிந்த பலவேறு தெருவிற், சிலதா காக்குஞ் சேணுயா வரைப்பின் ]

மணல மலி மறுகின் சிலதா காககும சேண உயா வரைப்பின் — மணல்மிக்க தெருவுகளில தொழிலசெயவார்காக்கப்படும் மிகவுமுயர்ந்த பண்டசாலைகளையும்,

தொழிலசெயவாா - கரமகாரா.

பரதா மலிந்த மாடம ஓங்கிய பல வேறு தெருவின—பரதவாமிக்க மாடங்களுயாந்த பலவாயவேறுபட்ட தெருக்களையும்,

நெல உழு பகடடொடு கறவை துன்னு மேழகத் தகரோடு எகினங் கொட்கும கூழுடை நலலில்—நெல்லினைப பெறுதற்குழுகின்ற எருதுகளுடனே பசுக்கள்நெருஙகாவாய மேழகக்கிடாயோடே நாயுஞ்சுழன்றுதிரியும் சோறுடைய நன்றானஅகங்களையுமுடைய படடினம (௩௬௬)

இது திமிலா முதலியோரிருப்புக்கூறிறறு

[கொடும்பூண மகளிா]

உயா நிலை (௩௬உ) வான் தோய் மாடத்துக (௩௬௩) கொடும்பூண் மகளிர்—உயர்ந்தநிலைமையையுடைய தேவருலகத்தைத்தீணடும மாடத்துறையும் வளைந்த பேரணிகலங்களையுடைய மகளிா,

கொன்றை மென் சினைப் பனி தவழ்பவைபோற பைங்காழ அலகுல நுண்டுகில் நுடங்க—கொன்றையிடத்து அரும்புகளையுடைய மெல்லிய கொம்புகளிலே பனிமாசுகிடந்து தவழ்கின்றவைபோலப் பசிய மணிகள்கோத்த வடங்களையுடைய அல்குலிற் கிடக்கின்ற மெலலியதுகிலசைய,

மால் வரைச் சிலம்பின் மகிழ்சிறந்து ஆலும் பீலி மஞ்ஞையின் இயலி—பெருமையையுடைய பக்கமலையிலே மனவெழுச்சிமிக்கு ஆரவாரிக்கும் தோகையையுடையமயில்போலே உலாவி,

[கால, தமணியப பொற்சிலம் பொலிப்ப வுயாநிலை, வான்றோய மாடத்து வரிப்பந் தசைஇ:]

தமணியக் கால பொன் சிலம்பு ஒலிப்ப வரிப பந்து அசைஇ — பொற்பூண்களையுடைய கால்களிடத்தனவாகிய பொன்னாற்செய்த சிலம்புகளாரவாரிப்ப நூலால் வரிதலையுடைய பந்தையடித்து இளைத்து,

* வெள்ளிதாகிய மீனென்றும் பிரதிபேதமுண்டு.

[கைபுனை குறுந்தொடி தத்தப் பைப்பய, முதத வார்மணற் பொற்கழங் காடும்:] முத்த வார் மணற் பைப்பயக் கை புனை குறுந் தொடி தததப் பொற கழங்கு ஆடும்—முத்தையொத்த வார்ந்தமணலிலே மெத்தென மெத்தெனக் கையிற்புனைந்த குறுந்தொடியலசையப் பொன்னாற்செய்த கழலைகொண்டு விளையாடும,

மாடத்து (௬௬) மகளிர (௬உஎ) நுடஙக (௬உ௧) இயலி (௬௬௧) ஒலிபப (௬௬உ) அசைஇப் (௬௬௬) பின்னாக கழங்காடும் (௬௬௫) பட்டின (௬௬௬) மென்க

இது வணிகரிருப்பைக்கூறிற்று.

படப்பையினையும் (௬உ௧) வரைபபினையும் (௬உ௪) தெருவினையும் (௬உ௬) இல்லினையு (௬உஎ) முடையபட்டின (௬௬௬) மென்க

பட்டினமருங்கின் அசையின்—பட்டினத்திடததே இளைப்பாறுவீராயின்,

முட்டில்—முட்டிலலையாகப பெறுகுவி (௬௪௫) ரெனமேலே கூட்டுக

பைங்கொடி நுடங்கும் பலர் புகு வாயில — பசியகொடிகளசையும களனுணபார்பலரும் புகுகின்ற வாயிலிடதது,

[செம்பூத் தூய செதுக்குடை முன்றில] தூய செமபூச செதுகசு உடை முன்றில்— தெய்வத்திறத்துத்தூவின செய்யபூவாடலையுடைய முறறததில,

கள் அடு மகளிர் வள்ளம நுடககிய வாாநது உகு சின்னீா வழிந்த குழம்பின— கள்ளைச்சமைககின்றமகளிர் வட்டிலகழுவின வடிநதுசிந்தும் சிலநீா பலகால்வடிதலின் நிறைந்துவழிந்த குழமபிடதது,

ஈர்ஞ்சேறு ஆடிய இரும் பல குட்டிப பன்மயிாப பிணவொடு—ஈரததையுடைய சேற்றையளைந்த கரிய பலவாகிய குட்டிகளையுடைய பலவாகிய மயிாகளையுடைய பெண்பன்றிகளுடனே,

பாயும் போகாது—புணாசசியைக கருதுஙகருததாற போகாமல,

என்றது-புணரிற கொழுப்பின்றுமென்றவாறு.

நெல்மா வல்சி தீறறி— நெல்லையிடிதத மாவாகிய உணவைத தின்னபபணணி,

பன்னாள் குழி நிறுத்து ஓம்பிய குறுந்தாள் ஏறறைக கொழு நிணத் தடியொடு —பலநாள் குழியிலேநிறுத்திப் பாதுகாதத குறிய காலையுடைய ஆணபனறியிற கொழுவிய நிணததையுடைய தசையோடே,

* "ஆற்றலொடு புணாநத வாணபால" ஆதலின ஏறறையெனறாா

கூர் நறாப் பெறுகுவிா—களிப்புமிகக களளைப பெறுகுவிா,

வாயிலிடத்து (௬௬எ) முறறத்துக் (௬௬அ) குழமபிடததுச (௬௪0) சேறு (௬௪௧) என்க.

போகாமற (௬௪உ) குழிநிறுத்து (௬௪௪) என்க

அசையிற் (௬௬௬) பெறுகுவிரென்க.

[வான ஊன்றிய மதலை போல, வேணி சாததிய வேறறருஞ சென்னி, விண் பொர நிவந்த வேயா மாடத்து]

வானம் ஊன்றிய மதலை போல விண பொர நிவந்த மாடம்— ஆகாயத்தேதிரி

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௪௧ "ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லா, மேற்றைக் கிளவி யுரித்தென மொழிப"

கின்ற தேவருலகுக்கு முட்டுக்காலாக ஊன்றிவைத்த ஒருபற்றுக்கோடுபோல விண்ணைத்தீண்டுமெபடி யோங்கின மாடம்,

சாத்திய வணி ஏற்றருஞ் சென்னி மாடம்— தனனிடதது சசாததிய வணியால ஏறுதற்கரிய தலையினையுடையமாடம,

வேயா மாடதது — கற்றைமுதலியவற்றால வேயாது சாநதிட்ட மாடததிடததே,

இரவில மாட்டிய இலஙகு சுடா—இராககாலததேகொளுததின விளஙகுகினற விளக்கு,

[ஞெகிழி யுரவுநீ ரழுவத தோடுகலங் கரையுந, துறை] உரவு நீா அழுவதது ஞெகிழி ஓடு கலம கரையும் துறை — உலாவுகினற கடறபரபபிலேவநது நாமசேரும் துறையன்றென்று நெகிழ்ந்து வேறோ துறைககண ஓடுஙகலஙகளை இது நந்துறையென்றழைககுந்துறை,

இனி ஞெகிழியைக் கடைககொள்ளியாகக அதனையெரிததுககொளுததின இலங்குசுடரொனறுமுரைபபா.

பிறகுகு ஒழியப் போகி—பின்னேகிடககபபோய,

[கறையடிக, குன்றுறழ் யானை மருங்குலேய்க்கும், வணடோட்டுத தெஙகின]

குன்று உறழ கறை அடி யானை மருஙகுல ஏயக்கும் தெஙகின — மலையோடு மாறுபடுகின்ற உரலபோனற அடியினையுடைய யானையினுடமபையொககும சருசசரையையுடைததாகிய தெங்கினுடைய,

[வாடுமடல் வேய்நத]

வண்டோட்டு (௩௫௩) வாடு மடல வேயநத—வளவிய இலையினையுடைய உலாநத பழுத்தலை முடைநதுவேய்நத தனிமனை (௩௫௫) யெனக

மஞசள் முன்றில்— மஞசளையுடைய முறறததினையும்,

மணம் நாறு படபபை — மணநாறுகின்ற பூந்தோட்டஙகளையுமுடைய,

தணடலை உழவர் தனி மனைச சேப்பின்—தோபபுககுடிகளுடைய ஒப்பிலலாத மனைகளிலேதங்கின,

[தாழகோட் பலவின் சூழசுளைப பெருமபழம]

தாழ கோள் பலவின பழம்—தாழ்நத குலைகளையுடைய பலாவினதுபழம்,

சூழ் சுளைப பெரும் பழம— தின்பாா விரும்பிசசூழும் சுளையையுடைய பெரிய பழததையும்,

வீழ் இல தாழைக குழவித தீநீா— வீழுதிலலாத தாழையாகிய தெங்கின் இளைதாய இனியநீரையும்,

* "பிள்ளை குழவி கன்றே போதெனக, கொள்ளவு மமையு மோரறி வுயிர்க்கே" என்றதனாற குழவித்தீநீரென்றா

கவை முலை இரும்பிடிக கவுள மருபபு ஏயக்கும்— கவைதத முலையையுடைய பெரிய பிடியினுடைய கவுளிடததுக கொமபுகளையொககும்,

[குலைமுதிர் வாழைக் கூனி வெணபழம்] குலை கூனி முதிா வாழை வெண்பழம்— குலைகள் தம்பெருமையாலே நிலததே தாழவளைந்து முறறின வாழையினது வெள்ளிய பழத்தையும்,

திரள் அரைப் பெண்ணை நுங்கொடு பிறவுந் தீம் பஃறரம் முனையின்— திர

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், உச.

ண்ட அடியையுடைய பனையினது நுங்கோடே வேறும் இனியபலபண்டங்களையும் வெறுக்கின்,

[சேம்பின், முளைபபுறம்] முளைபபுறச சேம்பின்—முளையை இடத்தேயுடைய சேமபினது இலையோடே,

முதிர் கிழங்கு ஆர்குவிர்—முற்றின வள்ளிமுதலியன கிழங்குகளைத் தின்பீர்; சேப்பிற் (ஙஙுஙு) பழத்தையும் (ஙஙுசு) நீரையும் (ஙஙுஎ) பழத்தையும் (ஙஙுக) நுங்கோடே (ஙஙுo) பலபண்டங்களையுமுனையிற் (ஙஙுக) கிழங்கார்குவிரென்க.

பகற் பெயல் மழை வீழ்ந்தன்ன மாத் தாட் கமுகின் புடை சூழ் தெங்கின்—பகற்பொழுதிலே பெய்தலையுடைய மழை காலவிழுந்தாலொத்த பெரிய தண்டினையுடைய கமுகுகளின் பக்கத்தேசூழ்ந்த தெங்கினுடைய,

முப்புடைத் திரள் காய் — மூன்றுபுடைபபினையுடைய திரண்டகாய்,

பழுத்தால அடி மூன்றுகப்புடைத்தல் அதறகியல்பு. இனி மூப்புடைத்திரள் காயும் பாடம்

ஆறு செல் வம்பலர் காய் பசி தீரச சோறு அடு குழிசி இளக வீழுஉம்— வழிச் செல்கின்றபுதியோர் தமது மிக்கபசிதீரும்படி சோறறையாக்குகின்றபானை அடுப்பினின்றும் அசைந்துவிழும்படி நிலத்தேவிழும்,

வீயா யாணர் வளங் கெழு பாக்கத்து — வீடாத புதுவருவாயினையுடைய செல்வம்பொருந்தின பாக்கத்திடத்து,

பன்மரம் நீளிடைப் போகி—பலமரங்கள்வளர்ந்த இடத்திலேபோய்,

[நன்னகர், விண்டோய் மாடத்து விளங்குசுவ ருடுத்த.] விளங்கு சுவர் உடுத்த விண் தோய் மாடத்து நன்னகர் — விளங்குகின்ற மதில்சூழ்ந்த விண்ணைத்தீண்டும் மாடங்களையுடைய நன்றாகிய ஊர்களிலே,

வாடா வள்ளியின் வளம் பல தரூஉம் நாடு பல கழிந்த பின்றை — வாடுங்கொடியினையுடைய வள்ளியல்லாத வள்ளிக்கூத்தின் வளப்பம்பலவற்றையுந் தருதற்குக்காரணமாகிய புறநாடுபலவற்றையும் போனபின்பு,

வளம்பலவென்றார், இக்கூத்து ஆண்பாறகும்பெண்பாற்கும் பொதுவாய் வருதலின்

என்றது-சிறப்புடையநாடுகளைப்பாடித் தாழ்ச்சிபெற்ற இழிகுலத்தோருறையும் புறநாடுகளைப் பாடாமற்றொருக்கின்றார், அவைபுறநாடென்பதுதோன்ற அவர்கள் காண்டற்குரிய வள்ளிக்கூத்தினைக்கூறி அதனைவெளிப்படுத்தினார் இது, புறத்திணையியலில் * "வெறியறிசிறப்பு" என்னுஞ்சூத்திரத்து 'வாடாவள்ளி' என்பதனாலும், † "மண்டம ரட்ட மறவர் குழாத்திடை" என்னு முதாரணத்தானும் உணர்க.

நீடு குலைக் காந்தள் அம் சிலம்பிற் களிறு படிந்தாங்கு — நீண்ட பூங்கொத்துக்களையுடைய காந்தளையுடைய அழகிய பக்கமலையிலே யானை கிடந்தாற்போல,

பாம்பு அணைப் பள்ளி அமர்ந்தோன் ஆங்கண்— பாம்பணையாகிய படுக்கையிலே துயில்கொண்டோனுடைய ‡ திருவெஃகாவிடத்து,

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், ரு.

† "மண்டம ரட்ட மறவர் குழாத்திடைக் - கண்ட முருகனுங் கண்களித்தான் - பண்டே - குறமகள் வள்ளிதன் கோலங்கொண் டாடப் - பிறமகள் நோற்றான் பெரிது."

‡ திருவெஃகாவென்பது திருமாலினுடைய நூற்றெட்டுத் திருப்பதியுளொன்று. இது காஞ்சிப்பதியிலுள்ளது.

காந்தளென்றதற்கேற்பப் பாம்பணையென மெலிந்தார்.

[வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பா]

வெயில் நுழைபு அறியாப் பொதும்பா— ஞாயிற்றின்கதிர் தோன்றியகாலத்து ம் படுகின்றகாலத்துமுட்பட்ச் சிறிதுஞ் செலவுதலறியாத பொதும்பா,

குயில் நுழை பொதும்பா — இலைநெருக்கத்தாலே குயில்கள் நுழைந்துசெல லும் இளமரக்காவில,

குறுங் கால் காஞ்சி சுற்றிய நெடுங் கொடிப் பாசிலைக் குருகின் புன் புற வரிப் பூ—குறிய காலினையுடைய காஞ்சிமரத்தைச்சூழ்ந்த நெடியகொடியினையும் பசிய இலையினையுமுடைய குருக்கத்தியினுடைய புறக்கெனறபுறத்தினையும் வரிகளையுமு டைய பூக்கள் உறைப்ப (கஎக) வெனக.

கார் அகல் கூவியன் பாகொடு பிடித்த இழை சூழ் வட்டம் பால கலந்தவை போல — கரிதாகியசட்டியிலே அப்பவாணிகன பாகுடனே வேண்டுவனகூட்டிச் சோக்கபட்ட நூலபோலச் சூழந்துகிடக்கின்ற அப்பம் பாலிலே கிடந்தவைபோல,

சட்டியிலே கிடந்த அப்பம் பின்பு பாலிலேகிடந்தவைபோலவென்க

பிடித்தவட்டமென்க

நிழல் தாழ் வார் மணல் நீர் முகத்து உறைப்ப—நிறங்கிளர்கின்ற வார்ந்த மண லிடத்துக் குழிகளினின்ற நீரிடத்தே மிகவிழும்படி,

உறைப்பவென்றதனைத் துளிப்பவென்றல் ஈண்டு ஒப்பன்மையான "உப்பு றைப்ப" என்றாற்போலக்கொள்க.

புனல் கால் கழீஇய பொழில்தொறும்—நீர் பெருகியகாலத்தே ஏறிய விடத்தைத் தூய்தாக்கிப்போன பொழில்கடோறும்,

என்பதனால், முன்பு நீர்நின்றுபோகலிற் பூத்தவென்றார்

திரள் கால் சோலைக் கமுகின் சூல் வயிற்றன்ன நீலப் பைங்குடத் தொலைச்சி— திரண்ட தண்டினையுடைய சோலையிடத்துநிற்குங் கமுகினுடைய சூற்கொண்டவயி ற்றையொத்த பச்சைக்குப்பிகளையுண்டு போக்கி,

நாளும் பெருமகிழ் இருக்கை மரீஇ—நாடோறும் பெரிய மகிழ்ச்சியையுடைய இருப்பைமருவி,

சிறு கோட்டுக் குழவித் திங்கட் கோள் நேர்ந்தாங்கு—சிறிய கோட்டையுடை ய இளைதாகிய பிறையைச் செம்பாம்பு தீண்டிற்றைப்போல,

இஃது இல்பொருளுவமை

சுறவுவாய் அமைத்த சுரும்பு சூழ் சுடர் நுதல்—மகரவாயாகிய தலைக்கோலத் தைச் சேர்த்தின சுரும்புகள்சூழும் ஒளியையுடைய நுதலினையும்,

நறவு பெயர்த்து அமைத்த நலலெழில் மழைக் கண்—கள்ளினை உண்டுபொருந்தி ய நன்றாகிய அழகினையுடைய குளிர்ச்சியையுடைத்தாகியகண்ணையுமுடைய,

வள்ளத்தி னறவைத் தமமுள்ளேயாக்கினமையிற் பெயர்த்தென்றார்.

மடவரல் மகளிரொடு பகல் விளையாடி—மடப்பந்தோற்றுதலையுடைய மகளி ரோடே பகற்பொழுது விளையாடி,

பெறற்கு அருந் தொல் சீர்த் துறக்கம் ஏய்க்கும் பொய்யா மரபிற் பூ மலி பெருந் துறை — பெறுதற்கரிய பழைமையையுடைத்தாகிய புகழினையுடைய துறக்கத்தை

யொக்குந் தப்பாமல் நீர்வருமுறைமையினையுடைய பூமிகுகின்ற பெரிய துறைமட்டத்தே.

துறை, நுகர்பொருள்குறைவின்மையிற றுறக்கமேயக்குமென்றுர.

செவ்வி கொள்பவரோடு அசைஇ—இளவேனிற்செவ்வியை நுகர்வாரோடு இளைப்பாறி,

அவ்வயின் அருந் திறற் கடவுள் வாழ்த்தி—அத்திருவெஃகாவணையில அரியதிற லினையுடைய திருமாலைவாழ்த்தி,

[சிறிதுநுங், கருங்கோட் டின்னிய மியக்கினிர்கழிமின் | நும் கருங் கோட்டு இன்னியம் சிறிது இயக்கினிர் கழிமின—நுமமுடைய கரிய தண்டினையுடைய இனியயாழைச் சிறிதுவாசித்து அவ்விடத்துநின்றும் போமின்,

ஆங்கட் (ருளரு) பொதும்பர (ருஎச) குருகின்பூ (ருஎரு) உறைப்பக (ருஎகூ) கழிஇயபொழிற்றும் (ருஅ0) மகளிரோடேபகலவிளையாடிப (ருஅஎ) பெருந்துறைச் (ருஅகூ) செவ்விகொள்பவரோடசைஇ (ருகூ0) நீலப்பைங்குடந் தொலைச்சி (ருஅஉ) மரீஇக் (ருஅரு) கடவுள்வாழ்த்தி (ருகூக) இயக்கினிர்கழிமினெனமுடிக்க.

[காழ்ோர் இகழ்பதம் நோக்கிக் கீழ, நெடுங்கை யானை நெய்மிதி கவளங், கடுஞ்சூன் மந்தி கவருங் காவிற, களிறுகத னடக்கிய வெளிறில கந்தின் ]

*வெளிறு இல கந்திற கதன அடக்கிய களிறு கீழ நெடுங்கையானை—*** கருந்தின்கின்ற

நெய் மிதி கவளம்— நெய்யைவார்த்து மிதித்தகவளங்களை,

கடுஞ் சூல் மந்தி காழோர் இகழ பதம் நோக்கிக் கவரும் காவின்— முற்பட்ட சூலையுடைய மந்தி பரிக்கோலையுடையோர் நெகிழ்ந்தசெவ்வியைபபார்த்து எடுத்துக கொண்டுபோய்த்தின்னுஞ் சோலையினையும்,

திணடேர் குழித்த குண்டு நெடுந் தெருவின்— திண்ணியதேர்கள் பலகால் ஓடிக்குழித்த தாழ்ச்சியையுடைய நெடியதெருவினையும்,

[படைதொலை பறியா மைந்துமலி பெரும்புகழ்க், கடைகால் யாத்த பலகுடி கெழீஇக, கொடையுங் கோளும் ]

தொலைபு அறியா மைந்து மலி பெரும்புகழ்ப் படை— கெடுதலறியாத வலிமிகுகின்ற பெரிய புகழினையுடைய படையினையும்,

கொடையும் கோளும் கெழீஇக் கால்யாத்த பலகுடிக் கடை— பண்டங்களைவிற்றலும் கொள்ளலும்பொருந்தி அவ்விடத்து நெருங்கின பலகுடிகளையுடைய கடையினையுமுடைய மூதூர (சகக)

வழங்குநர்த் தடுத்த அடையா வாயில— உலகத்துக் கொடுப்பாரைக் கொடாமற்றடுத்த பரிசிலாககடையாத வாசலினையும்,

இவன் கொடைப்பெருமையால் பிறர்தவிர்ந்தாரெனறுர.

மிளை சூழ் படப்பை— காவற்காடுசூழ்ந்த பக்கத்தினையும்,

[நீனிற வுருவி னெடியோன கொப்பூழ், நான்முக வொருவற் பயந்த பல்விதழத், தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றி] நான்முக ஒருவற் பயந்த நீனிற

---

* இந்தப்பாகத்துக்கு எந்தப்பிரதிகளிலும் உரைகிடைத்திலது. வயிரமுள்ள கந்திற் கோபத்தையடக்கிய ஆண்யானைகளும், கீழேதாழ்ந்த நெடியகையையுடைய பெண்யானைகளுந்தின்கின்றவென்க.

உருவின் நெடியோன் கொப்பூழ்ப் பல் இதழ்த் தாமரைப் பொகுட்டிற் காணவரத் தோன்றி—நான்குமுகத்தையுடைய ஒருவனைப்பெற்ற நீலநிறத்தையுடைத்தாகிய வடிவினையுடைய திருமாலுடைய திருவுந்தியாகிய பலஇதழையுடைய தாமரையினது கொட்டைபோலே அழகுவிளங்கத்தோன்றி,

இதனுற * பழமையுஞ் சிறப்பும் தூய்மையுங் கூறினார்

சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின்—செங்கலாற்செய்யப்பட்டு உயர்ந்த புறப்படைவீட்டைச்சூழ்ந்த மதிலினையும்,

[இழுமென் புள்ளி னீண்டுகிளைத் தொழுதிக், கொழுமென் சினைய கோளியுள்ளும்.] கொழு மென்சினைய இழுமென் புள்ளின் ஈண்டு கிளைத் தொழுதிக் கோளியுள்ளும்— கொழுவிய மெல்லிய கொம்புகளிடத்தனவாகிய இழுமென்னும் ஓசையையுடைய புறவினுடைய திரளுகின்ற சுற்றத்திரட்சியையுடைய பூவாமற் காய்க்கு மரங்களில் விசேடித்தும்,

பழம் மீக்கூறும் பலாஅப் போல— பழத்தின் இனிமையான் மேலாகச்சொல்லும் பலாமரத்தையொக்க,

புலவுக் கடல் உடுத்த வானஞ் சூடிய மலர் தலை உலகத்துள்ளும் — புலால்நாற்றத்தையுடைய கடல்சூழ்ந்த ஆகாயங்கவிந்த அகன்ற இடத்தையுடைய உலகத்து நகரில் விசேடித்தும்,

பலர் தொழ விழவு மேம்பட்ட பழவிறல் மூதூர் — பலசமயத்தாருந் தொழும்படி எடுத்த விழாக்களாலே ஏனைநகரிகளின் மேலான பழைய வெற்றியினையுடைய பழையவூராகிய,

அவ்வாய் வளர் பிறை சூடிச் செவ்வானத்து அந்திவாய் ஆடுமழை கடுப்ப— அழகிய இடத்தையுடைய வளரும்பிறையைத் தன்மேலேசூடிச் செக்கர்வானமாகிய அந்திக்காலத்தேயுலாவுகின்ற மேகத்தையொப்ப,

கொம்பும் யானையும் குருதியும் உவமிக்கப்படும்பொருள்,

[வெண்கோட் டிரும்பிணங் குருதி யீர்ப்ப, வீரைம் பதின்மரும் பொருதுகளத் தவியப், பேரமர் கடந்த கொடுஞ்சி நெடுந்தேர், ஆரரச செருவி னைவர் போல:]

வெண்கோடு இரும்பிணம் குருதி ஈர்ப்பப் பொருது — வெள்ளிய கொம்பினையுடைய கரியயானைப்பிணத்தைக் குருதியாகிய ஆறு இழுத்துக்கொண்டுபோம்படி பொருது,

ஈர் ஐம்பதின்மரும் களத்து அவியப் பேர் அமர் கடந்த ஐவர்போல—துரியோதனன் முதலிய நூற்றுவரும் களத்திலேபடும்படி பெரியபோரைவென்ற தருமன் முதலியோரைப்போல,

'கொடுஞ்சி நெடுந்தேர் ஆரரச செருவின் ஐவர்— முன்னே தாமரைமுகையினையுடைய நெடியதேரினையும் தொலையாத போரினையுமுடைய ஐவர்

அடங்காத் தானையோடு உடன்று மேல் வந்த — ஓரொண்ணின்கண் அடங்காத படையுடனே கோபித்துத் தன்மேல்வந்த,

ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஆர்த்து— தன்னைவலைப் பொருந்தாத பகைவர் தோற்றவிடத்தே வெற்றிக்களிப்புத்தோன்ற ஆரவாரித்து,

[கச்சி யோனே கைவண் டோன்றல், னச்சிச் சென்றோர்க் கேம மாகிய.] கை

* பெருமையுமென்றும் பிரதிபேதமுண்டு.

வண் தோன்றல் நச்சிச் சென்றோர்க்கு ஏமம் ஆகிய கச்சியோனே — கைவளப்பத்தையுடைய தலைவன் தன்பரிசிலைவிரும்பித் தன்பாற் சென்றோர்க்குப் பாதுகாவலாகிய காஞ்சீபுரத்தேயிருக்கின்றோனை,

படப்பையினையும் (சுoக), காவினையும் (ருகரு), வரைப்பினையும் (சுoரு), அடையாவாயிலினையும் (சுoக), தெருவினையும் (ருகஎ), கடையினையும் (ருகக), படையினையு (ருகஅ) முடைய மூதூர் (சுகக) என்க

காண்வரத்தோன்றிப் (சுபசு) பலாஅப்போல (சுoஅ) விழவுமேம்பட்ட (சுகக) மூதூரென்க

கைவண்டோன்றல (சுஉo) ஐவாபோலக (சுகஎ) குருதியீர்ப்பப (சுகசு) பொருது (சுகரு) ஆர்த்து (சுகக) ஏமமாகிய (சுஉக) மூதூராகிய (சுகக) கச்சியிடத்தேயிருக்கின்றோனெனக

[அளியுந் தெறலு மெளிய வாகலின், மலைந்தோர் தேஎ மன்றம் பாழ்பட.]

மலைந்தோர் தேஎம் மன்றம் பாழ்படத் தெறலும் — தன்னுடனே பொருதார் தேயத்திலூர்களின் மன்றுகள் மக்களின்றியப் பாழாய்ப்படி அழித்தலும்,

[நயந்தோர் தேஎ நன்பொன் பூப்ப] நயந்தோர் தேஎம் நன் பொன் பூப்ப அளியும்— தன்னை விரும்பியிருந்தோர் தேயம் திருமடந்தைபொலிவுபெற்றிருப்ப அளித்தலும்,

எளிய ஆகலின— தனக்கு எளியவாய நடக்கையினாலே,

நட்புக் கொள்ளல் வேண்டி நயந்திசினோரும — மலையலாகாதென்று உறவுகொள்ளுதலைவேண்டி அவன்றனைவிரும்பினவர்களும,

துப்புக் கொள்ளல் வேண்டிய துணையிலோரும — அவன் பகையைத்தெறும் வலியைத் தமக்குப்பெறவேண்டின வேறோருதவியில்லாதவர்களுமாய்,

கல் வீழ் அருவி கடற் படர்ந்தாங்கு— மலையினின்றும்விழுகின்ற அருவி அம்மலையிலுள்ளபண்டங்களை வாங்கிக்கொண்டு கடலுக்குக்கொடுப்பதாகச் சென்றாற்போல,

பல் வேறு வகையிற பணிந்த மன்னர — பலவாகிய வேறுபட்ட திறைகளின் கூறுபாட்டோடே சென்று வணங்கின அரசர்,

[இமையோ ருறையுஞ் சிமையச் செவ்வரை, வெண்டிரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப், பொன்கொழித் திழிதரும் போக்கருங் கங்கை]

இமையோர் உறையும் சிமையச் செவ்வரை விளங்கு சுடர் நெடுங்கோட்டு — தேவர்களிருக்கும் உச்சியையுடைய சிவந்த மேருவினது விளங்குகின்ற ஒளியையுடைய நெடிய சிகரத்தினின்றும்,

பொன் கொழித்து இழிதரும் போக்கு அருங் கங்கை—பொன்னைக்கொழித்துக் குதிக்கும் மாக்கடுக்கக் கடத்தலரிதாகிய கங்கையாகிய ஆற்றிலே,

வெண்டிரை கிழித்த கங்கை—கடலிடத்து வெள்ளியதிரையைக் கிழித்துச்சென்ற கங்கை

பெருநீர் போகும் இரியல் மாக்கள்— பெரிய நீரைக்கடந்துபோம் கெடுதலையுடையமாக்கள்,

ஓடுபட்டுப்போவார் ஒருவர்க்குமுன்னே ஒருவர் விரைந்துபோதலைக் கருதுவர்.

ஒருமரப் பாணியில் தூங்கியாங்கு— விடுகின்ற தோணியாகையினாலே அது வருங்காலம் பார்த்திருந்து தூங்கினாற்போல,

தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇச் செவ்வி பார்க்குஞ் செழுநகர் முற்றத்து — கெடாத யானைமுதலிய செல்வங்களோடே நெருங்கிநின்று திரண்டு காலம்பார்த்திருக்கும் வளவிய நகரின்முற்றத்தினையுடைய வியனகர் (௪௪௦)

எளியவாகலின் (௪௨௨), நயந்திசினோரும் (௪௨௫) துணையிலோருமாய்ப் (௪௨௬) பணிந்தமன்னர் (௪௨௮) தூங்கியாங்குச் (௪௩௩) செவ்விபார்க்கு முற்றமென்க.

பெருங்கை யானைக் கொடுந்தொடி படுக்குங் கருங்கைக் கொல்லன் — பெரிய கையினையுடைய யானைக்கு வளைந்துகிடக்கும் பூணைச்சேர்க்கும் வலியகையினையுடைய கொல்லன்,

இரும்பு விசைத்து எறிந்த கூடத் திண்ணிசை வெரீஇ — இரும்பைக் கையை யுரத்துக்கொட்டின கூடத்தெழுந்த திண்ணிய ஓசையை வெருவி,

[மாடத், திறைபுறை புறவின் செங்காற் சேவ, லின்றுயி லிரியும் பொன்றுஞ்சு வியனகர்:]

மாடத்துப் புறவின் செங்காற் சேவல் இன்றுயில் இரியும் நகர் — மாடத்திடத்துப் புறவினுடைய சிவந்த காலையுடையசேவல் இனிய துயிலை நீங்குநகர்,

இறை உறை நகர் — இறைவனிருக்கு நகர்,

பொன் துஞ்சு வியன் நகர்—திருத்தங்குகின்ற அகலத்தையுடைய கோயிற்கண்ணே இருந்தோன் (௪௪௭)

குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பட் பகல்செய் மண்டிலம் பாரித்தாங்கு— கீழ்கடலாகிய எல்லையிடத்து நிலத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலுமாகிய மூன்றுதொழிலையுடைய நீர்க்குநடுவே பகற்பொழுதைச்செய்யுஞாயிறு தன்கிரணங் களைப்பரப்பித் தோன்றினாற்போல,

[முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும், வேண்டுப வேண்டுப வேண்டி னர்க் கருளி, யிடைதெரிந் துணரு மிருடீர் காட்சிக், கொடைக்கட னிறுத்த கூம்பா வுள்ளத், துருப்பில் சுற்றமோ டிருந்தோற் குறுகிப், பொறிவரிப் புகர்முகந் தாக்கிய வயமான், கொடுவரிக் குருளை கொள்வேட் டாங்குப், புலவர் பூண்கட னாற்றி]

இடை தெரிந்து உணரும் இருள் தீர் காட்சி—நடுவுநிலையை ஆராய்ந்தறியும் மயக்கந்தீர்ந்த அறிவாலே,

முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் வேண்டுப வேண்டுப அருளி— முறைப்பாட்டைவிரும்புவார்க்கும் காரியங்களைவிரும்புவார்க்கும் அவரவர் விரும்புவனவற்றை விரும்புவனவற்றை அருளிச்செய்து,

புலவர் பூண் கடன் ஆற்றி—புலவர்க்குப் பேரணிகலங்களையும், கொடுத்தற்குரிய பிறகலங்களையுங் கொடுத்து,

வேண்டினர்க்குக் கொடைக் கடன் இறுத்த கூம்பா உள்ளத்து உருப்பு இல் சுற்றமோடு இருந்தோற் குறுகி—வேண்டிவந்த பரிசிலர்க்குக் கொடையாகியகடனை முடித்த குவியாத நெஞ்சத்தோடே கொடுமையில்லாத மந்திரச்சுற்றத்தோடே இருந்தோனையணுகி,

ஞாயிறுபோல இருளைக்கடிந்து முறைவேண்டுநர்க்குங் குறைவேண்டுநர்க்கும் வேண்டுவன வேண்டுவன முடித்துக்கொடுத்தலின், அதனை உவமித்தார்.

கடல் சுற்றத்திரட்சிக்கு உவமையாககலுமொன்று

"பொறி வரிப் புகர்முகம் தாக்கிய வயமான் கொடுவரிக குருளை கொள வேட்டாங்கு—ஒளியினையும் வரியினையமுடைய யானையைப்பாய்ந்த வலியையுடைய சிங்கத்தினுடைய வளைந்த வரியினையுடைய குருளை அவ்வியானையின் மதத்தைக் கொள்ளவிரும்பினாற்போல,

பகைவா கடி மதில் எறிநது குடுமி கொள்ளும வென்றி அல்லது—பகைவரது காவலையுடைய மதில்களையழித்து ஆண்டிருந்த அரசருடையமுடிககலமுதலியவற்றை வாங்கிககொண்டு வீரமுடிபுனையும வெற்றியினை விரும்புதலல்லது,

இதனால * "இகன்மதிற்குடுமிகொண்ட மண்ணுமங்கலம்" என்னுந்துறை கூறினா, குடுமிகொள்ளும் வெனறியெனவே மண்ணுமங்கலமாயிற்று

வினை உடம்படினும் ஒன்றல செலலா உரவு வாள் தடக கைக கொண்டி உண்டித் தொண்டையோா மருக—அம்மதிலரசா சந்துசெயதறகுடம்பட்டாராயினும் அதற்கு மனம்பொருந்துதல் நிகழாமைக்குககாரணமாகிய உலகெஙகும்பரககும் வாளையுடைத்தாகிய பெருமையையுடைய கையினையும் பகைபபுலததுக கொள்ளையாகிய உணவினையுமுடைய தொணடையைச்சூடினோருடைய குடியிலுள்ளவனே,

மள்ளர் மளள—வீராகசு வீரத்தைககொடுக்கினறவனே,

மறவா மறவ—கொடியோாககுக கொடியவனே,

செல்வா செலவ—செலவமுடையோாககுங கொடுத்தலைவிரும்புபவனே,

செரு மேம்படுந—போாததொழிலிலே மிக்கவனே,

பெரும (சகூக) —பெருமானே,

வெண்டிரைப் பரபபிற கடுஞ்சூா கொன்ற பைம்பூட் சேஎய பயநத மா மோட்டு—வெள்ளிய திரையினையுடைய கடலிலேசென்று கடியசூரனைககொனற பசிய பூணினையுடைய முருகனைப்பெற்ற பெருமையையுடைய வயிற்றினையும்,

துணஙகை அம் செல்விககு அணஙகு நொடித்தாஙகு—பேய்களாடுந் துணஙகைக்கூத்தினையும அழகினையுமுடைய இறைவிககுப பேய்மகள் சில நொடிசொன்னாற்போல,

[தண்டா ஈகைநின் பெரும்பெய ரேத்தி, வநதேன பெருமவாழிய நெடிதென]

தண்டா ஈகை நின் பெரும்பெயா எத்தி வந்தேன் நெடிது வாழிய என—அமையாக்கொடையினையுடைய நின பெரியபெயருட் சிலவற்றைசசொலலிப புகழ்ந்துவந்தேன், நெடுங்காலம வாழ்வாயாகவெனச்சொல்லி,

இடனுடைப் பேரியாழ் முறையுளிக கழிப்பி—தனக்குக் கூறுகின்ற இலககணங்களைத் தன்னிடத்தேயுடைய பெரிய யாழை வாசிக்குமுறைமையிலே வாசித்து,

முறையுளி, உளி-பகுதிப்பொருள்விகுதி.

கடன் அறி மரபிற கைதொழூஉப பழிச்சி—முறபடக கணடக்காற் செய்யுங்கடனை அறிந்தமுறைமையோடே கையாறறொழுது வாழ்த்தி,

நின் நிலை தெரியா அளவை—நின்னுடைய கலைகளெல்லாந் தெரிவதற்குமுன்னே,

அந் நிலை—நீநின்ற அந்த நிலைதன்னிலே,

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல்,

நாவல் அம் தண் பொழில் வீவின்று விளங்க—நாவலாற் பெயர்பெற்ற அழகி னையுடைய குளிர்ந்த உலகமெல்லாம கேடின்றாக விளங்கும்படி,

நில்லா உலகத்து நிலைமை தூக்கி—யாக்கையுஞ் *செல்வமுமுதலிய நிலைநில்லாத உலகத்திடத்து நிலைபேறுடையபுகழை நாம்பெறுதல நன்றென்று ஆராய்ந்து,

அந்நிலை அணுகல் வேண்டி—முறைபடநின்ற சேய்நிலத்துநின்று தன்னை அணு குதற்கு விரும்பியழைத்து,

நின் அரைப் பாசி அன்ன சிதாவை நீக்கி—நின்னுடைய அரையிற்கிடந்த கொட்டைப்பாசியின் வேரையொத்த சிதரின சீரையைப்போக்கி,

[ஆவி யன்ன வவிர்நூற் கலிங்க, மிரும்பே ரொக்கலொ டொருங்குட னுடீஇ:] ஆவி அன்ன அவிர் நூல் கலிங்கம் உடன் இரும் பேர் ஒக்கலொடு ஒருங்கு உடீஇ—பாலாவியையொத்த விளங்குகின்ற நூலாற்செய்த துகில்களைப் படிசேரக் கரிய பெரிய சுற்றத்தாரோடே சேர உடுக்கப்பண்ணி,

கொடு வாள் கதுவிய வடு ஆழ் நோன் கை வல்லோன் அட்ட பல்லூன் கொழுங்குறை—வளைந்த அரிவாளைக்கொண்ட வடுவழுந்தின வலியையுடைத்தாகிய கையினையுடைய மடையனாக்கின பலஇறைச்சியிற் கொழுவியதசைகளும்,

பலகாலுமறுத்தலால், தழும்பிருந்தகையென்றார் கதுவுதல்-கைக்கொள்ளுதல்.

அரி செத்து உணங்கிய பெருஞ் செந்நெல்லின் தெரி கொள் அரிசித் திரள் நெடும் புழுக்கல்—நிறத்தானே ஞாயிற்றையொத்து உலர்ந்த பெரிய செந்நெல்லினுடைய * பொறுக்கிக்கொண்ட அரிசியாலாக்கின திரண்ட இடைமுறியாதசோறும்,

அரிசெத்தென்றதற்கு உவமையின்றாக வென்றுமாம் இனி அரிசெயத்தென்று பாடமாயின், அரிதலைச்செய்தென்றுகூறுக.

அருங்கடித் தீஞ்சுவை அமுதொடு—பெறுதற்கரிய மிகுதியையுடைய இனியசுவையினையுடைய கண்டசருக்கரைமுதலியவற்றோடே,

பிறவும்—கூறுதொழிந்தனவும்,

விருப்பு உடை மரபின் கரப்பு உடை அடிசில்—விருப்பமுடைத்தாகிய முறைமையினையுடைய தலையாப்புப்பரந்தலையுடைய அடிசிலை,

அமுதோடே (௪௭௫) குறையும் (௪௭௨) புழுக்கலும் (௪௭௪) பிறவுமாகிய (௪௭௫) அடிசிலைப் (௪௭௬) பரப்பி (௪௭௭) ஊட்டியெனக

[மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி, மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந், தாஅ விருப்பிற் றானின் றூட்டி, மங்குல் வானத்துத் திங்க ளேய்க்கும்]

மங்குல் வானத்து மீன் பூத்தன்ன வான் கலம் திங்கள் ஏய்க்கும் வான்கலம் மக முறை பரப்பி—திசைகளையுடைய ஆகாயத்திடத்தே, உடுக்கள்தோன்றினாற்போன்ற சிறிய வெள்ளிக்கலங்களையும், திங்களையொக்கும் பெரியவெள்ளிக்கலங்களையும் நும் முடையபிள்ளைகளுக்கு இடையேபரப்பி,

எனவே தலைவராயினாருக்குப் பொற்கலம்பரப்புவரென்றார்

தான் முகன் அமர்ந்து ஆஅ விருப்பின் மகமுறை நோக்கி நின்று ஊட்டி—தான் முகம்பொருந்தி அமையாதவாசையுடனே நும்முடைய பிள்ளைகளைப்பார்த்து நின்று உண்ணப்பண்ணுவித்து,

ஆடு வண்டு இமிரா அழல் அவிர் தாமரை நீடு இரும் பித்தை பொலியச் சூட்டி—

* பொறுக்கிக்கொண்டவென்றும் பிரதிபேதமுண்டு

உலாவும் வண்டுகள் ஒலியாத நெருப்பிடத்தே கிடந்துவிளங்கின பொற்றாமரையை நீண்ட கரிய மயிரிடத்தே அழகுபெறச் சூட்டி,

பொற்றாமரை இதழ்களைப் பொதுமென்றல் பொருந்தாமையுணர்க

உரவுக் கடல் முகந்த பருவ வானத்துப் பகற் பெயல் துளியின் மின்னு நிமிர்ந்தாங்கு—பலவுஞ்சேரவுலாவுகின்ற கடலிடத்தேமுகந்த கூதிர்க்காலத்து மேகத்தினின்றும் பகற்காலத்தே பெய்தலையுடைத்தாகிய துளியின்கண்ணே மின்னோடினாற்போல,

புனை இருங் கதுப்பகம் பொலியப் பொன்னின் தொடை அமை மாலை விறலியர் மலைய—கைசெய்த கரியமயிரிடம் அழகுபெறும்படி, பொன்னாற்செய்து சேரக்கட்டுதலமைந்த மாலையை விறல்படஆடுமகளிர் சூடாநிற்க,

[நூலோர் புகழ்ந்த மாட்சிய மால்கடல், வளைகண் டன்ன வாலுளைப் புரவி, துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி.] நூலோர் புகழ்ந்த மாட்சிய துணை புணர் தொழில மால் கடல் வளை கண்டன்ன வால உளை புரவி நால்கு உடன் பூட்டி—குதிரைநூலோர்புகழ்ந்த அழகினையுடையவாய்த் தனித்துத்தொழில்செய்யாமல் இனங்களோடேகூடுந் தொழிலையுடையவாய்க் கருமையையுடையகடலிற் சங்கைக்கண்டாற்போன்ற வெள்ளிய கழுத்திின்மயிரையுடைய குதிரைகள்நான்கைச் சேரப்பூட்டி,

நான்கு—நால்கெனப்பெயர்த்திரிசொல்

அரித் தேர் நல்கியும் அமையான்—பொன்னாற்செய்த தேரைத்தந்தும் கொடைமேல் விருப்பந்தவிரானாய்,

செருத் தொலைத்து ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஒழிந்த விசும்பு செல் இவுளியொடு பசும்படை தரீஇ—தம்முடன்வந்து பொருதோருடைய போர்களை மாளப்பண்ணித் தன்னேவலைப்பொருந்தாத பகைவர்முதுகிட்டவிடத்து விட்டுப்போன ஆகாயத்தேசெல்கின்ற குதிரைகளுடனே பசியபொன்னாற்செய்த பக்கரைகளையுந்தந்து,

[அன்றே விடுக்குமவன் பரிசில்:] அவன் அன்றே பரிசில் விடுக்கும்—அவன் நீசென்ற அற்றைநாளே இவையொழிந்த பரிசில்களையுந்தரும்;

இன்சீர்க் கின்னரம் முரலும் அணங்குடைச் சாரல்—இனியதாளத்திலே கின்னரமென்னும் பறவைகள்பாடுந் தெய்வங்களையுடைய சாரலிடத்து,

மஞ்ஞை ஆலும் மரம் பயில் இறும்பின—மயில்களாரவாரிக்கும் மரம்நெருங்கின இளமரக்காட்டினையுமுடைய,

கலை பாய்ந்து உதிர்த்த மலர் வீழ் புறவின—முசுக்கலைகள்பாய்ந்துதிர்த்த மலர்கள்சிந்தின காட்டினையும்,

மந்தி சீக்கும் மா துஞ்சு முன்றில்—மந்திகள் அவ்விடத்துக்கிடந்து துராலைவாரும் மானும்புலியுந் துயில்கொள்ளும் முற்றத்தே,

புறவினையும் (சகசு) இறும்பினையு (சகரு) முடைய சாரலிடத்து (சகச) முன்றிலிலே (சகஎ) வேட்கு (சகக) மென்க

செந்தீப் பேணிய முனிவர்—சிவந்ததீயைக் கைவிடாமற்காத்துப்போந்த இருடிகள்,

வெண்கோட்டு களிறு தரு விறகின் வேட்கும்—வெள்ளிய கொம்பினையுடைய களிறு முறித்துக்கொண்டுவந்த சமிதையாலே வேள்வியைச்செய்யும்,

மந்திசித்தலும், மாத்துஞ்சலும, களிறு விறகுதருதலும் இருடிகளாணையால் நி ழ்ந்தனவென்றுணாக.

[ஒளிறிலங் கருவிய மலைகிழ வோனே·]

ஒளிறு மலை—இவறறுன்விளஙகுமலை,

இலஙகு அருவிய மலை—விளஙகுகின்ற அருவிகளையுடையமலை,

மலை கிழவோன்—இச் சிறந்த மலையையாளும உரிமையையுடையோன்.

புலவுவாய்ப்பாண (உஉ), பெருவளனெய்தி (உசு) முகந்துகொண்டு (உஎ) யாம அவனூரினின்றும் வருகின்றேம், நீயிரும் (உஅ) திரையற்படர்குவிராயின் (௯எ) நின்னுள்ளஞ்சிறகக (சரு); நின்னவலஙகெடுக (௯அ), இரவல (சரு) அவனிலைகேள் (௯அ), அவன்புலம் கொடியோரின்று (சக); அதுவேயன்றி அப்புலத்தில் உருமுமு ரறுது; அரவுந் தபபா (சஉ), மாவும உறுகணசெய்யா ஆகலின, ஆங்கு (ச௯) அசை வுழி அசைஇத் தஙகிச் (சச) சென்மோ (சரு), அங்ஙனஞ்செல்லுஙகால் வில்லு டைவைப்பிற (அஉ) குரம்பையில் (அஅ) எயிற்றியா (௯ச) தாஙகளடட புழுககலையும் வாடுனையும (கoo) எல்லிடைக்கழியுநர்ககு ஏமமாகத (சுசு) தேககிலையிலேகுவிக்கை யிஞலே (கoச) அப்பததனைப (கoரு) பெருமகளுகிய (கoக) வனைநாடன் செனனிய மெனிற் (கo௯) கடும்போடே மிகபபெறுகுவிா (கoரு), பினனா அருஞ்சுரமிறந்த அம் பர்க (ககஎ) குறும்பிற சேபபின் (கஉக), சொன்றியை (க௯க) வறைகால்யாத்ததுவ யின்ஞெறும்பெறுகுவிா (க௯௯), பின்னாத தூஙகா (கசசு) முரணடலை (கசஎ) யிரு க்கை (கசசு) கழிந்தபின்றைக (கசஎ) குடிவயிறசேபபின (கசுசு) மூரல பாலொடு ம்பெறுகுவிா (கசுஅ); பினனாப பறவையோாககும் (கஅ௯) புலத்தைபபோய்ச் (கஅச) சீறூர்களிலே (ககக) வரகின சொனறியைப (கக௯) புழுக்கையட்டி (ககரு) மூரலோடேபெறுகுவிர் (ககசு), பின்னா ஞாஙகா (ககசு) வன்புலமிறந்தபின்றைப் (உoசு) மல்லறபேரூாமடியின (உருச) வலசியை (உருரு) வாடடொடும் பெறுகுவிா (உருசு), பின்னாக் கரும்பினறீஞ்சாறு விாமபினிா மிசைமின் (உசுஉ), பினனர் வலை ஞா குடிவயிற் சேப்பின் (உஎச), பிழியைச (உஅக) சூட்டொடும்பெறுகுவிா (உஅஉ), பின்னாத தீப்பட மலாந்த (உஅக) பூவையோமபிக (உகo) குறுநரிட்டமலரைப் (உகரு) பிணையினிர் கழிமின (உககசு), பின்னா மறைகாபபாளா உறைபதிசசேப்பி ன் (௯oக) வத்தத்தாலுணடான வரிசியை (௯oரு) உலைககைமகடூஉ வயினறிந்தட்டன வறறைச (௯oச) சுடர்க்கடையிலே (௯oரு) போழோடே (௯oஎ) காடியோடே பெறுகு விர் (௯கo), பின்னா நீரபபெயறறெல்லை போகிப (௯கக) படடினமருஙகி னசையின், முட்டுபபாடின்ருகக (௯௯சு) கொழுஙிணத்தடியொடு கூர்நறபபெறுகுவிா (௯சரு); பின்னாத் துறைபிறககொழியபபோகித (௯ருக) தணிமனைச்சேபபின் (௯ருரு), ஆண டைத் தீம்பஂறாமுனையிற சேமபிலையோடே (௯சுக) முதிர்கிழஙகாருவா (௯சுஉ), இவறறை இவ்வழியின்கணணே பெறறுப பின்னாப பன்மரநீளிடைப்போய் (௯சுஅ) நாடுபலகழிந்தபின்றைப (௯எச) பள்ளியமாந்தோன ஆஙகட (௯எ௯) பொழி ஞெறும் (௯அo) ஆடி (௯அஎ) அசைஇத (௯கo) தொலைச்சி (௯அஉ) மரீஇக (௯அ௯) கடவுள்வாழ்த்தி (௯கக) இயககினிாகழிமின (௯கஉ), இஙஙனஞசென்று கைவண் டோன்றல் (சஉo) இப்பொழுது ஐவாபோலக (சகஎ) குருதியாபபப (சகச) பொருது (சகரு) ஆர்த்துப் (சககு) பகைமேற செல்லுதலின்றி நச்சிச்சென்றோர்ககு ஏமமா கிய (சஉக) படப்பை (சoக) முதலியவற்றையுடைய விழவு மேமபட்ட மூதூராகிய (சகக) கச்சியிடத்தே யிருந்தோன் (சஉo), அவ்வூரிற் பணிந்தமன்னா (சஉஅ) செவ்விபார்க்கும் முற்றத்தினை (ச௯௯) யுடைய பொன்றுஞ்சு வியனகர்க்கண்ணே

(௪௪௦) பகல்செய் மண்டிலம் பாரித்தாங்கு (௪௪௨) மிக்ககாட்சியாலே (௪௪௫) அருளிப் (௪௪௪) பூண்கடனாற்றிக் (௪௫௦) கடனிறுத்த உள்ளத்தோடே (௪௪௬) சுற்றத்தோடேயிருந்தோனைக் குறுகித (௪௪௭) தொண்டையோர் மருகனே (௪௫௪), மள்ளனே, மறவனே (௪௫௫), செல்வனே, செருமேம்படுநனே (௪௫௬), பெருமானே (௪௬௧), செல்விகக அணங்கு நொடித்தாங்கு (௪௫௯) நின் பெயருட்சிலவற்றைச சொல்லிப புகழ்ந்து (௪௬௦) வந்தேன்; வாழியவெனச்சொல்லிக (௪௬௧) கழிப்பிய (௪௬௨) பழிச்சி (௪௬௩) நின்னுடைய கலைகளெல்லாந் தனக்குத்தெரிவதற்கு முன்னே (௪௬௪) மலைகிழவோன (௫௦௦) நில்லாவுலகத்துநிலைமை தூக்கி (௪௬௬) அந்நிலையணுகல வேண்டி (௪௬௭) சிதாவைநீக்கி (௪௬௮) உடீஇ (௪௭௦) அழுதோடே (௪௭௫) குறையும் (௪௭௨) புழுக்கலும் (௪௭௪) பிறவு (௪௭௫) மாகிய அடிசிலைக (௪௭௬) கலங்களைப பரப்பித (௪௭௭) தான் (௪௭௯) முகனமர்ந்து மகமுறைநோக்கி (௪௭௮) முன்னின்றூட்டி (௪௭௯) விறலியர் மாலைவேயாநிற்க (௪௮௬) நுமக்குத் தாமரை (௪௮௧) பொலியச்சூட்டி (௪௮௨) அரிதேர்நல்கியும் அமையானாய் (௪௯௦) இவுளியொடு பசும்படைதரீஇ (௪௯௨) அவன் அன்றே (௪௯௩) அந்நிலையிலே (௪௬௪) நாவலந்தண்பொழில் வீவின்றுவிளங்கும்படி (௪௬௫) இவையொழிந்தபரிசில்களையுந் (௪௯௩) தருமெனவினைமுடிவுசெய்க.

இப்பாட்டில ஒருமைப்பன்மை மயக்கம், "முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி * * * போற்றல் வேண்டும்" என்பதனாற்கொள்க

தொண்டைமானிளந்திரையனைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடிய பெரும்பாணாற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று

வெண்பா

கங்குலு நண்பகலு நந்துஞ்சா வியல்பிற்றே
மங்குல்சூழ் மாக்கட லார்ப்பதூஉம்—வெங்கதிர்வேற்
றான்பயந்த கண்ணிக் கடிமானத் திரையனை
யான்பயந்தே னென்னு மெருக்கு

## ஐந்தாவது

# முல்லைப்பாட்டு.



நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்
பாடிமிழ் பனிக்கடல் பருகிவல னேர்பு
ரு கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி
பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை
யருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
க0 யரும்பவி ழலரி தூஉய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றி
னுறுதுய ரலமர னோக்கி யாய்மக
ணடுங்குசுவ லசைத்த கையள் கைய
கரு கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர
வின்னே வருகுவர் தாய ரென்போ
ணன்னர் நன்மொழி கேட்டன மதனா
னல்ல நல்லோர் வாய்ப்புட் டெவ்வர்
முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
உ0 வருத றலைவர் வாய்வது நீநின்
பருவர லெவ்வங் * களைமா யோயெனக்
காட்டவுங் காட்டவுங் காணாள் கலுழ்சிறந்து
பூப்போ லுண்கண் புலம்புமுத் துறைப்பக்
கான்யாறு தழீஇய வகனெடும் புறவிற்
உரு சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கி
வேட்டுப்புழை யருப்ப மாட்டிக் காட்ட
விடுமுட் புரிசை யேமுற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி
யுவலைக் கூரை யொழுகிய தெருவிற்

* களைமாயோளெனவும் பாடம்.

௩0 கவலை முற்றங் காவ னின்ற
தேம்படு கவுள சிறுகண் யானை
யோங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந் தியாத்த
வயல்விளை யின்குள குண்ணாது நுதறுடைத்
தயினுனை மருப்பிற் றங்கையிடைக் கொண்டெனக்
௩௫ கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக்
கல்லா விளைஞர் கவளங் கைப்பக்
கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோ லசைநிலை கடுப்ப நற்போ
ரோடா வல்விற் றூணி நாற்றிக்
௪0 கூடங் குத்திக் கயிறுவாங் கிருக்கைப்
பூந்தலைக் குந்தங் குத்திக் கிடுகுநிரைத்து
வாங்குவில் லரண மரண மாக
வேறுபல் பெருமபடை நாப்பண் வேறோர்
நெடுங்காழ்க் கண்டங் கோலியக நேர்பு
௪௫ குறுந்தொடி முன்கைக் கூந்த லஞ்சிறுபுறத்
திரவுபகற் செய்யுந் திண்பிடி யொள்வாள்
விரவுவரிக் கச்சிற் பூண்ட மங்கையர்
நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்
கையமை விளக்க நந்துதொறு மாட்ட
௫0 நெடுநா வொண்மணி * நிழற்றிய நடுநா
ளதிரல் பூத்த வாடுகொடிப் படாஅர்
சிதர்வர லசைவளிக் கசைவந் தாங்குத்
துகின்முடித் துப்போர்த்த தூங்க லோங்குநடைப்
பெருமூ தாளர் ஏமஞ் சூழப்
௫௫ பொழுதளந் தறியும் பொய்யா மாக்க
டொழுதுகாண் கையர் தோன்ற வாழ்த்தி
யெறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்
குறுநீர்க் கன்ன லினைத்தென் றிசைப்ப
மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை
௬0 மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்
புலித்தொடர் விட்ட புனைமாண் ணல்லிற்
றிருமணி விளக்கங் காட்டித் திண்ஞாண்
ணெழினி வாங்கிய வீரறைப் பள்ளியு
௬௫ ளுடம்பி னுரைக்கு முரையா நாவிற்

* மிழற்றிய வென்றும் பாடம்.

படம்புகு * மிலேச்ச ருழைய ராக
மண்டமர் நசையொடு கண்படை பெறாஅ
தெடுத்தெறி யெஃகம் பாய்தலிற் புண்கூர்ந்து
பிடிக்கண மறந்த வேழம் வேழத்துப்
௭0 பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமியத்
தேம்பாய் கண்ணி நல்வலந் திருத்திச்
சோறுவாய்த் தொழிந்தோ ருள்ளியுந் தோறுமிபு
வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த்
துண்ணா துயங்கு மாசிந் தித்து
௭௫ மொருகை பள்ளி யொற்றி யொருகை
முடியொடு கடகஞ் சேர்த்தி நெடிதுநினைந்து
பகைவர்ச் சுட்டிய படைகொ ணோன்விர
னகைதாழ் கண்ணி நல்வலந் திருத்தி
யரசிருந்து பனிக்கு முரசுமுழங்கு பாசறை
௮0 யின்றுயில் வதியுநற் காணா துயருழந்து
நெஞ்சாற் றுப் படுத்த நிறைதபு புலம்பொடு
நீடுநினைந்து தேற்றியு மோடுவளை திருத்தியு
மையல் கொண்டு மொய்யென வுயிர்த்து
மேவுறு மஞ்ஞையி னடுங்கி யிழைநெகிழ்ந்து
௮௫ பாவை விளக்கிற் பரூஉச்சுட ரழல
விடஞ்சிறந் துயரிய வெழுநிலை மாடத்து
முடங்கிறைச் சொரிதரு மாத்திர ளருவி
யின்பல் லிமிழிசை யோர்ப்பனள் கிடந்தோ
ளஞ்செவி நிறைய வாலின வென்றுபிறர்
௯0 வேண்டுபுலங் கவர்ந்த வீண்டுபெருந் தானையொடு
விசய வெல்கொடி யுயரிவல னேர்பு
வயிரும் வளையு மார்ப்ப வயிரச்
செறியிலைக் காயா வஞ்சன மலர
முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்
௯௫ கோடற் குவிமுகை யங்கை யவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்பக்
கான நந்திய செந்நிலப் பெருவழி
வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற்
றிரிமருப் பிரலையொடு மடமா னுகள
௧00 வெதிர்செல வெண்மழை பொழியுந் திங்களின்
முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழியத்

* மிலைச்சரென்றும் பாடம்.

௧0௨ துணைபரி துரக்குஞ் செலவினர்
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே.

## இதன்பொருள்.

இப்பாட்டிற்கு முல்லையென்று பெயர்கூறினார்; முல்லைசான்ற கற்புப்பொருந்தியதனால். இல்லறநிகழ்த்துதற்குப் பிரிந்தவருந்துணையும் ஆற்றியிருவென்று கணவன் கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறநிகழ்த்திய இயற்கை முல்லையாமென்றுகருதி இருத்தலென்னும்பொருட்டா முல்லையென்று இச்செய்யுட்கு நப்பூதனார் பெயர்கூறினமையிற் கணவன் வருந்துணையும் ஆற்றியிருந்தாளாகப் பொருள்கூறலே அவர்கருத்தாயிற்று. *"தானேசேறல்" என்னுமவிதியால், அரசன் தானே சென்றது இப்பாட்டு.

இது, தலைவன் வினைவயிற் பிரியக்கருதியதனை அவன்குறிப்பானுணர்ந்து ஆற்றாளாய தலைவியது நிலைமைகண்டு அவன் வற்புறுப்பவும் உடம்படாதவளைப் பெருமுதுபெண்டிர் அவன் வினைமுடித்துவருதல் வாய்வது, நீவருத்தநீங்குவதெனக்கூற, அதுகேட்டு அவள் நீடுநினைந்து ஆற்றியிருந்தவழித் தலைவன் அக்காலத்தே வந்ததனைக் கண்டு வாயில்கள் தம்முட்கூறியது. இது, † "வாயி லுசாவே தம்முளு முரிய" ‡ "எல்லா வாயிலு மிருவர் தேஎத்தும் - புல்லிய மகிழ்ச்சிப் பொருள வென்ப" என்பனவற்றாற்கூறினார்.

நனந் தலை உலகம் வளைஇ—அகலத்தை இடத்தேயுடைய உலகத்தை வளைத்து,

[நேமியொடு, வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை]

நேமியொடு வலம்புரி தாங்கு தடக்கை மால் (௩)—சக்கரத்தோடே வலம்புரியைத்தாங்கும் பெரியகைகளையுடையமால்

மா § பொறித்த மால் (௩) — திருமார்பிடத்தே திருமகளைவைத்த மால்,

நீர் செல நிமிர்ந்த மாஅல் போல — மாவலிவார்த்த நீர் தன்கையிலே சென்றதாக உயர்ந்த திருமாலைப்போல,

இனி, நேமியோடே வலம்புரியையுமுடைய உத்தமவிலக்கணங்களைப்பெற்றிருக்கின்ற திருமகளையணைத்தகையிலே நீர்செல்லவென்றுமாம்

இதனானே முல்லைக்குரிய தெய்வங்கூறினார்

[பாடிமிழ் பனிக்கடல் பருகிவல னேர்பு, கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி:]

பாடு இமிழ் பனிக் கடல் பருகி வலன் ஏர்பு கோடு கொண்டு — ஒலிமுழங்குகின்ற குளிர்ச்சியையுடைய கடலைக்குடித்து வலமாகவெழுந்து மலைகளை இருப்பிடமாகக்கொண்டு,

உலகம் வளைஇ (௧) எழுந்த கொடுஞ்செலவு எழிலி — பெய்யுங்காலத்தே உலகத்தைவளைத்தெழுந்த கடிய செலவினையுடைய மேகம்,

---

* தொல்காப்பியம். பொருளதிகாரம், அகத்திணையியல், ௨௭.

† ,, ,, செய்யுளியல், ௨0௧.

‡ ,, ,, கற்பியல், ௩௭.

§ பொறித்தல்-வைத்தல். இதனைச் சிறுபாணாற்றுப்படை (௪அ) " வடபுல விமயத்து வாங்குவிற் பொறித்த" என்பதனானுமுணர்க

மால் நீர் செல நிமிர்ந்தாற்போல மேகமும் நீர்செலநிமிர்ந்த தென்றார்.

• இனி உலகத்தைத் திருவடிகளிலே அணைத்துக்கொண்டுநிமிர்ந்த மாலென்று முரைப்பர்.*

பெரும்பெயல் பொழிந்த சிறு புன் மாலை— பெரிய மழையைப்பெய்த சிறுபொழுதாகிய வருத்தஞ்செய்கின்ற மாலைக்காலத்துப் பாவைவிளக்கு (அடு) எனக்கூட்டுக.

இதனானே முல்லைக்குரிய * காரும் மாலையுங் கூறினார்.

மால்போலெழுந்த எழிலிபொழிந்த மாலையென்க.

[அருங்கடி மூதூர் மருங்கிற் போகி] அருங்கடி மூதூர் மருங்கில் நல்லோர் (கஅ) போகி—அரியகாவலையுடையபழைய ஊரைப்பக்கத்துப் பாக்கத்தே படைத்தலைவரேவலால் நற்சொற் கோடற்குரியோர்போய்,

[யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு, நாழி கொண்ட நறுவீ முல்லை, யரும்பவி ழலரி தூஉய்க்கை தொழுது, †பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப]

நறு வீ முல்லை அரும்பு யாழ் இசை இனவண்டு ஆர்ப்ப அவிழ் அலரி நாழி கொண்ட நெல்லொடு தூஉய்—நறியபூக்களையுடைய முல்லையினது அரும்புகள் யாழினது ஓசையினையுடைய இனமானவண்டுகள் ஆரவாரிக்கும்படி அவிழ்ந்தபூவை நாழியிட்டதே கொண்டுபோன நெல்லுடனேதூவி,

கை தொழுது விரிச்சி நிற்ப—தெய்வத்தை வணங்கி நற்சொற்கேட்டு நிற்க,

நல்லோர் (கஅ) போகித் (எ) தூஉய்த் தொழுது நிற்பவென்க.

என்றது:—ஒருவேந்தன் ஒருவேந்தனோடு இகலகருதினால் போர்செய்யவேண்டுதலின், அவனூட்டந்தணர்முதலியோரைத் தன்னூட்டினகணனே அழைத்தற்கும், அதனையறியாத ஆவைக் கொண்டுபோந்து தான் காத்தற்குமாகத் தன்படைத்தலைவரை நோக்கி அரசன் நிரையடித்தற்கேவியவழி, அவர் அவனூரினின்றும்போய் ஒருபாக்கத்துவிட்டிருந்து அரசனுக்கு மேல்வரும் ஆக்கத்தையறிதற்கு விரிச்சிபோக்கல் வேண்டுமென்று புறத்திணையியலுட் கூறினமையான், ஈண்டும் அவ்வாறே கூறினார். அது, ‡ "வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவி - னாதந் தோம்பன் மேவற் றாகும்." § "படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி" என்னுஞ்சூத்திரங்களானும், "நிரைகவுள் வெள்வாய்த் திரிந்துவீழ் தாடி - நரைமுதியோ னின்றுரைத்த நற்சொல் - லினையன்றி - யெல்லைநீர் வைய மிறையோற் களிக்குமால் - வல்லையே சென்மின் வழி." என்னும் உதாரணத்தானுமுணர்க. இவர் இதுகேட்டு நிரைகொண்டால் அரசன் வஞ்சிசூடி மண்ணைசையால் மேற்செல்வனென்பது ஆண்டு ¶ "எஞ்சா மண்ணசை" என்னுஞ்சூத்திரத்திற் கூறியவாறே ஈண்டுக்கூறினார். அதுமேல் "முனைகவர்ந்து" (கக) என்பதனானுணர்க

---

* "காரு மாலையு முல்லை குறிஞ்சி - கூதிர் யாம மென்மனார் புலவர்." என்பது தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், கூ

† பெருமுதுபெண்டிரென்பதற்கு ஒருபிரதிகளிலும் உரையிலது பெரிய முதிர்ந்தபெண்டிரென்க.

‡ தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், உ

§ ,, ,, ,, ரு.

¶ ,, ,, ,, எ.

[சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றி, னுறுதுய ரலமர னோக்கி யாய்மக, ணடுங்குசுவ லசைத்த கையள் கைய, கொடுங்கோற கோவலர் பின்னின் றுய்த்தர, வின்னே வருகுவர் ,ாய ரென்பேள, ணன்னர் நன்மொழி கேட்டன மதனு, னல்ல நல்லோர வாய்ப்புள்:]

நன்னர் வாய்ப்புள்—அவாகேட்ட நன்ருகிய நற்சொல,

ஆய்மகள் நடுங்கு சுவல் அசைத்த கையள்—இடைச்சாதியின்மகள் குளிரால் நடுங்குகின்ற தோளினமேலே கட்டின கையளாய்நின்று,

சிறு தாம்பு தொடுத்த பசலைக் கன்றின் உறு துயர் அலமரல் நோக்கி—சிறியதாம்பாலே காலிலே கட்டபபட்ட வருத்தத்தையுடைத்தாகிய கன்றினுடைய முலையுண்ணுமலுறுகின்ற துயராலே தாய்வருமென்று சுழலுகின்ற தன்மையைபபார்த்து,

கைய கொடுங்கோற் கோவலர் பின்னின்று உய்த்தர—கையிடத்தனவாகிய கொடிய கோலையுடைய இடையா பின்னேநின்று செலுத்துதலைச்செய்கையினுலே,

தாயர் இன்னே வருகுவர் என்போள் நன்மொழி கேட்டனம்—நிரம்பமேய்ந்து நம்முடைய தாய்மாா இபபொழுதேவருவரென்று கூறுகின்றேளுடைய நன்ருகிய வார்த்தையாக யாஙகள்கேட்டோம்;

அதனுல்—அவளகூறிய நறசொல்லின் கருததால்,

[தெவ்வா, முனைகவாந்து கொணட திறையா வினைமுடிதது, வருத றலைவர் வாய்வது:] தலைவா தெவ்வா முனை கவாந்து கொணட திறையா வினைமுடிதது வருதல் வாய்வது—நந்தலைவர் வஞ்சிசூடிச சென்று பகைவா மண்ணைககொணடு பின்அவரிடததேவாங்கிககொண்ட திறையினையுமுடையராய் இஙஙனந் தாமெடுத்துக்கொண்ட வினையை முடித்துவருவாரென்று நாங்கருதிய தன்மையிலே அவாநிற்றலுண்மை,

நல்ல—அவா அஙஙனம் வினைமுடித்துவருதல், நமக்கு இல்லறம் நிகழ்தற்குக்காரணமாகலின் நல்லகாரியம்,

[நீ நின், பருவர லெவ்வங் களைமா யோயென ] மாயோய் நீ நின் பருவரல் எவ்வங் களை என — மாமைநிறததையுடையோளே, நீ நின் மனத்தடுமாற்றத்தான் உளதான வருததத்தைப் போககென்றுகூற, அதுகேட்டு,

செலவுககுறிப்பறிந்து வேறுபட்டதுணாநதமையின், மனததடுமாறறமென்ருர்.

பெருமுதுபெண்டிா (கக), நல்லோா (கஅ) போகித் (எ) தூஉய்த் தொழுது (க௦) விரிச்சிநிறப (கக) அவாகேட்ட நன்னா (கஎ) வாய்ப்புள் (கஅ) ஆய் மகள் கௌ) கையளாகிக் (கச) கன்றின் (கஉ) அலமரனேககித் (கரு) தாயர்இன்னே வருகுவரென்போளுடைய (கசு) நன்மொழியாக யாங்கள் கேட்டனம், அதன்கருத்தால் கஎ) தலைவா வருதல வாயவது (உ௦), நல்லகாரியம் (கஅ), மாயோய் (உக) நீ நின் உ௦) பருவரலெவ்வங் களையென்று கூற (உக) அதுகேட்டு நீநெகிழ்ந்து (அஉ) என்க.

இஙஙனம்பொருள்கூருமல தலைவியது இரக்கமிகுதிகண்டு பெருமுதுபெண்டிர் விரிச்சிகேட்டுவந்து தலைவா வருவாராதல் வாய்வது, நின்னெவ்வங்களையென்று பல்நாளும் ஆறறுவிக்கவும் ஆ ‍ றுளாய்த துயருழந்து (அ௦) புலம்பொடு (அக) தேற்றியும் திருததியும் (அஉ) மையல்கொண்டும் உயிாததும் (அங) நடுங்கி நெகிழ்ந்து (அச) இடக்தோள் (அஅ) எனப் பொருள்கூறியக்கால் நெய்தற்குரிய இரங்கறபொருட்டன்றி முல்லைக்குரிய இருத்தற்பொருட்டாகாமை யுணர்க. அன்றியும் தலைவன் காலங் குறித்தல்லது பிரியானென்பதூஉம், அவன்குறித்தகாலங்கண்டால் தலைவிக்கு வருத்

தமிழுமென்பதூஉம், அது பாலையாமென்பதூஉம், அவ்வாறருமைக்கு இரங்கல் நிகழ்ந்தால் நெய்தலாமென்பதூஉம் நூற்கருத்தாதலுணர்க.

[காட்டவுங் காட்டவுங் காணுள கலுழ்சிறந்து] காட்டவுங் காட்டவுங் கலுழ்சிறந்து காணுள்—தலைவன் புகழும் மானமும் எடுத்துக்காட்டி வற்புறுத்தவும், தோன்றல் சான்ற மாற்றார் பெருமைகூறிக்காட்டி வற்புறுத்தவும் அன்புமிகுதியாற கலக்கமிக்கு இவை அரசற்கு வேண்டுமென்று மனத்திற் கருதாதவள்,

பூப் போல் உண் கண் புலம்பு முத்து உறைப்ப—பூப்போலும் மையுண்கண்கள் தாரையாகச்சொரியாது தனித்துவீழ்கின்ற முத்துப்போலுந் துளியைத் துளிப்ப, அதுகண்டு,

கான யாறு தழீஇய அகல் நெடும் புறவின்—காட்டாறுசூழ்ந்த அகன்ற நெடிய காட்டிடத்தே,

சேண் நாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி—தூரியநிலத்தே நாறுகின்ற பிடவமோடே ஏனைப் பசியதூறுகளையும் வெட்டி,

வேட்டுப் புழை அரும்பம் மாட்டி—பகைப்புலத்துக்குக் காவலாகவிருக்கும் வேட்டுவச்சாதியினுடைய அரண்களையழித்து,

[காட்ட, விடுமுட் புரிசை யேமுற வளைஇ] காட்ட முள் இடு புரிசை ஏமுற வளைஇ—காட்டினகண்ணவாகிய முள்ளாலிடுமதிலைக் காவலுறும்படி வளைத்து,

[படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி] புணரி படும் நீரிற் பரந்த பாடி—திரையொலிக்கின்ற கடல்போறபரந்த பாசறைக்கண்ணே கண்படைபெறாது (கூஎ) எனக

புறவிடத்தே (உச) எருக்கி (உ௫) மாட்டி (உசு) வளைஇப் (உஎ) பரந்த பாடியென்க.

உவலைக் கூரை ஒழுகிய தெருவில்—தழையாலேவேய்ந்த கூரை ஒழுங்குபட்ட தெருவிடத்து,

கவலை முற்றங் காவல் நின்ற தேம்படு கவுள சிறுகண் யானை—நாற்சந்தியான முற்றத்தே காவலாகநின்ற மதம்பாய்கின்ற கதுப்பினையுடையவாகிய சிறியகண்ணையுடைய யானை,

[ஓங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந் தியாத்த, வயல்விளை யின்குள குண்ணாது:] ஓங்குநிலைக் கரும்பொடு வயல் விளை கதிர்மிடைந்து யாத்த இன்குளகு உண்ணாது—வளர்கின்ற தன்மையையுடைய கரும்புகளோடே வயலிலேவிளைந்த நெற்கதிரிடையே நெருங்கப்பட்டுக் கட்டிப்போகட்ட சாவியையும் இனிய *அதிமதுரத்தழையையுந் தின்னாமல்,

நுதல் துடைத்து அயில்நுனை மருப்பில் தங் கையிடைக் கொண்டென—அவற்றாலே தந்நெற்றியைத்துடைத்துக் கூர்மையையுடைய முனைகளையுடைய கொம்பினிடத்தே ஏறட்ட தங் கையிடத்தே கொண்டுநின்றனவாக,

[கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக், கல்லா விளைஞர் கவளங் கைப்ப:] கல்லா இளைஞர் வடமொழி பயிற்றிக் கவை முட் கருவியிற் கவளங் கைப்ப — வடமொழி அடியிலேகல்லாத இளைஞர் யானைப் பேச்சான வடமொழிகளைக்கற்றுப்பலகாற்சொல்லிக் கவைத்தமுள்ளையுடைய பரிக்கோலாலே கவளத்தைத் தின்னும்படி குத்த,

* அட்டிமதுரத்தழையென்றும் பாடவேறுபாடுண்டு.

யானைக்குச்செய்யுந் தொழில்களொழிய வேறொருதொழிலைக் கல்லாத இளைஞரென்றுமாம்.

[கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான், முக்கோ லசைநிலை கடுப்ப நற்போ, ரோடா வல்விற் றூணி நாற்றிக், கூடங் குத்திக் கயிறுவாங் கிருக்கை:]

கூடம் குத்திக் கயிறு வாங்கு இருக்கை—கூடமாகக் கால்களைநட்டுக் கயிற்றை வலித்துக்கட்டின இருப்பின்கணணே,

என்றது படங்குகளை

கல் தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான் முக்கோல் அசை நிலை கடுப்ப—துகிலைக் காவிக்கல்லைத் தோய்த்துடுத்த விரதங்களையுடைய முக்கோலந்தணன் அம்முக்கோலிலே அந்தஉடையினை இட்டுவைத்த தன்மையையொக்க,

நற்போர் ஓடா வல்வில் தூணி நாற்றி—அறத்தாற்பொருகின்ற போரிற்கு ஓடாமைக்குக் காரணமான வலியவில்லைச் சேரவூன்றி அதிலே தூணிகளைத்தூக்கி,

பூந்தலைக் குந்தம் குத்தி—பூத்தொழிலைத் தலையிலேயுடைய எறிகோல்களையுமூன்றி,

பூந்தலை-விகாரம்

கிடுகு நிரைத்து—கிடுகுகளையும் நிரையக் குத்தி,

வாங்கு வில் அரணம் அரணமாக—இங்ஙனஞ்சூழும் விற்படையாகிய அரணே தங்களுக்கரணாக, இதற்குள்ளேவிட்ட,

கயிறுவாங்கிருக்கைக்கணணே (சஉ) நாற்றிக் (ருக) குத்தி நிரைத்து (சக) வாங்குவிலரணமென்க.

வேறு பல பெரும்படை நாப்பண்—பாடைவேறுபட்ட பலவாகிய பெரியபடைக்குநடுவே,

[வேறோர், நெடுங்காழ்க் கணடங் கோலியக் கோபு·]

வேறோர் அகம் சேர்பு—வேறோரிடத்தை அரசனுக்குக் கோயிலாக எல்லாருமுடம்பட்டு,

நெடுங்காழ்க் கணடம் கோலி—நெடிய குத்துக்கோலுடனேபண்ணின பலநிறத்தாற் கூறுபட்ட மதிட்டிரையைவளைத்து,

கணடம்-ஆகுபெயர்.

குறுந்தொடி முன்கைக் கூந்தல்அம் சிறுபுறத்து மகளிர் (சஎ)—குறியதொடியையுடைய முன்கையினையும் கூந்தலசைந்துகிடக்கின்ற அழகினையுடைய சிறியமுதுகினையுமுடைய மகளிர்,

இரவு பகற்செய்யும் திண்பிடி ஒள் வாள் விரவு வரிக் கச்சிற் பூண்ட மங்கையர்—இராப்பொழுதைப் பகற்பொழுதாக்குந் திணணிய * ஆசினையுடைய ஒள்ளியவாளை விரவினநிறத்தினையுடைய கச்சினாலேபூண்ட மகளிர்,

நெய் உமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக் கை அமை விளக்கம் நந்துதொறும் மாட்ட—நெய்யைக்காலுகின்ற திரிக்குழாயையுடைய சிற்றூட்கள் நெடிய திரியை எங்குங்கொளுத்தி ஒழுங்காயமைந்த விளக்குக்கள் அவியுந்தோறும் தங்கையிற்பந்தத்தைக்கொளுத்த,

* கவிசினையுடையவென்றும், வாய்ச்சினையுடையவென்றும் பிரதிபேதமுண்டு.

நெடுநா வெண்மணி நிழற்றிய நடுநாள்—நெடிய நாக்கினையுடைய வெள்ளியமணி எறிந்துவிட்ட நடுவியாமத்தும்,

கோயில் பணிமடங்கினால் மணியெறிந்துவிடுதல் இயல்பு.

இனி யானை குதிரைமுதலியன துயில்கோடலின், அவற்றின் மணியோசை அடங்கிய நடுநாளென்றுமாம்.

அதிரல் பூத்த ஆடு கொடிப் படாஅர் சிதர் வரல் அசை வளிக்கு அசைவந்தாங்கு—புனலிபூத்த அசைகின்ற கொடியினையுடைய சிறுதூறுகள் துவலையோடே வருதலையுடைய அசைந்தகாற்றிற்கு அசைந்தாற்போல,

சிதர் - மெத்தெனவுமாம்

துகில் முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்கு நடைப் பெரு மூதாளர் ஏமம் சூழ—மயிர்க்கட்டுக்கட்டிச் சட்டையிட்ட அனந்தரினையும், பெரிய ஒழுக்கத்தினையுமுடைய மெய்காப்பாளர் காவலாகச் சூழ்ந்துதிரிய,

[பொழுதளந் தறியும் பொய்யா மாக்கள், டொழுதுகாண் கையர் தோன்ற வாழ்த்தி·]

மாக்கள் பொழுது அளந்தறியும் பொய்யாக் காணகையர் — அறிவில்லாதோருடைய வாழ்நாளை இத்துணையென்று அளந்தறியும் பொய்யாத காட்சியையுடையார்,

தொழுது தோன்ற வாழ்த்தி— அரசனைவணங்கி விளங்க வாழ்த்தி,

எறி நீர் வையகம் வெலீஇய செல்வோய்— திரையெறிகின்ற கடல்சூழ்ந்த உலகத்தே பகைவரை வெல்லுதற்குச் செல்கின்றவனே,

நின் குறுநீர்க் கன்னல் இனைத்து என்று இசைப்ப — கடாரத்துநீரிலேகாணகின்ற நினது நாழிகைவட்டிலிற் சென்றநாழிகை இத்துணையென்று சொல்லுகையினாலே,

[மததிகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை·]

மத்திகை வளைஇய உடை—புரவியை யடிக்கின்ற சம்மட்டி வளைந்து கிடக்கின்ற உடை,

மறிந்து வீங்கு செறிவு உடை—அச்சம்மட்டி மறையும்படி வடிம்புதாழ்ந்து பெருக்குஞ் செறிதலையுடைய புடைவையுடையினையும்,

மெய்ப்பை புக்க வெருவரும் தோற்றத்து— சட்டையிட்ட அச்சம்வருந் தோற்றரவினையும்,

வலி புணர் யாக்கை— இயல்பான வலிகூடின மெய்யினையுமுடைய,

வன்கண் யவனர்— தறுகண்மையினையுடைய சோனகர்,

புலித் தொடர் விட்ட புனை மாண் நல்லில—புலிச்சங்கிலிவிடப்பட்ட கைசெய்தமாட்சிமைப்பட்ட நன்றாகிய இல்லிலே,

திரு மணி விளக்கம் காட்டித் திண்ஞாண் எழினி வாங்கிய ஈரறைப் பள்ளியுள்—அழகினையுடைய மாணிக்கமாகியவிளக்கை எரியவைத்துத் திண்ணிய கயிற்றிற் திரையைவளைத்த புறவறைக்குள்ளறையிற் படுக்கைக்கண்ணேசென்று,

[உடம்பி னுரைக்கு முரையா நாவிற், படம்புகு மிலேச்ச ருழைய ராக:] உரையா நாவின் உடம்பின் உரைக்கும் படம் புகும் மிலேச்சர் உழையராக—வார்த்தை சொல்லாத நாவினையுடைய கையாலும் முகத்தாலும் வார்த்தைசொல்லுஞ் சட்டையிட்ட சரவாசிகள் பள்ளிகொள்ளுமிடத்தைச் சூழ்ந்துதிரிய,

உளரியாராவென்றூர், ஊமைகளென்றற்கு

மண்டு அமர் நசையொடு கண்படை பெறாஅது—பகைவர் மனமறியாமல் புரிக்குச்செல்கின்ற போரை நச்சுதலாலே கண்ணுறக்கம்பெறாமல,

எடுத்து எறி எஃகம் பாய்தலிற புண் கூர்ந்து பிடிகணம் மறந்த வேழம் உள்ளியும் (எஉ)— ஓச்சிவெட்டுகின்ற வாளழுந்துகையினாலே புண்மிக்குப் பிடித்திரளைமறந்த வேழத்தையுள்ளியும,

[வேழத்துப, பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமிய] வேழத்துப பரூஉக்கை பாம்பு பதைப்பன்ன துமிய— யானையினுடைய பரியகைகள் பாம்பினது பதைக்கின்ற தன்மையையொத்த பதைப்பினையுடையவாக அற்றுவிழும்படி,

தேம் பாய் கண்ணி நல்வலம் திருத்திச் சோறு வாய்த்து ஒழிந்தோர் உள்ளியும—தேன்பரக்கும் வஞ்சிமாலைக்கு நன்றாகிய வெற்றியை யுண்டாக்கிச் செஞ்சோற்றுக் கடனிறுத்துப் பட்ட வீரரைநினைத்தும,

தோல் துமிபு வைநுனைப் பகழி மூழ்கலிற செவி சாய்த்து உண்ணாது உயங்கும் மா சிந்தித்தும—பக்கரைகளை யறுத்துக் கூரியமுனையினையுடைய அம்புகள் வந்து அழுந்துகையினாலே செவிசாய்த்துப் புல்லுணாதே வருந்துங் குதிரைகளை நினைத்தும்,

[ஒருகை பள்ளி யொற்றி யொருகை, முடியொடு கடகஞ் சேர்த்தி] ஒருகை பள்ளி ஒற்றி ஒருகைக் கடகம் முடியொடு சேர்த்தி—ஒருகையைப் படுக்கையின்மேலேவைத்து ஒருகையிற்கடகத்தை முடியோடேசேரவைத்து,

என்றது - கையிலே தலையைவைத்தென்றவாறு.

நெடிது நினைந்து— இப்படைநொந்தவளவுக்கு நாளை எவ்வாறு பொருமென்று நெடிதாகநினைந்து,

பகைவர்ச் சுட்டிய படை கொள் நோன் விரல— பகைவரைக்கருதிவைத்த வாளைப்பிடித்த வலியினையுடைய கையாலே வெட்டிவென்று (அக) எனக.

நகை தாழ் கண்ணி நல்வலம் திருத்தி— தனக்கு எக்காலமும விளக்கந்தங்கும வஞ்சியை நன்றாகிய வெற்றியை நிலைபெறுத்தி,

அரசு இருந்து பனிக்கும் பாசறை (எக) — பகையரசிருந்து நடுங்குதற்குக்காரணமான பாசறை,

பனிக்கும் பாசறை — *நோயதீருமருந்துபோனினறது.

முரசு முழங்கு பாசறை—வெற்றிக்களிப்புத்தோன்ற முரசுமுழங்கும பாசறை,

[இன்றுயில் வதியுநற் காணாள் துயருழந்து, நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு, நீடுநினைந்து தேற்றியு மோடுவளை திருத்தியு, மையல் கொண்டு மொய்யென வுயிர்த்து, மேவுற மஞ்ஞையி னடுங்கி யிழைநெகிழ்ந்து]

வதியுநன் இன்றுயில் காணாள்— தனனிடத்தேதங்குமவனை இனியதுயில் கொள்ளுதலைக் காணாளாய்,

நெஞ்சு ஆற்றுப்படுத்த புலமபொடு— அவன் தன்னெஞ்சைத் தான்போகின்றவழியிற் செலுத்துதலால் தனக்குண்டான தனிமையாலே,

---

* கலித்தொகை, இரண்டாவதுகுறிஞ்சிக்கலி, உக "அலர்முலை யாயிழை நல்லாய் கதுமெனப் - பேரம ருண்கணென் றோழி யுநீஇய - வாரஞ ரெவ்வ முயிர் வாங்கு - மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீஇ"

இது * "நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும" என்பதாம்.

நிறைதபு புலம்பு— தனதுநிறைகெடுதததனிமை,

நீடு நினைந்து—இங்ஙனம் பிரிந்தாலன்றி இவ்வாறியல நிகழாதென்று நினைத்து,

ஒடு வளை திருததியும்— கழலுகின்றவளையைக கழலாமற செறித்தும்,

மையலகொணடும— மயககஙகொணடும,

ஒயயென உயிாததும்— விரைய நெட்டுயிாபபுககொணடும்,

ஏவுறு மஞ்ஞையின நடுஙகி இழை நெகிழ்ந்து — அம்புதைத்த மயில்போல நடுஙகி அணிகலஙகள நெகிழ்நது கணபுலமபுமுததுறைப்ப (உரு) எனக் கூட்டுக.

தூயருழந்து தேறறியும்— அதனைககணடு தானும் வருததமுறறு இவள்ஆற்றியி ராளெனறு துணிநதும,

பாவை விளககிற பரூஉசசுடா அழல—பொறபாவை ஏந்திநின்ற தகளியிலே பரியவிளககு நின்றெரிய,

விளககு - ஆகுபெயா.

இடம சிறநத உயரிய எழுநிலை மாடதது — தனககுள்ள இடமெல்லாம் பொன் ஞலும் மணியாலும சிறபபுபபெறறு உயாநத எழுநிலையினையுடைய மாடத்திடத்து,

முடஙகிறைச சொரிதரும மாத திரள அருவி— † மூட்டுவாய்களினின்றுஞ் சொரிதலைசசெய்யும பெருமையையுடைய திரணட அருவிகளினுடைய,

இன பல இமிழ இசை ஓாபபனள கிடநதோள் — இனிய பலவாகிய முழங்கு கின்ற ஓசைககணணே தலைவன தான்கூறிய பருவம் பொயயாமல் வருவனென்னுங் கருததினளாகலின அவன்வரவினையே கருதிககிடநதோளுடைய,

அஞ்செவி நிறைய ஆலின— அகஞ்செவி நிரம்புமபடி ஆரவாரித்தன;

[வெனறுபிறா, வேணடுபுலங கவாநத வீணடுபெருந தானையொடு, விசயம்:]

வென்று— வெட்டிவெனறு,

பிறா வேணடு புலம் கவாந்த விசயம— பகையரசர் எககாலமும விரும்பும் நில ஙகளைக கைககொணட வெறறியாலே,

ஈணடு பெருநதானையொடு— திரளுகினற பெரியபடையோடே,

அரசன் வினைமுடி நதகாலத்தே விரைந்துபோந்தானுகலின், அதுகேட்டுவருகி ன்ற படையென்டதுதோன்ற ஈண்டுபெருந்தானை யென்ருா.

வெலகொடி உயரி— எககாலமும் வென்றெடுக்கின்ற கொடியை எடுத்து,

வலனோபு வயிரும் வளையும் ஆாப்ப— வெறறிதோன்றிக் கொமபுஞ்சங்குமு ழஙக,

அயிர செறி இலைக காயா அஞ்சனம மலர— நுணமணலிடததனவாகிய நெருங் கின இலையினையுடைய காயா அஞ்சனம்போல அவிழ,

முறி இணாக கொன்றை நன்பொன் கால—தளிரினையுங கொததினையுமுடைய கொன்றை நன்ருகிய பொன்னைச்சொரிய,

கோடற்குவிமுகை அஙகை அவிழ—கோடலினது குவிந்தமுகைகள் அகங்கை போலவிரிய,

* தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், சுரு.

† கூடுவாயென்றும் பிரதிபேதபாடமுணடு

தோடு ஆர் தோன்றி குருதி பூப்ப— இரட்சிநிறைந்த தோன்றி உதிரம்போலப் பூப்ப,

கானம் நந்திய செந்நிலப் பெருவழி — காடுதழைத்த சிவந்தநிலத்திற பெருவழியிலே,

[வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற், திரிமருப் பிரலையொடு மடமா னுகள, வெதிர்செல் வெண்மழை பொழியுந் திங்களின்]

வானம் வாய்த்த வரகு — மழைவேண்டப் பெய்தவரகு,

எதிர் செல் வெண்மழை பொழியும் திங்களில் வாங்கு கதிர் வரகின்—எதிர்காலத்துக்குப் பெய்யச்செல்கின்ற வெள்ளியமழை சிறுதுவலையைப்பொழியும் முன்பனிதொடங்குந் திங்களிலே வளைகின்ற கதிரையுடைய வரகிடத்தே,

திரி மருப்பு இரலையொடு மடமான் உகள — முறுக்குண்ட கொம்பினையுடைய புல்வாய்க்கலையோடே மடப்பத்தையுடைய மான் துள்ள,

மழையால் தண்ணீரும் புல்லும் நிறையப்பெற்றுப் புணர்ந்துதிரியுமென்ற கருப்பொருளால், அவற்றைக்கண்ட அரசனுக்கு வேட்கை மிகுதிகூறிற்று

மலரக (கூரு) கால (கூச) அவிழப் (கூ௫) பூப்ப (கூசு) உகளக (கூக) கானநந்திய பெருவழி (கூள) யென்க.

இவையெல்லாம் வேட்கைவிளைதற்குக் காரணமாயின.

முதிர் காய் வள்ளியங்காடு பிறக்கு ஒழிய—தன்பருவம் வந்தால் முதிருங்காயையுடைய வள்ளியங்காடு பின்னாக,

துனை பரி துரகருஞ் செலவினா — விரைந்துசெல்லும் பரியை அதனுனமையாமற் கடிதாகச்செலுத்துஞ் செலவினையுடையராய்வந்தவருடைய,

என்றது:— * "வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவரு காலை, யிடைச்சுர மருங்கிற றவிர்த லில்லை, யுள்ளம் போல வுற்றுழி யுதவும், புள்ளியற் கலிமா வுடைமை யான" என்பது தோன்றக் கூறிறறு.

வினை விளங்கு நெடுந்தோ பூண்ட மாவே— தான்எடுத்துக்கொண்ட வினை எக்காலமுமவிளங்கும் நெடிதாகிய தேரைபபூண்டகுதிரை.

தலைவி தன்னிடத்தே வதிகின்றவனை இன்றுயிலைக்காணாளாய் (அ0) நெஞ்சாற்றுபபடுத்த புலமபாலே (அக) ஒடுவளை திருத்தியும் (அஉ) மையல்கொண்டும் உயிர்த்தும் (அரு) நடுங்கிநெகிழ்ந்து (அச) பூபபோலுணகண புலம்புமுத்துறைப்ப (உரு) அதுகண்டு துயருழந்து (அ0) தேற்றியும் (அஉ) வற்புறுததிப் பிரிதல்வேணடுமெனக கூறிக் காட்டவுங காட்டவுங்காணாதவள் (உஉ) பெருமுதுபெணடிர் (கக) எவ்வங்க ... யனைகூற (உக) அதுகேட்டு நீடுநினைந்து (அஉ) பெரும்பெயலபொழிந்த சிறுபுபாலை ... ல் (சு) இட்டசுடா அழலாகிறக (அ௫) இமிழிசை ஓாப்பனள கிடந்தோளு ... (அஅ) அஞ்செவிநிறையப் (அகூ), பாசறைப்பாடியிலே (உஅ) அரசிருநது (எகூ) ஒருகைபள்ளியொறறி ஒருகை (எ௫) முடியொடுசோத்தி (எசு) வேழத்தை (கூக) யுள்ளியும் (எஉ) மாவைச்சிந்திததும (எச) ஒழிந்தோரை உள்ளியும் (எஉ) நினைந்து (எகூ) நடுங்குதற்குக்காரணமான பாசறையிற (எகூ) பெரும்படைநாப்பண் வேறோர் (சரு) அகம் சேர்பு கண்டங்கோலி (சச) யவனர் (கூக) புலித்தொடர்விட்ட நல்லில்லிலே (கூஉ) பொழுதளந்தறியுங (௫௫) காண்கையா (௫சு) கன்னல் இனைத்தென்றிசை

* தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், ௫ரு.

க்கையினாலே (ருஅ) மங்கையர் (சஎ) திருமணிவிளக்கங்காட்டி (சுரு) எழினிவா ங்கிய பள்ளியிலே சென்று (சுச) இளையர் கவளங்கைப்பச் (ருசு) சுரையர் (சஅ) மா ட்டப் (சகூ) பெருமூதாளர் ஏமஞ்சூழ (ருச) மிலேச்சருழையராக (சுசு) வெண் மணிவிழுற்றிய நடுநாளினும் (ரு0) மண்டமர்நசையாற் கண்படைபெறாதிருந்து (சுஎ) மறைநாட் படைகொணோன்விரலாலே (எஎ) வென்று (அக) கண்ணிவலந்திருத் திப் (எஅ) பிறர்வேண்டு புலங்கவர்ந்த (கூ0) விசயத்தாலே வெல்கொடியுயரிக் (கூக) காடுபிறக்கொழியப் (க0க) பெருவழியிலே (கூஎ) வயிரும் வளையுமார்ப்ப (கூஉ) ஈண்டு பெருந்தானையோடே (கூ0) துனைபரித்துரக்குஞ் செலவினையுடையராய் வந்தவ ருடைய (க0உ) தோள்பூண்டமா (க0ரு) ஆலின (அகூ) வென வினைமுடிக்க.

* "செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே, வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்" என்பதனால் வற்புறுத்திப்பிரிதல்வேண்டுமென்றுணர்க

தொல்காப்பியனார் கருத்திற்கேற்ப நப்பூதனார் செய்யுள் செய்தாரென்றுணர்க. இவ்வாறன்றி யேனையோர்கூறும்பொருள்கள் இலக்கணத்தோடு பொருந்தாமையுணர்க.

**காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வாணிகனார்மகனார் நப்பூதனார் பாடிய முல்லைப்பாட்டிற்கு மதுரைஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர்செய்தவுரை முற்றிற்று.**

---

வெண்பா.

க வண்டடை கண்ணி வளாச்சி வாணெடுங்கண்
சென்றடைந்த நோக்க மினியபெறுவ - தென்றுகொல்
கன்றெடுத்தோச்சிக் கனிவிளவின் காயுகுத்துக்
குன்றெடுத்து நின்ற நிலை

உ புனையும் பொலம்படைப் பொங்குளைமான் றிண்டேர்
துனையுந் துனைபடைத் துன்னார் - முனையு
ளடன்முகந்த தானை யவர்வரா முன்னம்
கடன்முகந்து வந்தன்று கார்.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், சச.

ஆறாவது

# மதுரைக்காஞ்சி



ஓங்குதிரை வியன்பரப்பி
னொலிமுந்நீர் வரம்பாகத்
தேன்றூங்கு முயர்சிமய
மலைநாறிய வியன்ஞாலத்து
௫ வலமாதிரத்தான் வளிகொட்ப
வியனாண்மீ னெறியொழுகப்
பகற்செய்யுஞ் செஞ்ஞாயிற்
றிரவுச்செய்யும் வெண்டிங்களு
மைதீர்ந்து கிளர்ந்துவிளங்க
௧௦ மழைதொழி லுதவ மாதிரங் கொழுக்கத்
தொடுப்பி னாயிரம் வித்தியது விளைய
நிலனு மரனும் பயனெதிர்பு நந்த
நோயிகந்து நோக்குவிளங்க
மேதக மிகப்பொலிந்த
௧௫ வோங்குநிலை வயக்களிறு
கண்டுதண்டாக் கட்கின்பத்
துண்டுதண்டா மிகுவளத்தா
னுயர்பூரிம விழுத்தெருவிற்
பொய்யறியா வாய்மொழியாற்
௨௦ புகழ்நிறைந்த நன்மாந்தரொடு
நல்லூழி யடிப்படரப்
பல்வெள்ள மீக்கூற
வுலக மாண்ட வுயர்ந்தோர் மருக
பிணக்கோட்ட களிற்றுக்குழும்பி
௨௫ னிணம்வாய்ப்பெய்த பேய்மகளி
ரிணையொலியிமிழ் துணங்கைச்சீர்ப்
பிணையூப மெழுந்தாட
வஞ்சுவந்த போர்க்களத்தா
னாண்டலை யணங்கடுப்பின்

பூரியவிழுத்தெருவென்றும்பாடம்

௩௦ வயவேந்த ரொண்குருதி
சினத்தீயிற் பெயர்புபொங்கத்
தெறலருங் கடுந்துப்பின்
விறல்விளங்கிய விழுச்சூர்ப்பிற்
றொடித்தோட்கை துடுப்பாக
௩௫ வாடுற்ற வூன்சோறு
நெறியறிந்த கடிவாலுவ
னடியொதுங்கிப் பிற்பெயராப்
படையோர்க்கு முருகயர
வமர்கடக்கும் வியன்றானைத்
௪௦ தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற்
றொன்முது கடவுட் பின்னர் மேய
வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந
விழுச்சூழிய விளங்கோடைய
கடுஞ்சினத்த கமழ்கடாஅத்
௪௫ களறுபட்ட நறுஞ்சென்னிய
வரைமருளு முயர்தோன்றல
வினைநவின்ற பேர்யானை
சினஞ்சிறந்து களனுழக்கவு
மாவெடுத்த மலிகுரூஉத் துக
௫௦ ளகலவானத்து வெயில்கரப்பவும்
வாம்பரிய கடுந்திண்டேர்
காற்றென்னக் கடிதுகொட்பவும்
வாண்மிகு மறமைந்தர்
தோண்முறையான் வீறுமுற்றவு
௫௫ மிருபெரு வேந்தரொடு வேளிர் சாயப்
பொருதவரைச் செருவென்று
மிலங்கருவிய வரைநீந்திச்
சுரம்போழ்ந்த விகலாற்ற
லுயர்ந்தோங்கிய விழுச்சிறப்பி
௬௦ னிலந்தந்த பேருதவிப்
பொலந்தார் மார்பி னெடியோ னும்பன்
மரந்தின் னூஉ வரையுதிர்க்கு
நரையுருமி னேறனையை
யருங்குழுமிளைக் குண்டுகிடங்கி
௬௫ னுயர்ந்தோங்கிய நிரைப்புதவி
னெடுமதி னிரைஞாயி

லமபுமி ழுயிலருபபங்
தண்டாது தலைச்சென்று
கொண்டுநீங்கிய விழுச்சிறப்பிற
௭0 றென்குமரி வடபெருங்கல
குணகுடகட லாவெலலைத
தொன்றுமொழிந்து தொழிலகேட்ப
வெறறமொடு வெறுததொழுகிய
கொறறவாதங் கோனகுவை
௭௫ வானியைந்த விருமுநநீரப
பேஎநிலைஇய விரும்பௌவததுக
கொடுமபுணரி விலங்குபோழக
கடுஙகாலொடு கரைசேர
நெடுஙகொடி மிசையிதையெடுத
௮0 தினனிசைய முரசமுழங்கப
பொன்மலிந்த விழுபபண்ட
நாடார நன்கிழிதரு
மாடியற பெருநாவாய
மழைமுற்றிய மலைபுரையத
௮௫ துறைமுற்றிய துளஙகிருக்கைத
தெணகடற குணடகழிச
சீரசானற வுயாநெல்லி
னூர்கொண்ட வுயாகொறறவ
நீரததெவவு நிரைததொழுவா
௯0 பாடுசிலமபு மிசையேறறத
தோடுவழஙகு மகலாம்பியிற
கயமகைய வயனிறைக்கு
மெனமெருடை வனகிழாஅ
ரதரி கொளபவா பகடுபூண் டெணமணி
௯௫ யிரும்பு ளோபபு மிசையே யென்று
மணிபபூ முண்டகதது மணனமலி கானற
பரதவா மகளிா குரவையொ டொலிபப
ஒருசாா, விழவுநின்ற வியலாங்கண்
முழவுத்தோண் முரட்பொருநாக்
௧00 குருகெழு பெருஞ்சிறபபி
னிருபெயா்ப பேராயமொ
டிலங்கு மருபபிற் களிறு கொடுத்தும
பொலந்தாமரைப் பூச்சூட்டியு

௧௪0 றஞ்சுவரத் தட்கு மணங்குடைந்த துப்பிற்
கோழூஉன் குறைக் கொழுவல்சிப்
புலவுவிற் பொலிகூவை
யொன்றுமொழி யொலியிருப்பிற்
றென்பரதவர் போரேறே
௧௪௫ யரிய வெல்லா மெளிதினிற் கொண்
டுரிய வெல்லா மோம்பாது வீசி
நனிபுகன் றுறைந்து மெனாஅர்தேஎ றெழுந்து
பனிவார் சிமையக் கானம் போகி
யகநாடு புக்கவ ரருப்பம் வெளவி
௧௫0 யாண்டுபல கழிய வேண்டுபுலத் திறுத்து
மேம்பட மரீஇய வெல்போர்க் குரிசி
லுறுசெறுநர் புலம்புக்கவர்
கடிகாவி னிலைதொலைச்சி
யிழிபறியாப் பெருந்தண்பணை
௧௫௫ குரூஉக்கொடிய வெரிமேய
நாடெனும்பேர் காடாக
வாசேந்தவழி மாசேப்ப
வூரிருந்தவழி பாழாக
விலங்குவளை மடமங்கையர்
௧௬0 துணங்கையஞ்சீர்த் தழூஉமறப்ப
வவையிருந்த பெரும்பொதியிற்
கவையடிக் கடுங்கோட்கத்துப்
பேய்மகளிர் பெயர்பாட
வணங்குவழங்கு மகலாங்கண்
௧௬௫ ணிலத்தாற்றுங் குழூஉப்புதவி
னரந்தைப் பெண்டி ரினைந்தனர் கவக்
கொழும்பதிய குடிதேம்பிச்
செழுங்கேளிர் நிழல்சேர
நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர் பள்ளிக்
௧௭0 குடுமிக் கூகை குராலொடு முரலக்
கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கைக்
களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றார்ந்து
நல்லேர் நடந்த நசைசால் விளைவயற்
பன்மயிர்ப் பிணவொடு கேழ லுகள
௧௭௫ வாழா மையின் வழிதவக் கெட்டுப்
பாழா யினநின் பகைவர் தேஎம்

மொழாஅத்தோ ளிமிழ்முழக்கின்
மாஅத்தா ளுயர்மருப்பிற்
கடுஞ்சினத்த களிறுபரப்பி
௧௭௦ விரிகடல் வியன்றானையொடு
முருகுற ழத்தலைச்சென்
றகல்விசும்பி னார்ப்பிமிழப்
பெயலுறழக் கணைசிதறிப்
பலபுரவி நீறுகைப்ப
௧௭௫ வளைநால வயிரார்ப்பப்
பீடழியக் கடந்தட்டவர்
நாடுகெட வெயில்வெளவிச்
சுற்றமொடு தூவறுத்தலிற்
செற்ற தெவ்வர் நின்வழி நடப்ப
௧௮௦ வியன்கண் முதுபொழின் மண்டில முற்றி
யரசியல் பிழையா தறநெறி காட்டிப்
பெரியோர் சென்ற வடிவழிப் பிழையாது
குடமுதற் றோன்றிய தொன்றுதொழு பிறையின்
வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றங்
௧௮௫ குணமுதற் றோன்றிய வாரிருண் மதியிற்
றேயவன கெடுகநின் றெவ்வ ராக்க
முயர்நிலை யுலகத்தமிழ்தொடு பெறினும்
பொய்ச்சே ணீங்கிய வாய்நட் பினையே
முழங்குகட லேணி மலர்தலை யுலகமொ
௨௦௦ டுயர்ந்த தேஎத்து விழுமியோர் வரினும்
பகைவர்க் கஞ்சிப் பணிந்தொழு கலையே
தென்புல மருங்கின் விண்டு நிறைய
வாணன் வைத்த விழுநிதி பெறினும்
*பழிநமக் கொழுக வென்னாய விழுநிதி
௨௦௫ யீத லுள்ளமொ டிசைவேட் குவையே
யன்னாய் நின்னொடு முன்னிலை யெவனோ
கொன்னொன்று கிளக்குவ னடுபோ ரண்ணல்
கேட்டிசின் வாழி கெடுகநின் னவலங்
கெடாது நிலைஇயர்நின் சேண்விளங்கு நல்லிசை
௨௧௦ தவாப்பெருக்கத் தறாஅயாணர்
ரழித்தானாக் கொழுந்திற்றி
யிழித்தானாப் பலசொன்றி

*பழிநமக்கெழுக வென்றும்பாடம்.

யுண்டாணுக் கூர்நறவிற்
றின்ருணு வினவைக
௨௧௫ னிலனெடுக் கலலா வொண்பல வெறுக்கைப
பயனற வறியா வளஙகெழு திருநகா
நரம்பின் முரலு நயமவரு முரறசி
விறலியர் வறுஙகைக குறுநதொடி செறிபபப
பாண ருவபபக களிறு பலதரீஇக
௨௨௦ கலநதோ ருவபப வெயிறபல கடைஇ
மறஙகலங்கத தலைசசென்று
வாளுழந்ததன றாள்வாழ்ததி
நாளீண்டிய நலலகவர்ககுத்
தேரோடு மாசிதறிச
௨௨௫ சூடுறற சுடாப்பூவின்
பாடுபுலர்நத நறுஞசாநதின்
விழுமிய பெரியோா சுறற மாகக
கள்ளி னிருமபைக கலனுசெல வுணடு
பணிந்தோா தேஎந தமவழி நடபபப
௨௩௦ பணியா தேஎம பணிததுததிறை கொண்மா
பருந்துபறக கலலாப பார்வற பாசறைப
படுகண் முரசங காலை யியமப
வெடிபடக் கடந்து வேண்டுபுலத [illegible] ததத
பணைகெழு பெருநதிறற பலவேற மனனா
௨௩௫ கரைபொரு திரங்குங் கனையிரு [illegible]ந்நீா
திரையிடு மணலினும பலரே யுரைசெல
மலர்தலை யுலகமாணடு கழிந்த வோரே
அதனால், குணகடல கொண்டு குடகடன முற்றி
யிரவு மெலலையும விளி[illegible]டன் றறியா
௨௪௦ தவலு மிசையு [illegible]திரள் பீண்டிக
கவலையங குழூ[illegible] னருவி யொலிபபக்
கழைவளா ச[illegible]ற களிற்றின நடுஙக
வரைமுத [illegible]ங்கு மேஎறுடு வானஞ்ஞிமிர்ந்து
சி[illegible]ற பெருமபெயல சிறந்துகலிற றுஙகாது
துணைகடற கிவாதருங குரூஉப்புன லுநதி
நிவந்துசெல னீத்தங் குளஙகொளச சாறறிக
களிறுமாய்ககுங கதிர்ககழனி
யொளிறிலைஞசி யடைநிவந்த
[illegible]ள சுடர்த்தாமரை

௨௫௦ கட்கமழு நறுநெய்தல்
வள்ளிதழ விழ்நீல
மெல்லிலை யரியாம்பலொடு
வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கைக்
கம்புட் சேவ லின்றுயி லிரிய
௨௫௫ வள்ளை நீக்கி வயமீன் முகந்து
கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்
வேழப் பழனத்து நூழி லாட்டுக்
கரும்பி னெந்திரங் கட்பி னோதை
யள்ளற் றங்கிய பகடுறு விழுமங்
௨௬௦ கள்ளார் களமர் பெயர்க்கு மார்ப்பே
யொலிந்த பகன்றை விளைந்த கழனி
வன்கை வினைஞ ரரிப்பறை யின்குரற்
றளிமழை பொழியுந் தண்பரங் குன்றிற்
கலிகொள் சுமமை யொலிகொ ளாயந்
௨௬௫ ததைந்த கோதை தாரொடு பொலியப்
புணர்ந்துட னாடு மிசையே யனைத்து
மகலிரு வானத் திமிழ்ந்தினி திசைப்பக்
குருகுநரல மனைமரத்தான்
மீன்சீவும் பாண்சேரியொடு
௨௭௦ மருதஞ் சான்ற தண்பணை சுற்றி யொருசார்
சிறுதினை கொய்யக் கவ்வை கறுப்பக்
கருங்கால் வரகி னிருங்குரல் புலர
வாழ்ந்த குழுமியிற் றிருமணி கிளர
வெழுந்த கடற்றி னன்பொன் கொழிப்பப்
௨௭௫ பெருங்கவின் பெற்ற சிறுதலை நவ்வி
மடக்கட் பிணையொடு மறுகுவன வுகளச்
சுடர்ப்பூங் கொன்றை தாஅய நீழற்
பாஅ யன்ன பாறை யணிந்து
நீலத் தன்ன பைம்பயிர் மிசைதொறும்
௨௮௦ வெள்ளி யன்ன வொள்வீ யுதிர்ந்து
சுரிபுகிழ் முசுண்டையொடு முல்லை தாஅய்
மணிமரு ணெய்த லுறழக் காமர்
துணிநீர் மெல்லவற் றொய்யிலொடு மலர
வல்லோன் றைஇய வெறிக்களங் கடுப்ப
௨௮௫ முல்லை சான்ற புறவணிந் தொருசார்
நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய

௨௧

புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொ டனைத்தும்
வைக றோறும் வழிவழிச் சிறப்ப
௩௨௫ நெய்தல் சான்ற வளம்பல பயின்றாங்
கைம்பாற் றிணையுங் கவினி யமைவர
முழவிமிழு மகலாங்கண்
விழவுநின்ற வியன்மறுகிற்
றுணங்கையந் தழூஉவின் மணங்கமழ் சேரி
௩௩௦ யின்கலி யாணர்க் குழூஉப்பல பயின்றாங்குப்
பாடல் சான்ற நன்னாட்டு நடுவட்
கலைதாய வுயர்சிமயத்து
மயிலகவு மலிபொங்கர்
மந்தி யாட மாவிசும் புகந்து
௩௩௫ முழங்குகால் பொருத மரம்பயில் காவி
னியங்குபுனல் கொழித்த வெண்டலைக் குவவுமணற்
கான்பொழில் தழீஇய வடைகரை தோறுந்
தாதுசூழ் கோங்கின் பூமலர் தாஅய்க்
கோதையி னொழுகும் விரிநீர் நல்வர
௩௪௦ லவிரற லவையைத் துறைதுறை தோறும்
பல்வேறு பூத்திரட் டண்டலை சுற்றி
யழுந்துபட் டிருந்த பெரும்பா ணிருக்கையு
நிலனும் வளனுங் கண்டமை கல்லா
விளங்குபெருந் திருவின் * வான விறல்வே
௩௪௫ ளழும்பி லன்ன நாடிழந் தனருங்
கொழும்பல் பதிய குடியிழந் தனருந்
தொன்றுகறுத் துறையுந் துப்புத்தர வந்த
வண்ணல் யானை யடுபோர் வேந்த
ரின்னிசை முரச மிடைப்புலத் தொழியப்
௩௫௦ பன்மா றோட்டிப் பெயர்புறம் பெற்று
மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடங்கின்
விண்ணுற வோங்கிய பலபடைப் புரிசைத்
தொலைவலி நிலைஇய வணங்குடை நெடுநிலை
நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்
௩௫௫ மழையாடு மலையி னிவந்த மாடமொடு
வையை யன்ன வழக்குடை வாயில்
வகைபெற வெழுந்து வான மூழ்கிச்

---

* மானவிறல் வேளென்றும் பாடம்.

*சில்காற் றிசைக்கும் பல்புழை நல்இல்
யாறுகிடந் தன்ன வகனெடுந் தெருவிற்
௩௬௦ பல்வேறு குழாஅத் திசையெழுந் தொலிப்ப
மாகா லெடுத்த முந்நீர் போல
முழங்கிசை நன்பணை யறைவனர் நுவலக்
கயங்குடைந் தன்ன வியந்தொட் டிமிழிசை
மகிழ்ந்தோ ராடுங் கலிகொள் சும்மை
௩௬௫ யோவுக்கண் டன்ன விருபெரு நியமத்துச்
சாறயர்ந் தெடுத்த வுருவப் பல்கொடி
வேறுபல பெயர வாரெயில் கொளக்கொள
நாடோ றெடுத்த நலம்பெறு புனைகொடி
நீரொலித் தன்ன நிலவுவேற் றானையொடு
௩௭௦ புலவுப்படக் கொன்று மிடைதோ லோட்டிப்
புகழ்செய் தெடுத்த விறல்சா னன்கொடி
கள்ளின் களிநவில் கொடியொடு நன்பல
பலவேறு குழூஉக்கொடி பதாகை நிலைஇப்
பெருவரை மருங்கி னருவியி னுடங்கப்
௩௭௫ பனைமீன் வழங்கும் வளைமேய் பரப்பின்
வீங்குதோங் கயி றரீஇயிதை புடையூக்
கூம்புமுதன் முருங்க வெற்றிக் காயந்துடன்
கடுங்காற் றெடுப்பக் கல்பொரு துரைஇ
நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல
௩௮௦ விருதலைப் பணில மார்ப்பச் சினஞ்சிறந்து
கோலோர்க் கொன்று மேலோர் வீசி
மென்பிணி வன்றொடர் பேணாது காழ்சாய்த்துக்
கந்துநீத் துழிதருங் கடாஅ யானையு
மங்கண்மால் விசும்பு புதைய வளிபோழ்ந்
௩௮௫ தொண்கதிர் ஞாயிற் றூறளவாத் திரிதருஞ்
செங்கா லன்னத்துச் சேவ லன்ன
குரூஉமயிர்ப் புரவி யுராலிற் பரிநிமிர்ந்து
காலெனக் கடுக்கும் கவின்பெறு தேருங்
கொண்ட கோலன் கொள்கை நவிற்றலி
௩௯௦ னடிபடு மண்டிலத் தாதிபோகிய
கொடிபடு சுவல விடுமயிர்ப் புரவியும்
வேழத் தன்ன வெருவரு செலவிற்
கள்ளார் களம ரிருஞ்செரு மயக்கமு

* சில்காற்றசைக்குமெனவும் பாடம்.

மரியவும் பெரியவும் வருவன பெயர்தலிற்
௩கூ௫ நீம்புழல் வல்சிக் கழற்கான் மழவர்
பூந்தலை முழவி னோன்றலை கடுப்பப்
பிடகைப் பெய்த கமழ்நறும் பூவினர்
பல்வகை விரித்த வெதிர்பூங் கோதையர்
பலர்தொகு பிடித்த தாதுகு சுண்ணத்தர்
௪00 தகைசெய் தீஞ்சேற் றின்னீர்ப் பசுங்காய்
நீடுகொடி யிலையினா கோடுசுடு நூற்றின
ரிருதலை வந்த பகைமுனை கடுப்ப
வின்னுயி ரஞ்சி யின்னா வெய்துயிரத
தேங்குவன ரிருந்தவை நீங்கிய பின்றைப
௪0௫ பல்வேறு பண்ணியந் தழீஇததிரி விலைஞர்
மலைபுரை மாடத்துக் கொழுநிழ லிருததர
விருங்கடல் வான்கோடு புரைய வாருற்றுப
பெரும்பின் னிட்ட வானரைக் கூந்தலா
நன்னா நலத்தர் தொன்முது பெண்டிர்
௪க0 செஞ்நீரப் பசும்பொன் புனைந்த பாவை
செல்சுடர்ப் பசுவெயிற் றோன்றி யன்ன
செய்யர் செயிர்த்த நோக்கினர் மடக்க
ணைஇய கலுழு மாமையர் வையெயிறறு
வார்ந்த வாயர் வணங்கிறைப பணைந்தோட்
௪க௫ சோர்ந்துகு வன்ன வயக்குறு வந்திகைத
தொய்யில் பொறிதத சுணங்கெதி ரிளமுலை
மையுக் கன்ன மொயயிருங் கூந்தன்
மயிலிய லோரு மடமொழி யோருங்
*கைஇ மெல்லிதி னொதுங்கிக் கையெறிந்து
௪உ0 கல்லா மாந்தரொடு நகுவனர் திளைபபப்
புடையமை பொலிந்த வகையமை செப்பிற
காம ருருவிற் றும்வேண்டும பண்ணியங
கமழ்நறும பூவொடு மனைமனை மறுக
மழைகொளக் குறையாது புனலபுக மிகாது
௪உ௫ கரைபொரு திரங்கு முந்நீர போலக்
கொளக்கொளக் குறையாது தரததர மிகாது
கழுநீர் கொண்ட வெழுநா ளந்தி
யாடுதுவன்று விழவி னாடாத் தன்றே
மாடம் பிறங்கிய மலிபுகழ்க கூட

* தைஇயென்றும்பாடம்.

சஈ0 ஞாளங் காடி நனந்தலைக் கம்பலை
வெயிற்கதிர் மழுங்கிய படர்கூர் ஞாயிற்றுச்
செக்க ரன்ன சிவந்துநுணங் குருவிற்
கண்பொரு புகூஉ மொண்பூங் கலிங்கம்
பொன்புனை வாளொடு பொலியக் கட்டித்
சஈரு திண்டேர்ப் பிரம்பிற் புரளுந் தானைக்
கச்சந் தின்ற கழறயங்கு திருந்தடி
மொய்ம்பிறந்து திரிதரு மொருபெருந் தெரியன்
மணிதொடர்ந் தன்ன வொண்பூங் கோதை
யணிகிளர் மார்பி னாரமொ டளைஇக்
சச0 காலியக் கன்ன கதழ்பரி கடைஇக்
காலோர் காப்பக் காலெனக் கழியும்
வான வண்கை வளங்கெழு செலவர்
நாண்மகி ழிருக்கை காண்மார் பூணொடு
தெள்ளரிப் பொற்சிலம் பொலிப்ப வொள்ளழற்
சசரு றுவற விளங்கிய வாய்பொ னவிரிழை
யணங்குவீழ் வன்ன பூந்தொடி மகளிர்
மணங்கமழ் நாற்றந் தெருவுடன் கமழ
வொண்குழை திகழு மொளிகெழு திருமுகந்
திண்கா ழேற்ற வியலிரு விலோதந்
சரு0 தெண்கடற் றிரையி னசைவளி புடைப்ப
நிரைநிலை மாடத் தரமியந் தோறு
மழைமாய் மதியிற் றோன்றுபு மறைய
நீரு நிலனுந் தீயும் வளியு
மாக விசும்போ டைந்துட னியற்றிய
சருரு மழுவா ணெடியோன் றலைவ னாக
மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடாப் பூவி னிமையா நாட்டத்து
நாற்ற வுணவி னுருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபி னுயர்பலி கொடுமா
சசு0 ரந்தி விழவிற் றூரியங் கறங்கத்
திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை
யோம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்
தாமு மவரு மோராங்கு விளங்கக்
சசுரு காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
பூவினர் புகையினர் றொழுவனர் பழிச்சிச்

சிறந்துபுறங் காக்குங் கடவுட் பள்ளியுஞ்
சிறந்த வேதம் விளங்கப் பாடி
விழுச்சீ ரெய்திய வொழுக்கமொடு புணர்ந்து
சஎ0 நிலமமர் வையத் * தொருதா மாகி
யுயர்நிலை யுலக மிவணின் றெய்து
மறநெறி பிழையா வன்புடை நெஞ்சிற்
பெரியோர் மேஎ யினிதி னுறையுங்
குன்றுகுயின் றன்ன வந்தணர் பள்ளியும்
சஎ௫ வண்டுபடப் பழுநிய தேனார் தோற்றத்துப்
பூவும் புகையுஞ் சாவகர் பழிச்சச்
சென்ற காலமும் வரூஉ மமயமு
மின்றிவட் டோன்றிய வொழுக்கமொடு நன்குணர்ந்து
வானமு நிலனுந் தாமுழு துணருஞ்
சஅ0 சான்ற கொள்கைச் சாயா யாக்கை
யான்றடங் கறிஞர் செறிந்தனர் நோன்மார்
கல்பொளிந் தன்ன விட்டுவாய்க் கரண்டைப்
பல்புரிச் சிமிலி நாற்றி நல்குவரக்
கயங்கண் டன்ன வயங்குடை நகரத்துச்
சஅ௫ செம்பியன் றன்ன செஞ்சுவர் புனைந்து
நோக்குவிசை தவிர்ப்ப மேக்குயர்ந் தோங்கி
யிறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையுங்
குன்றுபல குழீஇப் பொலிவன தோன்ற
வச்சமு மவலமு மாவமு நீக்கிச்
சகூ0 செற்றமு முவகையுஞ் செய்யாது காத்து
ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்
சிறந்த கொள்கை யறங்கூ றவையமு
நறுஞ்சாந்து நீவிய கேழ்கிளர் அகலத்
தாவுதி மண்ணி யவிர்துகின் முடித்துத்
சகூ௫ மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல
நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி
யன்பு மறனு மொழியாது காத்துப்
பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களு
௫00 மறநெறி பிழையா தாற்றி னொழுகிக்
குறும்பல் குழுவிற் குன்றுகண் டன்ன
பருந்திருந் துகக்கும் பன்மா ணிலவிற்

* ஒருதிரமாகியென்றும் பாடம்

பல்வேறு பண்டமோ டூண்மலிந்து கவினி
மலையவு நிலத்தவு நீரவும் பிறவும்
௫0௫ பல்வேறு திருமணி முத்தமொடு பொன்கொண்டு
சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரு
மழையொழுக் கறாஅப் பிழையா விளையுட்
பழையன் மோகூ ரவையகம் விளங்க
நான்மொழிக் கோசர் தோன்றி யன்ன
௫௧0 தாமேஎந் தோன்றிய நாற்பெருங் குழுவுங்
கோடுபோழ் கடைநருந் திருமணி குயினருஞ்
சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்
பொன்னுரை காண்மருங் கலிங்கம் பகர்நருஞ்
செம்புநிறை கொண்மரும் வம்புநிறை முடிநரும்
௫௧௫ பூவும் புகையு மாயு மாக்களு
மெண்வகைச் செயதியு முவமங் காட்டி
நுண்ணிதி னுணர்ந்த நுழைந்த நோக்கிற
கண்ணுள் வினைஞரும் பிறருங் கூடித்
தெண்டிரை யவிரறல் கடுப்ப வொண்பல
௫௨0 குறியவு நெடியவு மடிதரூஉ விரித்துச
சிறியரும் பெரியருங் கம்மியர் குழீஇ
நாலவேறு தெருவினுங் கால்லுற நிற்றரக
கொடும்பறைக் கோடியர் கடும்புடன் வாழ்த்துந
*தண்கட ணாட ணொண்பூங் கோதை
௫௨௫ பெருநா ளிருக்கை விழுமியோர் குழீஇ
விழைவுகொள் கம்பலை கடுப்பப் பலவுடன்
சேறு நாற்றமும் பலவின் சுளையும்
வேறுபடக் கவினிய தேமாங் கனியும்
பல்வே றுருவிற் காயும் பழனுங்
௫௩0 கொண்டல் வளர்ப்பக் கொடிவிடுபு கவினி
மென்பிணி யவிழ்ந்த குறுமுறி † யடகு
மமிர்தியன் றன்ன தீஞ்சேற்றுக கடிகையும
புகழ்படப் பண்ணிய பேருனஞ் சோறுங
கீழ்செல வீழ்ந்த கிழங்கொடு பிறவு
௫௩௫ மின்சோறு தருநர் பல்வயி னுகர
வாலிதை யெடுத்த வளிதரு வங்கம
பலவேறு பண்ட மிழிதரும் பட்டினத்த

* தெண்கடணாடனென்றும் பாடம்.

† அடகுமென்றும் பாடம்.

தொல்லெ ணிமிழிசை மானக் கல்லென
நனந்தலை வினைஞர் கலங்கொண்டு மறுகப்
ருசo பெருங்கடற் குட்டத்துப் புலவுத்திரை யோத
மிருங்கழி மருவிப் பாயப் பெரிதெழுந்
துருகெழு பானாள் வருவன பெயர்தலிற்
பல்வேறு புள்ளி னிசையெழுந் தற்றே
யல்லங் காடி யழிதரு கம்பலை
ருசரு யொண்சுட ருருப்பொளி மழுங்கச் சினந்தணிந்து
சென்ற ஞாயிறு நன்பகற் கொண்டு
குடமுதற் குன்றஞ் சேரக் குணமுத
ஞண்முதிர் மதியந் தோன்றி நிலாவிரிபு
பகலுரு வுற்ற விரவுவர நயந்தோர்
ருருo காத லின்றுணை புணர்மா ராயிதழ்த்
தண்ணறுங் கழுநீர் துணைப்ப விழைபுனையூஉ
நன்னெடுங் கூந்த னறுவிரை குடைய
நரந்த மரைப்ப நறுஞ்சாந்து மறுக
மென்னூற் கலிங்கங் கமழ்புகை மடுப்பப்
ருருரு பெண்மகிழ் வுற்ற பிணைநோக்கு மகளிர்
நெடுஞ்சுடர் விளக்கங் கொளீஇ நெடுநக
ரெல்லை யெல்லா நோயொடு புகுந்து
கல்லென் மாலை நீங்கநா ணுக்கொள
வேழ்புணர் சிறப்பி னின்றொடைச் சீறியாழ்
ருகூo *தாழ்பயற் கனைகுரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து
வீழ்துணை தழீஇ வியலவிசும்பு கமழ
நீர்திரண் டன்ன கோதை பிறக்கிட்
டாய்கோ லவிர்தொடி விளங்க வீசிப்
போதவிழ் புதுமலர் தெருவுடன் கமழ
ருகூரு மேதகு தகைய மிகுநல மெய்திப்
பெரும்பல குவளைச் சுரும்படு பன்மலர்
திறந்துமோந் தன்ன சிறந்துகமழ் நாற்றத்துக்
கொண்டன் மலர்ப்புதன் மானப்பூ வேய்ந்து
நுண்பூ ணாகம் வடுக்கொள முயங்கி
ருஎo மாயப் பொய்பல கூட்டிக் கவவுக்கரந்து
சேயரு நணியரு நலனயந்து வந்த
விளம்பல் செல்வர் வளந்தப வாங்கி
நுண்டா துண்டு வறும்பூத் துறக்கு

* தாழ்பயலென்றும் பாடம்.

மென்சிறை வண்டின மானப் புணர்ந்தோர்
ருஎரு நெஞ்சே மாப்ப வின்றுயி றுறந்து,
பழந்தேர் வாழ்க்கைப் பறவை போலக்
கொழுங்குடிச் செல்வரும் பிறரு மேஎய
மணம்புணர்ந் தோங்கிய வணங்குடை நல்லி
லாய்பொன் னவிர்தொடிப் பாசிழை மகளி
ருஅய0 ரொண்சுடர் விளக்கத்துப் பலருடன் றுவன்றி
நீனிற விசும்பி லமர்ந்தன ராடும்
வானவ மகளிர் மானக் கண்டோர்
நெஞ்சு நடுக்குறூஉங் கொண்டி மகளிர்
யாம நல்யாழ் நாப்ப ணின்ற
ருஅரு முழவின் மகிழ்ந்தன ராடிக் குண்டுநீர்ப்
பனித்துறைக் குவவுமணன் முனைஇ மென்றளிர்க்
கொழுங்கொம்பு கொழுதி நீர்நனை மேவர
நெடுந்தொடர்க் குவளை வடிம்புற வடைச்சி
மணங்கமழ் மனைதொறும் பொய்தல யர்க்
ருசுூ0 கணங்கொ ளவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய வோண நன்னாட்
கோணந் தின்ற வடுவாழ் முகத்த
சாணந் தின்ற சமந்தாங்கு தடக்கை
மறங்கொள் சேரி மாறுபொரு செருவின்
ருசுரு மாறா துற்ற வடுப்படு நெற்றிச்
சுரும்பார் கண்ணிப் பெரும்புகன் மறவர்
கடுங்களி றோட்டலிற் காணுந ரிட்ட
நெடுங்கரைக் காழக நிலம்பா லுருப்பக்
கடுங்கட் டேறன் மகிழ்சிறந்து திரிதரக்
சுா00 கணவ ருவப்பப் புதல்வர்ப் பயந்து
பணைத்தேந் திளமுலை யமுதம் ஊறப்
புலவுப்புனிறு தீர்ந்து பொலிந்த சுற்றமொடு
வளமனை மகளிர் குளநீ ரயர்த்
திவவுமெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணிக்
சுா0ரு குரல்புணர் நல்யாழ் முழவோ டொன்றி
நுண்ணீ ராகுளி யிரட்டப் பலவுடன்
ஒண்சுடர் விளக்க முந்துற மடையொடு
நன்மா மயிலின் மென்மெல வியலிக்
கடுஞ்சூன் மகளிர் பேணிக்கை தொழுது
சுாக0 பெருந்தோட் சாலினி மடுப்ப வொருசார்

ராருங்கடி வேலன் முருகொடு வளைஇ
யரிக்கூ டின்னியங் கறங்கநேர் நிறுத்துக்
கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேட் பேணித் தழூஉப்பிணையூஉ
௬௧௫ மன்றுதொறு நின்ற குரவை சேரிதொறு
முரையும் பாட்டு மாட்டும் விரைஇ
வேறுவேறு கம்பலை வெறிகொள்பு மயங்கிப்
பேரிசை நன்னன் பெரும்பெயர் நன்னாட்
சேரி விழவி னார்ப்பெழுந் தாங்கு
௬௨0 முந்தை யாமஞ் சென்ற பின்றைப்
பணிலங் கலியவிந் தடங்கக் காழ்சாய்த்து
நொடைநவி னெடுங்கடை யடைத்து மடமதர்
ரொள்ளிழை மகளிர் பள்ளி யயர
நல்வரி யிறாஅல் புரையு மெல்லடை
௬௨௫ யயிருருப் புற்ற வாடமை விசயங்
கவவொடு பிடித்த வகையமை மோதகந்
தீஞ்சேற்றுக் கூவியர் தூங்குவன ருறங்க
விழவி னாடும் வயிரியர் மடியப்
பாடான் றவிந்த பனிக்கடல் புரையப்
௬௩0 பாயல் வளர்வோர் கண்ணினிது படுப்பப்
பானாட் கொண்ட கங்கு லிடையது
பேயு மணங்கு முருவுகொண் டாய்கோற்
கூற்றக் கொஃறேர் கழுதொடு கொட்ப
விரும்பிடி மேஎந்தோ லன்ன விருள்சேர்பு
௬௩௫ கல்லு மரனுந் துணிக்குங் கூர்மைத்
தொடலை வாளர் தொடுதோ லடியர்
குறங்கிடைப் பதித்த கூர்நுனைக் குறும்பிடிச்
சிறந்த கருமை நுண்வினை நுணங்கற
னிறங்கவர்பு புனைந்த நீலக் கச்சினர்
௬௪0 மென்னூ லேணிப் பன்மாண் சுற்றினர்
நிலனக ழுளியர் கலனசைஇக் கொட்குங்
கண்மா றாடவ ரொடுக்க மொற்றி
வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலத்
துஞ்சாக் கண்ண ரஞ்சாக் கொள்கைய
௬௪௫ ரறிந்தோர் புகழ்ந்த வாண்மையர் செறிந்த
நூல்வழிப் பிழையா நுணங்குநுண் டேர்ச்சி
யூர்காப் பாள ரூக்கருங் கணையினர்

தோவழங்குதெருவி னீர்திரண் டொழுக
மழையமைந் துற்ற வரைநா ளமயத்து
௬௫௦ மசைவி லெழுந்து நயம்வந்து வழங்கலிற்
கடவுள் வழங்குங் கையறு கங்குலு
மச்ச மறியா தேம மாகிய
மற்றை யாமம் பகலுறக் கழிப்பிப்
போதுபிணி விட்ட கமழ்நறும் பொய்கைத்
௬௫௫ தாதுண் டும்பி போது முரன்றாங்
கோத லந்தணர் வேதம் பாடச்
சீரினிது கொண்டு நரம்பினி தியக்கி
யாழோர் மருதம் பண்ணக் காழோர்
கடுங்களிறு கவளங் கைப்ப நெடுந்தேர்ப்
௬௬௦ பணைநிலைப் புரவி புல்லுணாத் தெவிட்டப்
பல்வேறு பண்ணியக் கடைமெழுக் குறுப்பக்
கள்ளோர் களிநொடை நுவல வில்லோர்
நயந்த காதலர் கவவுப்பிணித் துஞ்சிப்
புலர்ந்துவிரி விடிய லெய்த விரும்பிக்
௬௬௫ கண்பொரா வெறிக்கு மின்னுக்கொடி புரைய
வொண்பொ னவிரிழை * தெழிப்ப வியலித்
திண்சுவர் நல்லிற் கதவங் கரைய
வுண்டுமகிழ் தட்ட மழலை நாவிற்
பழஞ்செருக் காளர் தழங்குகுர றோன்றச்
௬௭௦ சூதர் வாழ்த்த மாகதர் நுவல
†வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப
விமிழ்முர சிரங்க வேறுமாறு சிலைப்பப்
பொறிமயிர் வாரணம் வைகறை யியம்ப
யானையங் குருகின் சேவலொடு காம
௬௭௫ ரன்னங் கரைய வணிமயி லகவப்
பிடிபுணர் பெருங்களிறு முழங்க முழுவலிக்
கூட்டுறை வயமாப் புலியொடு குழும
வான நீங்கிய நீனிற விசும்பின்
மின்னுநிமிர்ந் தனைய ராகி நறவுமகிழ்ந்து
௬௮௦ மாணிழை மகளிர் புலந்தனர் பரிந்த
பரூஉக்கா ழாரஞ் சொரிந்த முத்தமொடு
பொன்சுடு நெருப்பி னிலமுக கென்ன

---

* தெளிர்ப்ப வென்றும் பாடம்.

† வேதாளிய ரென்றும் பாடம்.

வம்மென் குரும்பைக் காய்படு பிறவுந்
தருமணன் முற்றத் தரிஞிமி றார்ப்ப
கூஅரு மென்பூஞ் செம்மலொடு நன்கலஞ் சீப்ப
விரவுத்தலைப் பெயரு மேம வைகறை
மைபடு பெருந்தோண் மழவ ரோட்டி
யிடைப்புலத் தொழிந்த வேந்துகோட் டியானை
பகைப்புலங் கவர்ந்த பாய்பரிப் புரவி
கூகூ0 வேல்கோ ளாக வாள்செல நூறிக்
காய்சின முன்பிற் கடுங்கட் கூளிய
ரூர்சுடு விளக்கிற் றந்த வாயமு
நாடுடை நல்லெயி லணங்குடைத் தோட்டி
நாடொறும் விளங்கக் கைதொழூஉப் பழிச்சி
கூகூரு நாடார வந்த விழுக்கல மனைத்துங்
கங்கையம் பேரியாறு கடற்படர்ந் தாஅங்
களந்துகடை யறியா வளங்கெழு தாரமொடு
புத்தே ளுலகங் கவினிக் காண்வர
மிக்குப்புக ழெய்திய பெரும்பெயர் மதுரைச்
எ00 சினைதலை மணந்த சுரும்புபடு செந்தீ
யொண்பூம் பிண்டி யவிழ்ந்த காவிற்
சுடர்பொழிந் தேறிய விளங்குகதிர் ஞாயிற்
றிலங்குகதி ரிளவெயிற் றோன்றி யன்ன
தமனியம் வளைஇய தாவில் விளங்கிழை
எ0ரு நிலம்விளக் குறுப்ப மேதகப் பொலிந்து
மயிலோ டன்ன சாயன் மாவின்
றளிரே ரன்ன மேனித் தளிர்ப்புறத்
தீர்க்கி னரும்பிய திதலையா கூரெயிற்
றொண்குழை புணரிய வண்டாழ் காதிற்
எக0 கடவுட் கயத் தமன்ற சுடரிதழ்த் தாமரைத்
தாதுபடும் பெரும்போது புரையும் வாண்முகத்
தாய்தொடி மகளிர் நறுந்தோள் புணர்ந்து
கோதையிற் பொலிந்த சேக்கைத் துஞ்சித்
திருந்துதுயி லெடுப்ப வினிதி னெழுந்து
எகரு திண்கா ழார நீவிக் கதிர்விடு
மொண்கா ழாரங் கவைஇய மார்பின
வரிக்கடைப் பிரச மூசுவன மொய்ப்ப
வெருத்தந் தாழ்ந்த விரவுப்பூந் தெரியற்
பொலஞ்செயப் பொலிந்த நலம்பெறு விளக்கம்

எஉ0 வலிகெழு தடக்கைத் தொடியொடு சுடர்வரச்
சோறமை வுற்ற நீருடைக் கலிங்க,
முடையணி பொலியக் குறைவின்று கவைஇ,
வல்லோன் றைஇய வரிப்புனை பாவை
முருகியன் றன்ன வுருவினை யாகி
எஉரு வருபுனற் கற்சிறை கடுப்ப விடையறுத்
தொன்னா ரோட்டிய செருப்புகன் மறவர்
வாள்வலம் புணர்ந்தநின் றாள்வலம் * வாழ்த்த
விலைக் கவைஇக் கணைதாங்கு மார்பின்
மாதாங் கெறுழ்த்தோண் மறவாத் தம்மின்
எகூ0 கல்லிடித் தியற்றிய விட்டுவாய்க் கிடங்கி
னல்லெயி லுழந்த செல்வர்த் தம்மின்
கொலலேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த
மாக்கண் முரச மோவில கறங்க
†வெரிநிமிர்ந் தன்ன தானை நாப்பட்
எகூரு பெருநல் யானை போர்க்களத் தொழிய
விழுமிய வீழ்ந்த குரிசிலர்த் தம்மின்
புரையோர்க்குத் தொடுத்த பொலம்பூந் தும்பை
நீர்யா ரென்னாது முறைக்கருதுபு சூட்டிக்
காழ்மண் டெஃகமொடு கணையலைக் கலங்கிப்
எசு0 பிரிபிணை யரிந்த நிறஞ்சிதை கவயத்து
வானத் தன்ன வளநகர் பொற்ப
நோன்குறட் டன்ன வூன்சாய் மார்பி
னுயர்ந்த வுதவி யூக்கலர்த் தம்மி
னிவந்த யானைக் கணநிரை கவர்ந்த
எசுரு புலர்ந்த சாந்தின் விரவுப்பூந் தெரியற்
பெருஞ்செ யாடவர்த் தம்மின் பிறரும்
யாவரும் வருக வேனோருந் தம்மென
வரையா வாயிற் செறாஅ திருந்து
பாணர் வருக பாட்டியர் வருக
எரு0 யாணர்ப் புலவரொடு வயிரியர் வருகென
விருங்கிளை புரக்கு மிரவலர்க் கெல்லாங்
கொடிஞ்சி நெடுந்தோ்க் களிறொடும் வீசிக்
களந்தோறுங் கள்ளரிப்ப
மரந்தோறு மைவீழ்ப்ப

* பழிச்ச வென்றும் பாடம்.
† எரிநிகழ்ந் தென்றும் பாடம்

ஏருரு நிணவூன்சூட் டிருக்கமைய
நெய்கனிந்து வறையார்ப்பக்
குருஉக்குய்ப்புகை மழைமங்குலிற
பரந்துதோன்றா வியன்காற
பல்சாலை முதுகுடுமியி
ஏசுo னலவேள்வித் துறைபோகிய
தொலலாணை நலலாசிரியா
புணாகூட் டுண்ட புகழ்சால் சிறப்பி
னிலந்தரு திருவி னெடியோன போல
வியப்புஞ் சால்புஞ் செம்மை சான்றோா
ஏசுரு பலாவாய்ப் புகாறு சிறப்பிற் றோன்றி
யரியதந்து குடியகற்றிப
பெரியகற் றிசைவிளக்கி
முந்நீர் நாப்பண ஞாயிறு போலவும
பன்மீ னடுவட் டிங்கள் போலவும
ஏஎ0 பூத்த சுற்றமொடு பொலிந்தினிது விளங்கிய
பொய்யா நலலிசை நிறுத்த புனைதாா
பெரும்பெயா மாறன றலைவ னாகக
கடந்தடு வாய்வா ளிளம்பல கோச
ரியனெறி மரபினின வாய்மொழி கேட்ப
ஏஎரு பொலம்பூ ணைவ ருட்படப் புகழ்ந்த
மறமிகு சிறப்பிற குறுநில மன்ன
ரவரும பிறருந் துவன்றிப பொறபு
விளங்கும புகழவை நிறபுகழ்ந் தேத்த
விளங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
ஏஅ0 மணங்கமழ் தேறன் மடுப்ப நாளு.
மகிழ்ந்தினி துறைமதி பெரும
வரைந்துநீ பெறற நல்லூ ழியையே

## இதன்பொருள்.

இப்பாட்டிற்கு மாங்குடிமருதனா மதுரைக்காஞ்சியென்று மதுரைப்பெயரா
ன்றித் திணைப்பெயராற் பெயாகூறினா இத்திணைப்பெயர் பன்னிருபடலமுதலிய
ல்களாற்கூறிய திணைப்பெயரன்று; தொல்காப்பியனார்கூறிய திணைப்பெயரிற்
பொருளே இப்பாட்டிற்குப் பொருளாகக் கோடலின் வஞ்சி மேற்செல்லலானும்,
ஞ்சி எஞ்சாதெதிரசென்றூன்றலானும் "வஞ்சியுங் காஞ்சியுந் தம்முளமாறே"
னப் பன்னிருபடலத்திற்கூறிய திணைப்பெயா இப்பாட்டிற்குப் பொருளன்மையு
ர்க. அவர் முதுமொழிக்காஞ்சிமுதலியவற்றைப் பொதுவியலென்று ஓர்படல
க்கிக்கூறலின், அவை திணைப்பெயராகாமையுணர்க.

இனி மதுரைக்காஞ்சியென்றதற்கு மதுரையிடத்து அரசர்க்குக் கூறிய காஞ்சி யென விரிக்க இஃது உருபும்பொருளும் உடன்றொக்கது. * "காஞ்சி தானே பெருந்திணைப் புறனே" என்பதனாற் காஞ்சி பெருந்திணைக்குப் புறனாயிற்று. அது † "பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானு - நில்லா வுலகம் புல்லிய நெறித்தே." என்பதாம் இதன்பொருள் பாங்கு அருஞ்சிறப்பின் - தனக்குத் துணையில்லாத வீடுபேறுநிமித்தமாக, பல் ஆற்றானும் - அறம் பொருள் இன்பமென்னும் பொருட்பகுதியானும், அவற்றுட்பகுதியாகிய உயிரும் யாக்கையும் செல்வமும் இளமையு முதலியவற்றானும், நில்லா உலகம் புல்லிய நெறித்து - நிலைபேறில்லாத உலகியற்கையைப் பொருந்திய நன்னெறியினை உடைத்து அக்காஞ்சியென்றவாறு எனவே வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறுநிலையாமை சான்றோரறையுங் குறிப்பினது காஞ்சித்திணை யென்பதுபொருளாயிற்று

இச்செய்யுட்புலவர் இப்பொருளேகோடலின், யாம் இப்பொருளேதர உரைகூறுகின்றாம்

[ஓங்குதிரை வியன்பரப்பி, னொலிமுந்நீர் வரம்பாக·] வியன் பரப்பின் ஓங்கு திரை ஒலி முந்நீர் வரம்பாக— அகலத்தையுடைத்தாகிய நீர்ப்பரப்பின்கண்ணே ஓங்குதிரை ஒலிக்குங் கடல் எல்லையாக,

தேன் தூங்கும் உயர் சிமயம் மலை நாறிய வியன் ஞாலத்து— தேனிறாலதூங்கும் உயர்ந்த உச்சியையுடைய மலைகள்தோன்றிய அகலத்தையுடைய ஞாலத்தின்கண்ணே,

வலம் மாதிரத்தான் வளி கொட்ப— வலமாக ஆகாயத்தின்கண்ணே காற்றுச் சுழல,

வியன் நாண்மீன் நெறி ஒழுக—அகலத்தையுடைய நாண்மீன்கள் தாம் நடக்கு நெறியின்கண்ணே நடக்க,

பகற் செய்யும் செஞ்ஞாயிறும்— பகற்பொழுதை உண்டாக்குஞ் சிவந்தபகலோனும்,

இரவுச் செய்யும் வெண்டிங்களும்—இராப்பொழுதை உண்டாக்கும் வெள்ளிய மதியும்,

மை தீர்ந்து கிளர்ந்து விளங்க— குற்றமற்றுத் தோன்றிவிளங்க,

மழை தொழில் உதவ — மேகம் தானே பெய்தற்றொழிலை வேண்டுங்காலத்தேதர,

உழவுத்தொழிற்கு உதவவென்றுமாம்

மாதிரம் கொழுக்க— திசைகளெல்லாந் தழைப்ப,

மலைகள் விளைந்துகொழுக்கவென்றுமாம்

[தொடுப்பி னாயிரம் வித்தியது விளைய] தொடுப்பின் வித்தியது ஆயிரம் விளைய— ஒருவிதைப்பின்கண்ணே விதைத்தவிதை ஆயிரமாகவிளைய,

நிலனும்—விளைநிலங்களும்,

மரனும்—மரங்களும்,

பயன் எதிர்பு நந்த— பல்லுயிர்க்குந் தம்பயன்கொடுத்தலை ஏறட்டுக்கொண்டு தழைப்ப,

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், ௨௨

நோய் இகந்து நோக்கு விளங்க— மக்கட்குப் பசியும்பிணியுநீங்கி அழகுவிளங்க,

[மேதக மிகப்பொலிந்த, வோங்குநிலை வயக்களிறு] மிகப் பொலிந்த ஓங்குநிலை வயக் களிறு மேதக — அறவும்பொலிவுபெற்ற உலகத்தைத்தாங்குதல் வளருந்தன்மையையுடைய வலியையுடைய வாகிய திக்கயங்கள் இவர்தாங்குதலின் வருத்தமற்று மேம்பாடுதக,

சுருளும் படியுமாகப்பண்ணினவிடத்துப் பணணிநிற்கும் யானையென்றுரைப்பாருமுளர்

[கண்டுதண்டாக் கட்கினபத, துண்டுதண்டா மிகுவளத்தான்]

உண்டு தணடா மிகு வளத்தான்— உண்டு அமையாத உணவுமிகுகின்ற செல்வத்தோடே,

கண்டு தணடாக கட்கு இன்பத்து—நோக்கியமையாத கட்கினிமையினையும்,

உயர் பூரிம விழுத் தெருவில்—உயர்ந்த சிறகுகளையுமுடைய சீரிய தெருவிலிருக்குமாந்தர (உ0),

பூரிமம் - சாந்திட்ட தொட்டிகளென்பாருமுளர்.

[பொய்யறியா வாய்மொழியாற், புகழ்நிறைந்த நன்மாந்தரொடு.] வாய்மொழியாற் புகழ் நிறைந்த பொய் அறியா நன்மாந்தரொடு — மெய்ம்மொழியே எக்காலமுங் கூறுதலாற்பெற்ற புகழ்நிறைந்த பொய்யைக்கேட்டறியாத நல்ல அமைச்சருடனே,

நல் ஊழி அடிப் படர — நன்றாகிய ஊழிக்காலமெல்லாந் தமக்கு அடிப்பட்டு நடக்க,

பல் வெள்ளம் மீக் கூற—பலவெள்ளமென்னும் எண்ணைப்பெற்ற காலமெல்லாம் அரசாண்ட தன்மையை மேலாகச்சொல்லும்படி,

உலகம் ஆண்ட உயர்ந்தோர் மருக — உலகத்தையாண்ட உயர்ச்சிபெற்றோர் குடியிலுள்ளவனே,

மாதிரங் கொழுக்க (க0) விதந்தியதுவிளைய (கக) நிலனும் மரனும் நந்த (கஉ) வளிகொட்கையினாலே (ரு) மழைதொழிலுதவ (க0) வெனமுடிக்க.

வியன்ஞாலத்திடத்தே (ச) மழைதொழிலுதவ (க0) நாண்மீனெறியொழுக (சு) ஞாயிறுந் (எ) திங்களும் (அ) விளங்க (கூ) நோக்குவிளங்கக் (கரு) களிறு (கஙு) மேதக (கச) நன்மாந்தரோடே (உ0) ஊழியடிப்பட்டு நடக்கும்படி (உக) மீக்கூற (உஉ) முந்நீர்வரம்பாக (உ) உலகமாண்ட உயர்ந்தோர்மருகவெனமுடிக்க.

இவர்கள் தருமத்திற் றப்பாமனடத்தவே இக்கூறியவையும் நெறிதப்பாமல் நடக்குமென்றார்

பிணக் கோட்ட களிற்றுக் குழும்பின் நிணம் வாய்ப்பெய்த பேய் மகளிர—பிணங்களையுடைய கொம்புகளையுடையனவாய்ப் பட்ட ஆனையினுடைய திரளின் நிணத்தைத்தின்ற பேய்மகளிருடைய துணங்கை (உசு),

இணை ஒலி இமிழ் துணங்கைச் சீர— இணைத்த ஆரவாரமுழங்குகின்ற துணங்கைக்கூத்தின் சீர்க்கு,

பிணை யூபம் எழுந்து ஆட— செறிந்த குறைத்தலைப்பிணம் எழுந்துநின்று ஆடுகையினாலே,

அஞ்சுவந்த போர்க்களத்தான்— அஞ்சுதலுண்டான போர்க்களத்திடத்தே,

ஆண் தலை அணங்கு அடுப்பின் — ஆண்மக்கள்தலையாகிய நோககினுரைவருத்தும அடுப்பின்கண்ணே,

வய வேந்தர் ஒண் குருதி சினத் தீயிற் பெயர்பு பொங்க — வலியினையுடைய வேந்தருடைய ஒள்ளிய குருதியாகிய உலை சினமாகிய தீயின் மறுகிப் பொங்குகையினாலே,

[தெறலருங கடுந்துப்பின், விறல்விளங்கிய விழுச்சூர்ப்பிற, தொடித்தோட்கை துடுப்பாக, வாடுற்ற வூன்சோறு, நெறியறிந்த கடிவாலுவ, னடியொதுங்கிப் பிற்பெயராப், படையோர்க்கு முருகயர]

தொடித் தோள் கை துடுப்பாக ஆடுற்ற ஊன் சோறு— வீரவளையையுடைய வாகிய தோளையுடையகைகள் துடுப்பாகக்கொண்டு துழாவி அடுதலுற்ற ஊனாகியசோற்றை,

நெறி அறிந்த கடி வாலுவன்— இடுமுறைமையறிந்த பேயமடையன்,

தெறல் அருங் கடுந் துப்பின் விறல் விளங்கிய விழுச் சூர்ப்பின் அடி ஒதுங்கிப் பிற்பெயராப் படையோர்க்கு முருகு அயர — பகைவராற கோபித்தற்கரிய கடிய வலியினையும் வெற்றிவிளங்கிய சீரிய கொடுந்தொழிலினையுமுடையராய் இட்டஅடி வாங்கிப் பின்போகாதவீரர்க்கு வேளவிசெய்யும்படி,

அமர் கடக்கும் வியன் தானை — போரைவெல்லும் அகலத்தையுடைய படையினையுடைய,

போர்க்களத்தே (௨அ) ஆடுற்றசோற்றை (௩௫) வாலுவன் (௩௬) அடிபெயரா (௩எ) வீரர்க்கு முருகயரக (௩அ) கடக்குந்தானையென்க

[தென்னவற பெயரிய துன்னருந் துப்பிற, ருென்முது கடவுட் பின்னர் மேய, வரைத்தா ழருவிப் பொருப்பிற பொருந.]

வரைத் தாழ் அருவிப் பொருப்பிற் கடவுள்— பக்கமலையிலே விழுகின்ற அருவியினையுடைய பொதியின்மலையிலிருக்கும் கடவுள,

தென்னவற பெயரிய துன்னருந் துப்பின தொல் முது கடவுட் பின்னர் மேய பொருந — இராவணனைத் தமிழ்நாட்டையாளாதபடிபோக்கின கிட்டுதற்கரிய வலியினையுடைய பழமைமுதிர்ந்த அகத்தியன்பின்னே எண்ணப்பட்டுச் சான்றோருள்ளிருத்தற்குமேவின ஒப்பற்றவனே,

* "திசைநிலைக் கிளவியி னுஅ குநவும்" என்றதனால், இராவணன் தென்றிசையாண்டமைபற்றித் தென்னவனென்றுா, இப்பெயர் பாண்டியற்குங் கூற்றுவற்கும் ஏறறுநின்றறபோல அகத்தியனைத் தென்றிசையுயாந்த நொய்ம்மைபோக இறைவனுக்குச் சிறப்புஇருந்தானென்பதுபற்றிக் கடவுளென்றுா. இராவணனுதல் பாயிரத்துச்சூத்திரத்து உரையாசிரியர்கூறிய உரையானுமுணர்க.

இனி † "முதுதோ முறுவலாய் நாமணம் * * * எக்கடவுண் மற்றக் கடவுள்" என இருடிகளையுங் கடவுளென்றுகூறியவாறறுணுங்காணக.

இதனால், அகத்தியனுடன் தலைச்சங்கத்துப் பாண்டியனிருந்து தமிழாராய்ந்த சிறப்புக்கூறினார்.

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், ௫௩

† கலித்தொகை, மூன்றுவதுமருதம், ௨அ:—"முத்தோ முறுவலாய் நாமணம் புக்கக்கா - லிப்பொழுது பொழுதென் றதுவாய்ப்பக் கூறிய - வெக்கடவுண மற்றக் கடவுள்."

கூறுவனையுரைத்தகடவுளென்று இறைவனுக்கி, அவன்பின்னொன்றது அகத்தியனையென்றுபொருள்கூறின், இறைவனுக்குத் தம்பியென்றல் சாலாமையானும், அப்பொருடருங்காலத்து * "முன்னவன் பின்னவன்", "முன்னோன் பின்னோன்" என்றல்லது அச்சொல் நில்லாமையானும அதுபொருந்தாது † "முன்னரே சாநாண் முனிதக்க மூப்புள - பின்னரும் பீடழிக்கு நோயுள" எனவும் பிறுண்டும் முன்னர் பின்னரென்பன இடமுணாத்தியேநிற்குமென்றுணாக

பொருநனென்றது தான் பிறாக்கு உவமிககப்படுவோனென்னும் பொருட்டு.

விழுச சூழிய—சீரியமுகபடாததை யுடையவாய்,

விளங்கு ஓடைய—விளங்குகின்ற பட்டததையுடையவாய்,

கடுஞ்சினத்த — கடிய சினததையுடையவாய்,

கமழ் கடாத்து அளறு பட்ட நறுஞ் சென்னிய —கமழுகின்றமததாலேசேறுண்டான நறியதலையினையுடையவாய்,

வரை மருளும் உயர் தோன்றல—வரையென்றுமருளும் உயாந்த தோற்றத்தினையுடையவாய்,

வினை நவின்ற பே யானை—போாத்தொழிலிலேபயின்ற பெரியயானை,

இச் செய்தெனெசசக்குறிபபாகிய வினையெசசமுற்றுக்கள் அடுககிவந்தனவற்றை நவின்றவென்னும் பெயரொசசத்தோடு முடிக்க.

சினஞ் சிறந்து களன் உழககவும — சினமிக்குக் களத்துவீரரைக கொன்றுதிரியவும்,

மா எடுத்த மலி குரூஉத் துகள அகல் வானதது வெயில கரபபவும்—குதிரைத்திரள் பகைவர்மேற்செல்லுதலாலுண்டான மிககநிறததையுடையவாகியதூளி அகலுதற்குக் காரணமான ஆகாயத்திடத்தே வெயிலைமறைககவும்,

வாம் பரிய கடுந் திண்டேர் காற்று எனனக் கடிது கொட்பவும்—தாவுங்குதிரைகளையுடைய செலவுகடிய திணணியதேர் காற்றுசசுறறியடித்ததென்னக் கடிதாகச் சுழலவும்,

[வாண்மிகு மறமைந்தா, தோண்முறையான் வீறுமுறறவும்] வாள் மிகு மறம் மைந்தர் தோள் வீறு முறையான் முற்றவும்—வாட்போரான்மிகுகின்ற மறத்தையுடைய வீரருடையதோள் வெறறிமுறையாகவெட்டுதலான் முறறுப்பெறவும,

‡ "விருந்தாயினை யெறிநீயென விரைமார்பகங் கொடுத்தாற், கரும்பூணற வெறிந்தாங்கவ னினதூழினி யெனவே" என்றார் பிறரும்

---

* திருச்சிற்றம்பலக்கோவையார், கூசஉ — "மூபபா னிளையவன் முன்னவன் பின்னவன் முப்புரங்கள் - வீபபான் வியனதில்லை யானரு ளால்விரி நீருலகங்-காப்பான் பிரியக் கருதுகின் றாரமர் காாக்கயறகட்-பூபபா னலமொளி ரும்புரி தாழ்குழற் பூங்கொடியே"

† நாலடியார், ௬கை, உ:—"முனனரே சாநாண் முனிதகக மூப்புள - பின்னரும் பீடழிக்கு நோயுள - கொனனே - பரவனமின் பற்றன்மின் பாதநுண்மின் யாதுங - கரவன்மின் கைததுணடாம போழ்து."

‡ சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகம், ௪௬௪ — "விருந்தாயினை யெறிநீயென விரைமாாபகங் கொடுத்தாற்-கரும்பூணற வெறிநதாங்கவ னினதூழினி யெனவே - யெரிந்தாரயி லிடைபோழ்ந்தமை யுணராதவ னின்றான் - சொரிந்தார்மல ரமங்கையா கொமகாாவிசும் படைந்தான்."

இரு பெரு வேந்தரொடு வேளிர் சாய பொருது அவரைச் செரு வென்றும்— சேரன்சோழனாகிய இருவராகிய பெரியஅரசருடனே குறுநிலமன்னருமிளைக்கும்படி பொருது அவரைப் போரைவென்றும் அமையாமல்,

உம்மை - சிறப்பும்மை

[இலங்கருவிய வரைநீந்திச், சுரம்போழ்ந்த விகலாற்ற, லுயர்ந்தோங்கிய விழுச்சிறப்பின் ]

உயர்ந்து இலங்கு அருவிய வரை நீந்தி ஓங்கிய விழுச் சிறப்பின் — உயர்ந்துவிளங்குகின்ற அருவிகளையுடைய மலையிற குறிஞ்சிநிலமன்னரையெல்லாம்வென்று உயர்ந்த சீரிய தலைமையினாலே,

இகல் ஆற்ற சுரம் போழ்ந்த சிறப்பின்—மாறுபாட்டைநடத்துதலையுடைய கடம் பகைவர்காடுகளைப் பலவழியாகப்பிளந்த சிறப்பினாலே,

நிலம் தந்த பேர் உதவி—நாட்டிலிருக்கின்ற அரசர்நிலங்களையெல்லாம்கொண்ட பெரியஉதவியையும்,

மலையும் காடும் அரணாகஇருந்த அரசரை அழித்தவலியாலே நாட்டிலிருக்கின்ற அரசர் தத்தம்நாடுகளைவிட்டாரென்றதாம் க௩௦

பொலந்தார் மார்பின் நெடியோன் உம்பல்—பொன்னாற்செய்த தாரையணிந்த மார்பினையுமுடைய வடிம்பலம்பநின்றபாண்டியன் வழியிலவந்தோனே,

யானை (௬௭) களனுழக்கவும் (௬௮) துகள் (௬௯) வெயில்கரப்பவும் (௫௦) தேர் (௫௧) கொட்பவும் (௫௨) மைந்தர் (௫௩) முற்றவும் (௫௪) பொருதுசெருவென்றும் அமையாமல் (௫௫) விழுச்சிறப்பின் (௫௬) நிலந்தந்தஉதவியினையும் (௬௦) மார்பினையு ௬௦ முடையநெடியோனெனக

மரம் தின்னூஉ வரை உதிர்க்கும் நரை உருமின் ஏறு அனையை — மரங்களைச் சுட்டு மலைகளைநீருக்கும் பெருமையினையுடைய உருமேற்றையொப்பை,

"கருநரைநலலேறு" என்றாரபிறரும் இன் - அசை

அருங் குழு மிளை—பகைவர்சேர்தற்கரிய திரட்சியையுடைய காவற்காட்டினையும்,

குண்டு கிடங்கின்—ஆழத்தினையுடையகிடங்கினையும்,

உயர்ந்து ஓங்கிய நிரை புதவின்—உயர்ந்துவளர்ந்த கோபுரங்களிடத்து வாயில்களையும்,

நிரை - ஆகுபெயர் உயர்ச்சி ஓங்குதலைவிசேடித்துநின்றது. ௬௫

நெடுமதில்— நெடியமதிலினையும்,

நிரைஞாயில்—நிரைத்த சூட்டினையுமுடைய,

அஃது எய்தாலமறைத்தற்கு உயரப்படுப்பது

[அம்புமிழ் புயிலருப்பம் ] அயில் அம்பு உமிழ் அருப்பம்—கூர்மையையுடைய அம்புகளையுமிழும் அரண்களை,

மிளை (௬௪) முதலியவற்றையுடைய அருப்பமென்க. ௬௬

தண்டாது தலைச் சென்று கொண்டு நீங்கிய விழுச் சிறப்பின்—அமையாமல் அவ்விடங்களிலேசென்று கைக்கொண்டு அவ்விடங்களினின்றும்போன சீரிய தலைமையினையுடைய கொற்றவர் (௭௪),

[தென்குமரி வடபெருங்கல், குணகுடகட லாவெல்லை:] தென் குமரி எல்லை ஆ வட பெருங்கல் எல்லை ஆக் குண குட கடல் எல்லை ஆ—தென்றிசைக்குக்குமரி எல்லையாக வடதிசைக்குப் பெரியமேரு எல்லையாகக் கீழ்த்திசைக்கும் மேற்றிசைக்கும் கடல் எல்லையாக இடையில்வாழ்வோரெல்லாம்,

௭௧ தொன்று மொழிந்து தொழில் கேட்ப—தம்முடன் பழமையைச்சொல்லி ஏவல் கேட்கும்படி,

வெற்றமொடு வெறுத்து ஒழுகிய—வெற்றியோடே செறிந்துநடந்த,

கொற்றவர்தங் கோன் ஆகுவை — வெற்றியுடையோர்தம்முடைய தலைவனாந் தன்மையையுடையை,

௭௫ வான் இயைந்த இருமுந்நீர்ப் பேஎம் நிலைஇய விரும் பௌவத்து—மேகம்படிந்த பெரிதாகிய மூன்றுநீர்மையையுடைய அச்சம்நிலைபெற்ற கரியகடலிடத்து,

[கொடும்புணரி விலங்குபோழக், கடுங்காலொடு கரைசேர, நெடுங்கொடிமிசை யிதையெடுத்து]

கடுங்காலொடு கொடும்புணரி விலங்கு போழ இதை எடுத்து — கடியகாற்றாலே சுழன்றுவருகின்ற திரையைக் குறுக்கே பிளந்தோடும்படி பாய்விரிக்கப்பட்டு,

இன்னிசைய முரசம் முழங்க—இனிய ஓசையையுடைய முரசமுழங்காநிற்க,

பொன் மலிந்த விழுப் பண்டம் நாடு ஆர—பொன்மிகுதற்குக்காரணமாகிய சீரிய சரக்குக்களை நாட்டிலுள்ளார் நுகரும்படியாக,

[நன்கிழிதரும] கரை சேர (௭அ) நனகு இழிதரும—கரையைச்சேர வாணிகம் ௮௦ வாய்த்துவந்து இழிதலைசெய்யும்,

[ஆடியற் பெருநாவாய] நெடுங்கொடி மிசை (௭௯) ஆடு இயற் பெரு நாவாய்—நெடியகொடி பாய்மரத்தின்மேலேயாடும் இயல்பினையுடையபெரியமரக்கலம்,

இதையெடுத்து (௭௯) முழங்க (௮௦) ஆர இழிதரு (௮௨) நாவாயென்க

மழை முற்றிய மலை புரையத் துறை முற்றிய துளங்கு இருக்கை — கருமே ௮௫ கஞ்சூழ்ந்த மலைபோலக் கடல்சூழ்ந்த அசைகின்றஇருப்பினையும்,

துறை - ஆகுபெயர். சரக்குப்பறித்தற்குக் கடலினின்றமரக்கலங்கள் அக்கடல் சூழநின்றதற்கு மழைமுற்றியமலை உவமமாயிற்று.

நாவாய் துளங்கிருக்கையென்க

தெண்கடற் குண்டு அகழி—தெளிந்த கடலாகிய ஆழத்தையுடைய கிடங்கினையு ௯௦ முடைய,

சீர் சான்ற உயர் நெல்லின் ஊர் கொண்ட உயர் கொற்றவ — தலைமையமைந்த உயர்ந்த நெல்லின்பெயரைப்பெற்ற சாலியூரைக்கொண்ட உயர்ந்த வெற்றியையுடையவனே,

இதனாற் றனக்குநட்வாத ஊர்கொண்டானென்றார்

௯௫ இன்னே அசையாகக் கெலவூரொனபாருமுளர்

இருக்கையினையும் (௮௫) கிடங்கினையு (௮௬) முடையவூரொனக

[நீர்த்தெவவு நிரைத்தொழுவர், பாடுசிலம்பு மிசையேற்றத், தோடுவழங்கு மக லாம்பியிற், கயமகைய வயனிறைக்கும்]

வயல அகைய நிறைக்கும் கயம நீர்த தெவவும நிரைத்தொழுவர்பாடு சிலம்பும் ௯௦ இசை—வயல்தழைக்கும்படி நீரைநிறைத்தற்குக்காரணமான குளங்களினீரை இடா வான்முகந்துகொள்ளும் நிரையாகநின்றுதொழிலசெய்வாரிடத்தே ஒலிக்குமோசை,

ஏற்றத்தோடு வழங்கும் அகல் ஆம்பியின் இசை—ஏற்றத்துடனேயுலாவும் அகன்ற பன்றிப்பத்தலின்ஓசை,

மென்றொடை வன் கிழாஅர் இசை (௯௫)—மெத்தெனற கட்டுக்களையுடைய வலிய பூட்டைப்பொறியினோசை,

அதரி கொள்பவர் இசை(௯௫)—கடாவிடுகின்றவரோசை, (௫)

பகடு பூண் தெண்மணி இசை(௯௫)—எருதுகள்பூண்ட தெள்ளிய மணியினோசை,

இரும்புள் ஓப்பும் இசையே — பயிர்களிற பெரியகிளிமுதலியவற்றை ஓட்டு மோசை,

ஏகாரம் - ஈற்றசை

என்றும்—எந்நாளும், ௧௦

மணிப் பூ முண்டகத்து மணல் மலி கானற் பரதவர் மகளிர் குரவையொடு ஒலிப்ப—நீலமணிபோலும் பூக்களையுடையவாகிய கழிமுள்ளிகளையுடைய மணற்குன்றுகணமிக்க கடற்கரையிலிருக்கும் பரதவருடைய மகளிராடுங் குரவைக்கூத்தினோசையோடேகூடி ஆரவாரியாநிற்ப,

ஒருசார் விழவு நின்ற வியல் ஆங்கண் — ஒருபக்கம் விழாக்கொண்டாடுதலாற் பிறந்த ஓசைகள் மாறாமனின்ற அகலத்தையுடைய ஊர்களிடத்தேயிருந்து, ௧௫

பாடுசிலம்புமிசை (௯௦) முதலியன குரவையொடு (௯௭) என்றும் (௯௫) ஒலிப்ப ஒருசார் விழவுநின்றவூரெனக

முழவுத் தோள் முரண் பொருநர்க்கு — முழவுபோலுந் தோளினையுடையராய்க் கல்வியான்மாறுபடுதலையுடைய தடாரிப்பொருநர்க்கு,

உரு கெழு பெருஞ்சிறப்பின் இருபெயர்ப் பேர் ஆயமொடு இலங்கு மருப்பிற் களிறு கொடுத்தும் — அச்சம்பொருந்திய பெரிய தலைமையையுடைய கன்றும்பிடியுமென்னும் இரண்டுபெயரையுடைய பெரியதிரளுடனே விளங்குகின்ற கொம்பினையுடைய களிறுகளைக்கொடுத்தும்,

இருபெயர்க்கு ஆடும் மாடுமென்பாருமுளர் ௨௦

பொலந் தாமரைப் பூச் சூட்டியும்—பொன்னாற்செய்த தாமரைப்பூவைச் சூட்டியும்,

[நலஞ்சான்ற கலஞ்சிதறும், பல்குட்டுவர் வெல்கோவே]

நலம் சான்ற கலம் சிதறும் கோவே—நன்மையமைந்த பேரணிகலங்களை எல்லார்க்குங்கொடுக்குங்கோவே,

ஊர்களிடத்தே யிருந்து (௯௮) பொருநர்க்குக் (௯௯) கொடுத்துஞ் (௧௦௨) சூட்டியும் (௧௦௫) அமையாது கலஞ்சிதறுங்கோவேயெனக

பல் குட்டுவர் வெல் கோவே — பலவாகிய குட்டநாட்டிலுள்ளாரை வெல்லுங் கோவே,

என்பது அடை.

இதனால், தன்னுடைய ஊர்களிலிருந்து கொடுக்கின்ற சிறப்புக்கூறினார் ௨௫

கல் காயுங் கடுவேனிலொடு—மலைகள் காய்தற்குக்காரணமாகிய கடிய முதுவேனிலாலே,

இரு வானம் பெயல் ஒளிப்பினும்—பெரியமேகம் மழையைத் தன்னிடத்தே மறைத்துக்கொள்ளினும்,

[வரும்வைகன் மீன்பிறழினும்:] வைகல் வரும மீன் பிறழினும்—தான் தோன்றுதற்குரிய நாளிலேதோன்றும் வெள்ளி தென்றிசையிலேஎழினும்,

வெள்ளம் மாறாது விளையுள் பெருக—யாறுகள் வெள்ளமாறாமல்வந்து விளைதல்பெருகுகையினாலே,

௫ நெல்லின் ஓதை—முற்றினநெலலுக் காறறுடித்தசைதலாலே எழுந்த ஓசை,

அரிநா கம்பலே—அதனையறுபபாருடையவோசை,

புள் இமிழ்ந்து ஒலிக்கும் இசை—பறவைகள்கத்துகையினாலே ஆரவாரிக்குமாரவாரம்,

என்றும்—எந்நாளும்,

௧௦ சலம் புகன்று சுறவுக் கலித்த புலவு நீர வியன் பௌவதது—தம்முள மாறுபாட்டைவிரும்பிச் சுறாக்கள செருக்கித்திரிகின்ற புலாலுற்றதனையுடைததாகிய நீரையுடைய அகற்சியையுடைய கடலிடததுத் துவலே (௧௧௫),

நிலவுக் கானல் முழவுத் தாழைக் குளிர்ப பொதும்பா நளித தூவல—நிலாப்போலும் மணலையுடையகரையினிற குடமுழாப்போலுங * காயையுடையதாழையை வேக௫ லியாகவுடைய குளிர்ச்சியையுடைய இளமரககாவின்கணணேவநது செறிதலையுடைய துவலையிலோசை,

திரை திமில் வேட்டுவா கரை சோ கம்பலே—திரைதத மீன்படகாலே வேட்டையாடுவோர் வந்து கரையைசசேருமாரவாரம,

இருங்கழிச் செறுவின் வெள்ளுப்புப பகாநரொடு — பெரியகழியிடததுஉப்புப் ௨௦ பாத்தியிலே வெள்ளிய உப்பைவிறகும் அளவரொலியோடே,

[ஒலியோவாக் கலியாணா, முதுவெள்ளிலே மீக்கூறும், வியன்மேவல் விழுச்செல்வத், திருவகையா னிசைசான்ற, சிறுகுடிப பெருநதொழுவா, குடிகெழீஇய நானிலவரொடு, தொன்றுமொழிந்து தொழில்கேட்ப]

சிறுகுடிப் பெருந்தொழுவா ஒலி ஓவாக கலி யாணர் முதுவெள்ளிலை — சிறியஉ௫ குடிகளாய்ப் பெரியதொழிலகளைச் செய்வாருடைய ஆரவாரமுமொழியாத பெருக்கினையுடைத்தாகிய புதுவருவாயினையுடைய முதுவெள்ளிலையென்னுமூா,

இது குறுநிலமன்னாிருபபு

பகாநரொலியோடே (௧௧௬) நெலலினோதை (௧௧௦) முதலியஒலி என்றும் (௧௧௧) ஓவாதவெள்ளிலையென்க

௧௨௰ மீக்கூறும் இருவகையான் வியன் மேவல் விழுச்செல்வதது இசை சான்ற குடிகெழீஇய நானிலவரொடு—உலகததுததொழிலகளின மேலாகசசொல்லும உழவு வாணிகமென்கின்ற இரணடுகூற்றாலே அகலமபொருந்துதலையுடைய சீரியசெல்வத்தாலே புகழ்நிறைந்த குடிமககள பொருந்தின நான்குநிலததுவாழ்வாருடனே,

தொன்று மொழிந்து தொழில் கேட்ப—பழமைகூறிநின்று ஏவலைகேட்கும்படியாக,

௧௨௫ கால் என்னக் கடிது உராஅய் நாடு கெட எரி பரபபி ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து—காற்றென்னும்படி கடிதாகப்பரந்துசென்று பகைவர்நாடுகெடும்படி நெருப்பைப்பரப்பித தலையாலங்கானமெனகின்றவூரிலே பகைவர்ககுஅசசந்தோன்றும்படிவிட்டு,

* தாளையுடையவென்றும் பிரதிபேதமுணடு

"எரிபரந்தெடுத்தல்" என்னுந் துறைகூறிறறு.

அரசு பட அமர் உழக்கி முரசு கொண்டு களம் வேட்ட — நெடுநிலமன்னரிருவ ரும், குறுநிலமன்னரைவரும் படும்படி போரிலேவென்று அவர்முரசைககைக்கொண டு களவேள்விவேட்ட,

எழுவராவார:—சேரன, செமபியன், திதியன், எழுநி, எருமையூரன், இருஙகோ ௫ வேண்மான், பொருநன —அ௫௬.

அடு திறல் உயர் புகழ் வேநதே — கொல்லுகினற வலியுயர்ந்த புகழையுடைய வேநதனே,

நானிலவரோடே (௧௨௬) முதுவெள்ளிலே (௧௧௬) தொழில கேட்பத (௧௨௭) தி௭ லுயர்ந்தவேந்தேயென்க ௧௦

இது † தலையாலஙகானததது வென்றமைகூறிறறு

நட்டவா குடி உயர்கதுவை—நின்னுடனே நட்புகொண்டவருடையகுடியை உயர்ததலைச்செய்வை,

செற்றவா அரசு பெயர்கதுவை—நீசெறபபட்டவா அரசுரிமையை வாங்கிககோ டலைச் செய்வை, ௧௫

பேர் உலகத்து மேஎந் தோன்றிச சீருடைய விழுச சிறபபின—பெரிய நன்மகக ளிடததே மேலாய்த்தோனறுகையினுலே புகழையுடைய விழுமியதலைமையினையும்,

விளைந்து முதிர்ந்த விழு முததின்—சூன்முற்றி ஒளிமுதிர்ந்த சீரியமுத்தினையும்,

இலங்கு வளை இருஞ் சேரி—விளஙகுகினற சஙகினையுமுடைய பெரிய சஙகு குளிபபாரிருப்பினையும், ௨௦

முத்தினையும் சஙகினையுமுடைய சேரியென்க.

கட்கொண்டிக குடிப பாககத்து—கள்ளாகிய உணவினையுடைததாகிய இழிந்த குடிகளையுடைய சிறூர்களையுமுடைய,

கொண்டி - கொள்ளபபடுதலின் உணவாயிறறு, கொள்ளையுமெனப.

நற கொறகையோர் நசைப பொருந — நன்றாகிய கொறகையென்னுமஊரிலுள் ௭௳ ளோர் நசசுதலைசசெய்யும் பொருநனே,

இதனுற் கொற்கைக்குரியோனென்றார்

சிறப்பினையும் (௧௩௪) சேரியினையும (௧௩௬) பாககததினையு (௧௩௭) முடைய கொற்கை

செற்ற தெவவர் கலஙகத் தலைச் சென்று அஞ்சுவரத தட்கும் அணஙகுடைத துப ௩௦ பின்—தாங்கள்செறபபட்ட பகைவர்மனஙகலஙகும்படி அவர்களிடததேசென்று அவ ர்க்கு அச்சந்தோன்றத்தங்கும் வருத்ததததையுடைத்தாகிய வலியினையும்,

கோழூன் குறைக் கொழு வல்சி — கொழுதத இறைச்சியையுடைய கொழுத்தி ருக்கின்றசோறறினையும,

இதனைக் கூடவிட்டாககுதலிற் கொழுவல்சியென்றார் கொழுவல்சி - கொழு ௩௫ வினுலாகிய வல்சியென்றுமாம். இஃது ஆகுபெயர்.

புலவு வில்—எய்த அம்புதன்னை மீணடுந்தொடுததலிற புலாநுறறததையுடைய வில்லினையும்,

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறததிணையியல், அ.

† நெடுஞ்செழியன் தலையாலங்கானத்துச் செருவென்றமையைப் புறப் ௬௦ பாட்டில் மிகவிரித்துககூறினர்

பொலி கூவை—பொலிந்தகூவைக்கிழங்கினையும,

கூவை - திரளுமாம.

ஒன்றுமொழி—வஞ்சினங்கூறுதலையும்,

ஒலி இருபபின—ஆரவாரததையுடைய குடியிருபபினையுமுடைய,

தென்பரதவா போரேறே—தென்றிசைககணவாழும பரதவர்க்குப் போர்த்தொழிலைச்செயயும் ஏறுயவனே,

இதனுற பரதவரைத தனககுப படையாக அடிபபடுததினமை கூறினுர்.

துபபு (கசுo) முரவியவற்றையுடைய பரதவரென்க

பரதவர் - தென்றிசைககட்குறுநிலமன்னர் அது *"தென்பரதவா மிடல்சாய, வடவடுகர் வாளோட்டிய" என்னும் புறப்பாட்டானுமுணாக.

அரிய எலலாம் எளிதினிற் கொண்டு—பிறாககரிய நுகர்பொருள்களெல்லாம் எளிதாக நின்னூரிடததேயிருந்து மனத்தாற்கைககொண்டு,

உரிய எல்லாம் ஓமபாது வீசி—அபபொருளையெல்லாம நினக்கென்று பாதுகாவாது ஊரிடத்தே யிருநது பிறர்ககுககொடுத்து,

என்றது —†"கொளளாா தேஎங் குறிதத கொறறம்" கூறிறறு

நனி புகன்று உறைதும் என்னுது எற்றெழுந்து—மிகவிரும்பி ஊரின்கண்ணேயிருந்துறையக கடவேமென்றுகருதாதே பகைவாமேற்செலலுதலை ஏறட்டுககொண்டு போக்கிலே ஒருப்பட்டு,

இது ‡ வஞ்சிகூறிற்று

பனி வார் சிமயக கானம போகி—பனியொழுகுகின்ற மலையிடததனவாகிய காடுகளைககடந்து,

சிமயம - ஆகுபெயா

அகநாடு புககு—அவாக ளுள்ளுடுகளிலே புகுந்து,

இதனுல் § "தொலலெயிற்கிவாதல" கூறினுா.

அவர் அருப்பம வெளவி—அபபகைவரரணகளைக கைக்கொண்டு அதனுலும மையாமல்,

இது குடுமிகொணட மணணுமங்கலங் கூறிறறு இதனுல அரசரரண்களை யழித்தமை கூறினுா

[யாண்டுபல கழிய வேணடுபுலத இறுதத] வேணடு புலததுப் பல யாணடுகழிய இறுதத — நீ அழித்தநாடுகளிற கொள்ளவேணடு நிலங்களிலே பலயாண்டுகளும் போம்படி தஙகி,

மேம்பட மரீஇய வெல் போாக குரிசில—அந்நிலஙகள பணடையின் மேலாதறகு அடிபபடவிருநத வெல்லும்போரினையுடைய தலைவனே,

இது பகைவாநாட்டைத தனனுடாககினமைகூறிறறு.

உறு செறுநர் புலம் புககு—தொன்றுதொட்டுவந்த பகைவாநிலத்தேவிட்டு,

---

* புறநானூறு, ஙஎஅ.

† தொல்காப்பியம, பொருளதிகாரம், புறததிணையியல், கஉ.

‡ வஞ்சி - மண்ணசையான் மேறசேறல்.

§ தொல்காப்பியம், பொருளதிகாரம், புறததிணையியல், கஉ.

அவர் கடி காவின் நிலை தொலைச்சி—அவர் காவலையுடைய பொழில்களின் நிற்கின்ற நிலைகளைக் கெடுத்து,

என்றது வெட்டியென்றவாறு

இழிபு அறியாப் பெருந் தண்பணைக் குரூஉக் கொடிய எரி மேய—வளப்பங்குன்றுதலை ஒருகாலத்துமறியாத பெரிய மருதநிலங்களை நிறத்தையுடைய ஒழுங்கினையுடைய நெருப்புண்ண,

நாடெனும்பேர் காடாக — நாடென்னும்பெயர்போய்க் காடென்னும் பெயரைப்பெற,

ஆ சேந்த வழி மா சேப்ப—பசுத்திரள் தங்கின இடமெல்லாம் புலிமுதலியன தங்க,

ஊர் இருந்த வழி பாழாக—ஊர்களாயிருந்த இடங்களெல்லாம் பாழாய்க்கிடக்க,

ஊரிருந்த இடமென்றுமாம்

இலங்கு வளை மடமங்கையர் துணங்கை அம் சீர் தழூஉ மறப்ப — விளங்குகின்ற வளையினையும், மடப்பத்தினையுமுடைய மகளிர் துணங்கைக்கூத்தினையும், அழகினையுடைய தாளவறுதியையுடைய குரவைக்கூத்தினையும் மறப்ப,

தழூஉ - ஆகுபெயர்

அவை இருந்த பெரும் பொதியில் கவை அடிக் கடு நோக்கத்துப் பேய் மகளிர் பெயர்பு ஆட — சான்றோரிருந்த பெரிய அம்பலங்களிலே இரட்டையான அடிகளையும் கடியபார்வைகளையுமுடைய பேயாகிய மகளிர் உலாவியாட,

அணங்கு வழங்கும் அகல் ஆங்கண்—இல்லுறைதெய்வங்கள் உலாவும் அகன்ற ஊரிடத்து,

நிலத்து ஆற்றுங் குழூஉப் புதவின் — நிலத்திலுள்ளாரையெல்லாம் போக்கும் வாசல்காப்பாரையுடைய வாசலின்கண்ணேயிருந்து,

குழூஉ - ஆகுபெயர் இனிக் குமிழ்தேய்ந்துபோதலின், மணலைக் கொழித்துவருமெனபாருமுளர்.

அரந்தைப் பெண்டிர் இனைந்தனர் அகவ—மனக்கவற்சியையுடைய பெண்டிர் வருந்திக்கூப்பிட,

கொழும் பதிய குடி தேம்பிச் செழுங் கேளிர் நிழல் சேர—வளவிய ஊர்களிடத்தனவாகிய குடிகளெல்லாம் பசியாலுலர்ந்து புறநாட்டிலிருக்கும் வளவிய சுற்றத்தார் தமக்குப் பாதுகாவலாகச் சென்று சேர,

நெடுங்கால் வீழ்ந்த கரி குதிர்ப் பள்ளிக் குமிழ்க் கூகை குராலொடு முரல—பெரியமாளிகைகளிலே வெந்துவீழ்ந்த கரிந்த குதிரிடங்களிலே சூட்டினையுடைய கூகைச்சேவல் பேட்டுடனேயிருந்து கதற,

கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கைக் களிறு மாய் செருந்தியொடு கண்பு அமன்று ஊர்தர—செங்கழுநீர்மிக்க இடமகன்ற பொய்கைகளிடத்தே யானையினை மறையும் வாட்கோரையுடனே சண்பங்கோரையும் நெருங்கியேற,

செருந்தி - நெட்டிக்கோரையுமாம்

நல்லேர் நடந்த நசை சால் விளை வயல் பன்மயிர்ப் பிணவொடு கேழல் உகள—

நன்றாகிய எருதுகளுழுத நச்சுதலமைந்த வணங்கின்ற வயலிடத்தே பலமயிரினை யுடைய பெணபன்றியுடனே ஆணபன்றி ஓடித்திரிய,

பிணவென்னும் அகரவீறறுச்சொல வகரவுடம்படுமெய்பெற்றது * "பன்றி புல்வாய் நாயென மூன்று-மொன்றிய வென்ப பிணவென் பெயர்க்கொடை" என்றார்.

[வாஅ ழாமையின் வழிதவக கெட்டு.] தவ வழி வாழாமையிற் கெட்டு—மிக நின் ஏவல்செய்து வாழாமையினாலே கெட்டு,

இனித தவக்கெட்டெனக் கூட்டி மிககெட்டென்றுமாம்.

பாழ ஆயின—பாழாய்விட்டன,

நின் பகைவர் தேஎம்—நின்னொடு பகைததலைசசெய்தவருடைய நாடுகள்,

[எழாஅததோ ளிமிழ்முழுககின், மாஅததா ளுயர்மருப்பிற், கடுஞ்சினத்த களி றுபரபபி]

இமிழ் முழுககின மாத் தாள் உயா மருப்பிற கடுஞ்சினத்த களிறு பரப்பி—மு ழங்குகின்ற ஓசையையும் பெருமையையுடைய கால்களையும் தலைகளேந்தின கொம் புகளையுமுடைய கடியசினததவாகிய யானைகளை எங்கும்பரப்பி,

[விரிகடல வியன்றானையொடு] எழாத் தோள் (கஎஎ) விரி கடல் வியன் தானை யொடு—முதுகிட்டாாமேற செல்லாத தோளினையுடைய விரிகின்ற கடல்போலும் அகற்சியையுடைய படையோடே,

முருகு உறழத தலைச சென்று — முருகன் பகைவாமேற் செல்லுமாறுபோலத தடையறப பகைவரிடததே சென்று,

முருகு - தெயவத்தன்மை, ஆகுபெயராய்நின்றது.

அகல் விசும்பின் ஆர்ப்பு இமிழ—அகனற ஆகாயததினகணணே படையெழுந த ஆரவாரமொலிப்ப,

விசுமபெனவே ஆகுபெயராயத தேவருலகையுணாத்திற்று

பெயல உறழக கணை சிதறி — மழையோடே மாறுபடுமபடி அம்புகளைததூவி,

பல புரவி நீறு உகைபப — பலகுதிரைதந்ரள ஓடுகின்றவிசையாற் றுகள்களை எழுபப,

வளை நரல—சஙகமுழஙக,

வயிா ஆரபப—கொம்பொலிபப,

பீடு அழியக கடநது அடடு—பெருமைகெடுமபடி வெனறு கொன்று,

அவா நாடு கெட எயில் வெளவி—அவருடைய நாடுகளழியும்படி யாக அவரிருக கின்ற மதிலைக்கொண்டு,

சுற்றமொடு தூ அறுததலின்—அவாகளுககு உதவிசெயயும் சுற்றத்தாரோடே கூட அவாகள்வலியைப போககுதலாலே,

செறற தெவ்வா நின்வழி நடபப—நின்னாற் சிறிதுசெறபபட்டபகைவா நின ஏவலகேட்டு நடககையினாலே,

வியன் கண் முது பொழில் மணடிலம் முறறி—அகலததை இடததேயுடைய பழைய நாவலநதீவின்கணுளவாகிய சோழமண்டலம தொணடைமணடல மென்கி ன்றமண்டலஙகளை நினதாக வளைத்துககொண்டு,

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல, ௫௮.

மண்டலம் மண்டிலமெனமருவிற்று.

அரசியல் பிழையாது—நூல்களிற்கூறிய அரசிலக்கணத்திற்றப்பாமல்,

[அறநெறி காட்டிப், பெரியோர் சென்ற வடிவழிப் பிழையாது·] பெரியோர் சென்ற அடிவழிப பிழையாது அறநெறி காட்டி—நின்குலத்திற பெரியோாநடந்த அடிபபாட்டின்வழியைத் தப்பாமல அறநெறியிருக்குமபடி இதுவென்று அவாகளுக்கு விளக்கி,

நனிபுகன்றுறைதுமென்னுது ஏறறெழுந்து (௧௪௭) களிறுபரப்பித் (௧௭௯) தானையோடே (௧௮௦) தலைச்சென்று (௧௮௧) அரசமணடிலமுறறிச (௧௯௦) செற்ற தெவ்வா நின்வழிநடக்கையினலே (௧௮௯) நீ நட்டவாகுடியையுயாககுவை (௧௯௧) யாகையினலே அவாகளுக்கு அறநெறிகாட்டிப (௧௯௧) பின்னா அம்மணடலங்களைச் சூழவிருந்த குறுநிலமன்னா அரணகளிலுளளனவறறை எளிதிறகொண்டு (௧௪௫) வீசிப் (௧௪௬) போகிப (௧௪௮) புக்கு அவாருபபங்களைவெளவிப (௧௪௯) பின்னர் உறுசெறுநா (௧௫௨) நின்வழிவாழாமையினலே (௧௭௫) அவர்புலம்புக்கு (௧௫௨) நீ நரையுருமேறனையை (௬௩) யாகையினலே அரசியல பிழையாமல் (௧௯௧) ஆாப்பிமிழ (௧௮௨)நீறுகைபப (௧௮௪) நரல ஆரப்பக (௧௮௫) கணைசிதறித (௧௮௩) தொலைச்சி(௧௫௩) அவரைக்கடந்து அட்டு (௧௮௬) அவரெயிலைவெளவி (௧௮௭) அவரைத தாவறுததலின் (௧௮௮) அப்பகைவாதேஎம் (௧௭௬) எரிமேயக் (௧௫௫) காடாக (௧௫௬) மாசேப்பப் (௧௫௭) பாழாக (௧௫௮) மரபப (௧௬௦) ஆட (௧௬௩) அகவச் (௧௬௪) சேர (௧௬௮) மூரல (௧௭௦) ஊாதர (௧௭௨) உகளக (௧௭௪) கெட்டுப் (௧௭௫) பாழாயின (௧௭௬), அங்ஙனம் பாழாயினபின்பு நீ செறறவரரசு பெயாககுவை (௧௯௨) யாகையினலே வேண்புலத்திறுத்து (௧௫௦) அந்நாடுகள் மேமபடுதற்குமருவின குரிசில் (௧௫௧) எனவினைமுடிகக

[குடமுதற் குன்றிய தொனறுதொழு பிறையின், வழிவழி சிறககநின் வலம்படு கொறறம] குடமுதல தோன்றிய தொன்று தொழு பிறையின் நின் வலம் படு கொறறம் வழிவழி சிறகக—மேறறிசைககட்டோன்றிய நின்குலததிற்குப் பழைதாகிய எலலாருந தொழும்பிறை நாடோறுஞ்சிறககுமாறுபோல நினனுடைய வெற்றியாலே நின்பின்னுள்ளோாக்குணடாஙகொறறம அவாகளவழிவழியாக மிகுவதாக,

[குணமுதற குன்றிய வாரிருண மதியிற், றேயவன கெடுகநின் றெவ்வ ராக்கம·] குணமுதல் தோனறிய ஆரிருள மதியின் நின்தெவ்வா ஆககம் தேய்வன கெடுக—கீழ்த்திசைக்கட்டோன்றிய நிறைந்த இருளைததருமதி நாடோறுந் தேயுமாறுபோல நினபகைவருடையஆககம் நாடோறுந் தேயவனவாயக கெடுவனவாக;

உயா நிலை உலகம அமிழ்தொடு பெறினும் பொய சேண நீங்கிய வாய் நட்பினையை— ஒருபொயயாலே உயாந்தநிலைமையையுடைய தேவருலகை அவர்நுகரும அமுதத்தோடே பெறுவையாயினும அவறறைததருகினற பொய் நின்னைக்கைவிட்டுநீங்க மெய்யுடனே நடபுசசெயதலையுடையை,

இனிப பொயசே ணீஙகிய வாயநடப பினையே யென்று பாடமாயின், மெயயை நடததலைச செய்தனையென்க

முழஙகு கடல ஏணி மலா தலை உலகமொடு உயாநத தேளதது விழுமியோர் வரினும் பகைவாககு அஞ்சிப பணிநது ஒழுகலையே—முழஙகுகடலாகிய எலலையையுடைய அகன்றவிடததையுடைய உலகததுள்ளாருடனே உயாந்த தேவருலகததுத தேவரும் பகைவராய்வரினும் பகைவாககு அஞ்சித தாழ்ந்தொழுகலைசெய்யாய்,

தென்புல மருங்கின் விண்டு நிறைய வாணன் வைத்த விழுநிதி பெறினும் பழி நமக்கு ஒழுக என்னாய்—தென்றிசைநிலத்தின் மலைகளெல்லாம் நிறையும்படி வாணனென்னுஞ்சூரன்வைத்த சீரிய பொருட்டிரள்களினைப் பெறுவையாயினும் பிறர் கூறும்பழி நமக்கு வருவதாகவென்று கருதாய்,

விழுநிதி ஈதல் உள்ளமொடு இசை வேட்குவையே— சீரிதாகிய பொருளைக் கொடுத்தலையுடைத்தாகிய நெஞ்சுடனே புகழை விரும்புவை,

அன்னாய— அத்தன்மையையுடையாய்,

[நினனொடு முன்னிலை யெவனோ] முன்னிலை நின்னொடு எவனோ— ஐம்பொறிகளுக்கும் நுகரப்படுவனவாய முன்னிற்கப்படுவனவாகிய இந்நுகர்பொருள்கட்கு நின்னோடு என்னவுறவுண்டு,

நின்னென்றது சீவான்மாவை. முன்னிலை - ஆகுபெயர்

[கொன்னொன்று கிளக்குவ லடுபோ ரண்ணல், கேட்டிசின் வாழி கெடுகநின னவலம்.]

நின் அவலம் கெடுக—நின்னிடத்துண்டாகியமாயை இனிக்கெடுவதாக,

அடு போர் அண்ணல— அம்மாயையைக்கொல்கின்ற போர்த்தொழிலவல்ல தலைவனே,

கொன் ஒன்று கிளக்குவன்— பெரிதாயிருப்பதொருபொருளை யான்கூறுவன, அஃது என்றாற்காட்டுதற்கரிது,

என்றது நந்தமிழியினை.

கேட்டிசின்— அதனைத் தொல்லாணை நல்லாசிரியரிடத்தே கேட்பாயாக;

வாழியென்பதனைச் சுறறமொடுவிளங்கி (எஎப) யென்பதனபின்னேகூட்டுக.

[கெடாது நிலைஇயர்நின சேணவிளஙகு நலலிசை] சேண விளஙகு நின் நலலிசை கெடாது நிலைஇயர்—சேட்புலமெல்லாஞ் சென்றுவிளஙகும நின்னுடைய நல்ல புகழ் ஒருகாலமுங்கெடாதே நிலைபெறுவதாக,

[தவாப்பெருக்கத் தறுயாணர, ரழிததாறுக கொழுநதிறறி, யிழிததாறுப பலசொன்றி, யுண்டாறுக கூர்நறவிற் றிறனுறு வினைவைக, னிலநெடுக கல்லா வொணபல வெறுகைப், பயனற வறியா வளஙகெழு திருநகா]

தவாப பெருகக்தது அறு யாணர வளம கெழு திரு நகர—கெடாத பெருக்கத்தினையுடைய நீஙகாத புதுவருவாயாலே செலவம்பொருந்தின திருமகளையுடைய நகர்,

அழித்து ஆறுக கொழுநதிறறி தினறு— அழிககபபட்டு விருப்பமையாத கொழுவிய தசையைததினறு,

"ஆடழிகக" எனப

ஆறுப பல சொனறி இழிதத ஆறுக கூ நற ன உணடு—விருபபமையாத பலவகைபபட்ட சோறறைத தேனறுகூறிக களிபபமையாத மிகக களளை உணடு,

ஆறு இனப பாணா (உகக)—அவவிரணடிலும விருப்பமையாத திரட்சியையுடைய பாணரொக்க.

தின்று உணடு ஆறு இன பாணரொக்க

வைகல்—நாடோறும்

நிலன் எடுக்கல்லா ஒண் பல வெறுக்கை—நிலஞ்சுமக்கமாட்டாத ஒள்ளிய பல வாகிய பொருட்டிரள்களையும்,

என்றது பூண்களையும், பொன்னையும.

பயன் அறவு அறியா நகா—எக்காலமும பயன்கெடுதலறியாத நகா,

நரம்பின் முரலும் நயம வரும முரற்சி விறலியா வறுங்கைக் குறுந்தொடி செறிபப—யாழ்வாசித்தாற்போலப பாடும நயப்பாடுதோன்றும பாட்டினையுடைய விறல் பட ஆடுதலையுடையார தம்முடைய பூணணியாத கைகளிலே குறியதொடிகளையிட,

* "நரம்பொடு வீணைநாவி னவின்றதோ வென்று நைந்தார" என்றாரபிறரும.

பாணாஉவப்பக் களிறு பல தரீஇ—பாணாமகிழும்படி யானைகள்பலவற்றையுங் கொடுத்து,

நகரிலே யிருந்து (௨௧௬) நாடோறும் (௨௧௪) விறலியா தொடிசெறியாநிறபப் (௨௧௮) பாணருவப்ப (௨௧௯) வெறுக்கையையும (௨௧௫) யானையையுங் கொடுத் தென்க

தரீஇ என்றதனைச † "செலவினும் வரவினும்" என்னும பொதுச்சூத்திரத்தா றகொள்க.

கலந்தோா உவப்ப எயில பல் கடைஇ—தன்னுடன நட்புக்கொண்டோா மன மகிழும்படி அழித்த அரணகளிறகொண்ட பலபொருள்களையும அவர்க்குச் செலுத்திக்கொடுத்து,

என்றது - அவா வேண்டாவென்றுமறுக்கவும தாம் வலியப்போகவிட்டென்ற வாறு

மறம கலங்கத் தலைச் சென்று—பகைவாமறம் நிலைகுலையும்படி அவாகளிடத்தே சென்று,

வாள் உழந்து அதன தாள் வாழ்த்தி—அவாக்கு வாட்போரிலே வருந்தினபடியாலே அவ்வருத்தத்தினுற் பின்பும் அதனகட்பிறக்கின்ற முயற்சியைவாழ்த்தி,

என்றது - வாட்போரின்கட்பெற்ற இனிமையைப பின்னும்விரும்பி அதிலேமுயல்கின்றரென வீரச்சிறப்புக்கூறிற்றும்

உழந்தென்னுஞ் செயதெனனெச்சம் காரணப்பொருட்டு. ‡"விழுப்புண் படாத நா ளெல்லாம் வழுக்கினுள் - வைக்குந்தன் னாளை யெடுத்து" என்றா பிறரும். உழந்த தன்னெனப் பெயரெச்சமாயின், தன்னெனனுமொருமை மேல்வருகின்ற மன்னா (௨௩௪) என்னும் பன்மைக்காகாமையுணாக

நாள ஈண்டிய நல்லகவாக்குத் தேரொடு மாசிதறி—விடியற்காலத்தே வந்திரண்ட அரசாவிரும்பப்பட்ட சூதாக்குத் தேருடனே குதிரைகளையும பலவாகக் கொடுத்து,

---

* சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், ௧௩௬—"கருங்கொடி புருவ மேறா கயனெடுங் கண்ணு மாடா - வருங்கடி மிடறும் விம்மா தணிமணி யெயிறுந் தோன்றா - விருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடி னாளோ - நரம்பொடு வீணை நாவி னவின்றதோ வென்று நைந்தார."

† தொல்காப்பியம், சொல்லதிகாரம, கிளவியாக்கம், ௨௮.

‡ திருக்குறள், படைச்செருக்கு, ௬.

என்றது, * "தாவி னல்லிசை கருதிய கிடந்தோர்க்குச் - சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்" எனனும்விதியாற் சூதர் இருசுடர்தொடங்கி இன்றுகாறும் வருகின்ற தங்குலத்துள்ளோர்புகழை அரசர் கேட்டற்குவிரும்புவரென்றுகருதி விடியற்காலத்தே பாசறைக்கண்வந்து துயிலெடைபாடுவரென்பது கண்டுக்கூறிற்றும்.

அகவரென்றார், குலத்தோரெல்லாரையும் அழைத்துப் புகழ்வரென்பது பற்றி, ஆகுபெயர், †"அகவல்" போல.

இனி வைகறைபாடும் பாணரென்பாருமுளர்

வாழ்த்தித் திரண்ட அகவரொடு

[சூடுற்ற சுடர்ப்பூவின், பாடுபுலர்ந்த நறுஞ்சாந்தின், விழுமிய பெரியோர் சுற்றமாகக், கள்ளி னிருங்கைக் கலஞ்செல வுண்டு] கள்ளின் இருங் கைக்கலம் செல உண்டு சூடுற்ற சுடர்ப் பூவின் பாடு புலர்ந்த நறுஞ்சாந்தின் விழுமிய பெரியோர் சுற்றமாக—கள்ளினையுடைத்தாகிய பெருமையினையுடைய குப்பிகள் வறறும்படியாகக் கள்ளினையுண்டு சூடுதலுற்ற விளக்கத்தையுடைத்தாகிய வஞ்சியினையும் பூசினபடியே புலர்ந்த நறிய சாந்தினையுமுடைய, சீரியபடைத்தலைவரைத் தமக்குச் சுற்றத்தாராகக்கொண்டு,

உண்டென்னுஞ் செய்தெனெச்சம் உடையவென்னும் வினைக்குறிப்போடு முடிந்தது.

பணிந்தோர் தேஎந் தம்வழி நடப்ப—தம்மைவழிபட்டோருடைய தேசங்கள் தம்மேவலைக்கேட்டு நடக்கையினாலே,

பணியார் தேஎம் பணித்துத் திறை கொண்மார்—தம்மை வழிபடாதோருடைய தேசங்களைத் தம்மேவல் கேட்கும்படி பண்ணி அவர்களைத் திறைவாங்குதற்கு,

பருந்து பறக்கல்லாப் பார்வல் பாசறை—உயரப் பறக்கும் பருந்துகளும் பறத்தலாற்றாத உயர்ச்சியையுடைய அரண்களையுடைய பாசறைக்கண்ணே,

பார்வல் - ஆகுபெயர்

படு கண் முரசங் காலை இயம்ப—ஒலிக்கின்ற கண்ணையுடைய பள்ளியெழுச்சி முரசம் நாட்காலத்தே ஒலிப்பவிருந்து,

வெடி படக் கடந்து—பகைவர்படைக்குக் கேடுண்டாக வென்று,

வெடி - ஓசையுமாம்

வேண்டு புலத்து இறுத்த—பின்னும் அழிக்கவேண்டுமென்ற நிலங்களிலேசென்றுவிட்ட,

பணை கெழு பெருந் திறற் பல் வேல் மன்னர்—வெற்றிமுரசுபொருந்தின பெரிய வலியினையும் பலவேற்படையினையுமுடைய அரசர்கள்,

[கரைபொரு திரங்குங் கனையிரு முந்நீர்த், திரையிடு மணலினும் பலரே.] கனை இரு முந்நீர்க் கரை பொருது இரங்கும் திரை இடு மணலினும் பலரே—செறிதலையுடைய கரிய கடலிற் கரையைப் பொருது ஒலிக்கும் திரைகுவிக்கின்ற மணலினும் பலரே

ஏகாரம் - பிரிநிலை

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், ௩௬.

† ,, ,, செய்யுளியல், ௮௧.

உரை செல மலர தலை உலகம் ஆணடு கழிநதோரே—புகழ எஙகும்பரககுமபடி அகன்ற இடததையுடைய உலகஙகளைத தமதேவலகளைநடததி மககட்குரிய மனனுணர்வின்மையிற் பிறபபறமுயலாது பயனின்றி மாணடோர,

ஏகாரம - ஈற்றசை *'மககட ாமே யாற்றி வுயிரோ'' எனறதனால, மன ஜுணாவினறியெனறும

தரீஇய (௨௧௯) கடைஇய (௨௨௦) சிதறிய (௨௨௪) பணிநதோர தேஎந தமவழிநடககையினாலே (௨௨௯) பணியார்தேஎம பணிததுத திறைகொளளுதறகுப (௨௩௦) பெரியோர சுற்றமாககொணடு (௨௨௭) பாசறையிலே (௨௩௧) முரசியமபஇருந்து (௨௩௨) கடநதுஇறுதத (௨௩௩) மனனர (௨௩௪) உலகமாணடுகழிநதோர (௨௩௭) திரையிடுமணலினுமபலர (௨௩௬) எனமுடிகக

இது †''மாற்றருங கூற்றஞ் சாற்றிய பெருமை'' அனறிப பிறவியறமுயலாமையிற கழிநதமைகூறிற்று

அதனால—பயனினமையாலே,

[குணகடல கொணடு குடகடல முற்றி, யிரவு மெலலையு ர விளிவிட னறியா, தவலு மிசையு நீததிரள பீ ணடிக, கவலையங குழுமபி னருவ யொலிபபக, கழைவளர சாரற களிறறின நடுஙக, வரைமுத லிரஙகு மேற்று வான்றுமிாந்து, சிதாற பெரும்பெயல சிறததலின் ]

வான குணகடல கொணடு குடகடல வரைமுதல முற்றி — மேகங கீழததிசைக கடலிடததே நீரைமுகந்து மேறறிசைக கடலருகின மலையிடததே தஙகி,

இரவும எலலையும விளி விடன அறியாது—இரவுமபகலும ஒழிநதஇடததை அறியாது,

அவலும் மிசையும நீத திரளபு ஈணடிக கவலை அம குழுமபின அருவி ஒலிபப—பளளமும் மேடுமாகிய பலநிலததுணடாகிய நீரினாலே திரணடு சேரககுவிநது கவலைக்கிழஙகு கலலின அழகியகுழியிலேவீழநது அருவியொலிககுமபடி,

கழை வளர சாரற களிற்றினம் நடுஙக இரஙகும் ஏற்றொடு துமிாந்து—மூஙகில வளாந்த மலைபபககததிலே யானைததிரள நடுஙகுமபடி ஒலிககும உருமேற்றோடே பரந்து,

சிதாற பெருமபெயல—சிதறுதலையுடைய பெருமழை,

சிறததலின—மிகுகையினாலே,

வான் முற்றி துமிாந்து அருவியொலிககும்படி பெருமபெயல விளிவிடனறியாது சிறத்தலினெனமுடிகக

[தாஙகாது, குணகடற கிவாதருங குரூஉபபுன லுநதி, நிவந்துசென் னீத்தங் குளங்கொளச் சாற்றி] தாஙகாது உந்தி நிவநது செல நீததம் குளம கொளச் சாற்றிக் குணகடற்கு இவாதருமு குரூஉபபுனல்—யாறுகள தாஙகாமல யாறறிடைககுறையிலே ஓங்கிச்செலகின்றபெருகலைக் குளஙகள்கொள்ளும்படி நிறைததுக கீழ்த்திசைக் கடலுக்குப் பரந்துசெல்லும நிறததையுடைய நீராலே,

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௯௯
† ,, ,, புறத்திணையியல், ௨௪.

களிறு மாய்க்கும் கதிர்க் கழனி—யானைகள் நின்றால் அவற்றை மறைக்கும் படி விளைந்த கதிரையுடைய கழனியிலும்,

ஒளிறு இலஞ்சி—விளங்கும் மடுக்களிலும்,

அடை நிவந்த முள் தாள் சுடாஅத் தாமரை—இலைக்கு மேலான முள்ளையுடைய தாள்களையுடையவாகிய ஒளியினையுடைய தாமரைப்பூவினையும்,

கள் கமழும் நறு நெய்தல—தேனாறும் நறிய நெய்தற்பூவினையும்,

வள் இதழ் அவிழ் நீலம்—பெருமையையுடைய இதழ்விரிந்த நீலப்பூவினையும்,

மெல் இலை அரி ஆம்பலொடு—மெல்லிய இலையினையும் வண்டுகளையுமுடைய ஆம்பற்பூவோடே,

அரி - மென்மையுமாம்

வண்டு இறைகொண்ட கமழ் பூம் பொய்கை—வண்டுகள் தங்குதல்கொண்ட மணநாறும் பிறபூக்களையுமுடைய பொய்கைகளிலும்,

கம்புட் சேவல் இன் துயில் இரிய வள்ளை நீக்கி வயமீன் முகந்து—கம்புட்கோழி இனியவுறக்கங்கெடும்படி வள்ளைக்கொடிகளைத் தள்ளி வலியையுடையமீன்களை முகந்துகொண்டு,

கழனியிலும் (௨௪௭) இலஞ்சியிலும் (௨௪௮) பொய்கைகளிலும் (௨௫௩) மீன்முகந்துசாற்றிய வலைஞரென்க

கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்— விலைகூறியிற்ற கொடியமுடிகளையுடைய வலையான்மீன்பிடிப்பார்,

வேழப் பழனத்து நூழிலாட்டு ஓதை (௨௫௮)— கொறுக்கச்சியையுடைய மருதநிலத்து மீனைக் கொன்றுகுவித்தலாற் பிறந்தவோசை,

கரும்பின் எந்திரம் ஓதை—கரும்பிற்கிட்ட ஆலையிடத்தோசை,

கட்பின் ஓதை—களைபறிப்பிடத்தோசை,

அள்ளல் தங்கிய பகடு உறு விழுமம் கள் ஆர் களமர் பெயர்க்கும் ஆர்ப்பே—சேற்றிலான அள்ளலிலே வலியற்றுத்தங்கிய எருதுற்றவருத்தத்தைக் கள்ளையுண்ணுங் களமர் பெயர்க்குமாரவாரம்,

ஒலிந்த பகன்றை விளைந்த கழனி வன்கை வினைஞர் அரிப் பறை—தழைத்த பகன்றையினையுடைய நெல்லுமுற்றியகழனியில் அந்நெல்லை வலியகையினாலே அறுப்பாருடைய அரிதலெழுகின்ற பறையோசை,

இன்குரல் தளி மழை பொழியுந் தண் பரங்குன்றிற் கலி கொள் சும்மை—இனியவோசையினையுடைய துளிகளையுடைய மேகந்தங்குங் குளிர்ந்த திருப்பரங்குன்றில் விழாக்கொண்டாடுமோராவாரம்,

* "வயிரியர், முழவதிரந் தன்ன முழக்கத் தேறேறு" என்றார்பிறரும்.

ஒலி கொள் ஆயம் ததைந்த கோதை தாரொடு பொலியப் புணர்ந்து உடன் ஆடும் இசையே — புதுநீர்விழவின் ஆரவாரத்தைத் தம்மிடத்தே கொண்ட மகளிர்தி

* அகநானூறு, நீத்திலக்கோவை, ௩௨௭.—"வழையமை யடுக்கத்து வலனேர்பு வயிரியர்-முழவதிரந் தன்ன முழக்கத் தேறேறு-இரவுப்பெயல் பொழிந்த நன்னெடு யாமத்-தரவின் பைந்தலை யிடறிப் பானு-ளிரவின் வந்தெம் மிடைமுலை முயங்கி"

ரள் தம்மிடத்து நெருங்கினகோதை தங்கணவாமாரபின் மாலையுடனே அழகுபெ
றக் கூடி அவர்களுடனே நீராடுமோசை,

அனைத்தும் அகல் இரு வானத்து இமிழ்ந்து இனிது இசைப்ப—அவ்வோசை
முழுவதூஉம் தன்னையொழிந்தபூதங்களை விரித்தற்குக்காரணமாகிய பெருமையையுடை
ய ஆகாயத்தேசென்று முழங்கி ஆண்டுவாழ்வார்க்கு இனிதாகவொலிப்ப,

குருகு நரல மனை மரத்தான் மீன் சீவும் பாண் சேரியொடு— குருகென்னும்பற
வைகள் கூப்பிடும்படி மனையிடத்து மரங்கடோறும் மீனைத்திருத்தும் பாணர்குடியி
ருப்பிற் பாடலாடலால் எழுந்த ஓசையோடே,

மருதம்சான்ற— ஊடலாகிய உரிப்பொருளமைந்த,

தண் பணை சுற்றி— மருதநிலஞ் சூழப்பட்டு,

ஒருசார்— ஒருபக்கம்,

ஒருசார் (௨௭௦) சேரியிலோசையோடே (௨௬௧) ஓதை (௨௫௮) ஆர்ப்பப் (௨௬௦)
பறையோசை (௨௬௨) கம்மை (௨௬௪) இசையாகிய அவ்வோசைமுழுவதும் (௨௬௬)
இசைக்கும்படி (௨௬௭) தண்பணைசுற்றப்பட்டு (௨௭௦) எனக்

சிறுதினை கொய்ய— சிறியதினையையறுக்க,

கவ்வை கறுப்ப— எள்ளிளங்காய் முற்ற,

கருங்கால் வரகின் இருங்குரல் புலர—கரியதாளினையுடைய வரகினது கரிதாகி
யகதிர் முற்ற,

ஆழ்ந்த குழும்பில் திரு மணி கிளர—ஆழ்ந்தகுழியிலே திருவினையுடையமணி
கிடந்துவிளங்க,

[எழுந்த கடற்றி னன்பொன் கொழிப்ப, பெருங்கவின் பெற்ற சிறுதலை நௌவி,
மடக்கட் பிணையொடு மறுகுவன வுகள] பெருங் கவின் பெற்ற சிறு தலை நௌவி
எழுந்த கடற்றில் நன்பொன் கொழிப்ப மடக் கட் பிணையொடு மறுகுவன உகள—பெ
ரிய அழகைப்பெற்ற சிறியதலையினையுடைய நௌவிமான் வளர்ந்தகாட்டில் மாற்றற்ற
பொன்மேலேயாம்படி மடப்பத்தையுடைத்தாகிய கண்ணினையுடைய பிணையோடே
சுழல்வனவாய்த்துள்ள,

சுடர்ப் பூங் கொன்றை தாஅய நீழல்—ஒளியினையுடையவாகிய பூக்களையுடைய
கொன்றைபரந்த நிழலிடத்தே,

பாஅயன்ன பாறை அணிந்து— பரப்பினாலொத்த பாறை அழகுபெற்று,

[நீலத் தன்ன பைம்பயிர் மிசைதொறும், வெள்ளி யன்ன வொள்வீ யுதிர்ந்து,
சுரிமுகிழ் முசுண்டையொடு முல்லை தாஅய்] நீலத்தன்ன பைம்பயிர் மிசைதொறும்
சுரிமுகிழ் முசுண்டையொடு முல்லை வெள்ளி அன்ன ஒள்வீ உதிர்ந்து தாய்—நீல
மணியையொத்த பசியபயிர்களினிடங்கடோறும் முறுக்குண்ட அரும்புகளையுடைய
முசுண்டையுடனே முல்லையினுடையவெள்ளியினிறத்தையொத்த ஒள்ளியபூக்கள்
உதிர்ந்து பரந்து,

[மணிமருண் டனைய தூறழுக் காமர், துணிநீர் மெல்லவற் றொய்யிலொடு மலர,
வல்லோன் றைஇய வெறிக்களங் கடுப்ப] வல்லோன் றைஇய வெறிக்களம் கடுப்பக்
காமர் துணி நீர் மெல்லவல் மணி மருள் நெய்தல் தொய்யிலொடு உறழ மலர—இழை
த்தல்வல்லவன் இழைத்த கூத்தினையுடைய களத்தையொப்ப விருப்பத்தையுடைய

தெளிந்த நீரையுடைத்தாகிய நெகிழ்ந்த பள்ளத்திலே நீலமணியென்றுமருளும் நெய்தல் தொய்யிற்கொடியோடே மாறுபட மலர,

முல்லை சான்ற புறவு அணிந்து ஒருசார்— இருத்தலாகிய உரிப்பொருளமைந்த காடுசூழ்ந்து ஒருபக்கம்,

ஒருசார் (உஅ௬) அணிந்து (உ௭அ) தாய்க (உஅ௧) கொய்யக் கறுப்பப் (உ௭௧) புலர்க் (உ௭உ) கிளர (உ௭௩) உகள (உ௭௬) மலரப் (உஅ௩) புறவுசூழப்பட்டு (உஅ௬) என முடிக்க.

* "பன்முறையானும்" என்பதனுற் பலவினையெச்சம் விராய் அடுக்கி அணிந்தென்னும்வினைகொண்டன

நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய குறுங்கதிர் தோரை— நறியஅகிலையும் சந்தனத்தையும்வெட்டி மேட்டுநிலத்தேவிதைத்த குறியகதிர்களையுடைய தோரைநெல்லும்,

நெடுங் கால் ஐயவி— நெடியதாளினையுடைய வெண்சிறுகடுகும்,

ஐவன வெண்ணெலொடு அரில் கொள்பு நீடி— ஐவனநெல்லென்னும் வெள்ளியநெல்லோடே பிணக்கங்கொண்டு வளரப்பட்டு,

இஞ்சி மஞ்சட் பைங்கறி பிறவும் பலவேறு தாரமொடு கல்லகத்து ஈண்டி— இஞ்சியும் மஞ்சளும் பசத்தமிளகுகொடியும் ஒழிந்த பலவாய்வேறுபட்டபண்டங்களும் கற்றரையிடத்தே குவியப்பட்டு,

தினை விளை சாரற் கிளி கடி பூசல்— தினையுமவிளையப்படுகின்ற மலைப்பக்கத்திற் படியுங் கிளியையோட்டும ஆரவாரம,

நீடி ஈண்டியென்னுஞ் செய்தெனெச்சம விளையுமெனனும் பிறவினைகொண்டன, † "அம்முக் கிளவி" என்னுஞ் சூத்திரவிதியால

மணிப் பூ அவரைக் குரூஉத் தளிர் மேயும் ஆமா கடியுங் கானவர் பூசல்—பன்மணிபோலும்பூவினையுடைய அவரையினது நிறவியதளிரைத் தின்னும் ஆமாவையோட்டுங் கானவருடையஆரவாரம,

சேணோன் அகழ்ந்த மடி வாயப் பயம்பின் வீழ் முகக் கேழல் அட்ட பூசல்— மலைமிசையுறையுங் குறவன்கல்லப்பட்ட மூடினவாயையுடைய பொய்க்குழியிலேவிழும் பகுவத்தினையுடைய ஆணபன்றியைக் கொன்றதனுலுண்டான ஆரவாரம்,

சேணோன் - இழிகுலத்தோனுகியவன் அகழ்ந்தபயம்பென்பாருமுளர்.

கருங்கால வேங்கை இருஞ்சினைப் பொங்கர் நறும பூக் கொய்யுங் கானவர் (உ௬௩) பூசல்— கரியதாளினையுடைய வேங்கையிடத்துப் பெரியகவடுகளிற் ரேன்றிய சிறியகொம்புகளிற்பூத்த நறியபூவைப்பறிக்குமகளிர புலிபுலியென்றுகூறுமாரவாரம்,

இருங் கேழ ஏறு அடு வயப புலிப பூசலொடு—கரியநிறத்தையுடைய பன்றியைக் கொல்லுகின்ற வலியினையுடைய புலியினது ஆரவாரத்தோடே,

ஏறு ‡ - ஆணேறுமாம்

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், ௩௬

† ,, ,, வினையியல், ௩௪

‡ ஆனையுமாமென்று சிலபிரதிகளிலுளளது.

அனைத்தும்—முழுவதும,

[இலங்குவெள ளருவியொடு சிலம்பகத் திரட்டக், கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பணிந், தருங்கடி மாமலை தழீஇ·]

இலஙகு வெள் அருவியொடு கருஙகால வெறபு அணிந்து—விளங்குகின்ற வெள்ளிய அருவிவீழ்கின்றவறறுலே கரிய நீரோடுங காலகளையுடைய பக்கமலைகள்சூழ்ந்து,

சிலமபகதது இரட்ட—மலையிடததே மாறிமாறியொலிப்ப,

குறிஞ்சி சான்ற— புணாச்சியாகிய உரிபபொருளமைந்த,

அருஙகடி மாமலை தழீஇ— பெறுதறகரிய சிறபபினையுடைய பெரியமலை தழுவப்பட்டு,

ஒருசார்—ஒருபக்கம,

ஒருசாா (௩0க), அருவியாற (உகூ) கருஙகாலையுடையவெறபணிதலாலே (௩00) நீடி (உஅஅ) ஈணடி (உகூ0) விளையுஞ சாரலிற கிளிகடிபூசல் (உகூக) கானவர்பூசல் (உகூ௫) அட்டபூசல் (உகூ௬) கொய்யுமபூசலாகிய (உகூஎ) அனைததுப்பூசலும புலிப்பூசலோடே (உகூஅ) சிலம்பகத்திரட்டக (உகூகூ) குறிஞசிசான்ற (௩00) அருங்கடியினையுடையமலைதழுவபபட்டு (௩0க) எனமுடிகக

[இருவெதிாப் பைந்தூறு கூரெரி நைபப·] இரு வெதிாக் கூா எரி பைந்தூறு நைப்ப— பெரியமூஙகிலிறபிறந்த மிககநெருபபுப பசியதூறுகளைச் சுடுகையிலுலே,

* நிழத்த யானை மேயபுலம படர—ஒய்ந்தயானைகள் தமக்கு மேயலாமிடஙகளிலே போக,

கலிதத இயவா இயம தொட்டன்ன — மகிழ்ந்த வாசசியககாரா தம்வாச்சியத்தை வாசித்தாலொதத,

கண விடுபு உடையூத் தடடை கவின அழிந்து— மூஙகிலின்கண திறக்கபபட்டு உடைந்து இயநதொட்டனன (௩0௪) ஓசையையுடைய தடடைஅழகழிகையிலுலே,

தட்டபபடுதலிற றடடையெனறுா

நெருபபுநைக்கையிலுலே(௩0௨)பயிரினறித தட்டைகவினழிகையிலுலே(௩0௬) ஒய்ந்தயானை மேயபுலம படரும்படி (௩0௩) அருவியான்ற மலை (௩0௬) யென்க

கவினழிய வெனத திரிதது முடிததலுமாம

அருவி ஆனற அணி இல் மா மலை — அருவிகளில்லையான அழகில்லாத பெரியமலையிடததது விடரகம் (௩0அ)

வை கண்டனன புல முளி அம் காட்டு—வைககோலைககணடாறபோனற ஊகம்புல்லுலர்ந்த அழகியகாட்டிடத்தில,

கமம் சூழகோடை விடரகம் முகந்து—நிறைவினையுடைய சூறுவளியை முழைஞ்சிடஙகண முகநதுகொள்கையிலுலே,

கால் உறு கடலின் ஒலிக்கும் சுமமை— காறறுமிகுந்த கடல்போல் ஒலிக்கும் ஆரவாரத்தையுடைய வேனிற்குன்றம் (௩க௩)

இலை வேய குரமபை உழை அதட் பள்ளி உவலைக கணணி வன்சொல் இளைஞா—குழையாலேவேயநத குடிலிலிருக்கும் மான்றோலாகியபடுக்கையினையும், தழைவிரவினகணணியினையும், கடியசொலலினையுமுடைய இளையோா,

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல், ௩௪:—“ ஒய்த லாய்த னிழத்தல் சாஅ, யாவயி னன்கு முள்ளத னுணுககம.”

சிலை உடைக் கையர் கவலை காப்ப— வில்லையுடைத்தாகிய கையையுடையராய்ப் பலவழிகளில் ஆறலைகள்வரைக் காக்கும்படி சுரஞ்சேர்ந்து (கூகச) என்க.

நிழல் உரு இழந்த வேனிற் குன்றத்து—நிழல தன்வடிவையிழத்தற்குக் காரணமான முதுவேனிற்காலத்தையுடைய மலையிடத்துச் சுரம் (கூகச).

பாலை சான்ற—பிரிவாகிய உரிப்பொருளமைந்த,

சுரம் சோந்து—அருநிலஞ் சேரப்பட்டு,

ஒருசார்—ஒருபக்கம்,

ஒருசார் (கூகச), மலை (கூ0சு) விடரகம் கோடையைமுகக்கையிஞலே (கூ0அ) கடலிஞெலிக்குஞ் சும்மையையுடைய (கூ0க) வேனிற்குன்றத்துப (கூகரு) பாலைசான்ற சுரஞ்சேரப்பட்டு (கூகச) என்க

பாலைகரு நடுவணதென்னும் பெயாகூறியவதனல், அது நுதமபொருளானும் *"முல்லையுங குறிஞ்சியு முறைமையிற றிரிநது - நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப்-பாலை யென்பதோா படிவங கொள்ளும்." எனமுதறபொருள்பற்றிப் பாலைநிகழ்தலானும் பாலையையும வேறோாநிலமாககிஞா

முழுஙகு கடல தந்த விளஙகு கதிா முததம்—ஒலிககுஙகடலதந்த விளங்குகின்ற ஒளியினையுடையமுதது,

அரம் போழ்ந்து அறுத்த கண நோ இலஙகு வளை—வாளரங கீறியறுத்த இடமநேரிதாகிய விளஙகுமவளை,

நோ்ந்தவளையுமாம

பரதா் தந்த பல் வேறு கூலம்—செட்டிகள கொணடுவருதலான்மிகக பலவாய வேறுபட்ட பண்டஙகள,

தந்தெதன்றும் பாடம்

[இருங்கழிச் செறுவிற றீம்புளி வெள்ளுபபு]

இருங்கழிச் செறுவின் வெள்ளுபபு — சரிய கழியிடததுப பாததியிலவிளைந்த வெள்ளியவுப்பு,

தீம புளி—கருப்புககட்டிகூட்டிப பொரிததபுளி,

பரந்து ஓங்கு வரைப்பில்—மணறகுன்று பரந்துயருங் கானலிடத்தே,

வன்கைத் திமிலா கொழுமீன குறைஇய துடிககண துணியல் —வலியகையினையுடைய திமிலா கொழுவிய மீன்களையறுதத துடியினகணபோலுருணட துணிகள்,

என்றது கருவாடுகளை.

தீமபுளியினையும, உப்பினையும், கருவாட்டினையுமேற்றின நாவா (கூஉக) யென்க

விழுமிய நாவாய்—சிறியமரககலம,

பெருநீா ஓச்சுநா—மரககலமீகாமா,

நனந்தலைத் தேஎதது—அகன்ற இடத்தையுடைய யவனமுதலிய தேயததினின்றும்,

நன்கலன் உய்ம்மார்—இவவிடததுண்டாகிய பேரணிகலஙகளை ஆண்டுசெலுத்துதற்கு,

---

* சிலப்பதிகாரம், மதுரைக்காண்டம், காடுகாண்காதை

புணர்ந்து—பலருங்கூடி,

உடன் கொணர்ந்த புரவியொடு—சேரக்கொணடுவந்த குதிரைகளோடே,

அனைத்தும—முழுவதும்,

வைகறொறும் வழி வழிச சிறபப—நாடோறும் முறைமையே முறைமையே மிகுகையினலே வளம்பல பயின்று (௩௨௫) என்க

நெய்தல சானற—இரஙகலாகிய உரிபபொருளமைநத,

வளம் பல பயின்று—பலசெல்வமும நெருஙகபபட்டு,

ஒருசார, பெருநீரோசசுநர் (௩௨௧) கலனுய்மமார தேளததுக (௩௨௨) கொணா நத புரவியோடே (௩௨௩) முததம (௩௧௫) வளை (௩௧௬) கூலமானவை (௩௧௭) யனைத் தும் (௩௨௩) வழிவழிசசிறபப (௩௨௪) வளம்பல பயிலபபட்டு (௩௨௫) என்க.

நெய்தல்சான்ற (௩௨௫) பரநதோஙகுவரைப்பின்கணணே (௩௧௧) வளம்பலபயி லபபட்டெனமுடிகக.

ஆங்கு ஐம்பால் திணையுங கவினி—அமமணடலத்தின்கணணே ஐநதுகூற்றி னையுடைய நிலங்களும் அழகுபெறறு,

அமை வர—பொருந்துதலதோனற,

[முழவிமிழு மகலாஙகண, விழவுநினற வியனமறுகிற ]

முழவு இமிழும் விழவு நின்ற வியன மறுகின—முழவுமுழஙகும் திருநாள்நிலை பெறற அகறசியையுடைய தெருவினையும,

துணஙகை—துணஙகைககூததினையும,

அம தழூஉவின்—அழகினையுடைய குரவைககூததினையும,

மணங் கமழ சேரி—மணநாறுகினற பரததையாசேரியினையும்,

இன கலி யாணர—இனிய செருககினையுடைததாகிய புதுவருவாயினையுமு டைய,

அகல ஆஙகண—அகன்ற ஊரிடததே,

[குழூஉப்பல பயின்று.] பல குழூஉப் பயினறு—பலகுடித்திரள் நெருஙகி,

ஆஙகு—அந்நாட்டில,

பாடல் சான்ற நன்னாட்டு நடுவண— புலவாரற பாடுதல் முறறுபபெறற நல்லநா ட்டிறகு நடுவணதாய,

ஒருசார தணபணை சுற்றபபட்டு (௨௭0) ஒருசார மலைதழுவபபட்டு (௩0௧) ஒருசா ர காடுதழுவப்பட்டு (௨௮௫) ஒருசார சுரஞசேரபபட்டு (௩௧௪) ஒருசார நெய்தல்சான ற (௩௨௫) வரைபபின்கணணே (௩௧௧) வளம்பலபயிலபபட்டு ஆஙகு (௩௨௫) ஐம்பாற் றிணையுஙகவினி (௩௨௬) அந்நாட்டிடதது (௩௩0) அகலாஙகட் (௩௨௭) குழூஉபபலபயி ன்று (௩௩0) அமைவரப (௩௨௬) பாடல்சானற நன்னாட்டு நடுவணதாய (௩௩௧) என்க.

[கலைதாய வுயாசிமயதது, மயிலகவு மலிபொஙகா, மந்தியாட மாவிசும்புகநது, முழஙகுகால பொருத மரமபயில காவி, னியஙகுபுனல கொழிதத வெணடலைக் குவவு மணற், கான்பொழில்.]

'கலை தாய மலி பொஙகா மந்தி ஆட மரம பயில் கா—முசுககலைகள்தாவினமிக்க கொம்புகளிலே அவறறின்மந்திகள விளையாடும்படி மரமநெருஙகினசோலை,

மா விசும்பு * உகந்து—பெரிய ஆகாயத்தேசெல்ல உயர்கையினாலே,

முழங்கு கால் பொருத மரம்—முழங்குகின்ற பெருங்காற்றடித்த மரம்,

மயில் அகவும் காவின்—மயில் ஆரவாரிக்குங் காவினோடே,

உயர் சிமயத்து இயங்கு புனல் கொழித்த வெண்டலைக் குவவு மணற் கான் பொழில்—உயர்ந்த மலையுச்சியிடத்துநின்றும் வீழ்ந்தோடுகின்ற நீர்கொழித்து ஏறட்ட வெள்ளிய தலையினையுடைத்தாகிய திரட்சியையுடைய மணற்குன்றிடத்து மணத்தையுடைய பொழில்,

தழீஇய அடை கரை தோறும்—காவோடே பொழில்சூழ்ந்த நீரடையுங் கரைகடோறும்,

[தாதுசூழ் கோங்கின் பூமலா தாஅய்க, கோதையின் னொழுகும் விரிநீர் நலவரலவிரறல் வையைத் துறைதுறை தோறும், பல்வேறு பூத்திரட் டண்டலை சுற்றி, யழுந்துபட் டிருந்த பெரும்பா ணிருக்கையும்:]

தாது சூழ் கோங்கின் பூ மலா தாஅய்க் கோதையின் ஒழுகும் விரிநீர் நல வரல வையை— தாதுக்கள்சூழ்ந்த கோங்கினுடையபூவும் ஏனைமலர்களும்பரந்து மாலையொழுகின்றாற்போல ஓடும் பெருநீர் நன்றாகிவருதலையுடைய வையையிடத்து,

அவிர் அறல் துறை துறை தோறும் பல் வேறு பூத் திரள் தண்டலை சுற்றி அழுந்து பட்டு இருந்த பெரும்பாண் இருக்கையும்—விளங்குகின்ற அறலையுடைய துறைகடோறும் துறைகடோறும் பலவாய்வேறுபட்ட பூத்திரளையுடைய பூந்தோட்டங்கள் சூழப்பட்டு நெடுங்காலமடிப்பட்டிருந்த பெரிய பாணசாதியின் குடியிருப்பினையும்,

நிலனும் வளனும் கெண்டு அமைகல்லா விளங்கு பெருந்திருவின் மானவிறல்வேள் அழும்பில் அன்ன நாடு இழந்தனரும்—நிலத்தையும் அதிற்பயிர்களையும் பார்த்தபார்வை மாறுதலமையாத விளங்கும் பெரியசெல்வத்தினையுடைய மானவிறல்வேளென்னுங் குறுநிலமன்னனுடைய அழும்பிலென்னும் ஊரையொத்த நாடுகளையிழந்தவர்களும்,

கொழும் பல் பதிய குடி இழந்தனரும்—செல்வத்தினையுடைய பலவூர்களிடத்தனவாகிய குடிகளையிழந்தவர்களும்,

தொன்று கறுத்து உறையும் துப்புத் தர வந்த—பழையதாய செற்றங்கொண்டு தங்கும் வலி தம்மைக்கொண்டுவருகையினாலே எதிராய்வந்த,

அண்ணல் யானை அடு போர் வேந்தர்—தலைமையினையுடைய யானையினையும் பகைவரைக்கொல்லும் போர்த்தொழிலையுமுடைய வேந்தரை,

பன்மாறு ஓட்டி (கூ௨0)—பலவாய் நெஞ்சிற்கிடந்த மாறுபாடுகளை முதறப்போக்கிப் பின்னர்,

[இன்னிசை முரச மிடைப்புலத் தொழியப், பன்மா றோட்டிப் பெயர்புறம் பெற்று:]

இன்னிசை முரசம் இடைப்புலத்து ஒழியப் பெயர் புறம் பெற்று—இனிய ஓசையினையுடைய முரசம் உழிஞைப்போர்க்கிடையே கிடக்கும்படி மீளுகையினாலுண்டான முதுகைப்பெற்று,

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல், கூ:— "உகப்பே யுயர்தலுவப்பே யுவகை"

என்றது: உழிஞைப்போர்செய்யவந்த அரசர் குடுமிகொண்ட மண்ணுமங்கல மெய்தாது இடையேமீளும்படி காத்தகிடங்கு (ஙுக) என்றவாறு.

மண்ணுற ஆழ்ந்த மணி நீர்க் கிடங்கின்—மண்ணுள்ளவளவுமாழ்ந்த நீலமணி போலும் நீரையுடைய கிடங்கினையும்,

விண் உற ஓங்கிய பல படைப் புரிசை—தேவருலகிலே செல்லும்படியுயர்ந்த பல கற்படைகளையுடைய மதிலினையும்,

தொல் வலி நிலைஇய வாயில (ஙுசு)—பழைதாகிய வலி நிலைபெற்ற வாயில,

அணங்கு உடை நெடு நிலை—தெய்வத்தையுடைத்தாகிய நெடிய நிலையினையும்,

நெய் படக் கரிந்த திண் போர்க் கதவின்—நெய் பலகாலுமிடுதலாற் கருகின திணணிய செறிவினையுடைய கதவினையும்,

வாயிலில் தெய்வமுறையுமாகலின், அதற்கு நெய்யுமணியாம், * "ஐயவி யப்பிய நெய்யணி நெடுநிலை" என்பதனுணர்க

மழை ஆடும் மலையின் நிவந்த மாடமொடு—மேகமுலாவுமலைபோலே ஓங்கின மாடத்தோடே,

கோபுரமன்றி வாசலை மாடமாகவுஞ் சமைத்தலின், மாடமென்றார்

வையை அன்ன வழக்கு உடை வாயில—வையையாறு இடைவிடாது ஓடுமாறு போன்ற மாந்தரும் மாவும் இடையறுமல வழங்குதலையுடைய வாயில,

மாடத்தோடே (ஙுரு) நிலையினையும் (ஙுரு) கதவினையும் (ஙுச) வழக்கினையுமு டைய வாயில் (ஙுசு).

பெரும்பாணிருக்கையினையும (ஙுசஉ), கிடங்கினையும் (ஙுக) புரிசையினையும் (ஙுஉ) வாயிலினையு (ஙுசு) முடைய மதுரை (சுககு) யென்க.

வகை பெற எழுந்து வானம் மூழ்கிச் சில்காற்று இசைக்கும் பல புழை நல் இல்—கூறுபாடாகியபெயர்களைத் தாமபெறும்படியுயர்ந்து தேவருலகிலேசென்று தென் றற்காற்று ஒலிக்கும் பலசாளரங்களையுடைய நன்றாகிய அகங்களையும்,

மண்டபம் கூடம் தாய்க்கட்டு அடுக்களையென்றாற்போலும் பெயர்களைப்பெறுத லின், வகைபெறவெழுந்தென்றார்

யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்—யாறுகிடந்தாற்போன்ற அகன்ற நெ டிய தெருக்களிலே,

இருகரையும் யாறும்போன்றன, இரண்டுபக்கத்தினமனைகளும் தெருவுகளும.

பல் வேறு குழாஅத்து இசை எழுந்து ஒலிப்ப—நாளங்காடியிற் பண்டங்களைக் கொள்ளும பலசாதியாகிய பாடைவேறுபாட்டையுடைய மாக்கள்திரளிடத்து ஓ சைமிக்கொலிக்கும்படி இருந்தார (சு0சு) வெனக

மா கால் எடுத்த முந்நீர் போல முழங்கு இசை நன் பணை அறைவனர் நுவல—பெருமையையுடைய காற்றெடுத்த கடலொலிபோல முழங்கும் ஓசையையுடைய நன்றாகிய முரசைச் சாற்றினராய விழவினை நாட்டிலுள்ளார்க்குச் சொல்லுகையினா லே நாடார்த்தன்றே (சுஉஅ) யெனக

அறைவன நுவலவென்றுபாடமாயின், அறையப்படுவனவாய் விழாவைச் சொல்லவென்க.

---

* நெடுநல்வாடை.

கயம் குடைந்தன்ன இயம தொட்டு இமிழ் இசை மகிழ்ந்தோர் ஆடும் கலி கொள் சும்மை—கயத்தைக கையாற்குடைந்துவிளையாடுந் தன்மையவாக வாச்சியஙகளைச் சாற்றலான் முழங்கினஓசையைககேட்டு மகிழ்ந்தவாகளாடுஞ் செருக்கினைக்கொண்ட ஆரவாரத்தினையுமுடைய தெரு (கூடுக) வெனக

ஓவுக கணடனன விருபெரு நியமதது—சித்திரததைக கணடாறபோன்ற கட்கினிமையையுடைய இரணடாகிய பெரிய அஙகாடித்தெருவில்,

நாளஙகாடி, அல்லஙகாடியாகிய இரணடுகூறறையுடைதடுதன்றார்

சாறு அயாந்து எடுத்த உருவப் பல் கொடி—கோயில்களுககு விழாக்களை நடததிக் கட்டின அழகினையுடைய பலகொடிகளுமம,

இதனுல் அறஙகூறினூா.

வேறு பல் பெயர ஆா எயில கொளக் கொள நாடோறெடுத்த நலம் பெறு புனை கொடி—வேறுபட்ட பலபெயாகளையுடையவாகிய அழித்தறகரிய அரண்களைத் தண டத்தலைவா அரசனேவலாறசென்று கைககொளளக் கைககொள்ள அவாகள் அவ் வெறறிககு நாடோறுமெடுத்த நன்மையைபபெற்ற சயககொடியும்,

இதனுற புறததுழிஞைபபோாகூறினூா.

நீா ஒலித்தன்ன நிலவு வேல தானையொடு புலவுப் படக கொனறு மிடை தோல ஓட்டிப் புகழ் செயது எடுத்த விறல சால நனகொடி—கடலொலிததாறபோன்ற நிலைபெறுதலையுடைய வேறபடையோடே சென்று பகைவரைப புலானுறறமுணடாககொன்று பின்னர் அணியாய்நின்ற யானைததிரளையுங்கெடுத்துத தமககுப் புகழையுணடாககி எடுதத வெறறியமைநத நன்றாகியகொடியும்,

இது தும்பைபபோாகூறிறறு

கள்ளின் களி நவில் கொடியொடு—களளினது களிபபுமிகுதியைச சாற்றுகின்ற கொடியும்,

நன் பல பல் வேறு குழூஉக் கொடி—நன்றாகிய பலவறறினுலே பலவாய் வேறுபட்ட திரட்சியையுடைய கொடிகளும்,

நன்பலவென்றார், கலவி கொடை தவம முதலியவறறை.

பதாகை நிலைஇப் பெரு வரை மருஙகின் அருவியின் நுடஙக—பெருங்கொடிகளும் நிலைபெற்றுப் பெரிய மலையிடதது அருவியசையுமாறுபோலவசைய,

இககொடிகள் அருவியினுடஙகும்படி வகைபெறவெழுந்து (கூரிள) எனமுன்னேகூட்டுக

பனை மீன் வழஙகும் வளை மேய பரபபின்—பனைமீனென்னுஞ் சாதியுலாவுஞ் சஙகுமேய்கின்ற கடலிடததே,

வீங்குமம நோன் கயிறு அரீஇ இதை புடையூக கூம்பு முதல முருஙக எற்றி—இறுகும் பிணிப்பினையுடைய வலியினையுடைய பாய்கட்டினகயிறறையறுத்துப் பாயையும்பீறிப பாய்மரம அடியிலேமுறியும்படி அடிதது,

[காய்நதுடன, கடுஙகாற றெடுபப.] கடுங்காற்று உடன காயந்து எடுப்ப—கடிய காற்று காற்றிசையினுஞ் சேரக கோபிததெடுக்கையினுலே,

கல் பொருது உரைஇ—நங்குரக்கல் கயிறறுடனேநின்று பொருதுஉலாவி,

நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல—நெடியசுழியிலேயகப்பட்டுச் சுழலாநின்ற மரக்கலத்தையொக்க,

இருதலைப் பணிலம் ஆர்ப்ப—முன்னும்பின்னுஞ் சங்கொலிப்ப,

யானைமீண்டாற் பின்னின்றவன் ஊதுதற்குப் பின்னுஞ் சங்குசெல்லும்

சினம் சிறந்து கோலோர் கொன்று மேலோர் வீசி—சினமிகுப் பரிக்கோற் காரரைக்கொன்று பாகரைவீசிப் போகட்டு,

மென் பிணி வன்றொடர் பேணாது காழ் சாய்த்து—மெல்லியபிணிப்பினையுடைய வலிய நீர்வாரியென்று காலிற்கட்டுஞ் சங்கிலியை நமக்குக்காவலென்று பேணாதே அதுகட்டின தறியைமுறித்து,

கந்து நீத்து உழிதரு கடாஅ யானையும்—கம்பத்தைக் கைவிட்டுச்சுழலும் கடாத்தையுடைய யானையும்,

சிறந்து (௬அ௦) கொன்று வீசிச் (௬அக) சாய்த்து (௬அஉ) நீத்து (௬அ௩) ஆர்ப்ப (௬அ௦) உழிதருங்கடாமெனக் கடாத்தின்றொழிலாகவுரைக்க

காற்றிறகுக் கடாம் உவமிக்கப்படும்பொருள்

அம் கண் மால் விசும்பு புதைய வளி போழ்ந்து—அழகியவிடங்களைத் தன்னிடத்தேயுடைய பெரிய ஆகாயமறையக் காற்றைப்பிளந்து,

தேவருலகமுதலியவற்றைத் தன்னிடத்தேயுடைமையின், அங்கண்மால்விசும் பென்றார்.

ஒண்கதிர் ஞாயிற்று ஊறு அளவாத் திரிதருஞ் செங்கால் அன்னத்துச் சேவல் அன்ன—ஒள்ளிய கிரணங்களையுடைய ஞாயிற்றைத் தாஞ்சோதலை நெஞ்சாலே கருதிக்கொண்டுபறக்குஞ் சிவந்தகாலையுடைய அன்னத்தினது சேவலையொத்த,

குரூஉ மயிர்ப் புரவி உராலிற் பரி நிமிர்ந்து காலெனக் கடுக்கும் கவின் பெறு தேரும்—நிறவிய பலமயிர்களையுடைய குதிரைகளோடுதலிற் செலவுமிக்குக் காற்றெனக் கடுகவோடும் அழகினைப்பெறுகின்றதேரும்,

கொண்ட கோலன் கொள்கை நவிறலின்—கையிலேயெடுத்த மத்திகையை யுடைய வாசிவாரியன் ஐந்துகதியையும் பதினெட்டுச்சாரியையும் பயிற்றுகையினாலே,

அடி படு மண்டிலத்து ஆதி போகிய—குரங்களழுந்தின வட்டமானவிடத்திலும் ஆதியென்னுங் கதியிலும் ஓடின,

கொடி படு சுவல் விடு மயிர்ப் புரவியும்—ஒழுங்குபடுங் கேசரியையுடையனவாகிய விட்டவாசங்களையுடைய குதிரைகளும்,

[வேழத் தன்ன வெருவரு செலவிற், கள்ளார் களமர் இருஞ்செரு மயக்கமும்·]
வெரு வரு வேழத்து அன்ன செலவின் கள் ஆர் களமர் இருஞ்செரு மயக்கமும்—அச்சந்தோன்றுகின்ற யானையையொத்த போக்கினையுடைய கள்ளினை யுண்ணும் வீரர் தம்மிற் பெரியபோரைச்செய்யும் கலக்கமும்,

களத்தேசேறலிற் களமரென்றார்

அரியவும் பெரியவும்—ஈண்டுப் பெறுதற்கரியனவுமாய் அவைதாஞ் சிறிதின்றி மிகவுள்ளனவுமாய்ப் பலவாய் வேறுபட்ட பண்ணியம் (௬௦௫) என மேலேகூட்டுக

வருவன பெயர்தலின்—யானையுந் (௬அ௩) தேரும் (௬அஅ) புரவியும் (௬௯க) களமர் செருமயக்கமும் (௬௯௩) பலகாலும் வருவனவாய் மீளுகையினாலே.

[தீம்புழல் வல்சிக் கழற்கால் மழவர், பூந்தலை முழவின் நோன்றலை கடுப்ப:] தீம்புழல் வல்சிப் பூந்தலைக் கழற்கால் மழவர் முழவின் நோன் தலை கடுப்ப—இனிய பண்ணியாரங்களாகிய உணவினையும் பொற்பூக்களையுடைய தலையினையும் வீரக்கழலணிந்த காலினையுமுடைய மழவர்முன் கொட்டும் வீரமத்தளத்தினது வலியகண்ணை யொக்க உருண்ட,

தீம்புழல் - இருப்பைப்பூவுமாம் பூந்தலை - விகாரம் மழவர் - சிலவீரர். * "உருவக் குதிரை மழவ ரோட்டி" என்றார் பிறரும் கடுப்பவென்னுஞ் செயவெனெச்சவுவமவுருபிறகு உருண்டவென ஒருசொல்வருவிக்க

பிடகைப் பெய்த கமழ் நறும் பூவினர்—பூந்தட்டிலேயிட்டுவைத்த மிகவும்நாறுகின்ற நறிய பூவினையுடையாரும்,

பல் வகை விரித்த எதிர் பூங்கோதையர்—பலவகையாக விரித்துவைத்த ஒன்றற்கொன்றுமாறுபட்ட பூமாலைகளையுடையாரும்,

பலர் தொகுபு இடித்த தாது உகு சுண்ணத்தர்—இடிக்கவல்லார் பலருந்திரண்டு இடித்த பூந்தாதுக்கள்போலப் பரக்குஞ் சுண்ணத்தையுடையாரும்,

தாது - நீறுமாம் நவமணிகளும், பொன்னும், சந்தனமும், கருப்பூரமுதலியனவும் புழுகிலும் பனிநீரிலும் நனையவைத்திடித்தலின், இடிக்கவல்லவர் பலரும்வேண்டிற்று

தகை செய் தீஞ்சேற்று இன்னீர் பசுங்காய் நீடு கொடி இலையினர்— உடம்பிற்கு அழகைக்கொடுக்கும் இனிய கருங்காலிசிவிக்காய்சினை களிக்கலந்த இனிய நீரினையுடைய பசியபாக்குடனே வளர்ந்தகொடியினற் வெற்றிலையினையுடையாரும்,

† "அங்கருங் காலி சிவி யூறவைத் தமைக்கப் பட்ட, செங்களி விராய காயும்" என்றார். இளங்களியன்னம் நீராயிருத்தலின் இன்னீரென்றார்.

கோடு சுடு நூற்றினர்—சங்குசுடுதலாலுண்டான சுண்ணும்பையுடையாரும்,

[இருதலை வந்த பகைமுனை கடுப்ப, வினனுயி ரஞ்சி யினனு வெய்துயிர்த்த, தேங்குவன ரிருந்தவை நீங்கிய பின்றை]

---

* அகநானூறு, களிற்றியானைநிரை, ௪ — "வண்டுபட்த துதைந்த கண்ணியொண்கழ, லுருவக் குதிரை மழவ ரோட்டிய, முருக நற்போர் நெடுவே ளாவி, யறுகோட் டியானை பொதினி யாங்கட், சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய, கற்போற் பிரியல மென்ற சொற்றாம், மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த, வேய்மருள் பணைத்தோ ணெகிழச் சேய்நாட்டுப், பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக, வழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலி, னிழறேய்ந் துலறிய மரத்த வறைகாய், பறுநீர்ப் பைஞ்சுனை யாமறப் புலர்தலி, னுகுநெற் பொரியும் வெம்மை யாவரும், வழங்குந ரின்மையின் வௌவுநர் மடியச், சுரம்புல லென்ற வாற்ற வலங்குசினை, நாரின் முருங்கை நவிரல் வான்பூச், சூரலங் கடுவளி யெடுப்ப வாருற், றுடைதிரைப் பிதிர்வற் பொங்கிமுன், கடல்போற் றோன்றல காடிறந் தோரே" எ-து பிரிவிடை ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச்சொல்லியது, மாமூலனார்.

† சீவகசிந்தாமணி, இலக்கணையார்இலம்பகம், கக:—"அங்கருங் காலிசிவி யூறவைத் தமைக்கப் பட்ட - செங்களி விராய காயுஞ் செம்பழுக் காயுந் தீந்தேனெங்கணுங் குளிர்த்த வின்னீ ரிளம்பசுங் காயு மூன்றும் - தங்களி செய்யக் கூட்டித் தையலார் கைசெய் தாரே"

இருதலை வந்த பகை முனை கடப்ப இன்னுயிர் அஞ்சி ஏங்குவனர் இருந்து— இரண்டுபக்கத்தானும் படைவந்த பகைப்புலத்தையொக்கத் தம்முடைய இனியவுயி ருக்கஞ்சி ஏங்குவாராயிருந்து,

அவை நீங்கிய பின்றை இன்று வெய துயிர்த்து—அந்நாறபடையும் போனபின் னா அவற்றானெய்திய பொலலாவெப்பததைபபோக்கி,

எனவே அச்சததால நெஞ்சிறபிறநத வருத்தத்தைப்போக்கியென்றா.

பல வேறு பணணியம் தழீஇத திரி விலைஞா—பலவாய்வேறுபட்ட பண்டங்க ளைத் தம்மிடததேசோததுககொணடு திரிகின்ற விற்பாரும்,

கொள்ளககொளளக குறையாமல தரததரமிகாமல (சஉசு) அரியவும் பெரியவு மாயப (சுகூச) பலவூய வேறுபட்ட பணணியமெனககூட்டுக.

மலை புரை மாடத்துக கொழு நிழல இருததர—மலையையொககும் மாடங்களிட த்துக குளிர்ந்தநிழலிலே இருததலைசசெய்ய,

பூவினரும (சுகூஎ) கோதையரும் (சுகூஅ) சுணணத்தினரும் (சுகூகூ) இலையின ரும நூற்றினரும (சுOக) பணணியந்தழீஇததிரிவிலைஞரும் (சுOடு) யானையும் (சுஅசு) தேரும (சுஅஅ) புரவியும (சுகூக) களமாமயககமும் (சுகூசு) வருவனபெயர்தலிற (சுகூச) பகைமுனைகடபப (சுOஉ) அஞ்சி (சுOசு) ஏஙகுவனரிருந்து அவைநீங்கியபின் றை (சுOச) இனறுவெய்துயிாதது (சுOசு) மாடநிழலிலே (சுOசு) இசையெழுந்தொ லிபப (சுசுO) இருததர (சுOசு) வெனககூட்டுக

இருங கடல வான் கோடு புரைய—கரியகடலில் வெள்ளிய சங்கையொக்க,

[வாருறறுப, பெருமபின னிட்ட வானரைக கூநதலா, நன்னர் நலத்தா தொன் முதுபெணடிா·]

வாருறறுப பின்னிட்ட வான் பெரு நரைக கூநதலர் தொன் முது பெண்டிர்— கோதிப பினனேமுடிததுப்போகட்ட வெள்ளிய பெரிய நரைமயிரினையுடையராகிய பழமைமூத்த பெணடிா,

நன்னா நலததா—நன்றாகிய வனப்பினையுடையராய்,

செந்நீர பசுமபொன் புனைந்த பாவை செல்சுடர்ப் பசுவெயில் தோன்றியன்ன செய்யர்—சிவந்தநீர்மையினையுடைய கிளிசசிறைபென்னும் பொன்னாறசெய்த பா வை வீழ்கின்றகிரணஙகளிடத்துப் பசியவெயிலிடத்தே தோன்றினாற்போன்ற சிவந்த நிறத்தினையுடையராய்,

[செயிர்த்த நோககினா மடக்கண:] மடககண் செயிர்த்த நோக்கினா—மடப்பத் தினையுடையகணகள் ஆடவர்க்குவருத்ததைசசெய்த பார்வையினையுடையராய்,

ஐஇய கலுழும் மாமையா—வியபபினையுடையவாய் நோககினார்கலங்குதற்குக் காரணமான மாமைநிறததினையுடையராய்,

கலுழதல - ஒழுகுதலுமாம்

[வையெயிறறு, வாாநத வாயா | வாாநத வை எயிறறு வாயா—நேரிதாகிய கூரிய எயிற்றினையுடைய வாயினையுடையராய்,

[வணஙகிறைப பணைததோட், சோாநதுகு வன்ன வயககுறு வநதிகைத, தொய் யில் பொறித்த சுணஙகெதி ாிளமுலை.]

வணங்கு இறைப் பணைத் தோள வயக்குறு வந்திகை—வளைந்த சந்தினையுடைய மூங்கில்போலும்தோளினையும் விளக்கமுற்றிய கைவந்தியினையும்,

தொய்யில் பொறித்த சோர்ந்து உகுவன்ன சுணங்கு எதிா இள முலை—தொய்யிலால் வல்லியாகஎழுதின நெகிழ்ந்துசிந்துமாறுபோன்ற சுணஙகுதோற்றிய இளைய முலையினையும்,

தொய்யில் - எழுதுஙகுழமபு

மை உசகன்ன மொய் இருங கூந்தல—மையொழுகினுறபோன்ற செறிந்த கரிய மயிரினையுமுடைய,

மயில் இயலோரும் மடமொழியோரும— மயிலின்றன்மையையுடையோரும் மடப்பத்தையுடைய வார்த்தையினையுடையோரும்,

கைஇ மெல்லிதின் ஒதுஙகிக கையெறிந்து—தம்மைககோலஞ்செய்து மெத தெனநடந்து கையைததடடி,

கல்லா மாந்தரொடு நகுவனா திளைப்ப—காமநுகாசசியினையன்றி வேறொன்றையுங்கல்லாத இளையோருடனே மகிழ்ந்தனராய்ப புணரும்படி,

[புடையமை பொலிந்த வகையமை செப்பிற]

புடை அமை செபபில்— புடைபடுதலமைந்த செப்பிடததில,

பொலிந்த வகை அமை செபபில—பொலிவுபெறற கூறுபாடமைந்த செபபிடத்திற் பண்ணியம் (௬௨௨) என்க,

காமா உருவின் தாம் வேணடும் பணணியம—விருபபமருவிய வடிவினையுடைய நுகாவாாதாமவிரும்பும் நுகாபொருளகளை,

கமழ் நறும் பூவொடு மனை மனை மறுக—மிகவநாறும் நறியபூவுடனேயேந்தி மனைகடோறுமனைகடோறும் உலாவிவிற்க,

நலததராய்ச (௬௦௯) செய்யராய நோக்கினராய் (௬௧௨) மாமையராய் (௬௧௩) வாயராய்த் தோளினையும்(௬௧௪) வந்திகையினையும (௬௧௫) முலையினையும்(௬௧௬) கூந்தலினையுமுடைய (௬௧௭) மயிலியலோரும் மடமொழியோரும (௬௧௮) கைஇ ஒதுங்கி எறிந்து (௬௧௯) மாந்தரொடு திளைசகும்படி (௬௨௦) தொன்முதுபெணடிா (௬௦௯) பணணியத்தைப (௬௨௨) பூவோடேஏந்தி மனைமனைமறுக (௬௨௩) வெனககூட்டுக.

மழை கொளக் குறையாது புனல புக மிகாது கரை பொருது இரஙகும் முந்நீர் போல—மே . ் முகக்கக் குறைவுபடாமல யாறுகளபாய்தலின மிகுதலைச்செய்யாமற கரையைப் பொருதுஒலிக்குங கடலபோல,

கொளக் கொளக குறையாது தரத தர மிகாது—பலரும்வநது கொளளக்கொள்ளக குறையாமற பலரும் மேனமேலுங கொணடுவரக கொணடுவர மிகாமல்,

[கழுநீா கொணட வெழுநா ளந்தி, யாடுதுவனறு விழுவி னாடார்த தன்றே]

கழுநீா கொணட அந்தி—தீயனையைக கழுவுதறகுக்காரணமான தீாத்தநீரைத தன்னிடத்தேகொணட அநதிககாலம,

ஆடு துவனறு விழவின எழுநாள அநதி—வேறோரிடததிலலாத வெறறிநெருஙகுத் திருநாளினைத் தன்னி் த தேயடைய ஏழாநாளந்தியில,

கால்கொள்ளததொடஙகிய ஏழாநாளநதியிலே தீாததமாடுதல மரபு,

ஆடு— அவைய்புய்றகுநதிராணட காட்டி ஓள்ளார,

ஆாத்தனம் ற—ஆாதத ஆாவாரம

அற்றேயென்பது அன்றேயென மெலிந்ததாக்கி உவமவுருபாக்கலுமொன்று.

[மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்] பிறங்கிய மாடம மலி புகழ்க்கூடல்—பெரிய * நான்மாடத்தாலே மலிந்தபுகழைக் கூடுதலையுடைய மதுரை (௬௬௬)யென மேலேகூட்டுக.

[நாளங் காடி நனந்தலை:] நனந்தலை நாள் அங்காடி—அகற்சியையுடைத்தாகிய இடத்தினையுடைய நாட்காலத்துக்கடையில,

கம்பலை—ஆரவாரம,

உருவப்பல்கொடியும (௩௬௬) புனைகொடியும (௩௬௮) நன்கொடியும (௩௭௧) களி மகிழ்கொடியும் (௩௭௨) குழூஉக்கொடியும பதாகையும் நிலைஇ (௩௭௩) அருவியின் னுடங்கும்படி (௩௭௪) வகைபெறவெழுந்து மூழ்கி (௩௫௭) இசைக்கும் பலபுழையையு டைய நல்ல இல்லினையும (௩௫௮) சுமமையினையுமுடைய (௩௬௪) தெருவுகளில் (௩௫௯) பெருங்கியமதது (௩௬௫) நாளங்காடியிலே (௪௩௦) பூவினா (௩௯௭) முதலி யோர் இருத்தருகையினால (௪௦௬) மறுகுதலினால (௪௨௩) எழுந்தகம்பலை (௪௩௦) நன்ட ணையறைவனா நுவலுகையினாலே (௩௬௨) அதற்குத்திரண்டநாடு (௪௨௮) அந்தி யில் (௪௨௭) ஆர்த்ததேயென வினைமுடிக்க.

ஆர்த்தன்றென்னுமுற்றுச்சொற் படுத்தலோசையாற் பெயர்த்தன்மையாய்த்தே றேகாரம் பெற்றுநின்றது.

வெயிற் கதிர் மழுங்கிய படர் கூர் ஞாயிற்றுச் செக்கர் அன்ன—வெயிலையுடைய கிரணங்கள் ஒளிமழுங்கிய செலவுமிக்க ஞாயிற்றையுடைய செக்கர்வானத்தையொத்த

சிவந்து நுணங்கு உருவின் கண் பொருபு உகூஉம ஒண் பூங் கலிங்கம்—சிவந்து நுணணிதாகும் வடிவாலே கண்களை வெறியோடப்பண்ணிச் சிந்திவிழுமாறுபோன்ற ஒள்ளிய பூத்தொழிலையுடைய சேலைகளை,

பொன் புனை வாளொடு பொலியக் கட்டி—பொனனிட்ட உடைவாளோடே அழகுபெறக் கட்டி,

[திண்டோப் பிரமபிற புரளுந் தானைக், கச்சந் தின்ற கழறயங்கு திருந்தடி மொயமபிறந்து திரிதரு மொருபெருந் தெரியன், மணிதொடாந் தன்ன வொண்பூங் கோதை, யணிகிளா மாாபி னாரமொ டளைஇக், காலியக் கன்ன கதழ்பரி கடைஇ]

புரளுந் தானை—தோளிலேகிடந்தசையு மொலியலினையும,

கச்சம் தின்ற கழல தயங்கு திருந்து அடி—கோத்துக்கட்டிய கச்சுக்கிடந்து தழும்பிருந்த வீரக்கழலசையும் பிறக்கிடாத அடியினையும,

மொய்ம்பு இறந்து திரிதரும் ஒரு பெருந் தெரியல்—உலகத்துள்ளாரவலிகளைக் கடந்து புகழ்ச்சியால் எங்குந்திரியும் ஒன்றாகிய பெரிய வேப்பமாலையினையும்,

அணி கிளர் மார்பின் ஆரமொடு அளைஇ மணி தொடர்ந்தன்ன ஒண் பூங் கோதை—அழகுவிளங்கும மார்பிற்கிடக்கின்ற ஆரத்தோடேகலந்து மாணிக்கமொழுகினாலொத்த ஒள்ளிய செங்கழுநீர்மாலையினையுமுடையராய்,

பிரம்பின் திண்தோக கால் இயக்கன்ன கதழ பரி கடைஇ—விளிம்பிலேவைத்த பிரம்பினையுடைய திண்ணிய தேரிற்பூண்ட காற்றினுடைய செலவினையொத்த விரைந்த குதிரைகளைச் செலுத்தி,

காலோர் காப்பக் காலெனக் கழியும்—காலாட்கள் சூழ்ந்துகாப்பக் காற்றென் னும்படி கடிதிற்செல்லும்,

* நான்மாடங்களாவன:—திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திரு நடுவூரென்பன.

[வானா வண்கை வளங்கெழு செல்வர், நாண்மகி ழிருக்கை:] நாள் மகிழ் இருக்கை வான வண்கை வளங்கெழு செல்வர்—நாட்காலத்து மகிழ்ந்திருக்கின்ற இருப்பிலே மேகம்போலே வரையாமற்கொடுக்கும் வளவிய கையினையுடையராகிய வளப்பம்பொருந்தின செல்வர்,

தானை (சஅகூ) முதலியவற்றையுடையராய்க் கட்டிக (சஅச) கடைஇக (சசㅇ) கழியும் (சசக) செல்வரென்க.

காணமார் பூணொடு தெள்ளரிப் பொற்சிலம்பு ஒலிப்ப—விழாவைக்காணுதற்குப் பூண்களோடே தெள்ளியவுள்ளின்மணிகளையுடைய பொன்னாற்செய்த சிலம்புகளொலிக்கும்படி மேனிலத்துநின்றுமிழிதலால்,

சிலம்பொலிப்பவென்பதனால் இழிதல்பெற்றாம்.

[ஒள்ளழற், றுவற விளங்கிய வாய்பொ னவிரிழை, யணங்குவீழ் வன்ன பூந் தொடி மகளிர்] அணங்கு வீழ்வு அன்ன ஒள் அழல் தா அற விளங்கிய ஆய் பொன் அவிர் இழைப் பூந்தொடி மகளிர்—வானுறைதெய்வங்களின் வீழ்ச்சியையொத்த ஒள்ளியநெருப்பிலே வலியறவிளங்கிய அழகிய பொன்னாற்செய்த விளங்கும்பூண்களையும் பூத்தொழிலையுடைய தொடியினையுமுடைய மகளிர்,

இவர் நாயன்மார் கோயில்களிற் சேவிக்குமகளிர்.

மணம் கமழ் நாற்றம் தெருவுடன் கமழ—புழுகுமுதலியன நாறுகின்றநாற்றம் தெருவுகளெல்லாமணக்க,

மணம் - ஆகுபெயர்.

ஒண்குழை திகழும் ஒளி கெழு திருமுகம்—ஒள்ளிய மகரக்குழையை உள்ளடக்கிக்கொண்ட ஒளிபொருந்திய அழகினையுடையமுகம்,

[திண்கா ழேற்ற வியலிரு விலோதந், தெண்கடற் றிரையி னசைவளி புடைப்ப:] திண் காழ் ஏற்ற வியல் இரு விலோதம் அசை வளி தெண்கடல் திரையின் புடைப்ப—திண்ணிய கொடித்தண்டுகளிலேற்ற அகலத்தினையுடைய பெருங்கொடிகளை அசைகின்ற காற்றுத் தெளிந்த கடற்றிரைபோல எழுந்துவிழும்படி அடிக்கையினாலே,

நிரை நிலை மாடத்து அரமியந்தோறும்—ஒழுங்குபட்ட நிலைமையினையுடைய மாடங்களின் நிலாமுற்றங்கடோறும்,

மழை மாய் மதியின் தோன்றுபு மறைய—மஞ்சிலேமறையுந் திங்களைப்போல ஒருகாற்றோன்றி ஒருகான்மறைய,

அரமியந்தோறுமிருந்து (சஅக) விழாக்காணுமகளிர் முகம் (சசஅ) விலோதத்தை (சசக) வளிபுடைக்கையினாலே (சஅ) தோன்றுபுமறையவென்க.

நாயன்மார் எழுந்தருளுங்காற் கொடியெடுத்தல் இயல்பு.

[நீரு நிலனுந் தீயும் வளியு, மாக விசும்போ டைந்துட னியற்றிய, மழுவா ணெடியோன் றலைவ னாக] மாக விசும்போடு வளியும் தீயும் நீரும் நிலனும் ஐந்துடன் இயற்றிய மழுவாள் நெடியோன் தலைவனாக—திக்குக்களையுடைய ஆகாயத்துடனே காற்றும் நெருப்பும் நீரும் நிலனுமாகிய ஐந்தினையும் சேரப்படைத்த மழுவாகிய வாளையுடைய பெரியோன் ஏனையோரின் முதல்வனாகக்கொண்டு,

மாசு அற விளங்கிய யாக்கையர்—தீர்த்தமாடிய வடிவினையுடையராய்,

சூழ் சுடர் வாடாப் பூவின் இமையா நாட்டத்து நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு—தெய்வத்தன்மையாற் சூழ்ந்த ஒளியினையுடைய வாடாதபூக்களையும் இமைக்குவியாத கண்ணினையும் அவியாகிய உணவினையுமுடைய அச்சமபொருந்திய மாயோன் முருகன்முதலாகிய தெய்வங்கட்கு,

மாற்றரு மரபின் உயர் பலி கொடுமார்—விலக்குதற்கரிய முறைமையினையுடைய உயர்ந்த பலிகளைக் கொடுத்தற்கு,

அந்தி விழவில்—அந்திக்காலத்துக்கு முன்னுக எடுத்தவிழாவிலே,

தூரியம் கறங்க—வாச்சியங்களொலிப்ப,

செல்வர் (௪௬௨) மாசறவிளங்கிய யாக்கையராய்க் (௪௫௬) கமழ (௪௬௭) மறைய (௪௫௨) நெடியோன்றலைவனுகப் (௪௫௫) பெரியோர்க்குப் (௪௫௮) பலிகொடுக்கைக்கு (௪௫௯) அந்தியிற்கொண்டவிழவிலே தூரியங்கறங்கவெனக

[திண்கதிர் மதாணி பொலங்குழை மாக்களை, யோம்பினாத் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித், தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத, தாமு மவரு மோராங்கு விளங்கக், காமர் கவினிய பேரிளம் பெண்டிர்]

திண் கதிர் மதாணிக் காமர் கவினிய பேரிளம்பெண்டிர்—திண்ணிய ஒளியினையுடைய பேரணிகலங்களையுடையராய விருப்பம் அழகுபெற்ற பெரிய இளமையினையுடைய பெண்டிர்,

தாம் முயங்கிப் புணர்ந்து ஓம்பினாத் தழீஇ—தாம் முயங்குதலைச்செய்து கூடிப் பாதுகாக்குங் கணவரையுங் கூட்டிக்கொண்டு,

தாது அணி தாமரைப் போது பிடித்தாங்கு ஒண் குறுமாக்களைத் தழீஇ—தாது சேர்ந்த செவ்வித் தாமரைப்பூவைப் பிடித்தாற்போல ஒள்ளிய சிறுபிள்ளைகளையும் எடுத்துக்கொண்டு,

தாமும் அவரும் ஓராங்கு விளங்க—தாமுங் கணவரும் பிள்ளைகளும் சேரச் சேலத்தாலேவிளங்கும்படியாக,

[பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச், சிறந்து] பூவினர் புகையினர் தொழுவனர் சிறந்து பழிச்சி—பூசைக்குவேண்டும் பூவினையுடையராய்த் தூபங்களையுடையராய் வணங்கினராய மிகுத்துத்துதித்து,

புறங்காக்கும் கடவுட் பள்ளியும்—பாதுகாத்துநடத்தும் பௌத்தப்பள்ளியும்,

சிறந்த வேதம் விளங்கப் பாடி—அதாவது வேதமொழிந்த முதன்மைப்பட்ட வேதங்களைத் தமக்குப் பொருடெரியும்படி ஓதி,

அதாவது தலையாயவோத்தனமை பொருளியலிற்கூறினும்

விழுச் சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து—விழுமிய தலைமையோடுபொருந்தின யாகங்கண்முதலிய தொழில்களோடே சிலகாலம்பொருந்தி,

நிலம் அமர் வையத்து—நால்வகைநிலங்களமர்ந்த உலகத்தே,

ஒரு தாம் ஆகி—ஒன்றாகியபிரமந் தாங்களேயாய,

உயர் நிலை உலகம் இவணின்று எய்தும்—உயர்ந்த நிலைமையையுடைய தேவருலகத்தை இவ்வுலகிலேநின்றுசேரும்,

அறநெறி பிழையா அன்புடை நெஞ்சின்—தருமத்தின்வழி ஒருகாலமுந்தப்பாத பல்லுயிர்கட்குமன்புடைத்தாகிய நெஞ்சாலே,

பெரியோர் மேஎய் — சீவன்முத்தராயிருப்பாரிடத்தே சிலகாலம் பொருந்தி நின்று,

இனிதின் உறையும்—ஆண்டுப்பெற்ற வீட்டின்பத்தாலே இனிதாகத்தங்கும் பள்ளி (சஎச),

[குன்று குயின்றன்ன வந்தணர் பள்ளியும]

குன்று குயின்றன்ன பள்ளியும்—மலையை உள்வெளியாகவாங்கி இருப்பிடமாக்கினாற்போன்ற பிரமவித்துக்களிருப்பிடமும,

அந்தணர்— வேதாந்தத்தை எக்காலமும்பார்ப்பார,

அந்தணர் (சஎச) பாடி (சசுஅ) அன்புடைநெஞ்சாலே (சஎஉ) தேவருலகத்தையெய்தும் (சஎக) ஒழுக்கத்தோடேசிலகாலநின்று (சசுக) பின்னர் வேதாந்தத்தையுணர்ந்து பெரியோரைமேஎய் (சஎரு) வையத்தே ஒருதாமாகி (சஎ0) யுறையும் (சஎரு) பள்ளியும் (சஎச) எனமுடிக்க

வண்டு படப் பழுநிய தேன் ஆர் தோற்றத்துப் பூவும் புகையுஞ் சாவகர் பழிச்ச—வண்டுகள்படியும்படி பருவமுதிர்ந்த தேனிருந்த தோற்றத்தையுடைய பூக்களையும் புகையினையுமேந்தி விரதங்கொண்டோர் துதிக்க,

[சென்ற காலமும வரூஉ மமயமு, மின்றிவட் டோன்றிய வொழுக்கமொடு நன்குணர்ந்து, வானமு நிலனுந் தாமுழு துணருஞ், சான்ற கொள்கைச் சாயா யாக்கை, யான்றடங் கறிஞர் செறிந்தனர் நோன்மார், கல்பொளிந் தன்ன விட்டுவாய்க் கரண்டைப, பல்புரிச் சிமிலி நாற்றி நலகுவர]

சென்ற காலமும் வரூஉம் அமயமும் இன்று இவண் தோன்றிய ஒழுக்கமொடு நன்கு உணர்ந்து நலகுவர—சென்றகாலத்தையும வருகின்றகாலத்தையும இன்று இவ்வுலகிற் றோன்றிநடக்கின்ற ஒழுக்கத்தோடே மிகவுணர்ந்து உலகத்தார்க்குச் சொல்லுதல்வரும்படி,

வானமும நிலனும தாம் முழுதுணரும் அறிஞர்—தேவருலகையும அதன்செய்கைகளையும எல்லாநிலங்களின்செய்திகளையும தாம் நெஞ்சாலறிதற்குக்காரணமான அறிஞர்,

இஃது எதிர்காலங்கூறிற்று

சான்ற கொள்கை—தமக்கமைந்த விரதங்களையும,

சாயா யாக்கை—அவ்விரதங்களுக்கு இளையாத மெய்யினையுமுடைய அறிஞர் (சஅக),

ஆன்று அடங்கு அறிஞர்—கலவிகளெல்லாநிறைந்து களிப்பின்றியடங்கின அறிவினையுடையார்,

செறிந்தனர்—நெருங்கினவருடைய சேக்கை (சஅஎ) யென்க

நோன்மார்—நோற்கைக்கு,

கல் பொளிந்து அன்ன இட்டு வாய்க் கரண்டைப பல புரிச் சிமிலி நாற்றி—கல்லைப்பொளிந்தாற்போன்ற இட்டியவாயையுடைய குண்டிகையைப பலவடங்களையுடைய நூலுறியிலே தூக்கிச செறிந்தன (சஅக) னென்க.

கயம கண்டன்ன—குளிர்ச்சியாற் கயத்தைக கண்டாற்போன்ற,

வயங்குடை நகரத்து—விளங்குதலையுடைய கோயிலிடத்துச் சேக்கை (சஅஎ) யென்க.

செம்பு இயன்றன்ன செஞ்சுவர் புனைந்து—செம்பாற்செய்தாலொத்த செவ்விய சுவர்களைச் சித்திரமெழுதி,

நோக்கு விசை தவிர்ப்ப மேக்கு உயர்ந்து — கண் பார்க்கும்விசையைத் தவிர்க்கும்படி மேனிலமுயர்ந்து,

[ஓங்கி, யிறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையுங், குன்றுபல குழீஇப் பொலிவன தோன்ற]

குன்று பல குழீஇப் பொலிவன தோன்ற ஓங்கி—மலைகள்பலவுந்திரண்டு பொலிவனபோலத் தோன்ற உயர்ந்து வயங்குடைநகரம் (௪அ௪) என்க.

இறும்பூது சான்ற நறும் பூஞ் சேக்கையும்—அதிசயமமைந்த நறியபூக்களைச் சூழவுடைய அமணப்பள்ளியும்,

சேக்கப்படுமிடத்தைச் சேக்கையென்றார். இவர்கள் வருந்தாமற் பறித்துவழிபடுதற்குப் பலபூக்களைச் சூழவாக்குதலின், நறும்பூஞ்சேக்கையென்றார்.

புனைந்து (௪அ௬) உயர்ந்து (௪அ௬) தோன்ற (௪அ௮) ஓங்கிச் (௪அ௬) சாவகர் பழிச்ச (௪எ௬) வயங்குதலையுடையநகரத்திடத்துக் (௪அ௪) கொள்கையினையும் யாக்கையினையுமுடைய (௪அ0) அறிஞர் (௪அ௧) உணர்ந்து (௪எ௮) நலகுவர (௪அ௩) நோன்மார் (௪அ௧) சிமிலியிலேநாற்றிச் (௪அ௩) செறிந்தனருடைய (௪அ௧) சேக்கையுமெனக்கூட்டுக.

அச்சமும்—நடுவாகக்கூறுவரோ கூறாரோவென்று அஞ்சிவந்த அச்சத்தையும்,

அவலமும்—அவர்க்குத் தோல்வியால் நெஞ்சிற்றோன்றும் வருத்தத்தையும்,

ஆர்வமும் நீக்கி—அவர் தந்நெஞ்சுக்கருதின பொருள்கண்மேற்றோன்றின பற்றுள்ளத்தினையும் போக்கி,

என்றது - அவர்கள் நெஞ்சுகொள்ள விளக்கியென்றவாறு.

செற்றமும் உவகையும் செய்யாது காத்து—ஒருகூற்றிற் செற்றஞ்செய்யாமல் ஒருகூற்றில் உவகைசெய்யாமல் நெஞ்சினைப் பாதுகாத்து,

ஞெமன்கோல் அன்ன செம்மைத்தாகி—துலாக்கோலையொத்த நடுவுநிலைமையையுடைத்தாய்,

சிறந்த கொள்கை அறம் கூறு அவையமும்—இக்குணங்களாற்சிறந்த விரதங்களையுடைய தருமநூலைச் சொல்லுந்திரளும்,

நறுஞ் சாந்து நீவிய கேழ் கிளர் அகலத்துப் பெரியோர் (௪௯௫)—நறிய சந்தனத்தைப்பூசிய நிறம்விளங்குமார்பினையுடைய பெரியோர்,

யாகத்திற்குச் சந்தனம்பூசுதல்மரபு.

[ஆவுதி மண்ணி யவிர்துகின் முடித்து, மாயிசும்பு வழங்கும் பெரியோர்போல, நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி, யன்பு மறனு மொழியாது காத்துப், பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த]

ஆவுதி மண்ணி மா விசும்பு வழங்கும் பெரியோர் போல—யாகங்களைப்பண்ணிப் பெரிய சுவர்க்கத்தேறப்போம் அந்தணர் அரசனை அடக்குமாறுபோல,

நன்றும் தீதும் கண்டு ஆய்ந்து அடக்கி—அரசனிடத்துள்ள நன்மையும் தீமையும் நெஞ்சத்தாலேகண்டு அத்தீங்குகளையாராய்ந்து அவற்றிலேயொழுகாமலடக்கி,

அன்பும் அறனும் ஒழியாது காத்து—சுற்றத்திடத்துச்செல்லுமன்பும் எவ்வுயிர்கண்ணுங்கெழுந் தருமமும் ஒருகாலமும்போகாமல் தம்மிடத்தே பரிகரித்து,

பழி ஒரீஇ உயர்ந்து—பழி தம்மிடத்துவாராமல் நீக்கி அதனானே ஏனையோரி னும் உயர்ச்சியெய்தி,

பாய் புகழ் நிறைந்த—பரந்த புகழ்நிறைந்த,

அவிர் துகில முடித்து—விளஙகுகின்ற மயிரகசுட்டுக் கட்டி,

செம்மை சான்ற காவிதிமாக்களும்—தலைமையமைந்த காவிதிப்பட்டங்கட்டின அமைச்சரும்,

அறன் நெறி பிழையாது ஆற்றின ஒழுகி—இல்லறத்திறகுக்கூறிய வழியைத்தப் பாமல இல்லறத்திலேநடந்து,

குறும் பல குழூவிற குன்று கணடனன—அண்ணிய பல திரட்சிகளையுடைய மலைகளைக கணடாற்போன்ற,

பருந்து இருந்து உககும் பன்மாண நல்லில்—பருந்து இளைப்பாறியிருந்து பின்பு உயரபபறக்கும் பலதொழிலின்மாட்சிமைபபட்ட நலலஇல்லில்,

பல வேறு பண்டமோடு ஊண மலிந்து கவினி—பலவாய்வேறுபட்ட பண்டங களோடே பலவுணவுகளுமிகககு அழகுபெறறு,

மலையவும் நிலததவும் நீரவும பிறவும்—மலையிடததனவும் நிலத்திடததனவும் நீரி டததனவும பிறவிடததனவுமாகிய பண்ணியம் (டுoசு),

பல் வேறு திரு மணி முததமொடு பொன் கொண்டு—பலவாய வேறுபட்ட அழ கினையுடைய மணிகளையும் முத்தினையும் பொனனையும் வாங்கிககொணடு,

சிறந்த தேஎதது—மணிகளும் முத்தும் பொன்னும் பிறததறகுச சிறநத தேசத்தி னின்றும்வந்த,

பணணியம் பகாநரும்—பண்டஙகளைவிறகும் வணிகரும்,

ஊணமலிந்து கவினிக் (டுoரு) குன்றுகணடனன (டுoக) நலலஇல்லிலே யிரு ந்து (டுoஉ) ஆறறினொழுகிச் (டுoo) சிறந்ததேஎத்துவந்த (டுoசு) திருமணிமுத்தமொடு பொன்கொணடு (டுoடு) பிறவுமாகிய (டுoச) பணடஙகளை விறபாருமென்க.

[மழையொழுக் கறாஅப் பிழையா விளையுள்.] அறாஅ ஒழுக்கு மழைப பிழையா விளையுள்—இடைவிடாமற பெய்கின்ற மழையால் தவறாத விளைதலையுடையதாகிய மோகூா (டுoஅ),

பழையன் மோகூர்—பழையனெனனுங் குறுநிலமன்னனுடைய மோகூரிடத்து,

அவையகம் விளஙக, நான்மொழிக் கோசர் தோன்றி யன்ன] அவை அகம விளங்க நாறகோசா மொழித தோன்றியன்ன — நனமக்கடிரளிடததே விளங்கும் படி அறியககூறிய நானகுவகையாகியகோசா வஞ்சினமொழியாலே விளங்கினாற் போன்ற,

தாம் மேஎந்தோன்றிய நாறபெருங்குழுவும்—தமதுமொழியால் தாம் மேலாய்வி ளங்கிய நால்வகைப்பட்ட பெரியதிரளும்,

ஐம்பெருங்குழுவில் அமைசசரைபபிறிதது முற்கூறினமையின், ஈணடு ஏனை நாற்பெருஙகுழுவையுஙகூறினா. ஐம்பெருங்குழுவாவன. "அமைச்சா புரோகிதா சேனா பதியர், தூத ரொற்ற ரிவரென மொழிப" இளங்கோவடிகளும், * "ஐம்பெ ருங் குழுவு மெணபே ராயமும்" என்றாா

* சிலப்பதிகாரம், இந்திரன்விழவூரெடுத்தகாதை.

[கோடுபோழ் கடைநரும்] போழ் கோடு கடைநரும—அறுத்தசங்கை வளைமுத லியனவாகக் கடைவாரும்,

திரு மணி குயினரும—அழகியமணிகளைத் துளையிடுவாரும்,

சூடு உறு நனபொன சுடர் இழை புனைநரும—சுடுதலுற்ற நன்றாகிய பொன்னை விளங்கும பணிகளாகப்பண்ணுந தட்டாரும,

பொன உரை காணமரும—பொனனையுரைத்தவுரையை அறுதியிடும் பொன் வாணிகரும்,

கலிங்கம பகர்நரும—புடைவைகளை விறபாரும,

செமபு நிறை கொணமரும—செமபு நிறுக்கப்பட்டதனை வாங்கிக்கொள்வோரும்,

வமபு நிறை முடிநரும—கச்சுக்களைத் தம தொழினமுற்றுபபட முடிவாரும்,

பூவும் புகையும ஆயும் மாக்களும்—பூக்களையுஞ் சாந்தையும நன்றாக ஆராய்ந்து விறபாரும்,

[எண்வகைச செயதியு முவமங காட்டி, நுணணிதி னுணர்ந்த] எணவகை நுண்ணிதின உணர்ந்த செய்தியும உவமம் காட்டி—பலவகைபபட்ட கூரிதாகவுணர்ந்த தொழில்களையும ஒப்புககாட்டி,

சித்திரமெழுதுவார்க்கு வடிவினறொழில்கடோனற எழுதுதற்கரிதென்பதுபற றிச செயதியுமெனறார்

நுழைந்த நோக்கிற கணணுள் வினைஞரும—கூரிய அறிவினையுடைய சித்திரகாரிகளும்,

நோக்கின்றாக்கணணிடத்தே தம தொழிலைநிறுத்துதலிற கண்ணுள்வினைஞரொனறார்

பிறரும் கூடி—யான கூறப்படாதோருந் திரண்டு,

தெணடிரை அவிர அறல கடுப்ப ஒண பல குறியவும நெடியவும மடி தரூஉ விரித்து — தெளிந்த திரையிலவிளங்குகின்ற அறலையொப்ப ஒள்ளிய பலவாகிய சிறியனவும் நெடியனவுமாகிய மடிப்புடைவைகளைக் கொண்டுவந்து விரித்து,

மடி தத்து அறலுக்குவமை.

சிறியரும பெரியரும கமமியர் குழீஇ—சிறியோரும் பெரியோருமாகிய நெய்தறறொழிலைசசெயவார் திரணடு,

நால வேறு தெருவினும் கால உற நிறறர—நானகாய்வேறுபட்ட தெருவுகடோறும் ஒருவர்காலோடு ஒருவர்கால் நெருங்க நிறறலைச்செயய,

கமமியர் (௫௨௧) விரித்துக (௫௨௦) குழீஇ (௫௨௧) நிற்றலைச்செய்ய.

இஃது அந்திககடையிற்றெரு விற புடைவைவிறபாரைக் கூறிற்று

கோயிலைசசூழந்த ஆடவர்தெரு நான்காதலின், நால்வேறுதெருவென்றார். இனிப பொன்னும் மணியும் புடைவைகளும் கருஞ்சரக்கும்விற்கும் நால்வகைப்பட்ட வாணிகர்தெருவெனறுமாம்.

கொடும்பறைக கோடியர் கடும்பு உடன் வாழத்துந் தண் கடல நாடன் ஒண் பூங்கோதை பெருநாள் இருக்கை—கண்கள்வளைந்த பறையினையுடைய கூத்தருடைய சுற்றம் சேரவாழ்த்துங குளிர்ந்த கடல்சேர்ந்த நாட்டையுடையவனாகிய ஒள்ளிய பனந்தாரையுடைய சேரனுடைய பெரிய நாளோலக்கவிருப்பிலே,

விழுமியோர் குழீஇ விழைவு கொள கம்பலை கடுப்பக் கலலென (௫௯அ)—எல்லாக்கலைகளையுமுணர்ந்த சீரியோர் திரண்டு அவன்கேட்பத் தருக்கங்களைக்கூறி விரும்புதல்கொண்ட ஆரவாரத்தையொப்பக் கல்லென்றவோசை நடக்க,

பலசமயத்தோருந் தம்மிற்றாம் மாறுபட்டுக்கூறுந் தருக்கத்தைச் சேரக்கூறக் கேட்டிருக்கின்ற கம்பலைபோலவென்றார்.

பலவுடன—கூறுதன பலவற்றுடனே,

சேறும் நாற்றமும் பலவின் சுளையும்—தேனும் நாற்றமும் உடையவாகிய பலாப்பழத்தின் சுளையும்,

சேறென்றார், சுளையிலிருக்கின்ற தேனை

வேறுபடக் கவினிய தேம் மாங்கனியும்—வடிவுவேறுபட அழகுபெற்ற இனிய மாவிற்பழங்களையும்,

"சேறு நாற்றமும் வேறுபடக் கவினிய, பலவின் சுளையுந் தேமாங் கனியும்" என்றும் பாடம்

பல் வேறு உருவிற் காயும்—பலவாய் வேறுபட்ட வடிவினையுடைய பாகற்காய் வாழைக்காய் வழுதுணங்காய் முதலியனகாய்களையும்,

பழனும்—வாழைப்பழம் முந்திரிகைப்பழமுதலிய பழங்களையும்,

கொண்டல் வளர்ப்பக் கொடி விடுபு கவினி மென் பிணி அவிழ்ந்த குறு முறி அடகும்—மழை பருவத்தே பெய்து வளர்க்கையினாலே கொடிகளைவிட்டு அழகுபெற்று மெல்லிய சுருளவிரிந்த சிறிய இலைகளையுடைய இலைக்கறிகளையும்,

கொடியென்றார், ஒழுங்குபட விடுகின்ற கிளைகளை

[அமிர்தியன் றன்ன தீஞ்சேற்றுக கடிகையும்] தீஞ்சேற்று அமிர்து இயன்றன்ன கடிகையும்—இனிய பாகினாற்கட்டின அமிர்தம் தேற்றுக்கண்டாற்போன்ற கண்டசருக்கரைத்தேற்றையும்,

புகழ் படப் பண்ணிய பேர் ஊன் சோறும்—புகழ்ச்சிகள் உண்டாகச் சமைத்த பெரிய இறைச்சிகளையுடைய சோற்றையும்,

கீழ்செல வீழ்ந்த கிழங்கொடு—பாரளவாகவீழ்ந்த கிழங்குடனே,

[பிறவு, மினசோறு தருநா பல்வயி னுகர] பலவயின் நுகர இன்சோறு பிறவும் தருநர்—பலவிடங்களினும் அநுபவிக்க இனிய பாற்சோறு பானமுதலியவற்றையுங் கொண்டுவந்திடுவோரிடத்து எழுந்தவோசையும்,

என்றது சோறிடுஞ்சாலைகளை.

[வாலிதை யெடுத்த வளிதரு வங்கம, பல்வேறு பண்ட மிழிதரும் பட்டினத், தொல்லெ னிமிழிசை மானக் கலலென, நனந்தலை வினைஞர் கலங்கொண்டு மறுகப், பெருங்கடற் குட்டத்துப் புலவுத்திரை யோதம், மிருங்கழி மருஉப் பாயப் பெரிதெழுந், திருகெழு பாணன் வருவன பெயர்தலிற், பல்வேறு புள்ளி னிசையெழுந் தற்றே, யல்லங் காடி யழிதரு கம்பலை]

நனந் தலை வினைஞர் கலம் கொண்டு மறுக—அகன்ற இடத்தையுடைய தேசங்களின்வாணிகர் ஈண்டிச்செய்த பேரணிகலங்களைக் கொண்டுபோதல்காரணமாக,

வால இதை எடுத்த வளிதரு வங்கம்—நன்றாகிய பாய்விரித்த காற்றுக்கொண்டு வருகின்ற மரக்கலம்

பெருங் கடற் குட்டத்துப் புலவுத் திரை ஓதம் இருங் கழி மருவிப் பாயப் பெரிது எழுந்து உரு கெழு பானுள் வருவன—பெரிய கடல்சூழ்ந்த இடத்தினின்றும் புலா றும் திரையையுடைய ஓதம் கரிய கழியிற் புகாமுகத்தேயேறிப் பரக்கின்றவளவிலே மிகவெழாது அச்சமபொருந்திய நடுவியாமத்தே வருகின்றவற்றின் பண்ட (௫௩௭) மெனக

பெரிதெழுந்தெனறா, பாயுமவாங்கிச் சரக்குமபறியாமல் வருகின்றமைதோன்ற ஓதமருவிப்பாயவெனறா, அவ்வோதம ஏறறத்திலே கழியிலேவருமென்பதுணாதற்கு

பலவேறு பண்டம இழிதரும பட்டினத்து ஒலலென இமிழ இசை மான—வங்கம்வருகின்றவற்றிற் பலவாய் வேறுபட்ட சரக்கு இறங்குதலைச்செயயும் பட்டினத்து ஒலலெனமுழங்குகின்ற ஓசையையொக்க,

மறுகுதறகுவந்த வங்கம குட்டத்தினினறும் வருவனவறறிற பண்டமிழியும பட்டினத்து ஓசைமானவெனக

பெயாதலிற பலவேறு புள்ளின இசை எழுந்தற்று—இரையை நிறையமேய்ந்து பாாபபிறகிரைகொணடு அந்திககாலததுமீளுதலிற் பலசாதியாய் வேறபட்ட பறவைகளினோசை எழுந்த தனமைத்து,

அல அங்காடி அழிதரு கம்பலை—அந்திக்காலத்துக் கடையில மிகுதியைத்தருகின்ற ஓசை,

கடவுட்பள்ளியிடத்தும் (௪௬௭) அந்தணாபளளியிடததும (௪௭௪) சேக்கையிடத்தும (௪௮௭) அவையத்திடததும் (௪௯௨) காவிதிமாக்களிடததும (௪௯௯) எழுகின்றவோசை கோதை (௫௨௪) யிருக்கையில் (௫௨௫) விழைவுகொள்கம்பலைகடுப்பக் (௫௨௯) கலலென (௫௩௮) வெனமுடிகக.

பண்ணியம்பகாரிடத்தோசையும(௫௩௯)நாறபெருங்குழூவிடத்தோசையும்(௫௪௦) பலவயினுகா இனசோறு (௫௩௫) பிறவும் (௫௩௪) தருநரிடததெழுந்தவோசையும் (௫௩௫) கோடுபோழகடைநா (௫௧௧) முதலாகக் கணனுள்வினைஞாீறுகவுள்ளாரும் பிறருங்கூடிக் (௫௧௮) சம்மியருங்குழீஇ (௫௨௧) நிறறா (௫௨௨) எழுந்தவோசையும் பட்டினதது (௫௩௭) ஒலலெனிமிழிசைமானககலலென (௫௩௮) வெனமுடிகக

இங்ஙனமுடிததபின நியமதது (௩௬௫) அல்லங்காடியில்அழிதருகம்பலை (௫௪௪) தூரியங்கறங்குகையினுலும் (௪௬௦) கமபலைகடுபபக (௫௨௯) கல்லென்கையினுலும் (௫௩௮) ஒல்லெனிமிழிசைமானககல்லென்கையினுலும (௫௩௮) பலவேறுபுள்ளின் இசையெழுந்தறறே (௫௪௩) யெனச்சேர்வினைமுடிக்க.

கலலெனவென்பதனை இரணடிடததிற்குங்கூட்டுக

இவ்வோசைகளின வேறுபாடுகளைநோககிப பலவேறுபுள்ளோசைகளை உவமங்கூறினார்.

[ஒணசுட ருருபபொளி மழுங்கச சினநதணிந்து, சென்ற ஞாயிறு] ஒண் சுடா உருப்பு ஒளி சினம் தணிந்து மழுங்கச் சென்ற ஞாயிறு—ஒள்ளிய கிரணங்களையுடைய வெப்பத்தையுடைய ஒளி சினமாறிக் குறையுமபடி ஒழுகபபோன ஞாயிறு,

நன்பகற் கொணடு குடமுதற குன்றம் சேர—பின்னர் நன்றாகிய பகற்பொழுதைச் சேரக்கொண்டு மேறறிசையிடத்து அத்தகிரியைச் சேருகையினுலே,

குணமுதல் நாள் முதிர் மதியம் தோன்றி நிலா விரிபு பகல் உரு உற்ற இரா வர — கீழ்த்திசையிடத்தே பதினாலுநாட்சென்றுமுதிர்ந்த நிறைமதி எழுந்து நிலாப் பரக்கையினாலே பகலின்வடிவையொத்த இராக்காலம்வரும்படி,

நயந்தோர — கணவரைப்பிரிதலிற் கூட்டத்தை விரும்பியிருந்தார்க்கு,

காதல் இன்துணை புணர்மார் — தம்மேற் காதலையுடைய தமக்கினிய கணவரைக் கூடுதற்கு,

ஆய் இதழ்த் தண் நறுங் கழுநீர் துணைப்ப — ஆராய்ந்த இதழ்களையுடைய குளிர்ந்த நறிய செங்கழுநீர்களை மாலைகட்டும்படியாக,

இழை புனையூஉ — அணிகளை யணிந்து,

நல் நெடுங்கூந்தல் நறு விரை குடைய — நன்றாகிய நெடிய மயிரிற்பூசின நறிய மயிர்ச்சந்தனத்தை அலைத்து நீக்கும்படியாக,

நரந்தம் அரைப்ப — கத்தூரியை அரைக்கும்படியாக,

நறுஞ் சாந்து மறுக — நறியசந்தனம் அரைக்கும்படியாக,

மெல் நூல் கலிங்கம் கமழ புகை மடுப்ப — மெல்லிய நூலாற்செய்த கலிங்கங்களுக்கு மணக்கின்ற அகிற்புகையை ஊட்டும்படியாக,

பெண் மகிழ்வுற்ற பிணை நோக்கு மகளிர் நெடுஞ்சுடர் விளக்கம் கொளீஇ — குணச்சிறப்பால் உலகத்துப்பெண்சாதி விருப்பமுற்ற மான்பிணைபோலும் நோக்கினையுடையமகளிர் நெடியஒளியினையுடைய விளக்கினையேற்றி,

[நெடுநக ரெல்லை யெல்லா நோயொடு புகுந்து, கல்லென மாலை நீங்க]

நெடு நகர் எல்லை எல்லாம் — பெரிய ஊரினெல்லையாகிய இடமெல்லாம்,

கல்லென் மாலை நோயொடு புகுந்து நீங்க — கல்லென்னுமோசையையுடைய மாலை நயந்தோர்க்கு (ருசுக) நோயைச்செய்யத்தலைப்பட்டுப் புகுந்துபோகையினாலே முந்தையாமஞ்சென்றபின்றை (கூஉ0) யெனக.

நெடுநக (ருரு௬) ரெல்லையெல்லாம (ருருஎ) மகளிர் (௫௫௫) விளக்கங்கொளீஇக (ருருசு) காதலின்றுணைபுணர்தற்குப் (ருருப) புனையூஉத் துணைப்பக் (ருருக) குடைய (ருருஉ) அரைப்ப மறுக (ருருரு) மடுப்ப (ருருச) ஆரவுவரும்படி (ருசக) ஞாயிறு (ருசசு) குன்றஞ்சேருகையினாலே (ருசஎ) மாலை (ருருஅ) நயந்தோர்க்கு (ருசக) நோயொடு புகுந்து (ருருஎ) பின்னர் நீங்க (ருருஅ) முந்தையாமஞ்சென்றபின்றை (கூஉ0) யெனக்கூட்டுக.

நாணுக் கொள — புணர்ச்சிநீங்கிற்றாகத் தமக்கு உயிரினுஞ்சிறந்தநாணைத் தம்மிடத்தே தடுத்துக்கொள்ள,

[ஏழ்புணர் சிறப்பி னின்றொடைச் சீறியாழ், தாழ்பயற் கணைகுரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து, வீழ்துணை தழீஇ]

ஏழ் புணர் சிறப்பின் இன்றொடைச் சீறியாழ் பண்ணுப்பெயர்த்து — இசையேழும் தன்னிடத்தேகூடின தலைமையினையுடைய இனிய நரம்பினையுடைய சிறிய யாழைப் பண்களைமாறிவாசித்து,

வீழ் துணை தழீஇ — தம்மைவிரும்பின கணவரைப் புணர்ந்து நாணுக்கொள (ருருஅ),

பாட்டுக் காமத்தைவிளைவித்தலின், யாழைவாசித்து வீழ்துணைதழீஇயென்றார்.

[வியல்விசும்பு கமழ, நீர் திரண் டன்ன கோதை பிறக்கிட்டு] நீர் திரண்டன்ன கோதை வியல் விசும்பு கமழப் பிறக்கிட்டு — நீர்திரண்டாற்போன்ற வெள்ளியபூக்

ளாற்செய்த மாலைகளை அகற்சியையுடைய விசும்பிலே சென்று நாறும்படி கொண்டை யிலே முடித்து,

ஆய் கோல அவிர் தொடி விளங்க வீசி—அழகிய திரட்சியையுடைய விளங்கு கின்ற தொடி மிகவிளங்கும்படி கையைவீசி மனைதொறுஞ்சென்று பொயதலையர (௫௬௩) வென்க

போது அவிழ் புதுமலர் தெரு உடன் கமழ—அலருமபருவமாக மலர்ந்த புதிய விடுபூக்கள் தெருவுகளெங்கும நாற,

மேதகு தகைய மிகுநலம் எய்தி—முற்பட்ட பலருடன்புணர்ந்த புணர்ச்சியாற் குலைந்த ஒப்பனைகளைப் பின்னும் பெருமைதகுகின்ற அழகினையுடைய மிகுகின்ற நன் மையுண்டாகவொப்பித்து,

[பெரும்பல குவளைச் சுரும்புபடு பன்மலர், திறந்துமோந் தன்ன சிறந்துகமழ் நாற்றத்து]

திறந்து மோந்து அன்ன சிறந்து கமழ் நாற்றத்து—அலர்கின்றபருவத்தே கை யாலலர்த்தி மோந்துபார்த்தாலொத்த மிககுநாறுகின்ற நாற்றத்தினையுடைய,

பெரும்பல குவளைச் சுரும்பு படு பன்மலர்—பெரிய பலவாகிய செங்கழுநீரிற் சுரும்புகளுக்கலர்கின்ற பலபூக்களையும்,

கொண்டல் மலர்ப்புதன் மானப்பூ வேய்ந்து]

கொண்டல் மலர் புதல் மான வேய்ந்து—மழைக்குமலர்ந்த மலரையுடைய சிறுதூறுபோலத் தொக்கச் சூடி,

பூ—வினைப்பூக்களையும,

பலதிறத்துப்பூக்களை நெருங்கப்புனைதலபற்றிச் சிறுதூறு உவமைகூறினார்

[நுண்பூ ணாகம் வடுக்கொள முயங்கி, மாயப் பொய்பல கூட்டிக் கவவுக்கரந்து, சேயருநணியரு நலனயந்து வந்த, இளம்பல செல்வர் வளந்தப வாங்கி]

சேயரும் நணியரும் நலன் நயந்து வந்த இளம்பல செல்வர்—புறமண்டலத்தா ரும உள்ளூரிலுள்ளாருமாய்த் தம்முடைய வடிவழகைவிரும்பிவந்த இளையராகிய பல செல்வத்தையுடையாரை,

பல மாயப் பொய் கூட்டி நுண் பூண் ஆகம் வடுக் கொள முயங்கி—பல்வஞ்ச னைகளையுடைய பொய்வார்த்தைகளாலே முதற்கூட்டிக்கொண்டு அவருடைய நுண் ணிய பூண்களையுடைய மார்பைத் தம்மார்பிலே வடுப்படும்படியாக முயங்கிப் பின்னர்,

கவவுக் கரந்து வளம் தப வாங்கி—அங்ஙனம் அன்புடையார்போலே முயங்கி னமுயக்கத்தை அவர் பொருள்தருமளவும் மறைத்து அவருடைய செல்வமெல்லாம் கெடும்படியாக வாங்கிக்கொண்டு,

நுண் தாது உண்டு வறும் பூத் துறக்கும் மென்சிறை வண்டினம் மான—பூ அல ருங்காலமறிந்து அதன் நுண்ணிய தாதையுண்டு தாதற்ற வறுவியபூவைப் பின்னர் நினையாமற்றுறந்துபோம் மெல்லிய சிறகையுடைய வண்டின்திரளையொப்ப,

இது தொழிலுவமம்

புணர்ந்தோர் நெஞ்சு ஏமாப்ப இன்துயில் துறந்து—தம்மை நுகர்ந்தோருடைய நெஞ்சு கலக்கமுறும்படி அவரிடத்து இனியகூட்டத்தை நோக்ககைவிட்டு,

பழந்தேர் வாழ்க்கைப் பறவை போல—பழுமரமுள்ள இடந்தேடிச்சென்று அவற்றின் பழத்தையே ஆராய்ந்து வாங்கிநுகர்தலைத் தமக்குத் தொழிலாகவுடைய புள்ளினம்போல,

தம்முயிரைப் பாதுகாக்கின்ற வாழ்க்கைத்தொழிலை வாழ்க்கையென்றார்

[கொழுங்குடிச் செல்வரும் பிறரு மேஎய், மணம்புணர்ந் தோங்கிய வணங்குடை நல்லில்·]

கொழுங் குடிச் செல்வரும் பிறரும் மேஎய் அணங்கு உடை நல்லில்—வளவிய குடியிற்பிறந்த செல்வரும் அவர்களாற்றோன்றிய பிறசெல்வருமேவப்பட்ட இல்லுறை தெய்வங்களையுடைய நன்றாகிய அகங்களில்,

குடிச்செல்வரென்றார், நான்குவருணத்தை. பிறரென்றார், அவர்களாற்றோன்றிய ஏனைச்சாதிகளை

மணம் புணர்ந்து ஓங்கிய ஆய பொன் அவிர் தொடிப் பாசிழை மகளிர்—வரைந்துகொள்ளப்பட்டு உயர்ச்சிபெற்ற ஓட்டைத்தபொன்னாற்செய்த விளங்குகின்ற தொடியினையும் பசியபூணினையுமுடைய மகளிர்,

ஒண்சுடர் விளக்கத்து—ஒள்ளிய விளக்கினுடையஒளியிலே,

பலர் உடன் துவன்றி—பலருஞ் சேரநெருங்கி,

நீல நிற விசும்பில் அமரர்க்கு ஆடும் வானவமகளிர் மான—நீலநிறத்தையுடைய ஆகாயத்தே நெஞ்சமார்ந்துவிளையாடும் தெய்வமகளிர் வருந்துமாறுபோல,

கண்டோர் * நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்—தம்மைக்கண்டோருடைய நெஞ்சை வருத்தமுறுவித்துப் பொருள்வாங்குதலையுடைய பரத்தையர்,

[யாம நல்யாழ் நாப்ப ணின்ற, முழவின் மகிழ்ந்தன ராடி·] யாம நல்யாழ் நாப்பண் தாழ்பு அயற் கனை குரல் கடுப்ப நின்ற முழவின் மகிழ்ந்தனர் ஆடி—முதற்சாமத்தில் வாசித்தற்குரிய நன்றாகிய யாழ்களுக்குநடுவே அவற்றிற்கேற்பத்தாழ்ந்து தம்மயிற்செறிந்த ஓசையையொக்கநின்ற முழவாலே மனமகிழ்ந்தாடி,

தாழ்பயற் கனைகுரல் கடுப்ப (நகூ0) வென்று முன்னர்வந்ததனை இவ்விடத்துக்கூட்டுக

குண்டு நீர்ப் பனித் துறைக் குவவு மணல்—ஆழ்ந்த நீரினையுடைய குளிர்ந்த துறையிடத்துக் குவிந்த மணலிலே,

முனைஇ—வெறுத்து,

[மென்றளிர்க, கொழுங்கொம்பு கொழுதி·] கொழுங்கொம்பு மென்றளிர் கொழுதி—கொழுவிய கொம்புகளினின்ற மெல்லியதளிர்களைப் பறித்து,

[நீர்நனை மேவர, நெடுந்தொடர்க் குவளை வடிம்புற வடைச்சி·] குவளை நீர் நனை மேவர நெடுந் தொடர் வடிம்புற அடைச்சி—குவளையை நீர்க்கீழரும்புகளோடே பொருந்துதல்வரக் கட்டின நெடியதொடர்ச்சியை வடிம்பிலேவிழும்படி யுடுத்து,

மணம் கமழ் மனைதொறும் பொய்தல் அயர—மணநாறுகின்ற மனைதோறும் சென்று பொருட்டருதற்குரிய இளையரோடு விளையாடுதலைச்செய்ய,

அங்ஙனம் விளையாடிவசீகரித்து உறவுகொண்டு பொருள்வாங்குதல் அவர்க்கியல்பு.

வானவமகளிர்மான (நஅஉ) நெஞ்சுநடுக்குறூஉக் கொண்டிமகளிர் (நஅங) பலருடன்றுவன்றிக் (நஅ0) குவவுமணலிலே (நஅசு) முழவின் மகிழ்ந்தனராடி (நஅரு)

* நெஞ்சு நடுக்குறூஉங் கொண்டி மகளிரென்றும் பாடம்.

அதனைமுனை இக் (௫௮௬) குவளையையடைச்சிக (௫௮௮) கோதையை (௫௬௨) விசும்பு கமழப் (௫௬௧) பிறகிட்டு (௫௬௨) இளமபல்செலவரைக (௫௭௨) கூட்டி (௫௭௦) முயங்கிப் (௫௬௩) பின்னாக்கவவுக கரந்து (௫௭௧) வளந்தபவாங்கித் (௫௭௨) தாதுணடுதுறக்கும் (௫௭௩) வணடினமான (௫௭௪) இனறுயிலதுறநது (௫௭௫) பினனரும் மிகுநலமெய்திச் (௫௬௫) சுரும்புபடுபனமலரையும் (௫௬௬) ஏனைபபூககளையும புதன்மானவேய்ந்து (௫௬௮) புதுமலா தெருவுடன கமழந (௫௬௪) தொடியையவீசி (௫௬௩) மணங்கமழ் மனைதொறும (௫௮௩) பறவைபோலச (௫௭௬) செனறுபொய்தலயா (௫௮௩) வெனக கூட்டுக.

செலவரும பிறரும் மேவபபட்ட (௫௭௭) அணஙகுடைநலல இலலிலே மணம்புணாநதோஙகிய (௫௭௮) பாசிழைமகளிா (௫௭௯) ஒணசுடாவிளககததே (௫௮௦) சீறியாழைப (௫௫௩) பணணுடபெயாதது (௫௬௦) வீழ்துணைதழீஇ (௫௬௧) நாணுககொள (௫௫௮) வெனககூட்டுக

கணம கொள் அவுணாக கடநத பொலநதாா மாயோன மேய ஓண நனனாள்—திரட்சியைககொண அவுணரைவென்ற பொனனாறசெயத மாலையினையுடைய மாமையையுடையோன பிறநத ஓணமாகியநனனாளில ஊரிலுளளாரெடுதத விழவிடததே,

[கோணந் தினற வடுவாழ முகதத, சாணந தினற சமநதாஙகு தடககை, மறங கொள சேரி மாறுபொரு செருவின, மாறா துறற வடுப்படு நெற்றி]

மறம கொள் சேரி மாறு பொரு செருவில மாறாது உறற வடுபபடு நெறறி—இறைநாட் போாசெயதுமெனறுகருதி மறததைககொணடிருககினற தெருவுகளில் தமமிறரும் மாறுபபொருகினற போாினகணணே நினற அடிமாறுமையாறபட்ட வடுவழுந்தின நெறறியினையும,

சுருமபு ஆா கணணிப பெரும்புகல மறவா— சுருமபுகள்நிறைநத போாபபூவினையும் பெரியவிருபபததினையுமுடைய மறவா,

அததிருநாளிறபொரும சேரிபபோாகூறினா, அவவூாககு இயலபென்று

[கடுஙகளிறோட்டலின] சோணம் தின்ற வடு ஆழ் முகதத (௫௯௨) சாணம் தின்ற சமம் தாஙகு தடக கைக (௫௯௩) கடுஙகளிறு ஓட்டலின—தோடடிவெட்டின வடுவழுநதின முகததையுடையவாயக கொலைபழககும போாயானை பலகாலமெடுததலால் தழுமபிருந்த போாைததாஙகும் பெரியகையினையுடைய கடியகளிறறை ஓடடுகையினாலே,

[காணுநா ரிட்ட, நெடுஙகரைக காழக நிலமபா லுறுபப] காணுநா நெடுஙகரைக காழகம் இட்ட பால நிலம உறுபப—அவவியானைககுமுன்னேயோடி அதனவிசையைககாணும்பரிககாரா அவ்வியானை பிடிததுககொளளுங்காலத்து மேலவாராமல் அஞ்சி மீளுதறகுச சமைபபிதது நெடிய கரையையுடைய நீலநிறததையுடையபுடைவைகளிலே வைததுச சிந்நிைகபபணம நிலததேகிடநது காலகளைப் பொதுககுமபடி,

நெருஞசிமுளளுபபோல முனைபட இருமபால திரளசசமைததுத தூவற்கு யானையஞ்சுமென்று அவாமடியிலேவைதத கபபணததைப பாலபோறலிற பாலென்றாா. *"வேழங, காயநதனன கடுகவுந்தக கப்பணஞ் சிதறினானே" என்றார்பிறரும்

* சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௨௫௬.—"ஏந்தலவே றிருதத யானையிரிநதன வெரிபொற் கணணி - நாந்தக வுழவா நணணா கூற்றென நடுங்கி மன்னா-சாய்நதபின் றறுக ணாண்மைக கட்டியங காரன வேழங - காயந்தனன் கடுக வுந்திக கபபணஞ் சிதறி னானே"

கடுங்கள் தேறல் மகிழ்சிறந்து திரிதர—கடியகட்டெளிவையுண்டு மகிழ்ச்சிமிக்குத் திரிதலைச்செய்ய,

ஒண்ணுதளிற (௬௬௧) பொருது வடுபட்ட நெற்றி (௬௬௫) முதலியவற்றையுடைய மறவர் (௬௬௬) மகிழ்சிறந்து (௬௬௯) பரலுறுப்பத் (௬௬௮) திரிதர (௬௬௯) வெனக் கூட்டுக

கணவர் உவப்பப் புதல்வர்ப் பயந்து—தங்கணவர் இம்மைமறுமையிற்பெறும் பயன்பெற்றேமென்று மகிழும்படி பிள்ளைகளைப்பெற்று,

பணைத்து ஏந்து இளமுலை அமுதம் ஊற—பாலால்இடங்கொண்டேந்திய இளைய முலை பாலசுரக்கும்படி,

[புலவுப்புனிறு தீர்ந்து பொலிந்த சுற்றமொடு, வளமனை மகளிர் குளநீ ரயர]

புலவுப் புனிறு தீர்ந்து குளநீர் அயர—புலானாற்றத்தையுடைய ஈன்றணிமைநீங்கித் தெய்வத்தினருளால் ஓரிடுக்கணுமற்றுக் குளத்துநீரிலே குளிக்கையினாலே,

கடுஞ்சூல் மகளிர் பேணி (௬௦௯)—முதற்சூல்கொண்டமகளிர் இவ்வாறே இடுக்கணின்றிப் புதல்வர்ப்பயத்தல்வேண்டுமென்று தெய்வத்தைப்பரவிக் குறைதீர்ந்தபின்,

பொலிந்த சுற்றமொடு—மிக்க சுற்றத்தாருடனே,

வளமனை மகளிர்—செல்வத்தையுடைய மனைமகளிர்,

இல்லிருக்குங் குடிப்பிறந்த மகளிர்

திவவு மெய்நிறுத்துச் செவ்வழி பண்ணி—வலிக்கட்டினை யாழிற்றண்டிலே கட்டிச் செவ்வழியென்னும் பண்ணைவாசித்து,

திவவுக் கூறவே அதினரம்பும் கூறினார்

குரல் புணர் நல்யாழ் முழவோடு ஒன்றி—குரலென்னுநரம்பு கூடின வன்னம் நன்றாகிய யாழுடனே முழவும்பொருந்தி,

நுண்ணீர் ஆகுளி இரட்ட—மெல்லியநீர்மையினையுடைய சிறுபறையொலிப்ப,

பலவுடன்—பூசைக்குவேண்டும் பொருள்கள் பலவற்றுடனே,

ஒண் சுடர் விளக்கம் முந்துற—ஒள்ளிய சுடர்விளக்கம் முற்பட,

மடையொடு—பாற்பொங்கமுதலிய சோறுகளை,

நல் மா மயிலின் மென்மெல இயலி—நன்றாகிய பெருமையையுடைய மயில்போலே மெத்தென மெத்தென நடந்து,

[கடுஞ்சூன் மகளிர் பேணிக்கைதொழுது

கைதொழுது—கையாற்றொழுது,

பெருந்தோட் சாலினி மடுப்ப வொருசார]

பெருந்தோள் சாலினி மடுப்ப—பெரிய தோளினையுடைய தேவராட்டியோடே மடுப்ப,

வளமனைமகளிர் சிலர் (௬௦௫) புதல்வர்ப்பயந்து (௬௦௦) புனிறுதீர்ந்து (௬௦௨) குளநீராடுதலான் (௬௦௩) அதுகண்டு கடுஞ்சூன்மகளிர் பேணிக் (௬௦௯) குறைதீர்ந்தபின் பொலிந்தசுற்றத்தோடே (௬௦௨) பலவுடனு (௬௦௬) சாலினியோடே (௬௧௦) பண்ணி (௬௦௪) ஒன்றி (௬௦௫) இரட்ட (௬௦௬) இயலிச்சென்று (௬௦௮) கைதொழுது (௬௦௯) மடையொடு (௬௦௭) மடுப்ப (௬௧௦) வெனக்கூட்டுக

ஒருசார்—ஒருபக்கம்,

அரும் கடி வேலன் முருகொடு வளைஇ—அரிய அச்சத்தைச்செய்யும் வேலன் இவ்விடுக்கண் முருகனால்வந்ததெனத் தான்கூறிய சொல்லின்கண்ணே கேட்டோரை வளைத்துக்கொண்டு,

பிள்ளையாரவேலை யெடுத்தலின், வேலனென்றார் என்றது - கழங்குவைத்துப் பிள்ளையாரால்வந்ததெனை முற்கூறிப பின் வெறியாடுவெனென்று ஆடுமுறைமை கூறிற்று.

அரிக் கூடு இன்னியம் கறங்க—அரித்தெழும்ஓசையையுடைய சல்லி கரடி முதலியவற்றோடேகூடின இனிய ஏனைவாச்சியங்கள் ஒலியாநிற்க,

[நோநிறுத்துக, காரமலர்க குறிஞ்சி சூடிக் கடம்பின், சீர்மிகு நெடுவேட் பேணி:]

கார மலாக் குறிஞ்சி சூடி—காரகாலத்தான் மலரையுடையவாகிய குறிஞ்சியைச்சூடி,

கடம்பின் சீர மிகு நெடுவேள் நோ நிறுத்துப் பேணி—கடம்புசூடுதலால் அழகு மிகுகின்ற முருகனைச் செவ்விதாகத் தன்மெய்க்கண்ணேநிறுத்தி வழிபடுகையினாலே,

தழூஉ பிணையூஉ—மகளிா தம்முட்டழுவிக் கைகோத்து,

மன்றுதொறும் நின்ற குரவை—மன்றுகடோறுமநின்ற குரவைக்கூத்தும்,

சேரிதொறும —சேரிகடோறுநின்ற,

உரையும்—புனைந்துரைகளும்,

பாட்டும்—பாட்டுககளும,

ஆட்டும்—பலவகைபபட்டகூத்துக்களும்,

விரைஇ—தம்மிற் கலக்கையினாலே,

வேறு வேறு கம்பலை—வேறுவேறாகிய ஆரவாரம,

வெறி கொள்பு மயங்கி—ஒழுங்குகொண்டு மயங்கப்பட்டு,

போ இசை * நன்னன பெரும்பெயா நன்னாள்—பெரியபுகழையுடைய நன்னன்கொண்டாடுகின்ற பிறந்தநாளிடத்து,

அவன்பெயர் அந்நாள் பெறுதலின், பெரும்பெயரைப்பெற்ற நன்னாளென்றார்.

சேரி விழவின் ஆர்ப்பு எழுந்தாங்கு—சேரிகளிலுள்ளார கொண்டாடுகின்ற விழாவாலே ஆரவாரமெழுந்தாற்போல,

முந்தை யாமம் சென்ற பின்றை—முற்பட்டசாமம நடந்தபின்பு,

கொண்டிமகளிா (௫அரு) பொய்தலயரப் (௫அகூ) பாசிலைழமகளிர் (௫எக) வீழ்துணைதழீஇ (௫சுக) நாணுக்கொள (௫௫அ) மறவர் (௫கூசு) மகிழ்சிறந்து திரிதரக் (௫கூக) கடுஞ்சூலமகளிர்கைதொழுது (சு0க) மடுபப ஒருசார் (சுக0) நெடுவேட்பேணுகையினாலே (சுகசு) மன்றுதொறுநின்ற குரவையும் சேரிதொறுநின்ற (சுக௫) உரையும் பாட்டுமே ஆட்டும் விரவுகையினாலே (சுகசு) வேறுவேறுபட்டகம்பலை (சுகஎ) சேரிவிழவின்ஆர்ப்பெழுந்தாங்கு (சுகக) வெறிகொள்புமயங்கப்பட்டு (சுகஎ) முந்தையாமஞ்சென்றபின்றை (சுஉ0) யெனக்கூட்டுக

ஒருசார் (சுக0) விரைஇ (சுககூ) யென்க.

பணிலம் கலி அவிந்து அடங்க—சங்குகள் ஆரவாரமொழிந்து அடங்கிக்கிடக்க

* நன்னன் - ஓர்குறுநிலமன்னன்.

காழ் சாய்தது நொடை நவில நெடுங் கடை அடைதது— சட்டக்காலவாங்கி ப் பணடங்களுககு விலைகூறும் நெடியகடையையடைதது,

மட மதர் ஒள்ளிழை மகளிர பள்ளியயர — மடப்பததினையும் செருக்கினையும் ஒள்ளிய அணிகலங்களையுமுடைய மகளிர துயிலுதலைச்செயய,

[நல்வரி யிருஅல புணையு மெல்லடை, யயிருருப புறற வாடமை விசயங, கவ வொடு பிடிதத வகையமை மோதகம ]

விசயம ஆடு அமை நல வரி இருஅல புணையும் மெலலடை—பாகிலே சமைத்த லமைநத நலலவரிகளையுடைய தேனிருலையொககும மெல்லிய அடையினையும,

கவவொடு அயிர்பிடிதத வகை அமை உருபபு உறற மோதகம்—பருப்புந்தேங காயுமாகிய உள்ளீடுகளோடே கணடசருககரைகூட்டிபபிடிதத வகுபபமைந்த வெம் மைபொருந்தின அப்பஙகளையும்,

தீஞ்சேறறுக கூவியா தூஙகுவனா உறஙக—இனிய பாகோடு சோததுககரை த்த மாவினையுமுடைய அபபவாணிகரும அவறறோடேயிருநது தூஙகுவனராயுறஙக,

விழவின் ஆடும் வயிரியா மடிய—திருநாளினகணணே கூத்தாடுங்கூத்தா அத னையொழிந்து துயிலகொளள,

பாடு ஆன்று அவிந்த பனிக கடல புரைய—ஒலிநிறைநதடஙகின குளிாநத கடலை யொகக,

பாயல் வளாவோர் கண் இனிது மடிபப— படுகையிலே துயிலகொள்ளுவோா கண் இனிதாகத துயிலகொள்ள,

[பானாட் கொண்ட கங்கு லிடையது ]

பானாட் கொண்ட கஙகுல — பதினைந்நாழிகையை முடிவாகக்கொணட கஙகுல்,

[பேயு மணஙகு முருவுகொண் டாயகோற், கூற்றக கொலைறோ கழுதொடு கொட்ப]

பேயும் அணஙகும உருவுகொணடு கழுதொடு கொட்ப—பேய்களும் வருததுந தெய்வஙகளும வடிவுகொணடு கழுதுடனே சுழன்றுதிரிய,

கழுது - பேயிலொருசாதி

ஆய் கோற கூற்றக கொலைறோ அசசமறியாது ஏமமாகிய(சுடுஉ) மதுரை(சுககு) யெனக்கூட்டி யாக்கைநிலையாதெனறறிந்து மறுமைககுவேணடுவன செய்துகொ ண்டமையின், அழகிய கோலையுடைய கூற்றதநின் கொலைககஞசாமற் காவலுண் டாயிருககின்றவூரென்க

* "கரும்பாட்டிக கட்டி *** பரிவ திலா" னைறாா பிறரு ம கொலைறோ - கால சக்கரம்

இரும்பிடி மேஎந தோல அன்ன இருள் சோபு—கரியபிடியினகணணேமேவின தோலையொத்த கருமை தமக்கு இயலபாகசசேரபபட்டு,

இருள் - கருஞ்சட்டையுமாம்

---

* நாலடியார், அறன்வலியுறுத்தல், ௬—"கரும்பாட்டிக கட்டி சிறுகாலைக் கொண்டார் - துரும்பெழுந்து வேஙகாற் றுயராண டுழவார்-வருந்தி யுடம்பின் பயன் கொண்டார் கூறறம் - வருங்காற் பரிவ திலர்."

கல்லும் மரனும் துணிக்கும் கூர்மை நிலன் அகழ் உளியர் (௬௪௧)—கல்லையுமர த்தையுமறுக்குங் கூர்மையையுடைய நிலத்தையகழும்உளியையுடையராய்,

நிலத்தை அகழுங்காலத்து இடைப்பட்ட கற்களுக்கும் மரங்களுக்கும் வாய்மடி யாதென்றார்.

தொடலை வாளர்—தூக்கிட்ட வாளினையுடையராய்,

தொடுதோல் அடியர்—செருப்புக்கோத்த அடியினையுடையராய்,

[குறங்கிடைப் பதித்த கூர்நுனைக் குறும்பிடிச், சிறந்த கருமை நுண்வினை நுணங்கறல், நிறங்கவர்பு புனைந்த நீலக் கச்சினர், மென்னூ லேணிப் பன்மாண் சுற் றினர், நிலனக ழுளியர்]

சிறந்த கருமை நுண்வினை நுணங்கு அறல் — மிக்ககருமையினையுடைய நுண் ணியதொழில்களையுடைய நுண்மை தன்னிடத்தே பற்றுதலையுடையது,

என்றது இறைமுடிந்தசேலையென்றவாறு, ஆகுபெயர்.

குறங்கிடைப் பதித்த கூர் நுனைக் குறும்பிடி—அச்சேலைகட்டினமருங்கிற் குறங் கிடைத் தெரியாமற்கிடக்கும்படியழுத்தின கூரிய முனையினையுடைய சிலசொட்டை,

நிறம் கவர்பு புனைந்த நீலக் கச்சினர்—பலநிறங்களைத் தன்னிடத்தேகைக்கொ ண்டு கைசெய்யப்பட்ட நீலநிறத்தையுடைய கச்சினையுடையராய்,

என்றது - கட்டினசேலையிடத்தே செருகித் தொடையுடனேசேர்ந்துகிடக்குஞ் சொட்டையின்மேலேகட்டின நீலக்கச்சினரென்றவாறு அதுதெரியாமல் தொடை யுடனேசேர்ந்துகிடத்தலிற் குறங்கிடைப்பதித்தவென்றார்.

மென்னூல் ஏணிப் பன்மாண் சுற்றினர்— மெல்லிய நூலாற்செய்த ஏணியை அ ரையிலே பலவாய் மாட்சிமைப்படச்சுற்றிய சுற்றினையுடையராய்,

மதிற்றலையிலே உள்ளேவிழவெறிந்தார் கைபோல மதிலைப்பிடித்துக்கொள்ளும் படி இரும்பாற்சமைத்ததனைத் தலையிலேயுடைய நூற்கயிற்றை உள்ளேவிழவெறிந்து அதனைப் புறம்பேநின்றுபிடித்துக்கொண்டு அம்மதிலை ஏறுவராகலின், ஏணியென்றார்.

கலன் நசைஇக் கொட்கும்—பேரணிகலங்களைநச்சுதலாலே அவற்றையெடுத் தற்கு இடம்பார்த்துச்சுழன்றுதிரியும்,

கண் மாறு ஆடவர் ஒடுக்கம் ஒற்றி—விழித்தகண் இமைக்குமளவிலே மறைகின்ற கள்வர் ஒதுங்கியிருக்கின்ற இடத்தைவேய்த்து,

செருப்பைத்தொட்டுக் கச்சைக்கட்டி நூலேணியைச்சுற்றி உளியையெடுத்து வாளைப்பிடித்துக் கொட்குங்கள்வரென வினையெச்சவினைக்குறிப்புமுற்று வினையெச் சமாய்நிற்குமாறு, * "முன்னத்தி னுணருங் கிளவியு முளவே" என்னுஞ்சூத்திரத்தா னுணர்க.

வயக் களிறு பார்க்கும் வயப் புலி போல ஒற்றி (௬௪௨)—வலியகளிற்றை இரை யாகப்பார்க்கும் வலியபுலியைப்போலே வேய்க்கையினாலே,

துஞ்சாக் கண்ணர்—துயில்கொள்ளாத கண்ணையுடையராய்,

அஞ்சாக் கொள்கையர் — பேய்முதலியவற்றிற்கு அஞ்சாத கோட்பாட்டையு டையராய்,

---

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், ௬௬.

அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர்—களவிற்றொழிலையறிந்தவர்களாலே புகழப் பட்ட களவிற்றொழிலை ஆளுந்தன்மையையுடையராய்,

[செறிந்த, நூல்வழிப் பிழையா நுணங்குநுண் டேர்ச்சி, யூர்காப் பாளர்:] நுணங்கு செறிந்த நூல்வழிப் பிழையா நுண்டேர்ச்சி ஊர்காப்பாளர்— நுண்மைசெறிந்த நூலி ன்வழியைத்தப்பாத நுணணிய ஆராய்ச்சியையுடைய ஊரைக்காத்தற்றொழிலை ஆளுத லையுடையராய்,

களவுகாண்டற்குங் காத்தற்குங்கூறிய நூல்கள்போலவாமொன்றுர்

நூல்வழிப்பிழையா வூரெனக்கூட்டி நூலிற்சொன்னபடி சமைந்தவூரென்றுமாம்.

ஊக்கருங் கணையினர்—தப்பக்கருதிமுயல்வார்க்குத் தப்புதற்கரிய அம்பினையு டையராய்,

தேர் வழங்கு தெருவில் நீர் திரண்டு ஒழுக மழை அமைந்துற்ற அரைநாள் அம யமும்—தேரோடுந்தெருவின்கண்ணே நீர்திரண்டொழுகும்படி மழை மிகப்பெய்த நடுநாளாகிய பொழுதிலும்,

அசைவிலர் எழுந்து நயம்வந்து வழங்கலின்—காவலிற் றப்பிலராய்ப்போந்து விருப்பந்தோன்றி உலாவுகையினாலே,

[கடவுள் வழங்குங் கையறு கங்குலும்] இடையது (கூகக) கடவுள் வழங்கும் கை அறு கங்குல்—இரண்டாஞ்சாமத்திற்கும் நான்காஞ் சாமத்திற்கும் நடுவிட்டதா கிய தெய்வங்களுலாவுஞ்செயலற்றகங்குல்,

உம்மையை யாமமுமெனப் பின்னேகூட்டுக.

[அச்ச மறியா தேம மாகிய, மற்றை யாமம் பகலுறக் கழிப்பி]

மற்றையென்பதனை முந்தையாமஞ் சென்றபின்றை யென்பதனபின்னும் மூன் றாஞ்சாமத்தினோடு கூட்டுக.

அச்சமறியா தேமமாகிய என்றும், மற்றையென்றும் யாமமென்றும் பிரித்து முன்னே கூட்டுக.

பகல் உறக் கழிப்பி—இங்ஙனம் பகுத்தலுறும்படி போக்கி,

முந்தை யாமஞ் சென்ற பின்றை (கூஉ) மற்றைப (கூடுங) பானாட்கொண்டகங் குல்(கூகக) யாமத்தையும மற்றை (கூடுங) இடையதாகிய (கூகக) கடவுள்வழங்குங் கங்குல் (கூடுக) யாமத்தையும (கூடுங) கலியவிந்தடங்கப் (கூஉக) பள்ளியயர (கூஉங) உறங்க (கூஉஎ) வயிரியாமடியப் (கூஉஅ) பேயும் அணங்குமுருவுகொண்டு (கூஙஉ) கழுதொடுகொட்ப (கூஙங) ஊர்காப்பாளர் (கூசஎ) புலிபோலக் (கூசங) கண்மாறாடவர் ஒடுக்கமொற்றுகையினாலே (கூசஉ) கண்ணராய்க் கொள்கையராய் (கூசச) ஆண் மையராய்க் (கூசடு) கணையராய (கூசஎ) அரைநாளமயமும (கூசக) எழுந்துநயம்வந் துவழங்கலிற (கூடுo) பனிக்கடல்புரையப் (கூஉக) பாயலினவளாவோர் கணணி னிதுமபெப்ப (கூஙo) பகலுறக்கழிப்பி (கூடுங) யெனமுடிக்க

இங்ஙனங் கழிகின்றது இராப்பொழுதென்றுணராக

[போதுபிணி விட்ட கமழுநறும் பொய்கை] பிணி விட்ட போது கமழ நறும் பொய்கை— தளையவிழ்ந்த பூக்கள்நாறும் நறிய பொய்கைகளிலே,

[தாதுண் டும்பி போதுமுரன் றாங்கு:] போது தாது உண் தும்பி முரன்றாங்கு— அப்பூக்களில் தாதையுண்ணுந்தும்பிகள் பாடினாற்போல,

[ஓத லந்தணர் வேதம் பாட:] வேதம் ஓதல அந்தணர் பாட—வேததததை முற்ற ஓதுதலையுடையஅந்தணர் வேதத்திற றெயவங்களைத்துதிததவறறைச் சொல்ல,

[சீரினிது கொண்டு நரம்பினி தியக்கி, யாழோர் மருதம் பண்ண.] யாழோர் சீா இனிதுகொண்டு நரம்பு இனிது இயககி மருதம் பண்ண—யாழோா தாளவறுதியை இனிதாக உட்கொண்டு நரம்பை இனிதாகத்தெறித்து மருதத்தைவாசிக்க,

காழோர் கடுங் களிறு கவளம் கைப்ப— பரிக்காரர் கடியகளிற்றைக கவளத் தைத்தீற்ற,

நெடுந்தேர்ப் பணை நிலைப் புரவி புல்லுணாத் தெவிட்ட— நெடியதேரிலேபூணும் பந்தியினிற்றலையுடைய குதிரைகள் புல்லாகிய உணவைக குதட்ட,

பல் வேறு பண்ணியக கடை மெழுககு உறுப்ப—பண்டம்விற்பார் பலவாய் வேறுபட்ட பண்டங்களையுடைய கடைகளை மெழுகுதலைச்செய்ய,

கள்ளோர் களி நொடை நுவல—கள்ளைவிறபோா களிபபினையுடைய கள்ளிற்கு விலைசொல்ல,

களி - ஆகுபெயா.

இல்லோா நயந்த காதலா கவவுப பிணித துஞ்சி—கற்புடைமகளிா தாங்கள விரும்பின கணவருடைய முயக்கததிற்பிணிபபாலே துயில்கொண்டு,

புலாந்து விரி விடியல் எய்த விரும்பி—இருண்மாயநது கதிாவிரிகின்ற விடியற் காலத்தைப் பெறுகையினாலே அக்காலததது இல்லத்திறசெய்யததகுவனவற்றைச் செய்தற்குவிரும்பி,

கண் பொரா எறிகும் மின்னுக்கொடி புரைய — கண்ணை வெறியோடப்பண் ணிவிளங்கும் மின்னொழுஙகை யொப்ப,

ஒண் பொன் அவிர் இழை தெழிப்ப இயலி—ஒள்ளிய பொன்னாற்செய்துவிளங் குஞ் சிலம்புமுதலியனவொலிப்பப் புறம்போதுகையினாலே,

திண்சுவர் நல்லில் கதவங் கரைய — திணணியசுவாகளையுடைய நலலவகங்களிற கதவுகளொலிப்ப,

உண்டு மகிழ் தட்ட மழலை நாவிற் பழஞ்செருககாளா தழஙகு குரல் தோன்ற—கள்ளையுண்டு களிபபினைத் தம்மிடததேதடுத்துக்கொண்ட மழலைவாாத்தையையு டைய நாவினையுடைய பழையகளிப்பினையுடையாருடைய முழங்குகின்ற குரலக டோன்ற,

சூதர் வாழ்தத மாகதா நுவல—நின்றேததுவாாவாழத்த இருந்தேத்துவாா புக ழைச்சொல்ல,

வேதாளிகரொடு நாழிகை இசைபப — வைதாளிகா ஏததற துறைககுரியனவ ற்றை யிசைப்ப நாழிகைசொலலுவாா நாழிகைசொலல,

நாழிகை - ஆகுபெயா.

இமிழ் முரசு இரஙக—ஒலிககினற பள்ளியெழுசசிமுரசு ஒலிபப,

ஏறு மாறு சிலைப்ப—ஏறுகள் தம்முண்மாறுபட்டு முழஙக,

பொறி மயிா வாரணம் வைகறை இயம்ப—பொறியினையுடைய மயிரினையுடை ய கோழிச்சேவல் விடியறகாலததை அறிந்துகூவ,

யானையங்குருகின் சேவலொடு காமர் அன்னம் கரைய— வண்டாழ்ங்குருகி னுடைய சேவல்களோடே விருப்பத்தையுடைய அன்னச்சேவல்களும் தமக்குரிய பேடைகளை யழைக்க,

அணி மயில் அகவ—அழகியமயில்கள் பேடைகளையழைக்க,

பிடி புணர் பெருங்களிறு முழங்க—பிடியோடே கூடின பெரியயானைகள் முழங்க,

[முழுவலிக், கூட்டுறை வயமாப் புலியொடு குழும:] வயமாக் கூட்டுறை முழு வலிப் புலியொடு குழும — கரடிமுதலிய வலியவிலங்குகள் கூட்டிலேயுறைகின்ற மிக்கவலியையுடைய புலியுடனே முழங்க,

வானம் நீங்கிய நீனிற விசும்பின்—ஆகாயம் தனக்குவடிவின்றென்னுந் தன் மைநீங்குதற்கு மேகபடலத்தால நீலநிறத்தையுடைய ஆகாயத்தின்கண்ணே,

இனிச் செக்கர்வானம்போன விசும்பென்பாருமுளர்.

மின்னு நிமிர்ந்தனையராகி—மின்னுநுடங்கின தன்மையினையுடையராய்,

நறவு மகிழ்ந்து— மதுவையுண்டு,

மாண் இழை மகளிர் புலந்தனர் பரிந்த பருஉக்காழ் ஆரம் சொரிந்த முத்தமொ டு— மாட்சிமைப்பட்ட பேரணிகலங்களையுடைய மகளிர் கணவரோடேபுலந்தனரா யறுத்த பருத்தலையுடைய வடமாகிய ஆரஞ்சொரிந்த முத்தத்தோடே,

மகளிர் மகிழ்ந்து புலந்தனராய்ப் பரிந்த முத்தமென்க.

[பொன்சுடு நெருப்பி னிலமுக் கென்ன.] பொன் சுடு நெருப்பு உக்க நிலம் என் ன—பொன்னையுருக்குகின்ற நெருப்புச்சிந்தின நிலம்போல,

என்றது - கரியுந் தழலும் பொன்னுஞ் சிந்திக்கிடந்தாற்போலவென்றதாம்.

[அம்மென் குரும்பைக் காய்படு பிறவும்]

பிறவும்—முத்தொழிந்த மாணிக்கமும் மரகதமும் பொன்னும் மணிகளும்,

அம் மென் குரும்பைக் காய் — அழகிய மெத்தென்ற இளைதாகிய பசுமைப் பாக்கும்,

படு—விழுந்து,

தரு மணல் முற்றத்து—கொணடுவந்திட்ட மணலையுடைய முற்றத்தே,

அரி ஞிமிறு ஆர்ப்ப—வண்டுகளும் மிஞிறுகளும் ஆரவாரிப்ப,

மென்பூஞ் செம்மலொடு நன்கலம் சீப்ப— மெல்லிய பூவாடல்களுடனே நல்ல பூண்களையும் பெருக்கிப்போகடும்படி,

முத்தத்தோடே பிறவும் காயும் முற்றத்தேவிழுகையினாலே அவற்றையும் செம்ம லோடே கலங்களையும் அரிமிஞிறார்ப்பச் சீப்பவென்க.

இரவுத் தலைப் பெயரும் ஏம வைகறை—இராக்காலம் தன்னிடத்தில்நின்றும் போகின்ற எல்லாவுயிர்க்கும் பாதுகாவலாகிய விடியற்காலத்திலே,

பாடப் (௬௫௬) பண்ணக் (௬௫௮) கைபபத் (௬௫௯) தெவிட்ட (௬௬0) உறுப்ப (௬௬௧) நுவலக் (௬௬௨) கரையத் (௬௬௭) தோன்ற (௬௬௯) வாழ்த்த நுவல (௬௭0) இசைப்ப (௬௭௧) இரங்கச் சிலைப்ப (௬௭௨) இயம்பக் (௬௭௩) கரைய அகவ (௬௭௫) முழங்கக் (௬௭௬) குழுமச் (௬௭௭) சீப்பத் (௬௮௫) தலைப்பெயருமெனமுடிக்க.

மை படு பெருந்தோண் மழவர் ஓட்டி இடைப்புலத்து ஒழிந்த ஏந்து கோட்டு யானை—பிறர்தோள் குற்றப்படுதற்குக்காரணமான பெரியதோளையுடைய மழவரைக்

கெடுத்து அவாவிட்டுப்போகையினாலே போர்க்களத்தேநின்ற ஏந்தினகொம்பினை யுடைய யானைகளும்,

மழவர் - சிலவீரர்

பகைப்புலங் கவர்ந்த பாய்பரிப் புரவி—பகைவர்நாட்டிலே கைக்கொண்டுவந்த பாய்ந்துசெல்லும் செலவினையுடைய குதிரைகளும்,

[வேல்கோ லாக வாள்செல நூறிச், காய்சின முன்பிற் கடுங்கட் கூளியர், ஊர் சுடு விளக்கிற் றந்த வாயமும்] காய் சினம் முன்பிற் கடுங்கண் கூளியர் ஊர் சுடு விளக்கின் ஆள் செல நூறி வேல் கோலாகத் தந்த ஆயமும்—எரிகின்ற சினத்தையுடைத்தாகிய வலியினையும் தறுகண்மையினையுமுடைய வாய்க்கரையிலிருந்த வேட்டுவர் பகைவரூரைச்சுடுகின்ற விளக்கிலே நிரைகாத்திருந்தவீரரை மாளவெட்டி வேலை கோலாக அடித்துக்கொண்டுவந்த பசுத்திரளும்,

நாடு உடை நல்லெயில் அணங்குடைத் தோட்டி — அகநாட்டைச் சூழவுடைத்தாகிய முழுவரண்களிலிட்ட வருத்தத்தையுடைய கதவுகளும்,

நாடொறும் விளங்கக் கைதொழூஉப் பழிச்சி நாள் தர வந்த விழுக்கலம்—நாடோறும் தமக்குச்செல்வமிகும்படியாகக் கையாற்றொழுதுவாழ்த்தி நாட்காலத்தே திறையாகக்கொண்டுவர வந்த சீரியகலங்களும்,

அனைத்தும்—அத்தன்மையனபிறவும்,

கங்கை அம் பேரியாறு கடல் படர்ந்தாங்கு அளந்து கடை அறியா மதுரை (௬௯௯)—கங்கையாகிய அழகிய பெரியயாறு ஆயிரமுகமாகக் கடலிலேசென்றாற் போல அளந்து முடிவறியாத மதுரை,

வளம் கெழு தாரமொடு— வளப்பம்பொருந்தின அரும்பண்டங்களோடே,

[புத்தே ளுலகங் கவினிக் காணவர] புத்தேள் உலகம் காணவரக் கவினி—தேவருலகம்வந்து காணுதலுண்டாகத் தான் அழகைப்பெற்று,

கூற்றக் கொண்டோர் (௬௩௩) அச்சமறியாதேமமாகிய (௬௫௨) மிக்குப்புகழெய்திய மதுரையென்க.

பாடல்சான்ற நன்னாட்டு நடுவணதாய (௩௩௧) இருபெருநியமத்து (௩௬௫) நாளங்காடிக்கம்பலை (௪௩௦) நாடாததன்றேயாய (௪௨௮) அல்லங்காடியழிதருகம்பலை (௫௪௪) புள்ளிமிசையெழுந்தற்றேயாய (௫௪௩) ஞாயிறு (௫௪௬) குன்றஞ்சேருகையினாலே (௫௪௭) மாலை (௫௫௮) புகுந்து (௫௫௭) பின்னாநீங்க (௫௫௮) முந்தையாமஞ்சென்ற *பின்றை (௬௨௦) மற்றைப் (௬௫௩) பாணுடகொண்டகங்குல் (௬௩௧) யாமத்தையும் மற்றை (௬௫௩) யிடையதாகிய (௬௩௧) கடவுள் வழங்குங்கங்குல் (௬௫௧) யாமத்தையும் பகலுறக்கழிப்பிச் (௬௫௩) சீப்ப (௬௮௫) இராக்காலந் தன்னிடத்தினின்றும் போகின்றவைகறையிலே (௬௮௬) வளங்கெழுதாரத்தோடே (௬௯௭) யானையும் (௬௮௮) புரவியும் (௬௮௯) ஆயமும் (௬௯௨) தோட்டியும் (௬௯௩) கலமும்அனைத்தும் (௬௯௫) கங்கையாறுகடற்படர்ந்தாற்போல (௬௯௬) அளந்துமுடிவறியாத (௬௯௭) மதுரை (௬௯௯) யென்க

கவினிப் (௬௯௮) புகழெய்திய (௬௯௯) பெரும்பாணிருக்கை (௩௪௨) முதலியவற்றையுடைய மதுரை (௬௯௯) யென்க.

மிக்குப் புகழ் எய்திய பெரும்பெயர் மதுரை— மிகுத்துப் புகழைப்பெற்ற பெரும்பொருளையுடைய மதுரை,

பெரும்பொருளென்றது வீட்டினை; * "பெறற்கரும் பெரும்பயா பலர்கை யிரீஇய"
என்றார் பிறரும்.

[சினைதலை மணந்த சுரும்புபடு செந்தீ, யொண்பூம் பிண்டி யவிழ்ந்த காவில்:] சினை தலை மணந்த பிண்டிச் சுரும்பு படு செந்தீ ஒண்பூ அவிழ்ந்த காவில்—கொம்புகள் தம்மிற்றலைகூடின அசோகினுடைய சுரும்புகளுண்டாஞ் செந்தீப்போலும் ஒள்ளியபூவிரிந்த பொழிலிடத்தே,

சுடர் பொழிந்து ஏறிய விளங்கு கதிர் ஞாயிற்று இலங்கு கதிர் இளவெயில் தோன்றி யன்ன—ஒளியைச்சொரிந்து அத்தகிரியிலே போகவிளங்குகின்ற கிரணங்களையுடைய ஞாயிற்றினுடைய விளங்குங்கிரணங்களின் இளவெயில் தோன்றினாலொத்த மகளிர் (௭௧௨),

என்றது-பூத்த அசோகம்பொழிலிடத்தே இளவெயில் எறித்தாற்போலப் புணர்ச்சியாற்பெற்ற நிறத்தையுடைய மகளிரென்க

[தமனியம் வளைஇய தாவில் விளங்கிழை] தாவில் தமனியம் வளைஇய விளங்கிழை— ஓட்டற்ற பொன் நடுவேழுத்தின மணிகளைச்சூழ்ந்த விளங்குகின்ற பேரணிகலங்களையும்,

நிலம் விளக்குறுப்ப மேதகப் பொலிந்து— நிலத்தையெல்லாம் விளக்கமுறுக்கும்படி கற்புமேம்படப் பொலிவுபெற்று,

மயிலோடு அன்ன சாயல்— மயிலோடு ஒருதன்மைத்தாகிய மென்மையினையும்,

மாவின் தளிர் ஏர் அன்ன மேனி — மாவின்தளிரினதழகையொத்த நிறத்தினையும்,

தளிர்ப் புறத்து ஈர்க்கின் அரும்பிய திதலையா— தளிரினது புறத்தில் ஈர்க்குப் போலத் தோன்றிய திதலையையுடையராய்,

கூர் எயிறு—கூரிய எயிற்றினையும்,

ஒண்குழை புணரிய வணர் தாழ் காதின் — ஒள்ளிய மகரக்குழைபொருந்திய வளவிய தாழ்ந்த காதினையும்,

[கடவுட்கயத் தமன்ற சுடரிதழத் தாமரைத், தாதுபடும் பெரும்போது புரையும் வாண் முகத்து:]கயத்து அமன்ற கடவுட் சுடர் இதழ்த் தாமரைத் தாது படும் பெரும் போது புரையும் வாள் முகத்து— குளத்திலே நெருங்கின தெய்வங்கட்குரிய நெருப்புப்போலுமிதழ்களையுடைய தாமரையினது தாதுண்டாம்பெரியபூவை ஒக்கும் ஒளியினையுடைய முகத்தினையும்,

ஆய் தொடி மகளிர்—நன்றாகவாராய்ந்த தொடியினையுமுடைய மகளிருடைய,

பொலிந்து (௭0௫) திதலையராய (௭0௮) இழையினையும் (௭0௪) சாயலினையும் (௭0௬) மேனியினையும் (௭0௭) எயிற்றினையும் (௭0௮) காதினையும் (௭0௯) முகத்தினையும் (௭௧௧) தொடியினையுமுடைய மகளிர் (௭௧௨) என்க

நறுந்தோள் புணர்ந்து— நறிய தோளைமுயங்கி,

கோதையிற் பொலிந்த சேக்கைத் துஞ்சி— தூக்குமாலைகளாற் பொலிவுபெற்ற படுக்கையிலே துயில்கொண்டு,

புணர்ந்து பின்னைத் துயிலுங்காலத்துத் தனியேதுயிலுதல் இயல்பென்பதுதோன்றப் புணர்ந்துதுஞ்சியென்றார்.

---

* பதிற்றுப்பத்து, ஒன்பதாம்பத்து, ௧0

* "ஐந்நூற்றுடுத்த செல்வத் தமளியி னியற்றி" என்றார் பிறரும்.

திருந்து துயில் எடுப்ப இனிதின் எழுந்து — செல்வத்தைநினைந்தின்புறுகின்ற பற்றுள்ளம் உறக்கத்தையுணர்த்துகையினாலே அதுநினைத்தது இனிதாகப் பின் எழுந்து,

என்றது - தன் செல்வம் இடையறாதொழுகுதற்கு வேண்டுங் காரியங்களை விடியற்காலத்தே மனத்தாலாராயவேண்டுதலின், துயிலெடுப்புதற்கு இது காரணமாயிற்று. † "வைகறை யாமந் துயிலெழுந்து தான்செய்யு, நல்லறனு மொண்பொருளுஞ் சிந்தித்து" என்றார் ஆசாரக்கோவையில்

இனி நன்றாகிய துயிலென்றுமாம்

[திண்காழ் ஆரம் நீவிக் கதிர்விடு, மொண்காழ் ஆரங் கவைஇய மார்பின், வரிக்கடைப் பிரசம் மூசுவன மொய்ப்ப, வெருத்தந் தாழ்ந்த விரவுப்பூந் தெரியற், பொலஞ்செயப் பொலிந்த நலம்பெறு விளக்கம், வலிகெழு தடக்கைத் தொடியொடு சுடர்வரச், சோறமை வுற்ற நீருடைக் கலிங்க, முடையணி பொலியக் குறைவின்று கவைஇ, வல்லோன் றைஇய வரிப்புனை பாவை, முருகியன் றன்ன வுருவினை யாகி]

வல்லோன் தைஇய வரிப் புனை பாவை முருகு இயன்றன்ன உருவினையாகி— சித்திரகாரி பண்ணப்பட்ட எழுதிக்கைசெய்த பாவையிடத்தே தெய்வத்தன்மை நிகழ்ந்தாற்போன்ற வடிவினையுடையையாய்,

என்றதனால், நாட்காலையில் அரசர்க்குரிய கடன்கள்கழித்துத் தெய்வவழிபாட்டோடிருந்தமை கூறினார்.

திண் காழ் ஆரம் நீவிக் கதிர் விடும் ஒண் காழ் ஆரம் கவைஇய மார்பின்—திண்ணிய வயிரத்தையுடைய சந்தனத்தைப்பூசி ஒளிவிடும் ஒள்ளியவடமாகிய முத்துச் சூழ்ந்த மார்பிலே,

நீவியென்னுஞ் செய்தெனெச்சம் பிறவினைகொண்டது.

வரிக்கடைப் பிரசம் மூசுவன மொய்ப்ப—வரியையுடைத்தாகிய பின்னையுடைய தேனினமும் மற்றும் மொய்க்கப்படுவனவாகிய வண்டுமுதலியனவும் மொய்க்க

எருத்தம் தாழ்ந்த விரவுப் பூந்தெரியல்—கழுத்திடத்தினின்றுந் தாழ்ந்த ...லையுடைய பூமாலையையுடைத்தாகிய மார்பென (எ௬௬) முன்னே கூட்டு

பொலம் செயப் பொலிந்த நலம் பெறு விளக்கம் வலி கெழு ...யொடு சுடர் வர — பொன்னாற்செய்கையினாலே பொலிவுபெ... மோதிரம் வலிபொருந்தின பெரியகையில் வீரவளையோடு விளக்கமுற,

சோறு அமைவுற்ற நீருடைக் கலிங்கம்—சோறு தன்னிடத்தே பொருந்து... ற்ற நீரையுடைய துகில்,

---

* சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், ௬௪௬ — "ஐந்நூற்றுடுத்த செல்வத் தமளிநூற் றியற்றிய பூம்பட் - டெந்திர வெழினி வாங்கி ... வாசச் செப்புஞ் - சந்தனச் சாந்தச் செப்புந் தண்மலர்மாலை பெய்த - விந்தர நீ... செப்பு மிளையவ ரேந்தி னாரே"

† ஆசாரக்கோவை, ௫ — "வைகறை யாமந் துயிலெழுந்து தான்செய்யு - நல்லறமு மொண்பொருளுஞ் சிந்தித்து வாய்வதில் - தந்தையுந் தாயுந் தொழுதெழுக வென்பதே - முந்தையோர் கண்ட முறை"

என்றது கஞ்சியிட்ட துகிலை

உடை அணி பொலியக் குறைவின்று கவைஇ — உடைக்குமேலணியும் அணிகலங்களாலே அதுபொலிவுபெறும்படி தாழ்வின்றாகவுடுத்து,

புணர்ந்து துஞ்சி எழுந்து உருவினையாகி மார்பிலே பிரசமும் மூசுவனவும் மொய்ப்ப விளக்கம் தொடியொடுசுடர்வரக் கலிங்கந்தைக்கக் கவைஇ யெனமுடிக்க.

வருபுனற் கற்சிறை கடுப்ப இடையறுத்து ஒன்னார் ஓட்டிய செருப்புகல் மறவர் — மிக்குவருகின்ற யாற்றுநீரிடத்துக் கல்லணைநின்று தாங்கினாற்போலத் தம்படையைக்கெடுத்து மிக்குவருகின்ற பகைவர்படையை நடுவேதவிர்த்து அவரைக் கெடுத்த போரைவிரும்பும் படைத்தலைவர்,

* "வருவிசைப் புனலைக் கற்சிறை போல, வொருவன் றாங்கிய பெருமை யானும்" என்னும் வஞ்சித்துறை கூறினார். இதுகூறவே முன்னர் மாராயம்பெற்றவர்களே இப்போரைச்செய்வரென்பது ஆண்டுப் பெறலாமாகலின், இவர்கள் ஏனாதிப்பட்டமுதலிய சிறப்புப்பெற்ற படைத்தலைவரென்பது பெறலாம்.

வாள் வலம் புணர்ந்த நின் தாள் வலம் வாழ்த்த — வாள்வெற்றியைப் பொருந்தின நினது முயற்சியின்வெற்றியை வாழ்த்த,

வில்லைக் கவைஇக் கணை தாங்கு மார்பின் மா தாங்கு எழூஉத் தோள் மறவர்த் தம்மின் — வில்லை நிரம்பவலிக்கையினாலே தன்னுள்ளேயடக்கிக்கொண்ட அம்பின் விசையைத்தாங்கும் மார்பினையுங் குதிரையைச்செலுத்தி வேண்டுமளவிலே பிடிக்கும் வலியையுடைய தோளினையுமுடைய வீரரைக்கொணர்மின்,

தம்மின் - முன்னிலை முற்றுவினைத்திரிசொல். இது தும்பையிற் † குதிரைநிலை கூறிற்று. கணைதாங்குமார்பு கூறவே கணை துணையுறமொய்த்தலுங் கூறிற்று.

கல் இடித்து இயற்றிய இட்டு வாய்க் கிடங்கின் நல்லெயில் உழந்த செல்வர்த் தம்மின் — கற்றரையைப் பொளிந்துபண்ணின இட்டிதாகிய நீர்வரும்வாயையுடைய கிடங்கினையுடைய முழுமுதலரணத்தேநின்று வருந்தின வீரச்செல்வத்தையுடையாரைக் கொணர்மின்,

இஃது ‡ "வாள்செரு வீழ்ந்த மாற்றான் மறனும்" என்னும் புறத்துழிஞைத்துறை கூறிற்று.

கொல் ஏற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த மாக்கண் முரசம் ஓவில கறங்க — மாறுபாட்டையேற்றுக் கோற்றொழிலையுடைய ஏற்றினது செவ்வித்தோலை மயிர் சீவாமற்போர்த்த பெரிய கண்ணையுடையமுரசம் மாறாமனின்று ஒலியாநிற்க,

எரி நிமிர்ந்தன்ன தானை நாப்பட் பெருநல் யானை போர்க்களத்து ஒழிய விழுமிய வீழ்ந்த குரிசிலர்த் தம்மின் — நெருப்புநடந்தாற்போன்ற பகைவர்படைக்குநடுவே சென்று பெரிய நல்ல யானையைப் போர்க்களத்தே படவெட்டிச் சீரிய புண்ணினால்வீழ்ந்த தலைவரைக் கொணர்மின்,

இது § "களிறெதிர்ந் தெறிந்தோர் பாடு" என்னும் தும்பைத்துறை கூறிற்று. பாடு, பெருமையாகலின் அதுதோன்ற ஈண்டுக் குரிசிலென்றார்.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், அ

† ,, ,, ,, கஎ

‡ ,, ,, ,, க௩

§ ,, ,, ,, கஎ

முறைகருதுபு (எஙஅ)—முன்னுள்ளோர் காத்தமுறைமையை நாளும் உட்கொண்டு,

புரையோர்க்கு—நட்பிற் குற்றந்தீர்ந்தோர்பொருட்டு,

[தொடுத்த பொலம்பூந் தும்பை, நீயா ரொன்னாது முறைகருதுபு சூட்டி]

தொடுத்த பொலம் பூந்தும்பை சூட்டி—கட்டப்பட்ட பொன்னாற்செய்த பூவினையுடைய தும்பையைச்சூட்டி ஏவுகையினாலே,

நான்காமுருபு ஈண்டு அதற்பொருட்டு

காழ் மண்டு எஃகமொடு கணை அலைக் கலங்கி—காம்பு குழைச்சினுள்ளே செருகின வேல்களுடனே அம்புகளுஞ்சென்று நிலைகுலைத்தலின் நிலைகலங்கி,

[பிரிபிணை யரிந்த நிறஞ்சிதை கவயத்து, வானத் தன்ன வளநகர் பொற்ப, நோன்குறட் டன்ன வூன்சாய் மார்பி, னுயர்ந்த வுதவி யூக்கலர்த் தம்மின்]

பிரிபு இணை அரிந்த நிறம் சிதை கவயத்து ஊன் சாய—பலவாய்ப் பிரிந்திணைந்த சந்துவாய்கள் அற்றுப் பழைய நிறங்கெட்ட கவயத்தோடே ஊன்கெட்ட,

நோன் குறட்டன்ன மார்பின்—வலிய சகடையின் குறட்டைப்போதர மார்பினையுடையராகிய ஊக்கலரெனக (எசுகூ)

வேலும் அம்பும்பட்டு எங்கும் உருவிநிற்றலிற் குறடும் அதிற்றைத்த உருளிகளும் போன்றன மார்புகள் குறடு பட்டடைமரமுமாம்

வானத்தன்ன வளநகர் பொற்ப உயர்ந்த உதவி ஊக்கலர்த் தம்மின்—தேவருலகையொத்த செல்வத்தையுடைய ஊர்களை முன்புபோலே நடப்புக்கொண்ட அகத்துழிஞையோர் ஆளும்படி உயர்ந்த உதவியைச்செய்த முயற்சியையுடையோரைக் கொணர்மின்,

என்றது—தமக்கு நட்பாய் முற்றப்பட்டோரை முற்றுவிடுவித்தற்குத் தாமேயுதவலின், மைந்துபொருளாகச்சென்று அமர்முற்றுவிடுவித்து அவ்வூரை அவர்க்கு மீட்டுக் கொடுத்தமை கூறிற்று இதனானே உழிஞைப்புறத்துத் தும்பைகூறினார், என்னை? * ''கணையும் வேலுந் துணையுற மொய்த்தலிற், சென்ற வுயிரி னின்ற யாக்கை'' கூறுதலானும் வளநகர் பெறும்படி உயர்ந்தவுதவிசெய்தமை கூறுதலானும்.

நிவந்த யானைக் கணநிரை கவர்ந்த புலர்ந்த சாந்தின் விரவுப் பூந்தெரியற் பெருஞ்செய் ஆடவர்த் தம்மின்—உயர்ந்த யானைத்திரளின் ஒழுங்குகளைக் கைக்கொண்ட பூசிப்புலர்ந்தசாந்தினையும், விரவுதலையுடைய வியன்பூமாலையினையும், பெரியசெய்கைகளையுமுடைய மண்டலங்களையாளினவரைக் கொணர்மின்,

[பிறரும், யாவரும் வருக வேனோருந் தம்மென, வரையா வாயில் செறாஅது]

ஏனோரும் தம்மென வரையா—மண்டபத்தாரையும், அறங்கூறவையத்தாரையுங் கொணர்மினென்ன வரைந்துகூறி,

வாயில் செறாஅது பிறரும் யாவரும் வருக என—வாயிலிடத்துத் தகையாமல் இவர்களைப்போலவாரும் படையாளர்முதலியோரும் வருவாராகவெனக் கூறி,

இருந்து—இங்ஙனம் எளியையாயிருந்து,

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், கரு.

[பாணர் வருக பாட்டியா வருக, யாணாப புலவரொடு வயிரியா வருகென:] யாணாப் புலவரொடு பாணா வருக பாட்டியா வருக வயிரியர் வருக என—கவி யாகிய புதுவருவாயினையுடைய புலவரோடே பாணா வருவாராக, பாணிச்சியா வருவாராக, கூத்தா வருவாராகவென அழைத்து,

[இருங்கிளை புரக்கு மிரவலாக கெல்லாம், கொடிஞ்சி நெடுந்தோ களிறொடும் வீசி]

இருங்கிளை புரக்கும இரவலாக்கு எல்லாம் நீா யாரெனறுதி (எசு௮) கொடிஞ்சி நெடுந்தோ களிறொடும வீசி—அவாகள் சுற்றத்தாராய அவாகளபாதுகாக்கும் பெரிய இரவலாககெல்லாம நீரயாவரெனறு அவாகளைக்கேளாதே அவாகள்காட்டின அளவைககொண்டு கொடிஞ்சியையுடைய நெடியதோகளை யானைகளோடுங் கொடுத்து,

கொடிஞ்சி - தாமரைப்பூவாகப்பணணித தோததட்டின்முனனே நடுவது.

களந்தோறும் களளரிபப—இடந்தோறுங களளையரிபப,

மரந்தோறும மை வீழ்பட—மரததடிகடோறும செம்மறிக்கிடாய படுப்ப,

நிண ஊன சுட்டு உருக்கு அமைய—நிணத்தையுடைய தசைகள் சுடுதலாலே அநநிணம் உருகுதல்பொருந்த,

நெய் கனிந்து வறை ஆரபப—நெய் நிறையபபெறறுப் பொரிக்கறிகளாரவாரிப்ப,

குரூஉக குய்ப் புகை மழை மங்குலிற பரந்து தோன்ற—நிறத்தையுடைய தாளிப்பிலெழுந்த புகை மழையையுடைய திசைகள்போலே பரந்து தோன்றப்பட்டு,

வியன் நகரால்—அகற்சியையுடைய வீடுகளாலே மிக்குப்புகழெய்திய மதுரை (சுகசு) யென முன்னேகூட்டுக

நகா - வீடுகள்

அரிப்ப வீழ்ப்ப அமைய ஆரபபத் தோனறப்பட்டு அகறசியையுடைய வென உடைமையொடு முடிக்க

[பல்சாலை முதுகுடுமியி, னலவேள்வித துறைபோகிய, தொலலாணை நல்லாசிரியர், புணாகூட்டுண்ட புகழ்சால சிறப்பின]

நல் வேள்வித் துறை போகிய—நலல யாகஙகட்குக்கூறிய துறைகளெலலாம் முன்னா முறறமுடித்துவிட்ட,

தொல்லாணை நலலாசிரியா புணா கூட்டு உண்ட—பழைய ஆணைகளையுடைய நல்லஆசிரியர் தாஙகள பின்புகூடின கந்தழியாகிய கொள்ளையை அவரிடத்தே பெறறு அனுபவித்த,

புகழ் சால் சிறப்பிற பல்சாலை முதுகுடுமியின—புகழ்ச்சியமைநத தலைமையினையுடைய பல்யாகசாலை முதுகுடுமிபபெருவழுதியைபபோலே நீயும நலலாசிரியரிடத்தே கேட்டினை (உ0௮) என முனனேகூட்டுக

என்றது - அந்தணாகளுக்குக்கூறியமுறைமைய முனனுளள கருமஙகளைமுடித்துப பின்னர்த் தததுவங்களையாராய்ந்து மெய்பபொருளுணாந்து வீட்டின்பமெய்திய ஆசிரியரிடத்தே தானும் அம்முறையேசெனறு வீட்டினபததைப்பெறற குடுமியென்றவாறு

நிலம் தரு திருவின் நெடியோன போல—எல்லாநிலஙகளையும தன்னிடத்தே காட்டின பெருஞ்செல்வததையுடைய மாயோனைபபோலத் தொல்லாணையையுடைய நல்லாசிரியா (எசுக) என முனனேகூட்டுக

என்றது - கண்ணன் எப்பொருளும் தானாயிருக்கின்றபடியைக் காட்டி ஸ்ரீ கீதையருளிச்செய்து எல்லாரையும் போதித்தாற்போல எல்லாரையும்போதிக்கவல்லராகிய ஆசிரியரென்றவாறு

ஆனை - ஆகக்கினை

[வியப்புஞ் சால்புஞ் செம்மை சான்ேறா, பலர்வாய்ப்ப புகரறு சிறப்பிற ரேனறி]

வியப்பும்—நீ அவ்வாசிரியரிடத்துப்பெற்ற கருசழியின அதிசயமும

சால்பும்—பின்பு பெற்றமைந்த அமைதியும,

புகர் அறு சிறப்பிற் செம்மை சான்றோர் பலர் வாய்த்த தோனறி—குற்றமற்ற சிறப்புக்களையுடைய தலைமைகளெல்லாம அமைந்தோரபலரும் தம்மிலிருந்து சொலலப்பட்டு,

பலர்வாயென்பதனேடும் பினவரும் புகரறுசிறப்பைக கூட்டுக. புகரறுசிறப்பிற் செம்மையாவன * "நாலிரு வழக்கிற ருபத பக்கமும" எனபுழிக கூறபபட்டவை.

அரிய தந்து—இவ்விடத்திறகு அரியவாய் வேறறுப்புலத்திலுள்ள பொருள்களைக் கொணர்ந்து எல்லாரக்குங்கொடுத்து,

குடி அகறறி—நின்னாட்டிலவாழுங் குடிமக்களைப் பெருக்கி,

என்றது செல்வமுண்டாக்கியென்றதாம்

பெரிய கறறு—நறபொருள்களை விளங்கக்கூறிய நூல்களைக் கறறு,

இசை விளக்கி—நின்புகழை எவ்வுலகத்தும் நிறுத்தி,

முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்—கடனடுவேதோன்றுகினற ஞாயிற்றையொக்கவும்,

பல் மீன் நடுவண் திங்கள் போலவும்—பலமீன்களுக்குநடுவே தோன்றுகின்ற நிறைமதியைப்போலவும்,

பூத்த சுற்றமொடு பொலிந்து இனிது விளங்கி—நீ பொலிவுபெற்ற சுற்றத்தாருடனே பொலிவுபெற்று இனிதாகவிளங்கி,

மண்டிலமாக்கள் தண்டத்தலைவர் முதலிய சுற்றத்தோரக்குநடுவே ஞாயிறுபோலவிளங்கிப பலகலைகளைக கற்றோரிடத்தே மதிபோலவிளங்கியென்க

பொய்யா நல்லிசை நிறுத்த புனை தார பெரும்பெயர் மாறன் தலைவனாக—உண்மையான நலலபுகழை உலகிலேநிறுத்தின கைசெய்த மாலையினையும் பெரிய பெயரினையுமுடைய மாறன்முதலாக,

மாறன் - இவன்குடியிலுள்ள பாண்டியன, அன்றி ஒருகுறுநிலமன்னனென்றலுமொன்று

கடந்து அடு வாய் வாள் இளம் பல் கோசர்—பகைவரை வென்றுகொல்லுந் தப்பாதவாளினையுடைய இளைய பலராகியகோசரும்,

[இயனெறி மரபினின் வாய்மொழி கேட்பப, பொலம்பூ ணைவ ருட்படப் புகழ்ந்த, மறமிகு சிறப்பிற குறுநில மன்னர, வரும பிறரும்]

புகழ்ந்த பொலம பூண் ஐவர் உட்பட— எல்லாரும் புகழப்பட்ட பொன்னாற்செய்த பேரணிகலங்களையுடைய ஐம்பெருங்கேளிருமுட்பட,

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல, உ௦.

மறமிகு சிறப்பிற் குறுநிலமன்னர் அவரும்—மறமிக்க தலைமையினையுடைய குறுநிலமன்னராகிய அவரும்,

பிறரும்—கூறுதொழிந்தோரும்,

இயல் நெறி மரபின் நின் வாய்மொழி கேட்ப—நடக்கின்ற நெறிமுறைமையினாலே நின்னுடைய உண்மையான மொழியைக் கேட்டு அதன்வழியே நடக்க,

[துவன்றிய பொற்பு, விளங்கும் புகழவை நிற்புகழ்ந் தேத்த] பொற்பு விளங்கும் புகழ் அவை துவன்றி நிற் புகழ்ந்து ஏத்த—பொலிவுவிளங்குகின்ற புகழினையுடைய அறங்கூறவையத்தார் நெருங்கி நின்னுடைய அறத்தின்றன்மையைப் புகழ்ந்து வாழ்த்த,

[விளங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய, மணங்கமழ் தேறன் மடுப்ப நாளு, மகிழ்ந்து]

விளங்கிழை மகளிர் பொலம் கலத்து ஏந்திய மணம் கமழ் தேறல் மடுப்ப மகிழ்ந்து—விளங்குகின்ற பூணினையுடையமகளிர் பொன்னாற்செய்த வட்டில்களிலேயெடுத்த மணநாறுகின்ற காமபானத்தைத்தர அதனையுண்டு மகிழ்ச்சியெய்தி மகளிர்தோள் புணர்ந்து (௭௧௨) என முன்னேகூட்டுக.

நாளுமென்பதனைப் பின்னேகூட்டுக. மணங்கமழ் தேறலென்றது காமபானமாயிற்று.

[இனிதுறைமதி பெரும, வரைந்துநீ பெற்ற நல்லூழியையே] பெரும நல்லூழியை வரைந்து நீ பெற்ற நாளும் இனிது உறைமதி—பெருமானே, நன்றாகிய ஊழிக்காலத்தை இத்துணைக்காலமிருத்தியென்பப் பால்வரைதெய்வத்தாலே வரையப்பட்டு நீ அறுதியிட்டுப்பெற்ற நாண்முழுதும் இனிதாக இருப்பாயென்க.

நல்லூழியென்றார், கலியூழியல்லாத ஊழியை. உம்மை - முற்றும்மை.

உயர்ந்தோர் மருகனே (௨௩), நெடியோனும்பலே (௬௧), பொருநனே (௪௨), கொற்றவனே (௮௮), வெல்போரே (௧௦௫), புகழ்வேந்தே (௧௩௦), நசைப்பொருநனே (௧௩௮), போரேறே (௧௪௪), குரிசிலே (௪௫௧), நீ கொற்றவர்தங்கோனாகுவை (௭௪), வாய்நட்பினை (௧௧௮), பணிந்தொழுகலை (௨௦௧), பழிநமக்கொழுகவென்னாய் (௨௦௪), இசைவேட்குவை (௨௦௫), அனையை (௨௦௬), நின்னொற்றம் (௧௩௪) பிறையிற் (௧௩௩) சிறக்க (௧௩௪), நின்செவ்வராக்கம் (௧௩௫) மதியிற் (௧௩௫) கெடுக (௧௩௬), நின்னல்லிசை கெடாது நிலைஇயர் (௨௦௬), இனி நீ பாடல்சான்ற நன்னாட்டு நடுவணதாய் (௩௩௧) இருபெருநியமத்து (௩௬௫) நாளங்காடிக்கம்பலை (௪௩௦) நாடாத்தன்றேயாய் (௪௨௮) அல்லங்காடி அழிதருகம்பலை (௫௪௪) பள்ளினிசையெழுந்தற்றேயாய் (௫௪௩) ஞாயிறு (௫௪௬) குன்றஞ்சேருகையினாலே (௫௪௭) மாலை (௫௫௮) புகுந்து (௫௫௭) பின்னர் நீங்க (௫௫௮) முந்தையாமஞ் சென்றபின்றை (௬௨௦) மறைப்ப (௬௨௫) பாணுட்கொண்ட கங்குல் (௬௩௧) யாமத்தையும் மறை (௬௩௬) இடையதாகிய (௬௩௧) கடவுள்வழங்குங் கங்குல் (௬௫௧) யாமத்தையும் பகலுறக்கழிப்பிப (௬௫௩) பாட்டப (௬௫௬) பண்ணக (௬௫௮) கைப்பத (௬௬௨) தெவிட்ட (௬௬௦) உறுப்ப (௬௬௧) துவலக (௬௬௨) கரையத் (௬௬௭) தோன்ற (௬௬௩) வாழ்த்த நுவல (௬௭௦) இசைப்ப (௬௭௧) இரங்கச் சிலைப்ப (௬௭௨) இயம்பக (௬௭௩) கரைய அகவ (௬௭௫) முழங்க (௬௭௬) குழுமச் (௬௭௭) சீப்ப (௬௮௫) இராக்காலந் தன்னிடத்தினின்றும்போகின்ற வைகறையிலே (௬௮௬) வணங்கெழு தாரத்தோடே (௬௮௭) யானையும் (௬௮௮) புரவியும் (௬௮௯) ஆயமும் (௬௯௨)

தோட்டியுங் (௬௯௩) கலமுமனைததும் (௬௯௫) கஙகையாறுகடறபடாந்தாங்கு (௬௯௬) அளந்து கடையறியாத (௬௯௭), கவினிப் (௬௯௮) புகழெய்திய (௬௯௯), பெரும்பாணிருக்கையினையும் (௫௪௨), கிடஙகினையும் (௫௫௧), புரிசையினையும் (௫௫௨), வாயிலினையு (௫௫௬) முடைய நான்மாடததான் மலிநதபுகழைககூடுதலையுடைய (௪௨௯) மதுரையிலே (௬௯௯) மகளிர தெறறைமடுபப (௭௮௦) மகிழ்ந்து (௭௮௧) மகளிாநறுந்தோளைப்புணாந்து (௭௧௨) சேககைததுஞசி (௭௧௫) யெழுநது (௭௧௪) உருவினையாகி (௭௨௪) மார்பிலே (௭௧௬) பிரசமுமமூசுவனவுமொயபப (௭௧௭) விளக்கந் (௭௧௮) தொடியொடுசுடாவரக (௭௨௦) கலிஙகததைக (௭௨௧) கவைஇ (௭௨௨) மறவா (௭௨௬) தாள்வலமவாழததத (௭௨௭) மாறனமுதலாகக (௭௭௨) கோசரும (௭௭௩) ஐவருமுட்படக (௭௭௫) குறுநிலமனனராகிய (௭௭௬) அவரும்பிறரும (௭௭௭) நினவாயமொழிகேட்ப (௭௭௪) நிறபுகழநதேததத (௭௭௮) மறவாததமமின (௭௨௯), செலவாததமமின (௭௫௧), குரிசிலாததமமின் (௭௫௬), ஊககலாததமமின (௭௪௫), பெருஞசெயாடவாததமமின் (௭௪௬), ஏறுேருந ததமமெனச் (௭௪௭) சிலைாவரைநதுகூறி (௭௪௮) வாயிலிடநதுத தகையாமற(௭௪௮) பிறரும (௭௪௬) யாவருமவருகவெனப பொதுபபடககூறி (௭௪௭) நாளோலககமிருககுமணடபததேயிருநது (௭௪௮) புலவரொடு (௭௫௦) பாணாவருக, பாட்டியாவருக (௭௪௬), வயிரியா வருகவெனவழைதது (௭௫௦) அவாகாடடின இரவலாககெலலாம் (௭௫௧) நீரயாரெனனுநதே (௭௫௮) தெளிரக களிநெருடுவீசி (௭௫௨) அரியதந்து குடியகறறிப (௭௬௬) பெரியகறறு இசைவிளககி (௭௬௭) ஞாயிறுபோலவுந் (௭௬௮) திஙகள்போலவுஞ (௭௬௯) சுறறமொடு பொலிந்து விளஙகி (௭௭௦) வாழி (௨௦௮), அஙஙனம வாழநது பிறபபற முயலாது பயனினறிக்கழிநதோா (௨௩௭)திரையிடுமணலினும் பலரேகாண (௨௩௬), அபபயனினமையாலே (௨௩௮) அணணலே (௨௦௭) நீயும் அவ்வாறுகழியலாகாதெனறு இவவாழ்விறபெரிதாயிருப்பதொரு பொருளை யானகூறுவேன (௨௦௭), அஃது என்று றகாட்டுதலரிது, அதனை நெடியோனபோலத (௭௬௫) தொலலாணையினையுடைய நலலாசிரியா (௭௬௧) புணாகூட்டுணடசிறபபினை (௭௬௨) யுடைய பலயாகசாலைமுதுகுடுமியைபபோல (௭௫௯) நலலாசிரியரிடததே கேட்டிசின (௨௦௮), கெடடு அதனைநீகணடவியபபும சாலபும (௭௬௪) புகாறுசிறப்பிற(௭௬௫)செமமைசான்றோா (௭௬௪) பலா தமமிலிருநது சொலலபபட்டுப்(௭௬௫) பெருமானே (௭௮௧), நனறுசிய ஊழிககாலததை இததுணைககாலமிருத்துயெனப் பால்வரைதெயவததாலே வரையபபட்டு நீஅறுதியாகபபெறற (௭௮௨) நாணமுழுதும் (௭௮௦) இனிதாகப பேரின்பததை நுகாநதிருபபாய (௭௮௧), அதனைநுகராது ஐம்பொறிகட்கு முன்னிறகப்படுவனவாகிய இருநுகாபொருள்கட்கு நின்னெடு என்னவுறவுணடு (௨௦௬), இனி நின்னிடததுணடாகிய மாயைகெடுவதாக (௨௦௮) வெனமாட்டுறுபபானும எசசவுறுபபானும் வினைமுடிக்க.

* "அகன்றுபொருள் கிடபபினு மணுகிய நிலையினு, மியன்றுபொருள முடியத் தந்தன ருணாததன, மாட்டெனமொழிப பாடடியல் வழககின." † "சொல்லொடு ங குறிபபொடு முடிவுகொ ளியறகை, புலவிய கிளவி யெசச மாகும" என்னுஞ்சூத்திரஙகளாற் கூறிய இலககணம ‡ "நல்லிசைப புலவா செயயு ளுறுபபு" எனத தொல்காபபியனா கூறினமையின, இவரும் நலலிசைபபுலவராதலின், இஙஙனம செயயுள்செயதாரெனறுணாக

* தொலகாபபியம், பொருளதிகாரம, செயயுளியல, ௨௧௧.
† ,, ,, ,, ௨௦௭.
‡ ,, ,, ,, ௧

தலையாலங்கானத்துச் செ*ருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடிமருதனார்பாடிய மதுரைக்காஞ்சிக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று



வெண்பா.

க பைங்க ணிளம்பகட்டின் மேலானைப் பானமதிபோற்
றிங்க ணெடுங்குடையின் கீழானை—யங்கிரந்து
நாம்வேண்ட நன்னெஞ்சே நாடுதிபோய் நானிலத்தோர்
தாம்வேண்டுங் கூடற் றமிழ்

உ சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னு
நல்லிருந் தீந்தாது நாறுதலான்—மல்லிகையின்
வண்டார் கமழ்தாம மன்றே மலையாத
தண்டாரான் கூடற் றமிழ்



## ஏழாவது

# நெடுநல்வாடை.



வையகம் பனிப்ப வலனேர்பு வளைஇப்
பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென
வார்கலி முனைஇய கொடுங்கோற் கோவல
ரேறுடை யினநிரை வேறுபுலம் பரப்பிப்
௫ புலம்பெயர்*புலம்பொடு கலங்கிக் கோட
னீடிதழ்க் கண்ணி நீரலைக் கலாவ
மெய்க்கொள் பெரும்பனி நலியப் பலருடன்
கைக்கொள் கொள்ளியர் கவுள்புடையூஉ நடுங்க
மாமேயன் மறப்ப மந்தி கூரப்
௧0 பறவை படிவன வீழக் கறவை
கன்றுகோ ளொழியக் கடிய வீசிக்
குன்றுகுளிர்ப் பன்ன கூதிர்ப் பானாட்
புன்கொடி முசுண்டைப் பொறிப்புற வான்பூப்
பொன்போற் பீரமொடு புதற்புதன் மலரப்
௧௫ பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி
யிருங்களி பரந்த வீர வெண்மணற்
செவ்வரி நாரையோ டெவ்வாயுங் கவரக்
கயலற லெதிரக் கடும்புனற் சாஅய்ப்
†பெயலுலந் தெழுந்த பொங்கல் வெண்மழை
௨0 யகலிரு விசும்பிற் றுவலை கற்ப
வங்க ணகல்வய லார்பெயற் கலித்த
வண்டோட்டு நெல்லின் வருங்கதிர் வணங்க
முழுமுதற் கமுகின் மணியுற ழெருத்திற்
கொழுமட லவிழ்ந்த குழூஉக்கொள் பெருங்குலை
௨௫ நுண்ணீர் தெவிள வீங்கிப் புடைதிரண்டு
தெண்ணீர்ப் பசுங்காய் சேறுகொள முற்ற
நளிகொள் சிமைய விரவுமலர் வியன்காக்
குளிர்கொள் சினைய குரூஉத்துளி தூங்க
மாட மோங்கிய மல்லன் மூதூ

---

* புலம்பினென்றும் பாடம்.
† பெயலுழந்தென்றும் பாடம்.

௩௦ யாறுகிடந் தன்ன வகனெடுந் தெருவிற்
படலைக் கண்ணிப் பரேரெறுழ்த் திணிதோண்
முடலை யாக்கை முழுவலி மாக்கள்
வண்டுமூசு தேறன் மாந்தி மகிழ்சிறந்து
துவலைத் தண்டுளி பேணார் பகலிறந்
௩௫ திருகோட் டறுவையர் வேண்டுவயிற் றிரிதர
வெள்ளி வள்ளி வீங்கிறைப் பணைத்தோண்
மெத்தென் சாயன் முத்துறழ் முறுவற்
பூங்குழைக் கமர்ந்த வேந்தெழின் மழைக்கண்
மடவரன் மகளிர் பிடகைப் பெய்த
௪௦ செவ்வி யரும்பின் பைங்காற் பித்திகத்
தவ்விதழ் அவிழ்பதங் கமழப் பொழுதறிந்
திரும்புசெய் விளக்கி னீர்ந்திரிக் கொளீஇ
நெல்லு மலருந் தூஉய்க் கைதொழுது
மல்ல லாவண மாலை யயர
௪௫ மனையுறை புறவின் செங்காற் சேவ
லின்புறு பெடையொடு மன்றுதேர்ந் துண்ணா
திரவும் பகலு மயங்கிக் கையற்று
மதலைப் பள்ளி மாறுவன விருப்பக்
கடியுடை வியனகர்ச் சிறுகுறுந் தொழுவர்
௫௦ கொள்ளுறழ் நறுங்கற் பலகூட்டு மறுக
வடவர் தந்த வான்கேழ் வட்டந்
தென்புல மருங்கிற் சாந்தொடு துறப்பக்
கூந்தன் மகளிர் கோதை புனையார்
பல்லிருங் கூந்தற் சின்மலர் பெய்ம்மார்
௫௫ தண்ணறுந் தகர முளரி நெருப்பமைத்
திருங்காழ் அகிலொடு வெள்ளயிர் புகைப்பக்
கைவல் கம்மியன் கவின்பெறப் புனைந்த
செங்கேழ் வட்டஞ் சுருக்கிக் கொடுந்தறிச்
சிலம்பி வானூல் வலந்தனந் தூங்க
௬௦ வானுற நிவந்த மேனிலை மருங்கின்
வேனிற் பள்ளித் தென்வளி தரூஉம்
நேர்வாய்க் கட்டளை திரியாது திண்ணிலைப்
போர்வாய்க் கதவந் தாழொடு துறப்பக்
கல்லென் றுவலை தூவலின் யாவருந்
௬௫ தொகுவாய்க் கன்னற் றண்ணீ ருண்ணார்
பகுவாய்த் தடவிற் செந்நெருப் பார

வாடன் மகளிர் பாடல்கொளப் புணர்மார்
*தண்மையிற் றிரிந்த விளிகுரற் றீந்தொடை
கொம்மை வருமுலை வெம்மையிற் றடைஇக்
௭0 கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்பக்
காதலர்ப் பிரிந்தோர் புலம்பப் பெயல்கனைந்து
கூதிர்நின் றன்றாற் போதே மாதிரம்
விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டில
மிருகோற் குறிநிலை வழுக்காது குடக்கேர்
௭௫ பொருதிறஞ் சாரா வரைநா ளமயத்து
நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்
பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்
தொருங்குடன் வளைஇ யோங்குநிலை வரைப்பிற்
௮0 பருவிரும்பு பிணித்துச் செவ்வரக் குரீஇத்
துணைமாண் கதவம் பொருத்தி யிணைமாண்டு
நாளொடு பெயரிய கோளமை விழுமரத்துப்
போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்
தாழொடு குயின்ற போரமை புணர்ப்பிற்
௮௫ கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்
தையவி யப்பிய நெய்யணி நெடுநிலை
வென்றெழு கொடியொடு வேழஞ் சென்றுபுகக்
குன்றுகுயின் றன்ன வோங்குநிலை வாயிற்
றிருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பிற்
௯0 றருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து
நெடுமயி ரெகினத் தூநிற வேற்றை
குறுங்கா லன்னமோ டுகளு முன்கடைப்
பணைநிலை முனைஇய பலவுளைப் புரவி
புலவுணாத் தெவிட்டும் புலம்புவிடு குரலொடு
௯௫ நிலவுப்பயன் கொள்ளு நெடுவெண் முற்றத்துக்
கிம்புரிப் பகுவா யம்பண நிறையக்
கலுழ்ந்துவீ ழருவிப் பாடுவிறந் தயல
வொலிநெடும் பீலி யொல்கி மெல்லியற்
†கலிமயி லகவும் வயிர்மரு ளின்னிசை
௧00 நளிமலைச் சிலம்பிற் சிலம்புங் கோயில்
யவன ரியற்றிய வினைமாண் பாவை

---

* தண்மையிற் றிரிந்தவென்றும் பாடம்.
† களிமயிலென்றும் பாடம்.

கையேந் தையக னிறையநெய் சொரிந்து
பரூஉத்திரி கொளீஇய குரூஉத்தலை நிமிரொரி
யறுவறு காலைதோ றமைவரப் பண்ணிப
௧0௫ பல்வேறு பள்ளிதொறும பாயிருணீங்கப
பீடுகெழு சிறப்பிற் பெருந்தகை யல்லது
தாடவர் குறுகா வருங்கடி வரைப்பின்
வரைகண் டன்ன தோன்றல் வரைசேர்பு
விற்கிடந் தன்ன கொடிய பலவயின்
௧௧0 வெள்ளி யன்ன விளங்குஞ் சுதையுரீஇ
மணிகண் டன்ன மாத்திரட் டிண்காழ்ச்
செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவ
ருருவப் பல்பூ வொருகொடி வளைஇக
கருவொடு பெயரிய காண்பி னல்லிற
௧௧௫ றசநான் கெய்திய பணைமருள் நோன்ற
ளிகனமிக் கூறு மேந்தெழில் வரிநுத
பொருதொழி நாக மொழியெயி றருகெறிந்து
சீருஞ் செம்மையு மொப்ப வல்லோன்
கூருளிக் குயின்ற வீரிலை யிடையிடுபு
௧௨0 தூங்கியன் மகளிர் வீங்குமுலை கடுப்பப்
புடைதிரண் டிருந்த குடந்த விடைதிரண்
டுள்ளி நோன்முதல் பொருந்தி யடியமைத்துப
பேரள வெய்திய பெரும்பெயர்ப் பாண்டின
மடைமா ணுண்ணிழை பொலியத் தொடைமாண்டு
௧௨௫ முத்துடைச் சாலேக நாற்றிக் குத்துறுத்துப
புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டத்துத்
தகடுகண் புதையக் கொளீஇத் துகடீர்ந்
தூட்டுறு பன்மயிர் விரைஇ வயமான்
வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து
௧௩0 முல்லைப் பல்போ துறழப் பூநிரைத்து
மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்பட்டுத்
துணைபுண ரன்னத் தூநிறத் தூவி
யிணையணை மேம்படப் பாயணை யிட்டுக
காடிக் கொண்ட கழுவுறு கலிங்கத்துத்
௧௩௫ தோட்டமை தூமடி விரித்த சேக்கை
யாரந் தாங்கிய வலர்முலை யாகத்துப்
பின்னமை நெடுவீழ் தாழத் துணைதுறந்து
நன்னுத லுலறிய சின்மெல லோதி

நெடுநீர் வார்குழை களைந்தெனக் குறுங்கண்
கசo *வாயுறை யழுத்திய வறிதுவீழ் காதிற்
பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை
வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து
வாளைப் பகுவாய் கடுப்ப வணக்குறுத்துச்
செவ்விரற் கொளீஇய செங்கேழ் விளக்கத்துப்
கசரு பூந்துகின் மரீஇய வேந்துகோட் டல்குன்
மைம்மா சூர்ந்த வவிர்நூற் கலிங்கமொடு
புனையா வோவியங் கடுப்பப் புனைவி
றளிரோர் மேனித் தாய சுணங்கி
னம்பணைத் தடைஇய மென்றோண் முகிழ்முலை
கருo வம்புவிசித் தியாத்த வாங்குசாய் நுசுப்பின்
மெல்லியன் மகளிர் நல்லடி வருட
நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற்
செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக்
குறியவு நெடியவு முரைபல பயிற்றி
கருரு யின்னே வருகுவ ரின்றுணை யோரென
முகத்தவை மொழியவு மொல்லாண் மிகக்கலுழ்ந்து
நுண்சேறு வழித்த நோனிலைத் திரள்கா
லூறா வறுமுலை கொளீஇய காற்றிருத்திப்
புதுவ தியன்ற மெழுகுசெய் படமிசைத்
கசுo திண்ணிலை மருப்பி னாடுதலை யாக
விண்ணூர்பு திரிதரும் வீங்குசெலன் மண்டிலத்து
முரண்மிகு சிறப்பிற் செல்வனொடு நிலைஇய
வுரோகிணி நினைவன ணோக்கி நெடிதுயிரா
மாயித ழேந்திய மலிந்துவீழ் பரிப்பனி
கசுரு செவ்விரற் கடைக்கண் சேர்த்திச் சிலதெறியாப்
புலம்பொடு வதியு நலங்கிள ரரிவைக்
கின்னா வரும்படர் தீர விறறந்
தின்னே முடிகதி லம்ம மின்னவி
ரோடையொடு பொலிந்த வினைநவி லியானை
கஎo நீடிரட் டடக்கை நிலமிசைப் புரளக்
களிறுகளம் படுத்த பெருஞ்செய லாடவ
ரொளிறுவாள் விழுப்புண் காணிய புறம்போந்து
வடந்தைத் தண்வளி யெறிதொறு நுடங்கித்
தெற்கேர் பிறைஞ்சிய தலைய நற்பல

* வாயறையென்றும் பாடம்.

கன்று பாண்டில் விளக்கிற் பருஉச்சுட ரழல
வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகமொடு
முன்னோன் முறைமுறை காட்டப் பின்னர்
மணிப்புறந் தைஇய மாத்தாட் பிடியொடு
பருமங் களையாப் பாய்பரிக் கலிமா
௧அ0 இருஞ்சேற்றுத் தெருவி னெறிதுளி விதிர்ப்பப்
புடைவீ ழந்துகி லிடவயிற் றழீஇ
வாள்தோட் கோத்த வன்கட் காளை
சுவன்மிசை யமைத்த கையன் முகனமர்ந்து
நூல்கால் யாத்த மாலை வெண்குடை
௧அ௫ தவ்வென் றசைஇத் *தாதுளி மறைப்ப
நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்
சிலரொடு திரிதரும் வேந்தன்
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே

## இதன்பொருள்.

இப்பாட்டிற்கு நெடுநல்வாடையென்று பெயர் கூறினார். இப்பெயர் நெடிதாகிய வாடையெனவிரிதலின் பண்புத்தொகையாயிற்று. வாடையென வாடைக்காற்றிற் றோன்றின கூதிர்ப்பாசறையை யுணர்த்தலின் பிறந்தவழிக்கூறலென்னும் ஆகுபெயராய்நின்றது. இப்பாட்டினுட் "கூதிர்நின் றன்றாற் போதே" (எ௨) யெனவும், "கூதிர்ப் பானாள்" (௧௨) எனவுங் கூறுகின்றாராதலின், இது † "வாகை தானே பாலையது புறனே" எனப் பாலைக்குப்புறனாகக்கூறிய வாகைத்திணையாய் அதனுள், ‡ "கூதிர் வேனி லென்றிரு பாசறைக், காதலி னொன்றிக் கண்ணிய மரபினும்" எனக்கூறிய கூதிர்ப்பாசறையேயாயிற்று தலைவனைப் பிரிந்திருந்து வருந்துந்தலைவிக்கு ஒருபொழுது ஒரூழிபோல நெடிதாகியவாடையாய்ப் பாலையாகிய உரிப்பொருளுணர்த்திற்று அகத்தொடுங்கிப் போகம்நுகர்வார்க்குச் சிறந்தகாலமாயினும் அரசன் போகம்வேண்டிப் பொதுச்சொற்பொருளை அப் போகத்தின்மனமற்று வேற்றுப்புலத்துப்போந்திருக்கின்ற இருப்பாகலின், அவற்கு நல்லதாகிய வாடையாயிற்று. எனவே காமத்திடத்து வெற்றியெய்தலின் வாகைத்திணையாயிற்று. இப்பாட்டுச்சுட்டி ஒருவர்பெயர்கொள்ளாமையின் அகப்பொருளாமேனும் "வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகம்" (௧எ௬) என அடையாளப்பூக்கூறினமையின், அகமாகாதாயிற்று

[வையகம் பனிப்ப வலனேர்பு வளைஇப், பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென·] பொய்யா வானம் வையகம் பனிப்ப வலன் வளைஇ ஏர்பு புதுப் பெயல் பொழிந்தென—பருவம்பொய்யாதமேகம் உலகெல்லாங்குளிரும்படியாகத் தான்கிடந்தமலையை வலமாகவளைந்து எழுந்திருந்து கார்காலத்து மழையைப்பெய்ததாக,

ஆர்கலி முனைஇய கொடுங்கோற் கோவலர்—வெள்ளத்தைவெறுத்த கொடிய கோலினையுடைய இடையர்,

* பரம்புதுளி மறைப்பவென்றும் பாடம்

† தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், ௧அ

‡ ,, ,, ,, ௨௧

ஏறுடை இனம் நிரை வேறு புலம் பரப்பி—ஏற்றையுடைய இனங்களையும் பசுக்களையும் மேட்டுநிலமாகிய முல்லைநிலத்தே மேயவிட்டு,

எருமையையும் ஆட்டையும் இனமென்றார்.

புலம் பெயர் புலம்பொடு கலங்கி—தாம் பயின்ற நிலத்தைக் கைவிட்டுப்போம் தனிமையினாலே வருத்தமெய்தி,

ஊர்க்கு அணிமையிடத்தே மேய்த்து ஊரிற்றங்காமையிற் புலம்பெயர் புலம் பென்றார்.

கோட்டவ நீடு இதழ்க்கண்ணி நீர் அலைக் கலாவ—காந்தளினது நீண்ட இதழ்களாற் கட்டினகண்ணி நீரலைத்தலிலே கலக்கமெய்த,

மெய்க் கொள் பெரும் பனி நலியப் பலருடன் கைக் கொள் கொள்ளியர் கவுள் புடையூஉ நடுங்க—தம்முடம்பிடத்தேகொண்ட பெரியகுளிர்ச்சி வருத்துகையினாலே பலருங்கூடிக் கையிடத்திலேகொண்ட நெருப்பினையுடையராய்ப் பற்பறைகொட்டி நடுங்க,

கையை நெருப்பிலே காய்த்தி அதிற்கொண்டவெம்மையைக் கவுளிலேயடுத்த லிற் கைக்கொள்கொள்ளியரென்றார்.

கோவலர் (௩) பலருடன் (எ) பரப்பிக் (௪) கலங்கிக் (௫) கலாவக் (௬) கொள்ளியராய்க் கவுள்புடையூஉ நடுங்க (அ) வெனக்.

மா மேயல் மறப்ப—விலங்குகள் மேய்தலைமறந்தொழுங்க,

மந்தி கூர—குரங்கு குளிர்ச்சிமிக,

குன்றுக்கவெனபாருமுளர்.

[பறவை படிவன வீழ] படிவன பறவை வீழ—மரங்களின்மேலே தங்குவனவாகிய புள்ளுகள் காற்றுமிகுதியால் நிலத்தேவீழ,

[கறவை, கன்றுகோ ளொழியக் கடிய வீசி] கறவை கடிய வீசிக் கன்று கோள ஒழிய—பசுக்கள் குளிரின் மிகுதியாற் கடியவாய் உதைத்துக் கன்றை ஏற்றுக்கோடலைத் தவிர,

குன்று குளிர்ப்பன்ன கூதிர்ப் பானாள்—மலையைக் குளிர்ச்சிசெய்யுமாறு போன்ற கூதிர்க்காலத்து நடுயாமத்தே புலம்பொடுவதியுமரிவைக்கு (௧௬௬) என மேலே கூட்டுக

புன் கொடி முசுண்டைப் பொறிப் புற வான் பூ பொன் போற் பீரமொடு புதற்புதல மலர—புல்லிய கொடியினையுடைய முசுட்டையிற் றிரண்ட புறத்தையுடைய வெள்ளிய பூப் பொன்போன்ற நிறத்தையுடைய பீர்க்குடனே சிறுதூறுகடோறும் விரிய,

[பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி, யிருங்களி பரந்த வீர வெண்மணற், செவ்வரி நாரையோ டெவ்வாயுங் கவரக், கயலற லெதிரக் கடும்புனற் சாஅய்ப், பெயலுலந் தெழுந்த]

கடும புனல் சாஅயக் கயல் அறல் எதிர—கடிதாயோடின நீரினின்றும் ஒரு கால் பற்றிக் கயல்கள் அற்றநீர்க்கு எதிரேவருகையினாலே,

பெயல் உலந்து எழுந்த பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி—மழையாலேவருந்தி அதுசிறிதுவிட்டவளவிலே எழுந்த பசியகாலையுடைய கொக்கினது மெல்லிய சிறகையுடைய திரள்,

செவ்வரி நாரையோடு இருங் களி பரந்த ஈர வெண்மணல் எவ்வாயும் கவர—சிவந்த வரியினையுடைய நாரைகளோடே கரியவண்டலிட்ட சேறுபரந்த ஈரத்தினையுடைய வெள்ளிய மணலாகிய எவ்விடங்களிலுமிருந்து அக்கயலைத்தின்ன,

பொங்கல் வெண்மழை அகல் இரு விசும்பில் துவலை கறப—பொங்குதலையுடைய வெள்ளியமேகம் அகன்ற பெரியஆகாயததே சிறுதுவலையாகததூவ மேற கறகும் படியாகக கூதிர் ஈணடுநின்றது (எஉ) எனமேலேகூட்டுக

கறபவெனனுஞ் செயவெனெச்சம் ஈணடு எதிர்காலமுணாததிறறு.

கறபவென்றா, மிகபபெய்தலே தனககியல்பெனபது தோன்ற.

அஙகண அகல் வயல் ஆர பெயற கலித்த வணடோட்டு நெலலின வருங் கதிர் வணஙக—அழகியஇடத்தையுடைய அகனற வயனிறைந்தநீராலே மிககெழுந்த வளவிய இலையினையுடைய நெல்லினின்றும புறபபட்ட கதிர் முற்றிவளைய,

புல்லாதலிற் றேறடென்றா.

முழுமுதற கமுகின மணி உறழ எருததிற கொழு மடல் அவிழ்ந்த குழூஉக்கொள் பெருங்குலை—பெரியஅடியினையுடைய கமுகினது நீலமணியையொதத கழுத்திற் கொழுவிய மடலிடததுப் பாளைவிரிந்த திரட்சியைககொணட தாறுகளில்,

[நுண்ணீர் தெவிள வீஙகிப புடைதிரணடு, தெணணீரப பசுங்காய் சேறுகொள முற்ற·] தெணணீரப் பசுஙகாய் நுணணீர் தெவிள வீஙகிப் புடைதிரணடு சேறு கொள முறற—தெளிநதநீரை உளளேயுடைய பசியகாய் நுணணிய நீர்தான்றிரளும் படியாகவீங்கிப பககநதிரணடு இனிமைகொள்ளும்படி முற்ற,

[நளிகொள சிமைய விரவுமலர வியன்கா] விரவு மலர் நளி கொள சிமைய வியன்கா—முன்புவிரவினபூககள்செறிதலைத தன்னிடததேகொணட உசசியினையுடையவாகிய அகன்றபொழிலகள்,

குளிர் கொள் சினைய குரூஉத துளி தூஙக—குளிர்ச்சியைத தமமிடததேகொணட கொம்புகளையுடையவாகி அவற்றிலேறறுநின்ற நிறததையுடைய மழைததுளி மாறுமலவீழ,

மாடம் ஓங்கிய மலலல் மூதூர் ஆறு கிடந்தன்ன அகல் நெடுந தெருவில்—மாடஙகளுயாநத வளபபத்தையுடைய பழையவூரில யாறுகிடநதாறபோன்ற அகன்ற நெடியதெருவிலே திரிதர (ருகூ) வெனக.

படலைக கணணிப் பரேர் எறுழத திணி தோள முடலை யாககை முழுவலி மாக்கள—தழைவிரவின மாலையினையும் பருதத அழகினையுடையவாகிய வலியினையுடைய இறுகினதோளினையும் முறுககுணட உடமபினையும் நிரமபின மெய்வலியினையுமுடைய மிலேசசர,

வணடு மூசு தேறல மாநதி மகிழசிறநது—வணடுகளமொயககும கள்ளையுண்டு மகிழ்ச்சிமிகது,

[துவலைத தணடுளி பேணார பகலிறந, திருகோட் டறுவையர் வேணடுவயிற திரிதர]

துவலைத் தண துளி பேணார இரு கோடடு அறுவையர் வேணடுவயின் திரிதர—சிறுதுவலையாகிய தணணியதுளியை அஞசாராய் முன்னுமபின்னுந தொஙகலாக நாலவிட்ட துகிலினையுடையராயத தமககு வேணடினவிடத்தே திரிதலைசசெய்ய,

பகலிறநதென்பதனை மேலேகூட்டுக

[வெள்ளி வள்ளி வீஙகிறைப பணைததோண, மெத்தென்] வெள்ளி வள்ளி வீங்கு இறை மெதமென பணைத் தோள்— வெளுககபபட்டதாகிய சஙகுவளையிறுகின இறையினையுடைய மெதமெனற பணைபோலுந தோளினையும,

மெத்தென் சாயல்— மெயமமுழுதும் கட்புலனுயததோன்றுகின்ற மெத்தென்ற சாயலினையும,

முதது உறழ் முறுவல—முததைமொதத பல்லினையும்,

பூங குழைககு அமாநத ஏநது எழில மழைக கண—பொலிவினையுடைய மகரககுழையிட்ட அழகிறகுப பொருநதின உயாந்துதோன்றுகின்ற அழகினையுடைய குளிாச்சியையுடைய கண்ணினையும,

இனி உருபுமயககமாக்கிக குழையிடததேசென்றமாந்த கணணென்றுமுரைப்ப.

மடவரன மகளிா—உயாந்துதோன்றுகினற மடபபததினையுடையமகளிா,

தோளமுதலியவறறையுடைய மகளிரெனக

[பிடகைப பெயத, செவ்வி யருமபின பைஙகாற பிததிகத, தவவித ழவிழ்பதங கமழ] பிடகைப பெயத பைஙகாற பிததிகததுச செவவி அரும்பின் அவவிதழ பகலிறந்து (ருச) அவிழ் பதம கமழ—பூநதட்டிலேயிட்டுவைதத பசிய காலினையுடைய பிசசியினுடைய அலருஞ்செவவியையுடைய அருமபினது அழகியவிதழ்கள் பகற்பொழுதைககடநதுவிரியுஞசெவ்வி மணக்கையினுலே,

செவவரியருமபு பாடமாயிற சிவநத வரியினையுடைய அரும்பெனக

பொழுது அறிநத—அந்திக்காலமெனறறிநது,

என்றதனுற கூதிரால இரவுமபகலுந தெரியாவெனமுா.

இருமபு செய விளககின் ஈாந்திரிக கொளீஇ—இருமபாறசெயத தகளியிலேநெயதோய்ந்த திரியைககொளுததி,

விளககு - ஆகுபெயா

நெலலுமமலரும் தூஉயக கைதொழுது—நெலலையுமலரையுஞ்சிதறி இல்லுறைதெயவததைவணஙகி,

மலலல் ஆவணம் மாலை அயா—வளபபததையுடைய அஙகாடிததெருவெல்லாம் மாலைக்காலததைக கொணடாட,

மகளிா (ருக)கமழுகையினுலே பொழுதறிநது (சக) திரிககொளீஇத்(சஉ) தூவித்தொழுது (சரு) அயரவெனக.

[மனையுறை புறவின் செங்காற சேவ, லின்புறு பெடையொடு மன்றுதோ்ந் துணணு, திரவும் பகலு மயஙகிக கையறறு, மதலைப பள்ளி மாறுவன விருப்ப]

இரவும் பகலும் மயஙகி—இராககாலமும பகறகாலமுந தெரியாமல் மயஙகுகையினுலே,

மனை உறை புறவின் செஙகாற சேவல் இன்புறு பெடையொடு மன்று தோ்ந்து உண்ணுது — மனையின்கண்ணேயிருக்கும பேட்டினையுடைய சிவந்தகாலினையுடைய சேவல் தான் இன்பநுகரும் பெடையோடு மன்றிலேசென்று இரைதேடியுண்ணுமல்,

கை அற்று மதலைப் பள்ளி மாறுவன இருப்ப—செயலறக் கொடுங்கையைத் தாங்குதலுடைய பலகைகளின்மேலே பறவாதிருந்து கடுத்தகால் ஆறும்படி மாறிமாறி இருக்க,

இனித் தலைமாறியிருப்பவென்பாருமுளர். மதலைப்பள்ளி - கபோதகத்தலை இறையுறைபுறவும் பாடம்.

கடி உடை வியன் நகர்ச் சிறு குறுந்தொழுவர் கொள் உறழ் நறுங்கற் பல கூட்டு மறுக—காவலையுடைய அகன்ற மனைகளிலே சிறியராகிய குற்றேவல் வினைஞர் கருங்கொள்ளினிறத்தையொத்த நறிய சாந்தம்மியிலே கத்தூரிமுதலிய பசுங்கூட்டரைக்க,

வடவர் தந்த வான் கேழ் வட்டம் தென்புலம் மருங்கிற் சாந்தொடு துறப்ப—வடநாட்டிலுள்ளார் கொண்டுவந்த வெள்ளியநிறத்தையுடைய சிலாவட்டம் தென்றிசையிடத்திற் சந்தனத்தோடே பயன்படாமற்கிடப்ப,

[கூந்தல் மகளிர் கோதை புனையார்] மகளிர் கூந்தல் கோதை புனையார்—மகளிர் குளிர்ச்சிமிகுதியால் தம்மயிரிடத்து மாலையிட்டு முடியாராய்,

பல் இருங் கூந்தற் சின்மலர் பெய்மார்—தம் பலவாகிய கரிய மயிரிடத்தே மங்கலமாகச் சிலமலரிட்டு முடித்தல்வேண்டி,

தண் நறும் தகரம் முளரி நெருப்பு அமைத்து இருங்காழ் அகிலொடு வெள் அயிர் புகைப்ப—தண்ணிய நறிய மயிர்ச்சந்தனமாகிய விறகிலே நெருப்பையுண்டாக்கி அதிலே கரிதாகிய வயிரத்தையுடைய அகிலோடே வெள்ளிய * கண்டசருக்கரையையுங் கூட்டிப் புகைப்ப,

கை வல் கம்மியன் கவின் பெறப் புனைந்த செங்கேழ் வட்டம் சுருக்கி—கையாற்புனைதல்வல்ல உருக்குத்தொழிலினையுடையவனாலே அழகுபெறப்பண்ணின சிவந்தநிறத்தையுடைய ஆலவட்டம் உறையிடப்பட்டு,

[கொடுந்தறிச், சிலம்பி வான்நூல் வலந்தன தூங்க] சிலம்பி வால் நூல் வலந்தன கொடுந்தறி தூங்க—சிலந்தியினது வெள்ளிய நூலாற் சூழப்பட்டனவாய் வளைந்த முளைக்கோலிலே தூங்க,

வான் உறநிவந்த மேல் நிலை மருங்கின்—தேவருறைதற்குநெடிதுயர்ந்த மேனிலத்திடத்து,

வேனிற் பள்ளித் தென்வளி தரூஉம் நேர் வாய்க் கட்டளை திரியாது—இளவேனிற்காலத்துத் துயிலும் படுக்கைக்குத் தென்றற்காற்றைத்தரும் சாலேகத்திலே நின்று உலாவாதே,

நேர்வாய்க்கட்டளையென்றது மாடத்தின்கட்சாலேகத்தை. கட்டளைதெரியாதென்றுபாடமாயின், திறவாதென்க.

திண் நிலைப் போர் வாய் கதவம் தாழொடு துறப்ப—சிக்கென்ற நிலையினையுடைய இரண்டுகதவும் தம்முட்பொருதலவாய்த்த கதவு தாழிட்டுக்கிடக்க,

கல்லென் துவலை தூவலின் யாவரும் தொகு வாய்க் கன்னல் தண்ணீர் உண்ணார் பகு வாய்த் தடவில் செந்நெருப்பு ஆர—கல்லென்கின்ற ஓசையினையுடைய சிறுதுவலையை வாடைக்காற்று எங்கும் பரப்புகையினாலே இளையோரும் முதியோரும்

* கண்டசருக்கரையெனவும் பிரதிபேதமுண்டு

குயிந்தவாயையுடைய கரகத்திற்றண்ணீரைக் குடியாராய்ப் பருத்தாற்போன்ற வாயையுடைய இந்தளத்திலிட்ட சிவந்த நெருப்பின்வெம்மையை நுகர,

ஆடல் மகளிர பாடல கொளப புணாமார்—ஆடற்றொழிலையுடைய மகளிர் தாமபாடுகின்றபாட்டினை யாழ தன்னிடத்தேகொள்ளும்படி நரம்பைககூட்டுதறகு,

தணமையின் திரிந்த இன்குரல் தீநதொடை கொம்மை வருமுலை வெம்மையில தடைஇ—குளிர்ச்சியாலே தன்னிலைகுலைந்த இனியகுரலாகிய நரமபைப் பெரிய எழுகின்ற முலையின்வெபபததே தடவி,

தீந்தொடை - ஆகுபெயா

கருஙகோட்டுச சீறியாழ் பணணு முறை நிறுபப—கரியதணடினையுடைய சிறியயாழைப பணணை நிறகுமுறையிலே நிறுதத,

காதலாப பிரிநதோா புலமப—கணவரைபபிரிநதமகளிா வருநத,

பெயல் கனைநது கூதிா நினறன்றால —காலமழைசெறிந்து கூதிரககாலமாய்நிலைபெறறது, அவவிடதது,

போது—பினனா நிகழ்ந்தபொழுது,

வானம் காாகாலதது மழையைப பெயததாகப (உ) பினனா நிகழ்ந்தபொழுது (எஉ) கோவலா (௩) நடுஙக (அ)மறபபக கூர (கூ) வீழ (க0) ஒழிய (கக) மலரக (கச) கவரக (கஎ) கறப (உ0) வணஙக (உஉ) முறறத (உகூ) தூஙகத் (உஅ) திரிதர (௩௫) அயர (சச) இருபப (௬அ) மறுகத (௫0) துறபபப (௫உ) புகைபபத (௫கூ) தூங்கத் (௫கூ) துறபப (௬கூ) ஆர (௬௬) நிறுபபப (எ0) புலமபப பெயல்செறிந்து (எக) கூதிர்ககாலமாயநிலைபெறறது, அவவிடததெனமுடிகக

[மாதிரம, விரிகதிா பரபபிய வியலவாய மணடில, மிருகோற குறிநிலை வழுக்காது குடககோ, பொருதிறஞ் சாரா வரைநா ளமயதது]

மாதிரம விரி கதிா பரபபிய வியல வாய மணடிலம குடககு ஏர்பு—திசைகளிலே விரிந்தகிரணஙகளைபபரபபின அகனற இடததையுடையஞாயிறு மேறறிசைககட்சேறறகெழுந்து,

இருகோற குறிநிலை வழுககாது ஒருதிறம சாரா அமயதது அரைநாள்—இரண்டிடததுநாட்டின இரணடுகோலிடததுஞ் சாயாநிழலால் தாமபோகவோடுகின்றநிலையைக குறிததுககொளளுநதனமை தபபாதபடி தான ஒருபககததைசசாரப்போகாத சிததிரைததிஙகளின் நடுவிற்பததினினற யாதோாநாளிற பதினைந்தாநாழிகையிலே அஙகுராாபபணமபணணி,

நூல அறி புலவா நுணணிதிற கயிறு இட்டு—சிறபநூலையறிநததசசா கூரிதாக நூலை நேரேபிடிதது,

தேஎம் கொணடு தெயவம நோககி — திசைகளைககுறிததுககொணடு அத்திசைகளில நிறகுந தெயவஙகளையும குறைவறபபாாதது,

[பெருமபெயா மனனாக கொபப மனைவகுதது, ஒருங்கு] பெரும்பெயா மன்னாக்கு ஒபப ஒருஙகு மனை வகுதது—பெரிய பெயரினையுடைய அரசாககொபப மனைகளையும் வாயிலகளையும மணடபஙகள முதலியவறறையுங கூறுபடுததி,

உடன் வளைஇ ஓஙகு நிலைவாயில — இவ்விடஙகளையெலலாம சேரவளைதது உயாநத மதிலின்வாயில (அஅ) லெனக

பரு இரும்பு பிணிதது—ஆணிகளும பட்டஙகளுமாகிய பரிய இருமபாலேகட்டி,

செவ்வரக்கு உரீஇ—சாதிலிங்கம்வழித்து,

[துணைமாண் கதவம் பொருத்தி யிணைமாண்டு, நாளொடும் பெயரிய கோளமை விழுமரத்துப், போதவிழ் குவளை புதுப்பிடி காலமைத்துத், தாழொடு குயின்ற போரமை புணர்ப்பிற, கைவல் கம்மியன் முடுக்கலிற புரைதீர்ந்து·]

தாழொடு குயின்ற துணை மாண் கதவம் பொருத்தி—தாழோடே சேரப்பண்ணின இரண்டாய் மாட்சிமைப்பட்ட கதவைச்சேர்த்தி,

இணை மாண்டு புதுப் போது அவிழ் குவளைப் பிடி கால அமைத்து—இணைதல் மாட்சிமைப்பட்டுப் புதியபோதாயவிழ்ந்த குவளைப்பூவோடே பிடிகளையும் தன்னிடத்தே பண்ணி,

என்றது - நடுவே திருவும் இரண்டுபுறத்தும் இரண்டுசெங்கழுநீர்ப்பூவும் இரண்டு பிடியுமாகவகுத்த உத்திரக்கற்கவி.

நாளொடும் பெயரிய விழுமரத்துக் கோள அமை நெடுநிலை (அ௬)—உத்திரமென்னும் நாளிற்பெயர்பெற்ற உத்திரக்கற்கவியிலே செருகுதல் பொருந்தின நெடுநிலையென்க

அமைத்தெனனுமெச்சம் பெயர்பெற்றவென்பதனோடுமுடிந்தது.

கை வல் கம்மியன் முடுக்கலிற புரை தீர்ந்த போர் அமை புணர்ப்பின் நெடுநிலை (அ௬)—கைத்தொழில்வல்லதச்சன் கடாவுகையினாலே வெளியற்றுப் பலமரங்களுந் தம்மிற்கிட்டுதலமைந்த கூட்டத்தினையுடைய நெடுநிலையெனக.

ஐயவி அப்பிய நெய் அணி நெடுநிலை—வெண்சிறுகடுகப்பிவைத்த நெய்யணிந்த நெடியநிலையினையுடைய,

அதிற்றெய்வத்திற்கு வெண்சிறுகடுகும் நெய்யுமணிந்தது

வென்று எழு கொடியொடு வேழம் சென்று புக—வென்றிகொண்டெழும் கொடிகளோடே யானைகள் சென்றுபுகுதும்படி யுயர்ந்த,

குன்று குயின்றன்ன ஓங்கு நிலை வாயில்—மலையை நடுவே வெளியாகத்திறந்தாற்போன்ற கோபுரவாயில்களையும்,

ஓங்கின நிலையையுடைய கோபுரத்தை ஓங்குநிலையென்றார், ஆகுபெயர்

வரைப்பின் (எ௧) வாயிலெனக

கதவுபொருத்திக் கோளமைந்த புணர்ப்பினையுடைய நெடுநிலையினையுடைய வாயிலென்க

[திருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பிற், றருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து, நெடுமயி ரெகினத் தூநிற வேற்றை, குறுங்கா லன்னமோ டுகளு முன்கடை·]

நெடுமயிர் எகினத் தூ நிற ஏற்றை குறுங்கால் அன்னமோடு உகளும் முன்கடை—நெடிய மயிரினையுடைய கவரிமாவில் தூயநிறத்தையுடைய ஏற்றை குறியகாலினையுடைய அன்னத்தோடே தாவித்திரியும் வாசல்முன்பினையும்,

கடைமுன் - முன்கடையென மரூஉமுடிபு அன்னமும் தாவிப்பறத்தலின், உகளுமென்று கவரிமாவோடே ஒருவினைகூறினார்

* தரு மணல் ஞெமிரிய திரு நகர் முற்றத்து,

---

* இந்தப்பாகத்திற்கு உரைகிடைத்திலது, கொண்டுவந்திட்ட மணல் பரந்த அழகிய வீட்டின் முன்னிடத்தையுமெனக.

திரு நிலைபெற்ற தீது தீர் சிறப்பின்—திருமகள் நிலைபெற்ற குற்றமற்ற தலைமையினையும்,

வாயிலினையும் முன்கடையினையும் முற்றத்தினையும் சிறப்பினையுமுடைய கோயிலென முடிக்க

பணை நிலை முனைஇய பல்லுளைப் புரவி புல் உணாத் தெவிட்டும் புலம்பு விடு குரலொடு—பந்தியிலே நிற்றலை வெறுத்த பலவாகிய கேசரியையுடைய குதிரைகள் புல்லாகிய உணவைக் குதட்டுந் தனிமைதோற்றுவிக்கின்ற குரலோடே,

நிலவுப் பயன் கொள்ளும் நெடு வெண் முற்றத்துக் கிம்புரிப் பகுவாய் அம்பணம் நிறையக் கலுழ்ந்து வீழ் அருவிப் பாடு விறந்து — நிலாவின்பயனை அரசனுகரும் நெடிய வெள்ளிய நிலாமுற்றத்திலுள்ள நீர்வந்துவீழும் மகரவாயாகப் பகுத்த வாயினையுடைய பந்தநிறைகையினாலே கலங்கிவிழுகின்ற அருவியினோசைசெறிந்து,

அயல ஒலி நெடும்பீலி ஒல்கி மெல்லியல் கலி மயில் அகவும் வயிர் மருள் இன் இசை—அதற்கு அயலிடத்தனவாகிய தழைத்த நெடிய பீலியொதுங்க மெல்லிய இயல்பினையுடைய செருக்கினமயில் ஆரவாரிக்கும் கொம்பென்று மருளும் இனியவோசை,

நளி மலைச் சிலம்பிற் சிலம்பும் கோயில்—செறிந்தமலையில் ஆரவாரம்போல ஆரவாரிக்கும் கோயில்,

புலம்புவிடுகுரலோடே அருவிப்பாடும் வயிர்மருளின்னிசையும் விறந்து மலைச் சிலம்பிற் சிலம்புங்கோயிலென முடிக்க.

அருவியும் மயிலும் மலைக்கும் உள்ளனவாகலின், உவமைகொண்டார். புலம்புவிடுகுரல் மழை மெத்தென முழங்கினாற்போன்றிருத்தலின், உவமைகொண்டார். இனி அவற்றின் எதிரொலியெழுகின்ற கோயிலென்றுமாம்.

யவனர் இயற்றிய வினை மாண் பாவை கை ஏந்து ஐ அகல் நிறைய நெய் சொரிந்து—சோனகர்பண்ணின தொழில்மாட்சிமைப்பட்ட பாவை தன்கையிலே ஏந்தியிருக்கின்ற வியப்பையுடைய தகளிநிறையும்படி நெய்வார்க்கப்பட்டு,

பரூஉத் திரி கொளீஇய குரூஉத் தலை நிமிர் எரி—பருந்திரிகளைப் பந்தங்களிலே கொளுத்திவைத்த நிறத்தையுடைத்தாகிய தலையினையுடைய மேனோக்கியெரிகின்ற விளக்கை,

அறுவறு காலைதோறு அமைவரப் பண்ணி—நெய்வற்றினகாலந்தோறும் ஒளிமழுங்கினகாலந்தோறும் நெய்வார்த்துத் தூண்டி,

பல் வேறு பள்ளிதொறும் பாயிருள் நீங்க—பலவாய்வேறுபட்ட இடங்கடோறும் பரந்த இருள்நீங்கும்படி,

பீடு கெழு சிறப்பிற் பெருந்தகை அல்லது ஆடவர் குறுகா அருங்கடி வரைப்பின்—பெருமைபொருந்தின தலைமையினையுடைய பாண்டியனல்லது சிறுகுறுந்தொழில்செய்யும் ஆண்மக்களும் அணுகவாராத அரியகாவலையுடைய கட்டுக்களின்,

வரை கண்டன்ன தோன்றல—மலைகளைக் கண்டாற்போன்ற உயர்ச்சியையுடையவாய்,

வரை சேர்பு வில் கிடந்தன்ன கொடிய—மலைகளைச்சேர்ந்து இந்திரவில்கிடந்தாற்போன்ற பலநிறமாய் வீழ்ந்துகிடந்த கொடிகளையுடையவாய்,

இது மேலேகட்டினகொடி

பல வயின்—பலவிடங்கடோறும்,

வெள்ளி அன்ன விளங்கும் சுதை உரீஇ—வெள்ளியையொத்த விளங்குகின்ற சாந்தை வாரி,

மணி கண்டன்ன மாத் திரள் திண் காழ்—நீலமணியைக்கண்டாற்போன்ற கருமையினையும் திரட்சியினையுமுடைய திண்ணிய தூண்களையுடையவாய்,

செம்பு இயன்றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்—செம்பினாலே பண்ணினாலொத்த தொழில்கள்செய்தலுற்ற நெடியசுவரிலே,

உருவப் பல்பூ ஒருகொடி வளைஇ—வடிவழகினையுடைத்தாகிய பலபூக்களையுடைய வல்லிசாதியாகிய ஒப்பில்லாத கொடியையெழுதி,

கருவொடு பெயரிய காண்பு இன் நல்லில்—புதைத்தகருவோடே பெயர்பெற்ற காட்சிக்கினிய நன்றாகிய இல்,

என்றது - கருப்பக்கிருகமென்றவாறு

திண்காழையுடையவாய்ச் (௧௧௧) செய்வுறுநெடுஞ்சுவரிலே (௧௧௨) விளங்குஞ் சுதையுரீஇப் (௧௧0) பலவயின் (௧0௯) ஒருகொடிவளைஇ (௧௧௩) வரைகண்டன்ன தோன்றலவாய்க் (௧0௮) கொடியவாய்ப் (௧0௬) பாயிருணீங்க (௧0௫) எரி (௧0௩) யமைவரப்பண்ணிக் (௧0௪) காட்சிக்கினியவாகிய நல்லில் (௧௧௪) எனமுடிக்க

கோயில் (௧00) வரைபபில (௧0௭) காண்பினல்லி (௧௧௪) லெனமுடிக்க.

[தசநான் கெய்திய.] நான்கு தசம் எய்திய—நாற்பதிற்றியாண்டு சென்ற,

பணை மருள் நோன் தாள்—முரசென்றுமருளும வலியகால்களையும்,

[இகன்மீக் கூறு மேந்தெழில் வரிநுதல்]

ஏந்து எழில் வரி நுதல—உயர்ந்த அழகினையும புகர் நிறைந்த மத்தகத்தினையுமுடைய நாகம் (௧௧௭),

இகல மீக்கூறும நாகம—போரில மேலாகசசொலலும் நாகம்,

பொருது ஒழி நாகம—பொருதுபட்ட யானையினுடைய,

[ஒழியெயி றருகெறிந்து, சீருஞ் செம்மையு மொப்ப] ஒழி எயிறு சீரும் செம்மையும ஒப்ப அருகு எறிந்து—தானேவீழ்ந்தகொம்பைக் கனமும்செம்மையுமொப்ப இரண்டுபுறத்தையுஞ்செத்தி,

வலலோன் கூர் உளி குயின்ற— தச்சன் கூரிய சிற்றுளியாலே பண்ணின,

ஈரிலை இடை இடுபு—பெரிய இலைத்தொழிலை இடையேஇட்டு,

[தூங்கியன் மகளிர் வீங்குமுலை கடுப்பப், புடைதிரண் டிருந்த குடத்த விடைதிரண், டுள்ளி நோன்முதல் பொருத்தி யடியமைத்துப், பேரள வெய்திய பெரும்பெயர்ப் பாண்டின், மடைமா ணுண்ணிழை பொலியத் தொடைமாண்டு, முத்துடைச் சாலேக நாற்றிக் குத்துறுத்துப், புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ் தட்டத்துத், தகடுகண் புதையக் கொளீஇத் துகடீர்ந், தூட்டுறு பன்மயிர் விரைஇ வயமான், வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து, முல்லைப் பல்போது றழப் பூநிரைத்து:]

ஊட்டுறு பன்மயிர் விரைஇ—பலநிறம்பிடித்த மயிர்களை உள்ளேவைத்து அதன் மேலே,

வயமான் வேட்டம் பொறித்து—சிங்கமுதலியவற்றை வேட்டையாடுகின்றதொழில்களைப் பொறித்த தகடுகளைவைத்து,

புலிமுதலியவற்றின் வரிகள்தோன்ற உளளே மயிர்விரவின

வியன் கண் கானதது மூலலைப போது உறழப பல பூ நினைதது—அகற்சியை இடததேயுடைய காட்டிடதது முலலைப்போதுடனே மாறுபடுமபடி ஏனைப பல பூககளையுமநினைதது,

சாலேகத தகடு குததுறுதது—சாளரங்களாகததிறநததகடுகளை ஆணிகளாலே தைததது,

மடை மாண பாணடில்—மூட்டுவாய் மாட்சிமைபபட்ட வடடக்கடடில்,

கொம்பைசசெததி உளியாறகுயினற இலையை இடையிட்டுப பொறிதது நினைததுச சாலேகததகடுகளைக குததுறுதது மடைமாணபாணடிலெனமுடிகக.

முதது உடை நுண இழை பொலிய நாறறி நதொடை மாணடு பேரளவு எயதிய பாண்டில்—முதலைதத தனனிடததேயுடைய மெலலியநூல அழகுபெறுமபடி கடடிலின்கீழேவீழ நாலுபுறமும்நாறறி அதனைத தனனிடததேகடடுதலமாட்சிமைபபட்டுப பெரிய எலலையைபபெறற பாணடிலெனககூட்டுக

என்றதனுல தநதததாறசமைதத கடடிலைசசூழ முததுவடநாறறியெனறுா

புலிப பொறிக கொண்ட பூஙகேழத தட்டததுக கண புதையக கொளீஇத துகள தீாநது பெருமபெயாப பாணடில—புலியினதுவரியைத தன்னிடததேகொண்ட பொலிவுபெற்ற நிறததைதயுடைய கசசாலே நடுவுவெளியான இடமறையுமபடி கோககபபடடுக் குறறமறறுக கசசுககட்டிலெனனும் பெரிய பெயரையுடைய பாணடிலெனககூட்டுக

தூஙகு இயல் மகளிா வீஙகு முலை கடுப்பப புடை திரண்டிருநத குடதத அடி—சூனமுற்றி அசைநத இயலபினையுடையராகிய மகளிரது பாலகட்டிவீஙகின முலையையொப்பப பககமுருணடிருநத குடததையுடையவாயஅடி,

இஃது உருட்சிககு உவமைகூறிறறு

இடை திரணடு உளளிமுதல நோன் அடி பொருததி அமைதது—குடததிறகு நகட்டிற்குநடுவாகியஇடம ஒழுகமெலலிதாயததிரணடு உளளிமுதல்போலும் வலியினையுடையகாலகளைத தனனிடதததைததுசசமைததுப பேரளவெயதியபாணடிலெனக

உள்ளிபபுட்டிலபோலவதனை உள்ளிமுதலெனறுா

[மெல்லிதின விரிநத சேககை மேமபடத, துணைபுண ரனனத தூநிறத் தூவி, யிணை யணை மேமபடப பாயணை யிடடு]

மெல்லிதின் விரிந்த இணைஅணைசேககை--மெலலிதாகவிரிந்த இணைதலைணைந்த படுககையெனக.

மேமபடத தூணை புணா அன்னத தூநிறத தூவி பாய்—அசசேககைக்குமேலாகத் தம்பேட்டைபபுணாநத அன்னச்சேவலின் தூயநிறத்தையுடைய சூட்டாகிய மயிர் பரககபபட்டு,

"சிறுபூளை செம்பஞசு வெணபஞசு சேண, முறுதூவி சேக்கையோ டைநது" என்ற ஐந்தினையும்படுத்ததென்பதுதோன்ற இணையணையென்றுா. என்புருகி மிகக அன்போடுபுணர்தலிற் சூட்டிற்கு மென்மைபிறக்குமென்பதுதோன்றத் தூணைபுணர்

புள்ளின்றூவியென்றார். பிறரும் இக்கருத்தைபற்றி * "ஆதரம் பெருகுகின்ற வன்பிஞ லன்ன மொத்தும" என்றார்

[காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத், தோடமை தூமடி விரித்த சேக்கை:] மேம்பட அணையிட்டுக (௧௩௩) காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத் தூ மடிவிரித்த தோடு அமை சேக்கை—அத்தூவிக்குமேலாக அணைகளுமிட்டுவைத்துக் கஞ்சியைத் தன்னிடத்தேகொண்ட கழுவுதலுற்றதுகிலின தூய மடித்ததுவிரித்த செங்கழுநீர்முதலியவற்றின இதழ்கள்பொருந்தின படுக்கை,

இணையணைசேக்கை மேம்பட்ட தூவிபாய அத்தூவிக்கு மேம்பட அணையிட்டுத் தூமடிவிரித்த சேக்கையெனக

ஆரம் தாங்கிய அலர் முலை ஆகத்துப் பின் அமை நெடுவீழ் தாழ—முன்பு முத்தாரசெய்த கச்சுச்சுமந்த பருத்தமுலையிணையுடைய மார்பிடத்தே இப்பொழுது குத்துதலைமந்த நெடிய தாலிநாணொன்றுமே தூங்க,

வீழ்ந்துகிடத்தலின், வீழென்றார் இனிப பின்னுதலைமந்த நெடியவீழ - மயிரொன்பாருமுளர்.

துணை துறந்து—அரசன பிரிகையினுமல,

நல நுதல உலறிய சில மெல ஓதி — நன்ருகிய நுதலிடத்தே கைசெய்யாமல் உலறிக்கிடந்த சிலவாகிய மெத்தென்ற மயிரிணையும்,

இனித் துணைதுறந்துலறியவோதியெனக்கூட்டிக் கூடிக்கிடந்த தன்மைநீங்கி உலறிய ஓதியென்றுரைப்பாருமுளர்.

[நெடுநீர் வார்குழை களைந்தெனக் குறுங்கண், வாயுறை யழுத்திய வறிதுவீழ் காதின்]

நெடுநீர் வார் குழை களைந்தென வறிது வீழ் காதின—பெரிய ஒளியொழுகின மகரக்குழையைவாங்கிறுகச சிறிதேதாழ்ந்த காதிணையும,

நீர்மை - ஒளி

குறுங்கண் வாயுறை அழுத்திய காது—சிறிய இடத்தையுடைய தாளுருவியழுத்தியகாது,

வாயுறவென்றுபாட மாயின், கடுக்கனவாயுறும்படியழுத்தினகாதென்க

பொலம் தொடி தின்ற மயிர் வார் முன்கை வலம்புரி வளையொடு கடிகைநூல யாத்து—முன்பு பொன்ருறசெய்த தொடிகிடந்து தழும்பிருந்த மயிர் ஒழுங்குபட்டுக்கிடந்த முன்கையிலே வலம்புரியையறுத்துப்பண்ணின வளையையிட்டுக் காப்புநாணைக்கட்டி,

ஒடு - வேறுவினையொடு

வாளைப் பகு வாய கடுப்ப வணக்குறுத்துச் செவ்விரற கொளீஇய செங்கேழ் விளக்கத்து—வாளையினது பகுத்தவாயையொக்க முடக்கத்தையுண்டாக்கிச் சிவந்த விரலிடத்தேயிட்ட சிவந்தநிறத்தையுடைய முடக்கென்னுமோதிரத்தையும,

* சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௧௬௦—"காதலாற காம பூமிக் கதிரொளி யவரு மொத்தார் - மாதருங் களிற ஞனு மாசுண மகிழசசி மன்ற - லாதரம் பெருகு கின்ற வன்பிஞ லன்ன மொத்தார் - தீதிலார் கிளைபபி ஞமான செலவமே பெரிது மொத்தார்."

பூந்துகில மரீஇய ஏந்து கோட்டு அல்குல் அம் மாசு ஊர்ந்த அவிர் நூற் கலிங்க மொடு—முன்பு பூததொழிலையுடைய துகிலகிடந்த உயர்ந்த வளைவினையுடையவல்கு லில் இக்காலத்துடுதத அழகிய மாசேறிய விளங்குகின்ற நூலாற்செய்த புடைவை யுடனே,

[புனையா வோவியங கடுப்பப புனைவில ]

புனையா ஓவியம கடுப்ப— வண்ணஙகளைககொண்டெழுதாத வடிவைக்கோட்டி ன சிததிரததையொபப,

புனைவில் நலலடி (கஙிக) யென மேல்வருவதனைக்கூட்டி, கழுவிச் செம்பஞ்சிட் டுப பூண்களணியாத நன்றாகியவடியென்க.

தளிர ஏர மேனி—மாந்தளிரையொதத நிறததினையும,

தாய சுணஙகின்—பரந்த சுணஙகினையும்,

அம் பணைத தடைஇய மென்றோள்—அழகினையுடைய மூஙகிலபோலத்திரண்ட மெல்லியதோளினையும்,

[முகிழமுலை, வம்புவிசித தியாதத ] வம்பு விசித்து யாத்த முகிழ முலை—கச்சை வலித்துககட்டின தாமரைமுகைபோலும் முலையினையும்,

வாங்கு சாய நுசுப்பின்—வளையும் நுடஙகுமிடையினையும்,

மெல்லியல மகளிா—மெத்தென்ற தன்மையினையுமுடைய சேடியா,

நல் அடி வருட—துயிலுணடாகுமோவென்று அடியைத் தடவ,

மேனி (கசஅ) முதலியவறறையுடையமகளிா (கஙிக) புனைவில் (கசஎ) நலலடி வருடவென்க

நறை விரவுற்ற நறு மென் கூந்தற் செம்முகச செவிலியா கைம் மிகக் குழீஇ—நறைகலததலுற்ற நறிய மெல்லியமயிரினையுடைய சிவந்தமுகததையுடைய செவிலித் தாயா இவளா றறாவொழுககமிகுகையினாலே திரணடு,

குறியவும நெடியவும் உரை பல பயிறறி—பொருளொடுபுணராப் பொய்ம்மொழி யும மெய்ம்மொழியுமாகிய உரைகள்பலவற்றையும் பலகாறசொல்லி,

* "ஒன்றே மறறுஞ் செவிலிக் குரித்தே" என்பதிலககணம்

இன்னே வருகுவா இனறுணையோா என முகததவை மொழியவும் ஒல்லாள் மிகக் கலுழ்ந்து—இப்பொழுதேவருகுவர் நினக்கினிய துணையாந்தன்மையையுடை யோரென்று அவள்மனததுககு இனியவாாததைகளைககூறவும் அதறகுப்பொருந்தா ளாய் மிகக்கலங்கி,

[நுண்சேறு வழிதத நோனிலைத் திரள்கா, லூறா வறுமுலை கொளீஇய:] ஊறா வறுமுலை கொளீஇய நுண சேறு வழிதத நோன் நிலைத திரள் கால்—குடஙகளைக் கடைந்துதைதத சாதிலிஙகம்பூசின வலியநிலையினையுடைய மேறகட்டியிற் றிரண்ட கால்களை,

கால் திருததி—கட்டிறகால்களுக்கு அருகாகநிறகுமபடிபண்ணி அதனிடத்தே கட்டி,

ஊறாவறுமுலை - குடத்திறகு வெளிப்படை; முலைபோறலின் முலையென்றார்.

[புதுவ தியன்ற மெழுகுசெய் படமிசை ] மெழுகு செய் படமிசைப் புதுவது இயன்ற—மெழுகுவழித்த மேறகட்டியினமேலே புதிதாகவெழுதின,

* தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், கஎக.

[திண்ணிலை மருப்பி னாடுதலை யாக, விண்ணூர்பு திரிதரும்.]

விண்—ஆகாயத்திடத்தே,

திண் நிலை மருப்பின் ஆடு தலையாக ஊர்பு திரிதரும்—திண்ணியநிலையினையுடைய கொம்பினையுடைய மேடராசிமுதலாக ஏனையிராசிகளிற் சென்றுதிரியும்,

வீங்கு செலல் மண்டிலத்து முரண் மிகு சிறப்பிற் செல்வனொடு நிலைஇய—மிக்க செலவினையுடைய ஞாயிற்றோடே மாறுபாடுமிகுந்த தலைமையினையுடைய திங்களோடு * திரியாமனின்ற,

உரோகிணி நினைவனள் நோக்கி—உரோகிணியைப்போல யாமும் பிரிவின்றியிருத்தலைப் பெற்றிலேமேயென்று நினைத்து அவற்றைப்பார்த்து,

ஞாயிறு கணடெழுந்தியதென்று திங்களிற்கு அடைகூறிற்று

நெடிதுயிரா—நெட்டுயிர்ப்புக்கொண்டு,

[மாயித ழேந்திய மலிந்துவீ ழரிப்பனி, செவ்விரல கடைக்கண சேர்த்திச் சில தெறியா] மா இதழ் வீழ் கண கடை மலிந்து ஏந்திய அரிப் பனி சில செவ்விரல சேர்த்தித் தெறியா—நீலப்பூவிரும்பினக்கண் தனக்கடைக்கணணிடத்தேவர மிகக்குச் சுமந்த ஐதாகிய நீர்ச்சிலவற்றைச் சிவந்த விரலைச்சேர்த்தித் தெறித்து,

என்றது - மிகவுமழாமல் மலக்கினநீரைத் தெறித்தெனன்றா

புலம்பொடு வதியும நலம கிளர் அரிவைக்கு — தனிமையோடுகிடக்கும் அன்பு மிகுகின்ற அரிவைக்கு,

அரசன்பிரிகையினாலே நெடுவீழ்தாழ (கசுஎ) நூல்யாத்து (கசஉ) மாசூந்த தகலிங்கத்தோடே (கசசு) ஒதியினையும (கருஅ) காதினையும (கசO) விளக்கத்தினையு (கசச) முடையளாய் மிகக்கலங்கி (கருசு) உரோகிணி நினைவனணோக்கி நெடிதுயிர்த்துக் (கசுகூ) தெறித்து (கசுரு) மகளிர் நலலடிவருட (கருக) ஓவியங்கடுப்ப (கசஎ) வதியுமரிவைக்கு (கசுசு) என வினைமுடிக்க

அரிவைக்கு இன்னா அரும்படர் தீர — அரிவைக்குத் தீதாயிருக்கின்ற ஆற்றுதற்கரிய நினைவு தீரும்படி,

பாசறைத் தொழில (கஅஅ) வி்றல தந்து இனனே முடிக தில— வேந்தன் பாசறையிடத்திருந்து பொருகின்ற போர்த்தொழில அவனுக்கு வெற்றியைக்கொடுத்து இப்பொழுதே முடிவதாக, இஃது எனக்குவிருப்பம் எனமுடிக்க

அம்ம— கேட்பாயாக;

இஃது இவள்வருத்தமிகுதி தீரவேண்டிக் கொற்றவையைநோக்கிப் பரவுகின்றவள்கூற்றாயிற்று. கேட்பாயாகவென்றது கொற்றவையைநோக்கி முடிகவென்ற வியங்கோள் வேண்டுகோடற்பொருண்மைக்கண வந்தது தில் - விழைவின்கண வந்தது.

மின் அவிர் ஓடையொடு பொலிந்த வினை நவில் யானை நீள் திரள தடக்கை நிலமிசைப் புரளக் களிறு களம்படுத்த பெருஞ்செய் ஆடவர்—ஒளிவிளங்குகின்ற பட்டத்தோடே பொலிவுபெற்ற போர்த்தொழிலைப்பயின்ற யானையினுடைய நீண்ட திரண்ட பெருமையினையுடையகை அற்று நிலத்தேபுரளும்படி யானையை முன்னாக் கொன்ற பெரியசெயலையுடைய வீரருடைய,

செயலென்னும் வினைப்பெயர் செயயென முதனிலையாய் நின்றது.

---

* தெரியாமனின்றவென்றும் பிரதிபேதமுண்டு.

ஒளிறு வாள் விழுப் புண காணிய புறம் போந்து— விளங்கும்வாளினாற் போழ்ந்த சீரியபுண்ணைக் கண்டுபரிகரித்தற்குத் தானிருக்கின்ற இடத்திற்குப் புறம்பேபோந்து திரிதரும்வேந்தன் (கஅஎ) என்க

வடந்தைத தண வளி—வடதிசைககணணதாகிய குளிர்ந்தகாறறு,

என்றது வாடையை

[தண்வளி யெறிதொறு நுடஙகித, தெறகோ பிறைஞ்சிய தலைய நறபல், பாண்டில விளக்கிற் பரூஉசசுட ரழல] நல் பல பாணடில் விளக்கிற் பரூஉச் சுடர் தண்வளி எறிதொறும நுடங்கித தெறகு ஏாபு இறைஞ்சிய தலைய அழல—நன்ருகிய பல கால் விளக்கிலெரிகின்ற பருததகொழுந்து வாடைக்காறறு அடிகருந்தோறும் அசைந்து தெறகுநோககியெழுநது சாயந்த தலையினையுடையவாயெரிய,

விளககு - ஆகுபெயா

வேம்பு தலை யாதத நோன் காழ் எஃகமொடு முன்னேன் முறைமுறை காட்ட—வேபபாதாரைத தலையிலேகட்டின வலிய காம்பினையுடைய வேலோடே முன்செல்கின்ற சேனுபதி புணபட்டவீரரை அடைவே அடைவேகாட்ட,

பின்னா மணி புறதது இட்ட மாத தாட் பிடியொடு பருமம் களையாப் பாய் பரிக கலி மா இருஞசேற்றுத தெருவின் எறிதுளி விதிாபப—பின்னுக மணிகளைத்தன்னிடததேயிட்ட பெருமையையுடைய தாளினையுடைய குசையோடே பக்கரைவாங்காத பாயந்துசெல்லுஞ செலவினையுடைய செருக்கினகுதிரைகள் கரிய சேறறையுடைய தெருவிலே தம்மேலேவீசும் துளிகளையுதற,

தாளென்றது வாய்க்கருவியிற கோததுமுடியும் குசையிற்றலையை.

புடை வீழ அம துகில இடவயின தழீஇ—இடத்தோளினின்றும் நழுவிவீழ்ந்த அழகினையுடைய ஒலியலை இடபபககததேயணைத்துக்கொணடு,

வாள் தோடகோதத வனகட காளை சுவல மிசை அமைத்த கையன்— வாளைத் தோளிலேகோதத தறுகணமையையுடைய வாளெடுபபானறேளிலே வைதத வலககையையுடையனுய்,

முகன அமாநது— புணபட்டவீராக்கு அகமலாச்சிதோன்ற முகமபொருந்தி,

நூல காலயாதத மாலை வெணகுடை — நூலாலே சட்டத்தைககட்டின முத்தமாலையினையுடைய கொறறககுடை,

தவ்வெனறு அசைஇத தா துளி மறைபப—தவ்வென்னுமோசைபட்டு அசைந்து பரககின்ற துளியைக காகக,

தாழ்துளியும்பாடம

நள்ளென் யாமததுப பளளிகொள்ளான் சிலரொடு திரிதரும் வேந்தன் — நள்ளென்னுமோசையையுடைய நடுவியாமததுப பள்ளிகொளளானுய்ச் சிலவீரரோடே புண்பட்டோரைப பரிகரிததுத திரிதலைசெய்யுமரசன்,

பலரொடு முரணிய பாசறைத் தொழில் — சேரன் செம்பியன்முதலிய எழுவரோடே மாறுபட்டுப பொருகின்ற பாசறையிடததுப் போர்த்தொழில்,

புண்காணிய புறம்போந்து (களஉ) சுடரழலக் (களரு) காட்ட (களஎ) விதிர்ப்பத் (கஅ0) தழீஇக (கஅக) கையனுய் அமாந்து (கஅங) மறைப்பப் (கஅரு) பள்ளிகொள்ளானுய்த (கஅசு) திரியும் வேந்தன் (கஅஎ) என்க.

அம்ம (கசுஅ), வானம் கார்காலத்து மழையைப்பெய்ததாகப் (உ) பின்னர் நிகழ்ந்தபொழுது கூதிர்க்காலமாய் நிலைபெற்றது (எஉ); அக்கூதிர்க்காலத்து நடுவியாமத்தே (கஉ) வாயிலினையும் (அஅ) முன்கடையினையும் (கூஉ) முற்றத்தினையும் (கூ0) சிறப்பினையு (அகூ) முடைய கோயில் (க00) வரைப்புக்களிற் (க0எ) காண்பினல்லிலிற் (ககச) பூணடிவிற (கஉரு) சேக்கையிலே (கருரு) வதியுமரிவைக்குப் (கசுசு) படாதிரும்படி (கசுஎ) வேந்தன் (கஅஎ) பலரொடுமுரணிய பாசறைத்தொழில் (கஅஅ) விறந்து (கசுஎ) இன்னேமுடிவதாக; இஃது எனக்கு விருப்பம் (கசுஅ) எனக் கொற்றவையைப்பரவிற்றாக வினைமுடிக்க.

இப்பாட்டுத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மண்ணசையாற்சென்று பொருதலின், இப்போர் வஞ்சியாகலின், வஞ்சிக்குக்கொற்றவைநிலையுண்மையின், கொற்றவையை வெற்றிப்பொருட்டுப் பரவுதல் கூறினார்; அது பாலைத்திணைக்கேற்றலின்.

**பாண்டியன் நெடுஞ்செழியனை மதுரைக்கணக்காயனார்மகனார் நக்கீரனார்பாடிய நெடுநல்வாடைக்கு மதுரைஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்த உரை முற்றிற்று**



வெண்பா.

வாடை நலிய வடிக்கண்ணா ளோணசைஇ
யோடை மழகளிற்றா னுள்ளான்கொல்—கோடன்
முகையோ டலமர முற்றெரிபோற் பொங்கிய
பகையோடு பாசறையு ளான்

எட்டாவது

# குறிஞ்சிப்பாட்டு.

அன்னாய் வாழிவேண் டன்னை யொண்ணுத
லொலிமென் கூந்தலென் றோழி மேனி
விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோ
யகலு ளாங்க ணறியுநர் வினாயும்
௫ பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்
வேறுபல் லுருவிற் கடவுட் பேணி
நறையும் விரையு மோச்சியு மலவுற்
றெய்யா மையலை நீயும் வருந்துதி
நற்கவின் றொலையவு நறுந்தோ ணெகிழவும்
௧௦ புட்பிற ரறியவும் புலம்புவந் தலைப்பவு
முட்கரந் துறையு முய்யா வரும்படர்
செப்பல் வன்மையிற் செறித்தியான் கடவின்
முத்தினு மணியினும் பொன்னினு மத்துணை
நேர்வருங் குரைய கலங்கெடிற் புணருஞ்
௧௫ சால்பும் வியப்பு மியல்புங் குன்றின்
மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்த
லாசறு காட்சி யையர்க்கு மந்நிலை
யெளிய வென்னார் தொன்மருங் கறிஞர்
மாதரு மடனு மோராங்குத் தணப்ப
௨௦ நெடுந்தே ரெந்தை யருங்கடி நீவி
யிருவே மாய்ந்த மன்ற லிதுவென
நாமறி வுறாலிற் பழியு முண்டோ
வாற்றின் * வாரா ராயினு மாற்ற
வேனையு லகத்து மியைவ தாநமக்கென
௨௫ மானமர் நோக்கங் கலங்கிக் கையற்
றானாச் சிறுமைய ளிவளுந் தேம்பு
மிகன்மீக் கடவு மிருபெரு வேந்தர்
வினையிடை நின்ற சான்றோர் போல
விருபே ரச்சமோ டியானு மாற்றலேன்
௩௦ கொடுப்பினன் குடைமையுங் குடிநிர லுடைமையு

* வாராதாயினுமென்றும் பாடம்

வண்ணமுந் துணையும் பொரீஇ யெண்ணா
தெமியேந் துணிந்த வேமஞ்சா லருவினை
நிகழ்ந்த வண்ண நீநனி யுணரச்
செப்ப லான்றிசிற் சினவா தீமோ
௩௫ நெற்கொ ணெடுவெதிர்க் கணந்த யானை
முத்தார் மருப்பி னிறங்குகை கடுப்பத்
துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குர
னற்கோட் சிறுதினைப் படுபுள் ளோப்பி
யெற்பட வருதிய ரெனநீ விடுத்தலிற்
௪௦ கலிகெழு மீமிசைச் சேணோ னிழைத்த
புலியஞ் சிதண மேறி யவண
சாரற் சூரற் றகைபெற வலந்த
தழலுந் தட்டையுங் குளிரும் பிறவுங்
கிளிகடி மரபின வூழூழ் வாங்கி
௪௫ யுரவுக் கதிர்தெறூஉ முருப்பவி ரமயத்து
விசும்பாடு பறவை வீழ்பதிப் படர
நிறையிரும் பௌவங் குறைபட முகந்துகொண்
டகலிரு வானத்து வீசுவளி கலாவலின்
முரசதிர்ந் தன்ன வின்குர லேற்றொடு
௫௦ நிரைசெ லிவவிற் கொண்மூ மயங்கி
யின்னிசை முரசிற் சுடர்ப்பூட் சேஎ
யொன்னார்க் கேந்திய விலங்கிலை யெஃகின்
மின்மயங்கு கருவிய கன்மிசைப் பொழிந்தென
வண்ண னெடுங்கோட் டிழிதரு தெண்ணீ
௫௫ ரவிர்துகில் புரையு மவ்வெள ளருவித்
தவிர்வில் வேட்கையேந் தண்டா தாடிப்
பளிங்குசொரி வன்ன பாய்சுனை குடைவுழி
நளிபடு சிலம்பிற் பாயம் பாடிப்
பொன்னெறி மணியிற் சிறுபுறந் தாழ்ந்தவெம்
௬௦ பின்னிருங் கூந்தல் பிழிவனந் துவரி
யுள்ளகஞ் சிவந்த கண்ணேம் வள்ளித
ழொண்செங் காந்த ளாம்ப லனிச்சந்
தண்கயக் குவளை குறிஞ்சி வெட்சி
செங்கொடு வேரி தேமா மணிச்சிகை
௬௫ யுரிதுநா றவிழ்தொத் துந்தூழ் கூவிள
மெரிபுரை யெறுழஞ் சுள்ளி கூவிரம்
வடவனம் வாகை வான்பூங் குடச

மெருவை செருவிளை மணிப்பூங் கருவிளை
பயினி வானி பல்லிணர்க் குரவம்
௭0 பசும்பிடி வகுளம் பல்லிணர்க் காயா
விரிமலர் ஆவிரை வேரல் சூரல்
குரீஇப் பூளை குறுநறுங் கண்ணி
குருகிலை மருதம் விரிபூங் கோங்கம்
போங்கம் திலகம் தேங்கமழ் பாதிரி
௭௫ செருந்தி யதிரல் பெருந்தண் சண்பகம்
கரந்தை குளவி கடிகமழ் கலிமாந்
தில்லை பாலை கல்லிவர் முல்லை
குல்லை பிடவஞ் சிறுமா ரோடம்
வாழை வள்ளி நீணறு நெய்தல்
௮0 றாழை தளவ முட்டாட் டாமரை
ஞாழன் மௌவ னறுந்தண் கொகுடி
சேடல் செம்மல் சிறுசெங் குரலி
கோடல் கைதை கொங்குமுதிர் நறுவழை
காஞ்சி மணிக்குலைக் கட்கமழ் நெய்தல்
௮௫ பாங்கர் மராஅம் பல்பூந் தணக்கம்
ஈங்கை யிலவந் தூங்கிணர்க் கொன்றை
*யடம்பம ராத்தி நெடுங்கொடி யவரை
பகன்றை பலாசம் பல்பூம் பிண்டி
வஞ்சி பித்திகஞ் சிந்து வாரந்
௯0 தும்பை துழாஅய் சுடர்ப்பூந் தோன்றி
நந்தி நறவ நறும்புன் னாகம்
பாரம் பீரம் பைங்குருக் கத்தி
யாரங் காழ்வை கடியிரும் புன்னை
நரந்த நாக நள்ளிருள் நாறி
௯௫ மாயிருங் குருந்தும் வேங்கையும் பிறவு
மரக்குவிரித் தன்ன † பரேரம் புழகுடன்
மாலங் குடைய மலிவன மறுகி
வான்கண் கழீஇய வகலறைக் குவைஇப்
புள்ளா ரியத்த விலங்குமலைச் சிலம்பின்
௱ வள்ளுயிர்த் தெள்விளி யிடையிடைப் பயிற்றிக்
கிள்ளை யோப்பியுங் கிளையிதழ் பறியாப்
பைவிரி யல்குற் கொய்தழை தைஇப்

---

* அடும்பெனவும் பாடம்
† பாரம் பமகெனவும் பாடம்

பல்வே றுருவின் வனப்பமை கோதையெம்
மெல்லிரு முச்சிக் கவின்பெறக் கட்டி
௧௦௫ யெரியவி ருருவி னங்குழைச் செயலைத்
தாதுபடு தண்ணிழ லிருந்தன மாக
வெண்ணெய் நீவிய சுரிவளா நறுங்காழ்த்
தண்ணறுந் தகரங் கமழ மண்ணி
யீரம் புலர விரலுளர்ப் பவிழாக்
௧௧௦ காழகி லம்புகை கொளீஇ யாழிசை
யணிமிகு வரிமிஞி றார்ப்பத் தேங்கலந்து
மணிநிறங் கொண்ட மாயிருங் குஞ்சியின்
மலையவு நிலத்தவுஞ் சினையவுஞ் சுனையவும்
வண்ண வண்ணத்த மலராய்பு விரைஇய
௧௧௫ தண்ணறுந் தொடையல் வெண்போழ்க் கண்ணி
நலம்பெறு சென்னி நாமுற மிலைச்சிப்
பைங்காற் பித்திகத் தாயித ழலரி
யந்தொடை யொருகாழ் வளைஇச் செந்தீ
யொண்பூம் பிண்டி யொருகாது செரீஇ
௧௨௦ யந்தளிர்க் குவவுமொய்ம்ம் பலைப்பச் சாந்தருந்தி
மைந்திறை கொண்ட மலாந்தேந் தகலத்துத்
தொன்றுபடு நறுந்தார் பூணொடு பொலியச்
செம்பொறிக் கேற்ற வீங்கிறைத் தடக்கையின்
வண்ண வரிவில் லேந்தி யம்புதெரிந்து
௧௨௫ நுண்வினைக் கச்சைத் தயக்கறக் கட்டி
யியலணிப் பொலிந்த வீகை வான்கழ
றுயல்வருந் தோறுந் திருந்தடிக் கலாவ
முனைபாழ் படுக்குந் துன்னருந் துப்பிற்
பகைபுறங் கண்ட பல்வேல் விளைஞரி
௧௩௦ னுரவுச்சினஞ் செருக்கித் துன்னுதொறும் வெகுளு
முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி
கிளையாக் கண்ண வளைகுபு நெரிதர
நடுங்குவன மெழுந்து நல்லடி தளர்ந்தியா
மிடும்பைகூர் மனத்தேம் மருண்டுபுலம் படா
௧௩௫ மாறுபொரு தோட்டிய புகல்வின் வேறுபுலத்
தாகாண் விடையி னணிபெற வந்தெ
மலமர லாயிடை வெரூஉத லஞ்சி
மெல்லிய வினிய மேவாக் கிளந்தெ
மைம்பா லாய்கவி னேத்தி யொண்டொடி

கசO யசைமென் சாய லவவாங குந்தி
மடமதா மழைகக ணிளையீ ரிறநத
கெடுதியு முடையே னென்றன னதனெதிா
சொலலே மாதலி னலலாநது கலஙகிக்
கெடுதி யுமவிட ராயி னெமமொடு
கசரு சொலலும பழியோ மெலலிய லீரென
நைவளம பழுநிய பாலை வலலோன
கைகவா நரமபி னிமமென விமிரு
மாதா வணடொடு சுருமபுநயந திறநத
தாதவி ழலரித தாசினை பிளநது
கருO தாறடு களிறறின் வீறுபெற வோசசிக
கலலென சுறறக கடுஙகுர லவிதநதெரு
சொலலற பாணி நினறன னாக
விருவி வேயநத குறுஙகாற குரமபைப
பிணையோ நோககின மனையோள மடுபப
கருரு தேமபிழி தேறல மாநதிமகிழ் சிறநது
சேம மடிநத பொழுதின வாயமடுத
திருமபுன நிழததலிற சிறுமை நோனா
தரவுற ழஞசிலை கொளீஇ நோயமிக்
குரவுசின முனபா லுடலசினஞ செருககிக
கசுO கணைவிடு புடையூக கானங கலலென
மடிவிடு வீளையா வெடிபடுத தெதிாக
காாபபெய லுருமிற பிளிறிச சீாததக
விருமபிணாத தடக்கை யிருநிலஞ சோததிச
சினநதிகழ் கடாஅஞ செருககிமாங கொலபு
கசுரு மையல வேழ மடங்கலி னெதிாதா
வுய்விட மறியே மாகி யொய்யெனத
திருந்துகோ லெலவளை * தெழிபப நாணுமறநது
விதுபபுறு மனததேம விரைந்தவற பொருந்திச
சூருறு மஞஞையி னடுஙக வார்கோ
களO லுடுவுறும பகழி வாஙகிக கடுவிசை
யண்ணல யானை யணிமுகத தழுந்தலிற்
புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப
புள்ளி வரிநுதல் சிதைய நில்லா
தயர்ந்து புறங்கொடுதத பின்னர் நெடுவேள்
களரு ளணங்குறு மகளி ராடுகளங கடுப்பத்

---

* தெளிப்பவெனவும் பாடம்

திண்ணிலைக் கடம்பின் றிரளரை வளைஇய
துணையறை மாலையிற் கைபிணி விடே
நுரையுடைக் கலுழி பாய்தலி னுரவுத்திரை
யடுங்கரை வாழையி னடுங்கப் பெருந்தகை
௧௮௦ யஞ்சி லோதி யசைய லாவது
மஞ்ச லோம்புநின் னணிநல நுகர்கென
மாசறு சுடர்நுத னீவி நீடுநினைந்
தென்முக நோக்கி நக்கன னந்நிலை
நாணு முட்கு நண்ணுவழி யடைதர
௧௮௫ வொய்யெனப் பிரியவும் விடாஅன் கவைஇ
யாக மடைய முயங்கலி னவ்வழிப்
பழுமிள குக்க பாறை நெடுஞ்சுனை
முழுமுதற் கொக்கின் றீங்கனி யுதிர்ந்தெனப்
புள்ளெறி பிரசமொ டீண்டிப் பலவி
௧௯௦ னெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேற
னீர்செத் தயின்ற தோகை வியலூர்ச்
சாறுகொ ளாங்கண் விழவுக்கள நந்தி
யரிக்கூட் டின்னியங் கறங்க வாடுமகள்
கயிறூர் பாணியிற் றளருஞ் சாரல்
௧௯௫ வரையர மகளிரிற் சாஅய் விழைதக
விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தட்
டண்கம ழலரி தாஅய் நன்பல
வம்புவிரி களத்திற் கவின்பெறப் பொலிந்த
குன்றுகெழு நாடனெம் விழைதரு பெருவிற
௨௦௦ லுள்ளத் தன்மை யுள்ளினன் கொண்டு
சாறயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி
வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப
மலரத் திறந்த வாயில் பலருணப்
பைந்நிண மொழுகிய நெய்ம்மலி யடிசில்
௨௦௫ வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு
விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னோ டுண்டலும் புரைவ தென்றாங்
கறம்புணை யாகத் தேற்றிப் பிறங்குமலை
மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழு
௨௧௦ தேமுறு வஞ்சினம் வாய்மையிற் றேற்றி
யந்தீந் தெண்ணீர் குடித்தலி னெஞ்சமர்ந்
தருவிட ரமைந்த களிறுதரு புணர்ச்சி

வானுரி யுறையுள் வயஙகியோ ரவாவும்
பூமலி சோலை யப்பகல கழிபபி
உகரு யெல்லை செல்ல வேழூா பிறைஞசிப
பல்கதிர் மண்டிலங் கலசேர்பு மறைய
மான்கண மாமுதற றெவிடட வான்கணங
சன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதா
வேஙகுவயி ரிசைய கொடுவா யன்றி
உஉ0 லோஙகிரும பெண்ணை யகமட லகவப
பாமபுமணி யுமிழப பலவயிற கோவல
ராமபலந் தீஙகுழற றெளவிளி பயிறற
வாமப லாயிதழ கூமபுவிட வளமனைப
பூநதொடி மகளிா சுடாதலைக கொளுவி
உஉரு யநதி யநதண ரயரக கானவா
விண்டோய பணவை மிசைஞெகிழி பொதத
வான மாமலை வாயசூழ்பு கறுபபக கானங
கலலென றிரடடப புளளின மொழிபபச
சினைஇய வேநதன செலசமங கடுபபத
உரு0 துனைஇய மாலை துனனுதல காணூஉ
நேரிறை முனகை பறறி நுமாதா
நாடறி நனமண மயாகஞ் சினனாட
கலஙக லோமபுமி னிலஙகிழை யீரென
வீர நனமொழி தீரக கூறித
உருரு துணைபுண ரேறறி னெமமொடு வநது
துஞசா முழவின் மூதூா வாயி
லுணடுறை நிறுததுப பெயாநதன னதறகொண
டனறை யனன விருபபோ டென்று
மிரவரன் மாலைய னேவரு தோறுங
உச0 காவலா கடுகினுங கதநாய குரைபபினு
நீதுயி லெழினு நிலவுவெளிப படினும
வேயபுரை மெனறோ ளின்றுயி லென்றும
பெறுஅன பெயரினு முனிய லுறுஅ
விளமையி னிகநதன்று மிலனே வளமையிற
உசரு றன்னிலை * தீர்நதன்று மிலனே கொன்னூா
மாய வரவி னியலபுநினைஇத் தேறறி
நீரெறி மலரிற சாஅ யிதழ்சோரா
வீரிய கலுழுமிவள பெருமதா மழைகக

* திரிந்தன்றுமிலனென்றும் பாடம.

ளாகத் தரிப்பணி யுறைப்ப நாளும்
உருo வலைப்படு மஞ்ஞையி னலஞ்செலச் சாஅய்
நினைத்தொறுங் கலுழுமா லிவளே கங்கு
லளைசெறி யுழுவையு மாளியு முளியமும்
புழற்கோட் டாமான் புகல்வியுங் களிறும்
வலியிற் றப்பும் வன்கண் வெஞ்சினத்
உருரு துருமுஞ் சூருமி னாகரு மரவமு
மொடுங்கிருங் குட்டத் தருஞ்சுழி வழங்குங்
கொடுந்தாண் முதலையு மிடங்கருங் கராமு
நூழிலு மிழுக்கு மூழடி முட்டமும்
பழுவும் பாந்தளு முளப்பட்ட பிறவும்
உசுo வழுவின் வழாஅ விழுமமவர்
குழுமலை விடரக முடையவா லெனவே.

## இதன்பொருள்.

இதற்குக் குறிஞ்சியென்று பெயர்கூறினார்; இயற்கைப்புணர்ச்சியும் பின்னாகியவும் புணர்ச்சிகளுக்கு நிமித்தங்களும் கூறுதலின். அன்றியும் முதலானும் கருவானும் குறிஞ்சிக்குரியனவேகூறுதலானும் அப்பெயர்கூறினார். * "அறத்தொடு நிற்குங் காலத் தன்றி, யறத்தியன் மரபில டோழி யென்ப." என்பதனால், தோழி அறத்தொடு நிற்குங்காலம்வந்து செவிலிக்கு அறத்தொடுநின்றவழி அதற்கிலக்கணங்கூறிய † "எளித்த லேத்தல் வேட்கை யுரைத்தல், கூறுத லுசாத லேதீடு தலைப்பா, டுண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ, யவ்வேழ் வகைய வென்மனார் புலவர்." என்னுஞ் சூத்திரத்தேழனுள், கூறுதலுசாதலொழிந்த ஆறுங்கூறி அறத்தொடுநிற்கின்றாளென்றுணர்க.

அன்னாய் வாழி—தாயே வாழ்வாயாக,

[வேண் டன்னை] அன்னை வேண்டு—தாயே யான்கூறுகின்றவார்த்தையை விரும்புவாயாக,

[ஒண்ணுதல், லொலிமென் கூந்தலென் றோழி மேனி, யிறைவளை நெகிழ்த்த வீவருங் கடுநோ, யகலு ளாங்க ணறியுநர் வினவும், பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும், வேறுபல் லுருவிற் கடவுட் பேணி, நறையும் விரையு மோச்சியு மலவுற், றெய்யா மையலை நீயும் வருந்துதி, நற்கவின் றொலையவு நறுந்தோ ணெகிழவும், புட்பிற ரறியவும் புலம்புவந் தலைப்பவு, முட்கரந் துறையு முய்யா வரும்படர், செப்பல் வன்மையிற் செறித்தியான் கடவலின]

ஒண்ணுதல் ஒலிமென் கூந்தல் விறல் மேனி என் தோழி உள் கரந்துறையும் உய்யா அரும்படர்—ஒள்ளிய நுதலினையும் தழைக்கும் மெல்லிய மயிரினையும் பிறர் நிறத்தினைவென்ற வெற்றியினையுடைய நிறத்தினையுமுடைய என்னுடைய தோழி தன்மனத்துள்ளே மறைத்திருக்கும் தன்னுயிரைத் தான் தாங்கியிராமைக்குக் காரணமாகிய ஆற்றுதற்கரிய நினைவு,

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், பொருளியல், கஉ.

† ,, ,, ,, கா.

இழை நெகிழ்தத வீவு அரு கடு நோய செப்பல் வன்மையின் யான் செறித்து—தானணிந்தகலங்களை நெகிழப்பணணின மருந்துகளாற கெடுத்தறகரிய கடிய நோய நினக்குச்சொல்லுதறகு எளிதன்றி வலியதன்மையையுடைமையினுலே யான் அதனை எனனுள்ளேயடககி,

நல் கவின் தொலையவும நறுநதோள் நெகிழவும் புள பிறா அறியவும் புலம்பு வாநது அலைபபவும் கடவலின்—அவளுடைய நனமுகிய அழகுகெடவும் நறியதோள்மெலியவும வளைகழலுதலைப் பிறா அறியவும தனிமை மேன்மேலேவந்து வருத்தவும் நின கசு அறிவுமுமற செலுததுகையினுலே,

நீயும் அலவுற்று அகலுள ஆஙகண அறியுநா வினைய—நீயும அலமவந்து அகன் றவிடததைபுடைய ஊரிடததுக கட்டினுனும் கழஙகினுனும எணணியறிவாரைவினு வி அவா தெயவததான்வநத வருததமென்றலின,

வினுயுமெனறவ் டததும்மையைப பேணியென்பதன் பின்னே கூட்டுக.

வேறு உருவிற பல கடவுள நறையும விரையும ஓசசியும பரவியும் தொழுதும் விரவு மலா தூயும பேணியும—வேறுபட்ட வடிவினையுடைய பலதெயவஙகளைத தூப ஙகளும் சந்தனமுதலியனவுஙகொடுததும பரவியும் வணஙகியும் கலநதபூக்களைசசிதறியும் வழிபட்டும் அதனுறறீராமையின,

பேணியுமெனனுமும்மை சிறபபு, ஏனைய - எணணுமமை

எயயா மையலை வருநதுதி — இந்நோயையறியாத மயக்கததைதயுடையையாய் வருந்தாநின்முய்,

என் தோழி படா இழை நெகிழ்த்த நோய நினககுச செபபல வன்மையின் யான் செறிததுத் தொலையவும் நெகிழவும அறியவும் அலைபபவும கடவலின் நீயும அலவுற்று வினுய்க கடவுளைபபேணியும எயயாமையலையாய வருந்துதியெனமுடிக்க

[முத்தினு மணியினும் பொனனினு மததுணை, நோவருங குறைய கலங்கெடிற் புணரும்.] அததுணை முததினும் மணியினும் பொன்னினும நோ வரும் கலம் கெடின் புணரும்—அவ்வளவாகிய முததானும மாணிக்கததானும் பொன்னுனும் பொருநதுதலவரும் பூண் கெடடதாயிற பின்னும்வநதுகூடும், அதுபோலன்றி,

முததுமுதலியவற்றிற்குககூறிய இலககணஙகளை அத்துணையென்முர். குறைய-அசை

[சால்புமு வியபபு மியலபுங குன்றின், மாசறக் கழீஇ வயங்குபுகழ நிறுத்த, லா சறு காட்சி யையர்க்கு மந்நிலை, யெளிய வென்னுா தொன்மருங கறிஞா]

சாலபும் வியபபும் இயல்பும் குன்றின் மாசு அறக கழீஇ வயங்கு புகழ் அந்நிலை நிறுத்தல்—தததஙகுலததிறகேறற குணஙகளினமைதியும், மேம்பாடும், ஒழுக்கமும் பழையதன்மைகெட்டாற பிறந்தவிழுககைப போம்படிகழுவி விளங்கும்புகழை முன்புபோலே நிறகுமபடிநிறுததல்,

தொல் மருஙகு அறிஞர் ஆசு அறு காட்சி ஐயாககும் எளிய என்னுர்—பழைதாகிய நூலையறிவாா குறறமறற அறிவினையுடைய தெய்வ இருடிகளுக்கும் எளியகாரியமென்னுா,

* “ஐயா பாஙகினு மமராச சுட்டியும” எனமுராகலின், ஐயா தேவராகாா.

[மாதரு மடனு மோராஙகுத தணபப, நெடுந்தே ரெந்தை யருஙகடி நீவி]

* தொலகாபபியம, பொருளதிகாரம, கறபியல, ரு.

நெடு தேர் எந்தை அரு கடி நீவி—நெடியதேரையுடைய என் தந்தையது அரிய காவலைக் கடந்து,

மாதரும் மடனும் ஓராங்குத தணபப—இருமுதுகுரவரும் தமக்கியைந்தோர்க்குக் கொடுப்போமென்றிருக்கின்றகாதலும் எனதுமடனும் சேரப்போக,

[இருவே மாய்ந்த மன்ற லிதுவென] இது இருவேம் ஆய்ந்த மன்றல் என—இந்தமணம தலைவனும யானும் பெருமையும் உரனும் அச்சமும் நாணும் நுணுகியநிலையாற்பிறந்த கந்தருவமணமெனறு,

நாம அறிவுறுலிற் பழியும உண்டோ—நாம் யாயக்கு அறிவுறுத்தலான் நமக்குப புகழேயன்றி வருவதோரபழியுமுணடோ, அஃதில்லை,

உம்மை எச்சவும்மை ஓகாரம் எதிர்மறை; இது மறைநூல் விதித்ததாகலின்.

ஆற்றின் வாரா ராயினும—இஙஙனம அறத்தொடுநின்றபின் தலைவாக்கே நமமையடைய நோநதிலராயினும்,

ஆற்ற—நாம் உயிர்போந்துணையும் இவவருத்ததைதப் பொறுத்திருகக,

[ஏனை யுலகத்து மியைவதா னமக்கென:] நமக்கு ஏனை உலகத்தும் இயைவதால் என—நமககு மறுபிறபபினும் இக்கூட்டம கூடுவதொன்றாயிருந்ததெனக்கூறி,

[மானமர் நோக்கங கலங்கிக் கையற, ஆனாச சிறுமைய ளிவளுந் தேம்பும்:] ஆனாச் சிறுமையள் மான் அமா நோககம் கலங்கிக் கையற்று இவளும் தேம்பும்—ஆற்றுந்தன்மைத்தல்லாத நோயினையுடையளாய மான்நோககமமர்ந்த நோக்கமின்றி மையலுற்றுக்கலங்கொண்டு வினையொழிந்து அயாந்து இவளுமெலியும்,

இவளும் (உசு), கலங்கிக (உரு) கெடிற் புணரும் (கச); அதுபோலன்றிச் சால்புமுதலியனகுன்றின் (கரு) நிறுத்தல (கசு) எளியவென்னார் (கஅ) ஆகலின், இஃது இருவேமாயந்தமன்றலென (உக) அறிவுறுலிற பழியுமில்லை (உஉ), ஆற்றின்வாராராயினும் ஆற்ற (உங) ஏனையுலகத்தும் இயைவதாலெனககூறி (உச) மெலியு (உசு) மெனமுடிகக.

* "வளைவிடை வைத்த காலதது வருந்தினும, வளையா நாளிடை வந்தோன் முட்டினும், உரையெனத் தோழிக குரைத்தற கண்ணுந், தானே கூறுங் காலமு முளவே." என்பதனுள் 'தானே கூறுங காலமு முளவே' என்றதனால் உடையளாயெனத் தலைவிகூறறினைக் கொண்டுகூறினாளென்றுணர்க † "செறிவு நிறையுஞ் செம்மையுஞ் செப்பு, மறிவு மருமையும் பெண்பா லான" என்பதனால் மறை புலப்படுத்தலாகாதென்றாராயினும, ‡ "உறறுழி யல்லது சொல்ல லின்மையி,னப்பொருள் வேட்கை கிழவியி னுணாப" என்பதனான் மறைபுலபபடுதததுமாமென வழுவமைத்தலின், இஙஙனம் தலைவிகூறினாள்.

இதனால் தோழிதலைப்பாடுகூறினாள.

இகல மீக் கடவும் இரு பெரு வேந்தர் வினை இடை நின்ற சான்றோர் போல—மாறுபாட்டினமிகுதியைசசெலுததும இருவராகிய பெரிய அரசரைச் சந்துசெய்விககுந் தொழிலிடத்தேநின்ற அறிவுடையோரைபபோல,

இரு போ அசசமோடு யானும் ஆறறலென — நினககும் இவள்வருத்தத்திறகுமஞ்சும இரண்டு பெரிய அசசததாலே யானும வருந்தாநின்றேன்;

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல, உக.
† ,, ,, பொருளியல, கரு.
‡ ,, ,, ,, கசு.

கொடுப்பின் நன்கு உடைமையும்—கொடுத்தபின்பு எல்லாவறறுானும் நன்றாகி முடிதலையும்,

குடி நிரல உடைமையும்—ஒருகுடியாகாமல் இரணடுகுடியும ஒததலுடைமை யையும்,

வண்ணமும—குணததையும,

துணையும—சுற்றத்துதவிகளையும்,

பொரீஇ எண்ணுது—ஒபபிததுபபாாத்துப பினனரும் பலருடன் உசாவாதே,

* "செந்துறை, வண்ணப பகுதி வரைவின றாஙகே" என்பதனுல் வண்ணம் குண மென்றுணாக.

எமியேம் துணிந்த ஏமம சால் அருவினை—நுமமையின்றித் தமியேமாய் யாங்க ளேதுணிந்த உயிரக்குப் பாதுகாவலமைமந்த செயதறகரிய இக்கந்தருவமணம்,

தானும் புணர்ச்சிககுபபின் உடம்படுதலின், எமியேந்துணிந்தவென்றாள்

நிகழ்ந்த வண்ணம்—முன்புநடந்தபடியை,

நீ நனி உணரச் செப்பல் ஆன்றிசின்—நீ மிகவுமறியும்படி சொல்லுதலையமைந் தேன்;

சினவாதீமோ—அதுகேட்டுச் சினவாதிருபபாயாக,

நெற் கொள் நெடு வெதிாககு அணநத யானை—நெல்லைத தன்னிடததேகொண் ட நெடிய மூங்கிலைத்தினறறகு மேனேககிநின்றுவருந்தின யானை அவவருத்தந்தீ ரும்படி,

முத்து ஆா மருபபின் இறங்கு கை கடுபப—முத்துநிறைநத கொம்பிலே ஏறட்டு நான்ற கையையொபப,

துய்த் தலை வாங்கிய புனிறு தீா பெருஙகுரல நல் கோள சிறு தினைப படு புள் ஓப்பி—துயயையுடைய தலைவளைநத ஈனறணிமைதீாநத பெரிய கதிர்களை நன்றாகத தன் னிடத்தேகொள்ளுதலையுடைய சிறிய தினையிலேவீழுகின்ற கிளிகளையோட்டி,

துய்-இளைதானபுருவத்துப பஞ்சுநுனைபோனறிருப்பது. கடுபப வளைநதவென்க

எல் பட வருதியா என நீ விடுத்தலின்—பகறபொழுதுகழியாநிறக நீாவருவீராக வென்றுகூறி நீ போகவிடுகையினுலே யாங்களுமபோய,

வருதியர் - வியங்கோணமுற்று

கலி கெழு மீமிசைச் சேணேன் இழைதத புலி அஞ்சு இதணம—ஆரவாரம் பொருந்தின மரததினுச்சியிலே இராககாலம் ஆகாயததிருபபோன்பண்ணின புலி அஞ்சுகைககுக்காரணமான பரண,

"சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி" என்றார்பிறரும.

[ஏறி யவண, சாரற சூரற றகைபெற வலநத] அவண சாரல சூரல் தகை பெ ற வலந்த இதணம (சுக) ஏறி—அவ்விடத்தனவாகிய மலைபபககததுபபிரமபாலே அழ குபெறத் தெற்றின இதணத்தேயேறி,

இனிச் சூரலாலேபிணிதத தழலெனறுமாம சூரல - சூரறகொடியுமாம்

தழலும்—தழலும,

தழலாவது கையாற்சுற்றினகாலத்துத் தன்னிடத்துப பிறககுமோசையாற் கிளி முதலியவற்றை ஓட்டுங்கருவி, கவணென்பாருமுளர்.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், உஎ.

தட்டையும்—தட்டையும,
தட்டையாவது மூங்கிலைக் கணுக்கணுவுளளாகநறுக்கிப பலவாகப்பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதோர கருவி
குளிரும்—குளிரும,
குளிராவது இவைபோலவதோர கிளிகடிகருவி
பிறவும்—ஏனையவும,
பிறவென்றது கவணமுதலியவற்றை
கிளி கடி மரபின ஊழ் ஊழ் வாஙகி—தழலும தட்டையும் குளிரும் பிறவுமாகிய கிளியோட்டுமுறைமையினையுடையவற்றை முறையேமுறையே கையிலேவாங்கி ஓட்டி,
உரவுக் கதிர தெறூஉம் உருபபு அவிர அமயதது— மிகுதலையுடைய ஞாயிற்றின்கிரணங்கள்சுடும் வெம்மைவிளங்குகின்ற பொழுதிலே ஊழூழ்வாஙகி (சச) யென்க
விசும்பு ஆடு பறவை வீழ பதிப் படர—ஆகாயததேபறககும பறவைகளெல்லாம் தாமவிரும்புஞ்சேககைகளிலே செலலும்படியாக,
[நிறையிரும் பௌவங் குறைபட முகந்துகொண, டகலிரு வானத்து வீசுவளி கலாவலின, முரசதிர்ந் தன்ன வின்குர லேற்றொடு, நிரைசெல னிவபபிற் கொண்மூ மயங்கி, யின்னிசை முரசிற சுடாபபூட சேஎ, யொன்னாரக் கேந்திய விலங்கிலை யெஃகின், மின்மயஙகு கருவிய ]
நிறை இரும்பௌவம குறைபட முகந்துகொணடு முரசு அதிரநத அன்ன இன் குரல் ஏற்றொடு நிரை செலல நிவபபிற் கொண்மூ—நிறைநத கரியகடலைக் குறையுணடாம்படிமுகந்துகொண்டு முரசு சிறிதுமுழஙகினாறபோன்ற இனியகுரலையுடைய உருமேறறோடே நிரைதததுசசெலலுதலையுடைய ஓககததினையுடையமேகம்,
இன்னிசை முரசின் சுடாப பூண சேஎய ஒனனாரககு எநதிய இலங்கு இலை எஃகின் மின் மயஙகு கருவிய—இனிய ஓசையையுடைததாகிய முரசினையும், ஒளியினையுடைததாகிய அணிகலஙகளையுமுடையமுருகன் அசுரரைக கொல்லுமதற்கெடுதத விளஙகுகின்ற இலைத்தொழிலையுடைய வேல்போல மின்னுமயஙகுகின்ற தொகுதிகளையுடையவாய்,
அகல் இரு வானதது வீசு வளி கலாவலின மயஙகி—ஏனைபபூதங்கள் விரிதறகுக்காரணமான கரியஆகாயததிடததே வீசுகினற காறறுத தனனிடததே கூடுகையினாலே நிரைததநிரைபோய்க் கலஙகி,
கல் மிசைப பொழிந்தென —மலைமேலே பெயதவாக,
கொண்மூக (ருo) கருவியவாய் (ருரு) மயஙகிப (ருo) பறவை பதிபபடரப் (சசு) பொழிந்தென (ருரு) வென்க
அண்ணல் நெடுஙகோட்டு இழிதரு தெணணீர அவிர துகில புரையும அவ்வெள் அருவி தவிர்வு இல் வேட்கையேம் தணடாது ஆடி—தலைவனுடைய நெடிய மலைச்சிகரத்தினின்றுஙகுதிககின்ற தெளிநத நீரையுடைய விளஙகுகின்ற வெளளிய துகிலையொககும் அழகிய வெளளிதாகிய அருவியிலே நீஙகுதலிலலாத விருப்பையுடையேமாய் அமையாமல் விளையாடி,
அணணைமலையில் அருவியெனவே நிலமொன்றென்றாள்.
[பளிங்குசொரி வன்ன பாய்சுனை குடைவுழி, நளிபடு சிலம்பில்:] நளி படு சிலம்பிற் பளிங்கு சொரிவு அன்ன பாய் சுனை குடைவுழி—செறிவுண்டானமலையிடத்

துப் பளிங்கைக்கரைத்துச் சொரிந்துவைத்தாற்போன்ற பரந்தசுனையைக் குடைந்து விளையாடுகின்றவிடத்தே,

பாயம் பாடி—எங்கள்மனத்துக்கு விருப்பமானவற்றைப் பாடி,

பொன் எறி மணியின் சிறுபுறம் தாழ்ந்த எம் பின் இருங்கூந்தல் பிழிவனம் துவரி—பொன்னிலேயழுத்தின நீலமணிபோலே சிறிய முதுகிடத்தே தாழ்ந்துகிடந்த எம்முடைய பின்னுதலையுடைய கரியகூந்தலை நீரைப்பிழிந்து ஈரத்தைப்புலர்த்தி,

உள் அகம் சிவந்த கண்ணேம்—உள்ளாகிய இடமெல்லாஞ் சிவந்த கண்ணேமாய்,

வள் இதழ் ஒள் செங்காந்தள்—பெரிய இதழையுடைய ஒள்ளிய சிவந்த கோடற்பூ,

ஆம்பல் அனிச்சம்—ஆம்பற்பூ அனிச்சப்பூ,

தண் கயக் குவளை—குளிர்ந்த குளத்திற்பூத்த செங்கழுநீர்ப்பூ,

குறிஞ்சி—குறிஞ்சிப்பூ,

வெட்சி—வெட்சிப்பூ,

செங்கொடுவேரி—செங்கொடுவேரிப்பூ,

* தேமா—தேமாம்பூ,

மணிச்சிகை—செம்மணிப்பூ,

உரிது நாறு அவிழ் தொத்து உந்தூழ்—தனக்கு உரித்தாக நாறும் விரிந்த கொத்தினையுடைய பெருமூங்கிற்பூ,

கூவிளம்—வில்வப்பூ,

எரி புரை எறுழ்—நெருப்பையொத்த எறுழம்பூ,

சுள்ளி—மராமரப்பூ,

கூவிரம்—கூவிரப்பூ

வடவனம்—வடவனப்பூ

வாகை—வாகைப்பூ,

வான் பூங் குடசம்—வெள்ளிய பூவினையுடைய வெட்பாலைப்பூ,

எருவை—பஞ்சாய்க்கோரை,

கொறுக்கச்சியுமாம்

செருவிளை—வெண்காக்கணம்பூ,

மணிப் பூங் கருவிளை—நீலமணிபோலும் பூக்களையுடைய கருவிளம்பூ,

பயினி—பயினிப்பூ,

வானி—வானிப்பூ,

பல் இணர்க் குரவம்—பல இதழ்களையுடைய குரவம்பூ,

பசும்பிடி—பச்சிலைப்பூ,

வகுளம்—மகிழம்பூ,

பல் இணர்க் காயா—பல கொத்துக்களையுடைய காயாம்பூ,

விரி மலர் ஆவிரை—விரிந்த பூக்களையுடைய ஆவிரம்பூ,

வேரல்—சிறுமூங்கிற்பூ

---

* 'தேமா' என்பதுமுதல் 'பெருமூங்கிற்பூ' என்பதிறுதியாகவுள்ளவைகள் தருமபுரவாதீனமடத்திலிருந்துகிடைத்த ஒரு பழைய ஏட்டுப்புத்தகத்தில் மட்டுமே இருந்தன

சூரல்—சூரைப்பூ,
குரீஇப்பூளை—சிறுபூளை,
குறுநறுங்கண்ணி—குன்றிப்பூ,
குருகிலை—முருக்கிலை,
மருதம்—மருதப்பூ,
விரிபூங் கோங்கம்—விரிந்த பூக்களையுடைய கோங்கம்பூ,
போங்கம்—மஞ்சாடிப்பூ,
திலகம்—மஞ்சாடிமரத்தின்பூ,
தேங்கமழ் பாதிரி—தேனாறும் பாதிரிப்பூ,
செருந்தி—செருந்திப்பூ,
அதிரல்—புனலிப்பூ,
பெருந்தண் சண்பகம்—பெரிய குளிர்ந்த சண்பகப்பூ,
கரந்தை—நாறுகரந்தை,
குளவி—காட்டுமல்லிகைப்பூ,
கடிகமழ் கலிமா—விரைகமழும் தழைத்த மாம்பூ,
தில்லை—தில்லைப்பூ,
பாலை—பாலைப்பூ,
கல் இவர் முல்லை—கல்லிலே படர்ந்த முல்லைப்பூ,
குல்லை—கஞ்சங்குல்லைப்பூ,
பிடவம்—பிடவம்பூ,
சிறுமாரோடம்—செங்கருங்காலிப் பூ,
வாழை—வாழைப்பூ,
வள்ளி—வள்ளிப்பூ,
நீள் நறு நெய்தல்—நீண்ட நறிய நெய்தற்பூ,
தாழை—தெங்கிற்பாளை,
தளவம்—செம்முல்லைப்பூ
முள் தாள் தாமரை—முள்ளையுடைத்தாகிய தாளையுடைய தாமரைப்பூ,
ஞாழல்—ஞாழற்பூ,
மௌவல்—மௌவற்பூ,
நறுந் தண் கொகுடி—நறிய குளிர்ந்த கொகுடிப்பூ,
சேடல்—பவழக்கால் மல்லிகைப்பூ,
செம்மல்—சாதிப்பூ,
சிறுசெங்குரலி—கருந்தாமக்கொடிப்பூ,
கோடல்—வெண்கோடற்பூ,
கைதை—தாழம்பூ,
கொங்கு முதிர் நறு வழை—தாது முதிர்ந்த நறிய சுரபுன்னைப்பூ,
காஞ்சி—காஞ்சிப்பூ,
மணிக் குலைக் கள் கமழ் நெய்தல்—நீலமணிபோலுங் கொத்துக்களையுடைய தேனாறும் கருங்குவளை,
பாங்கர்—ஓமை,
மராஅம்—மராமரம்பூ,
பல் பூந் தணக்கம்—பல பூக்களையுடைய தணக்கம்பூ,

ஈங்கை—இண்டம்பூ,
இலவம்—இலவம்பூ,
தூங்கு இணர்க் கொன்றை—தூங்குகின்ற பூங்கொத்தினையுடைய கொன்றைப்பூ,
அடம்பு—அடம்பம்பூ,
அமர் ஆத்தி—பொருந்தின ஆத்திப்பூ,
நெடு கொடி அவரை—நெடிய கொடியினையுடைய அவரைப்பூ,
பகன்றை—பகன்றைப்பூ,
இது சிவதை, *"பகன்றைப்பூ வுறநீண்ட பாசிலைத் தாமரை" என்புழி வெள்ளி வட்டில் உவமைகோடலின், இது கிலுகிலுப்பையன்று
பலாசம்—பலாசம்பூ,
பல் பூம் பிண்டி—பல பூக்களையுடைய அசோகம்பூ,
வஞ்சி—வஞ்சிப்பூ,
பித்திகம—பிச்சிப்பூ,
சிந்துவாரம—கருநொச்சிப்பூ,
தும்பை—தும்பைப்பூ,
துழாஅய—திருத்துழாய்ப்பூ,
சுடர்ப் பூந்தோன்றி—விளக்குப்போலும் பூவினையுடைய தோன்றிப்பூ,
நந்தி—நந்தியாவட்டப்பூ,
நறவம—நறைக்கொடி,
நறும் புன்னாகம—இது புன்னையின்விசேடம்,
பாரம் பருத்திப்பூ,
பீரம்- பீர்க்கம்பூ,
பைங் குருக்கத்தி—பசிய குருக்கத்திப்பூ,
ஆரம—சந்தனப்பூ,
காழ்வை—அகிற்பூ,
கடி இரும் புன்னை—மணநாறுதலையுடைய பெரிய புன்னைப்பூ,
நரந்தம—நாரத்தம்பூ,
நாகம—நாகப்பூ,
நள்ளிருணாறி—இருவாட்சிப்பூ,
மா இருங் குருந்தும்—கரிய பெரிய குருந்தம்பூவும,
வேங்கையும்—வேங்கைப்பூவும,
[பிறவு, மரக்குவிரித் தன்ன பரேரம் புழகுடன், மாலங் குடைய·] அங்கு மால் உடைய அரக்கு விரித்தன்ன பிறவும பரேரமபுழகுடன—அச்சாரலிடத்துத் தம்மில் மயக்கமுடையவாய்ச் சாதிலிங்கத்தைப் பரப்பினாற்போன்ற பிறபூக்களையும் பருத்த அழகினையுடைய † மலையெருக்கம்பூவுடனே,
பரேரம்புழகு - செம்பூவுமாம, புனமுருங்கையுமென்பா
மலிவனம் மறுகி—பூக்களிடத்தே மனவேட்கைமிகுப் பலகாலுந் திரிந்து பறித்து,
வான் கண் கழீஇய அகல் அறைக் குவைஇ — மழை பெய்து தன்னிடத்தைக் கழுவித் தூய்தாக்கின அகன்ற பாறையிலே குவித்து,

---

* கலித்தொகை, மருதம், அ.
† மலைவெருக்கம் பூவெனவும் பிரதிபேதமுண்டு.

கண்ணேமாய் (சுக) மலிவனமறுகிப (கூஎ) பரேரம்புழகுடனே (கூசு) ஒண்செங்காந்தள் (சுஉ) முதலியவற்றையும் பிறவற்றையும் (கூரு) பாறையிலேகுவித்து (கூஅ) எனமுடிக்க.

செங்காந்தள் முதலியவற்றிறகெல்லாம இரண்டாமுருபும் உம்மையும் விரிக்க. குருந்தும், வேங்கையும, பிறவுமென்ற மூன்றற்கும உருபுவிரிக்க

புள் ஆர் இயத்த—பறவைகளின் ஓசையாகிய நிறைந்த வாச்சியங்களையுடையவாகிய,

விலங்கு மலைச் சிலம்பின—ஒன்றற்கொன்று குறுக்கிட்டுக்கிடக்கின்ற மலைப்பக்கத்திற்புனத்தே,

வள் உயிர்த் தெள் விளி இடையிடை பயிற்றிக் கிளிகடிந்தும்—பெரிய ஓசையினையுடைய தெளிந்தசொற்களை நடுவேநடுவேசொல்லிக் கிளியை ஓட்டுதலைச் செய்தும் தழைதைஇ (க0உ) யெனக

சொல - கிளியையோட்டுஞ்சொல கிளியையுமோப்பியெனச் சிறப்புமமை

கிளை இதழ் பரியா—புறவிதழ்களை வாங்கப்போகட்டு,

பை விரி அல்குற் கொய் தழை தைஇ—பாம்பின்படத்தைப்போலே பரந்த அல்குலுக்குத் தழையைக்கட்டியுடுத்து,

கொய்தழை - மிக்கவிடங்களை நறுக்கின தழை.

பல் வேறு உருவின வனப்பு அமை கோதை எம மெல இரு முச்சிக் கவின் பெறக் கட்டி—பலவாய் வேறுபட்ட நிறத்தையுடைய அழகமைந்த மாலைகளை எம்முடைய மெல்லிய கரியமுடியிலே அழகுபெறச்சுற்றி,

எரி அவிா உருவின அம குழைச் செயலைத் தாது படு தண் நிழல இருந்தனமாக—நெருப்புப்போலவிளங்கும நிறத்தையுடைய அழகிய தளிரையுடைய அசோகினது தாதுவிழுகின்ற குளிர்ந்த நிழலிலே இருந்த அளவிலே,

[எண்ணெய நீவிய சுரிவளா நறுங்காழ் ]

சுரிவளாநறுங்காழ - பின்னேகூட்டுதும

எண்ணெய் நீவிய நலமபெறு சென்னி (ககசு)—பலகாலும எண்ணெயவார்த்த நன்மையைப்பெற்ற தலையிற் குஞ்சி (ககஉ) யெனக

தண் நறும் தகரம் கமழ மண்ணி—குளிர்ந்த நறிய மயிர்ச்சந்தனத்தை நாறும்படியாகப்பூசி,

ஈரம் புரை விரல உளர்ப்ப அவிழா—அந்த ஈரம்புலரும்படி விரலாலலைத்துப் புலர்த்துந்தறெழிலாலே பிணிப்பைவிடுத்து,

நறும் காழ்க் (கஎ) காழ் அகில அம புகை கொளீஇ—அதனை நறிய கரிய வயிரத்தினையுடைய அகிலினது அழகிய புகையூட்டுகையினாலே,

இதில் நறுங்காழ் கூட்டிற்று.

யாழ் இசை அணி மிகு வரி மிஞிறு ஆர்ப்பத் தேம் கலந்து—யாழோசையினது அழகுமிகுகின்ற பாட்டினையுடைய மிஞிறுகள் ஆரவாரிக்கும்படி அகிலினது நெய் கலந்து,

[மணிநிறங் கொண்ட மாயிருங் குஞ்சியின் ]

மணி நிறம கொண்ட சுரி வளா (க0எ) மா இருங் குஞ்சியின்—நீலமணியின் க

நிறத்தைத் தன்னிடத்தேகொண்ட கடைகுழன்றுவளர்ந்த கரிய பெரிய மயிரினை கண்ணே,

இதிற சுரிவளா கூட்டிறறு

மணணி (கoஅ) அவிழாப (கoக) புகைகொளுவுகையினாலே (ககo) தேங்கலநது (ககக) ஒருகாழ்வளைஇ (ககஅ) மணிநிறநகொணட குஞ்சி (ககஉ) யென்க.

மலையவும நிலததவும சினையவும சுனையவும—மலையிடத்தனவும் நிலததிடத்தனவும் கொம்புகளிற பூததனவும சுனைகளிறபூ ததனவுமாகிய,

வண்ண வணணத்த மலா—பலநிறங்களையுமுடையமலர், பலசாதிகளையுமுடையமலரென ஒன்று நிறமும ஒனறு சாதிவேறுபாடுங கூறினா.

ஆயபு விளைஇய தண நறும தொடையல வெளள போழக கணணி—அம்மலரை ஆராய்ந்துதொடுதத தணணிய நறிய தொடையலினையும வெளளிய தாழைமடலிலேயுடைததாகிய கணணியினையும,

[நலமபெறு சென்னி நாமுற மிலைசசு]

நாம உற மிலைசசி—முருகனென றசசமுறுமபடி சூடி,

குஞ்சியினகணணே (ககஉ) மிலைசசியென்க

நலம்பெறுசெனனி - முனனேகூட்டிறறு

பைஙகாற பிததிகதது ஆயிதழ அலரி அம தொடை ஒருகாழ வளைஇ—பசியகாமபினையுடைய பிசசியினுடைய அழகியஇதழகளையுடைய பூவைதொடுத்த அழகினையுடைய தொடையாகிய ஒருவடததைச் சுறறி,

இஃது அந்திககாலததுமலரும பூவாதலின, அதனைத தேஙகலந்து (ககக) ஒருகாழ்வளைஇ (ககஅ) மணிநிறஙகொணடகுஞ்சி (ககஉ) யெனக குஞசிகளியலபாக்கி முன்னேகூட்டுக

[செநதீ, யொண்பூம பிணடி யொருகாது செரீஇ, யநதளிாக குவவுமொயம் பலைபப] குவவு மொய்ம்பு அலைபபச செந்தீ ஒள் பூமபிணடி அம தளிர் ஒருகாது செரீஇ—திரளுதலையுடைய தோள்லேவீழ்ந்தலைக்கும்படி சிவநத நெருபபுபபோலும் ஒளளிய பூககளையுடைய அசோகினது அழகிய தளிரை ஒருகாதிலே செருகி,

சாந்து அருந்தி மைநது இறைகொணட மலர்நது ஏந்து அகலத்துத தொன்றுபடு பூவொடு நறும தாா பொலிய—சந்தனததையுளளடககி வலிதஙகுதலகொணட அகன்றுயாநத மாாபிடததே தொனறுபடடுவருகின்ற பேரணிகலஙகளோடே நறிய மாலை பொலிவுபெற,

செம்பொறிக்கு ஏற்ற — மூன்றுவரியாகிய உததமவிலககணததிறகுப பொருந்தின மார்பு (கஉக) எனக

வீஙகு இறைத தடக கையின வணண வரி வில ஏநதி அம்பு தெரிநது—பூணிறுகின முன்கையையுடைய பெரியகையிலே வணணததையுடைய வரிந்த விலலையெடுதது அம்புகளைத்தெரிந்துபிடிதது,

நுண் வினைக கச்சைத தயககு அறக கட்டி—நுண்ணிய தொழிலகளையுடைய கச்சைக் கட்டினசேலை துளககமறககட்டி,

[இயலணிப பொலிந்த வீகை வான்கழ, றுயலவருந் தோறுந் திருந்தடிக கலாவ:]

ஈகை இயல் அணிப பொலிந்த வான் கழல் துயலவருந்தோறும திருநது அடிக்

கலாவ—பொன்னாற்செய்யப்பட்ட பூண்களிறபொலிவுபெற்ற நன்றாகிய வீரக்கழல் பெயருமபொழுதெல்லாம் பிறகிடாத அடியிலே ஏற்றிழிவுசெய்ய,

முனை பாழ் படுக்கும துன்னருந் துப்பிற பகை புறங் கண்ட பல் வேல் இளைஞரின்—பகைப்புலத்தைப பாழாக்கும் கிட்டுதறகரிய வலியையுடைய பகைகளை முதுகு கண்ட பலவேலினையுடைய வீரரைபபோலே,

உரவுச் சினம் செருக்கித் துன்னுதொறும வெகுளும முனை வாள் எயிறற வள் உகிர் ஞமலி—பரக்கின்ற சினததாலே செருககித தம்மேலொன்று நெருங்குந்தோறும் கோபிகரும் மூங்கில்முளைபோலும ஒளியையுடைததாகிய பல்லினையுடையவாகிய பெரிய உகிரையுடைய நாய,

கிளையாக் கண்ண வளைகுபு நெரிதர—இமையாக்கணகளையுடையவாய எம்மை வளைத்துக்கொண்டு மேலேமேலேவருகையினாலே,

[நடுங்குவன மெழுந்து நலலடி தளாந்தியா, மிடும்பைகூா மனததே மருண்டு புலம படர] யாம நடுங்குவனம் எழுநது நல்டி தளாநது இடுமபை கூா மனததேம மருண்டு புலம படர—யாஙகளஞ்சி அவ்விருபபைக்குலைந்து கடிதிற்செலலுதலாறறாது வருத்தமிக்க மனததையுடையேமாய மயஙகி வேறறுப புலததேறசசெலலாநிறக,

மாறு பொருது ஓட்டிய புகல்வின் வேறு புலதது ஆ காண விடையின் அணி பெற வநது—தனககுமாறாகிய விடைகளையெலலாம பொருதுகெடுதத மனசசெருககினையுடைய தானறியாதநிலததிற புதிய ஆவைககாணுமேறுபோலே அழகுபெற வந்து,

வேட்கைமிகுதிகூறுதறகு வேறுபுலதது ஆவெனறா
இததுணையும் ஒக்ககூறினா

[எம், மலமர லாயிடை வெரூஉத லஞ்சி, மெலலிய வினிய மேவரக் கிளந்து] ஆயிடை எம அலமரல வெரூஉதல அஞ்சி மெலலிய இனிய மேவரக கிளநது—யாஙகள்போகின்றபொழுது எமமனததிற சுழறசியாலே வெருவுதற்குத தானஞ்சி மெல்லியவாய் இனியவாயிருககினற சொறகளை எமககுபபொருநதுதலவரச சொல்லி,

இதனாலே ஏதிடுகூறினான

எம ஐம்பால் ஆய் கவின் ஏததி—எம ஐவகைபபட்ட மயிரினையுடைய பலருமாராய்ந்த அழகைபபுகழ்நது அசைகினற (கசு) இளையீ (கசக) ரெனக

ஒண்டொடி—ஒள்ளிய தொடியினையும,
அசை - வேறுகூறிறறு
மென சாயல—மெலலிய மெனமையினையும,
அவ்வாங்கு உநதி—அழகிய வளைநத கொபபூழினையும,

மடமதா மழைக கண இளையீா—மடபபததையுடைய மதாதத குளிர்ந்த கண்ணினையுமுடைய இளையீரே,

இறந்த கெடுதியும உடையேன என்றனன—இவ்விடத்தேபோந்த கெடுதிகள பலவுமுடையேனென்றுகூறினான,

என்றது - அவை யானை கலே பன்றிமுதலியன கெடுததனாக வினையினான்

குஞ்சியின்கணணே (ககஉ) மிலைசசிச (ககசு) செரீஇப (ககக) பொலியக (கஉஉ) கலாவக (கஉஎ) கட்டி (கஉரு) ஏந்தித் தெரிநது (கஉச) விடையின் அணிபெறவந்து (கஙசு) தான்கொணடுவந்த ஞமலி (கஙக) நெரிதருகையினாலே (கஙஉ) எழுந்து தளா

ந்து (௧௬௬) மருண்டு வேறுபுலம்படராநிற்க (௧௬௭) ஆயிடை (௧௬௮) எம் (௧௬௯) அலம ரல் வெரூஉதலஞ்சிக் (௧௬௮) கிளந்து (௧௬௮) ஏதமி (௧௬௯) இளையீர், இறந்த (௧௭௧) கெடுதியுமுடையே னென்றனை (௧௭௨) னெனக் கூட்டுக

[அதனெதிர, சொல்லே மாதலி னல்லாந்து கலங்கி] அல்லாந்து அதன் எதிர் சொல்லேமாதலிற கலங்கி—அவனகூற்றிற்கு யாங்கள மகிழ்ந்து அதறகு மறுமொழி கொடேமாகையினாலே நெஞ்சழிந்து,

[கெடுதி யுமவிட ராயி னெமமொடு, சொலலும பழியோ மெல்லிய லீரென] மெலலியலீர் கெடுதியும் விடீராயின எம்மொடு சொல்லும் பழியோ என—மெலலிய இயலபினையுடையீர், கெட்டனவுங காட்டிததாரீராயின் எமமுடன் ஒருவார்த்தை சொல்லுதலும நுமக்குப பழியாமோவெனச சொல்லி,

[நைவளம் பழுநிய பாலை வல்லோன், கைகவா நரமபி னிமமென விமிரு, மாதர் வண்டொடு சுரும்புநயந் திறுதத] நைவளம பழுநிய பாலை வலலோன் கைகவா நரம் பின் இம்மென இமிரும மாதா வணடொடு நயந்து இறுதத சுரும்பு—நட்டராகம் மு ற்றுப்பெறற பாலையாழை வாசிககவலலவன் தனகையாலே வாசித்தநரம்புபோலே இம்மென்னும ஓசைபட வொலிக்கும் காதலையுடைய வண் டினததோடே தன்னிட த்து மணத்தைவிரும்பித்தங்கின சுரும்பினங்களை,

தாது அவிழ அலரித தா சினை பிளநது—தாதுவிரிந்த பூககளையுடைய தழைபர ந்ததோர்கொமபை முறிதது,

தாறு அடு களிறறின வீறு பெற ஓசசி—தனனைச செலுததுகின்ற பரிக்கோலைக கைகடந்த மதக்களிறபோலே வெறறியுணடாக ஒட்டி,

தனககுககாவலாகிய பெருமையினையும் உரனையும் கைகடநது வேட்கைமீதூா ந்து நிறறலால் தாறடுகளிறறை உவமஙகூறினா மதககளிறறிறகு அஙஙனமோசசி நிறறல இயல்பு.

கல்லென் சுற்றக் கடுங குரல அவிதது—கலலெனனும ஓசைபடக கததும வேட் டைநாய்களுடைய கடிய குரலகளை யடிததுமாறறி,

எம் சொலலற் பாணி நினறனனாக—யாஙகள வாாததைசொலலுதலையுடைய தோா காலததைப பாாததுநினறாக,

கெடுதியுமுடையே னென்றனன, அதனெதிா (௧௭௨) யாஙகள சொலலேமா தலிற கலஙகி (௧௭௩) மெலலியலீா, சொலலுமபழியோவெனசசொல்லி (௧௭௫)ஓச்சி (௧௮௦) அவிததுச (௧௮௧) சொலலறபாணி நினறனனாக (௧௮௨)வெனக கூட்டுக.

இததுணையும வேட்கைகூறினாள

இருவி வேயந்த குறுங்கால் குரமபைப பிணை ஏா நோககின மனையோள் மடுப ப—இனையரிநத தாளாலேவேயந்த குறியகால்களையுடைய குடிலிலிருககும மானபி ணையை யொதத பாாவையினையுடைய மனைவி எடுததுககொடுபப,

தேம பிழி தேறல மாநதி மகிழசிறந்து சேமம மடிநத பொழுதின்—தேனாறச மைத்த கட்டெளிவையுணடு மகிழசசிமிக்குக காவறறொழிலை மறந்தகாலத்தே,

[வாய்மடுதத, திருமபுன கிழததலிற சிறுமை நோனா, தரவுற ழஞசிலை கொளீஇ நோய்மிகக]

இரும் புனம் வாயமடுதது கிழததலில சிறுமை நோனாது நோய் மிக்கு—பெரி

யபுனத்தை வேழந்தின்று நோக்கிவிடுகையினாலே தப்பிநின்றது விளையும் சிறுமை யைப்பொறாதே வருத்தமிக்கு,

[உரவுச் சினம்]

உரவுச் சின அரவு உறழ் அம் சிலை கொளீஇ—பரக்கின்றசினத்தையுடைய பா ம்பையொத்த அழகினையுடைய விலலைநாணேற்றி,

உரவுச்சின அரவுற ழஞ்சிலை கொளீஇ (கருஅ) எனப் பின்னேகூட்டுக. பாம்பு வடிவிற்கும் கொலைத்தொழிலுக்கு முவமை.

முன்பால் உடல் சினஞ் செருக்கிக் கணை விடுபு— மெய்வலியோடே கோபித்த லாற்பிறந்த சினத்தாலே மயங்கி அம்பையெய்து,

விடுபு - விகாரம்

புடையூ—தட்டையைப் புடைத்து,

கானம் கல்லென மடி விடு வீளையர் வெடிபடுத்து எதிர—காடெல்லாம் கல்லெ ன்னுமோசை பிறக்கும்படி வாயைமடித்து விடுகின்ற சீழ்க்கையராய் மிக்கவோசை யையுண்டாக்கி அக்களிற்றைப் புனத்தினின்றும் ஓட்டுகையினாலே,

ஆர்த்தெனவும் பாடம்.

[கார்ப்பெய லுருமிற் பிளிறிச் சீர்த்தக, விரும்பிணர்த் தடக்கை யிருநிலஞ் சே ர்த்திச், சினந்திகழ் கடாஅஞ் செருக்கி மரங்கொல்பு, மையல் வேழ மடங்கலி னெ திர்தர]

சினம் திகழ் கடாம் செருக்கி மையல் வேழம்—சினம் விளங்குதற்குக் காரண மாகிய மதத்தாலே மனஞ்செருக்கி மயக்கத்தையுடைத்தாகிய யானை,

மரம் கொல்பு—மரங்களை முறித்து,

கார் பெயல் உருமிற் பிளிறி—கார்காலத்துமழையின் உருமேறுபோல முழக் கத்தையுண்டாக்கி,

சீர்த்தக இரும்பிணர்த் தடக் கை இரு நிலம் சேர்த்தி ஒய்யென (கஙச) மடங்க லின் எதிர்தர—தனதலைமைக்குத் தக்கதாகக் கரிய சருச்சரையையுடைத்தாகிய பெரி ய கையைச் சுருட்டி நிலத்தேயெறிந்து கடுகக் கூற்றுவனைப்போலே எங்கள்மேலே வருகையிலே,

[உய்விட மறியே மாகி யொய்யெனத், திருந்துகோ லெல்வளை தெழிப்ப நாணு மறந்து, விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்தி]

ஒய்யென - முன்னேகூட்டிற்று

உய்விடம் அறியேமாகி விதுப்புறு மனத்தேம்—உயிர்கொண்டு பிழைப்பதோரி டத்தை ஆண்டு வேறுணரேமாகி நடுக்கமுற்ற மனத்தையுடைய யாங்கள்,

நாணு மறந்து திருந்து கோல எல் வளை தெழிப்ப விரைந்து அவற்பொருந்தி— உயிரினுஞ் சிறந்த நாணைக்காத்தலை மறந்து திருந்திய திரட்சியையுடைத்தாகிய ஒளி யினையுடைய வளையொலிப்ப விரைந்துசென்று அவனைச்சேர்ந்து,

சூர் உறு மஞ்ஞையின் நடுங்க—தெய்வமேறின மயில்போலே நடுங்காநிற்க,

[வாரகோ, லுடுவுறும் பகழி வாங்கிக் கடுவிசை, யண்ணல் யானை யணிமுகத் தழுத்தலின்:] வார் கோல் உடுவுறும் கடு விசைப் பகழி வாங்கி அண்ணல் யானை அணி முகத்து அழுத்தலின்—நெடிய சோலையுடைய உடுச்சேர்ந்த கடியவிசையினையுடைய

அமைப நிரம்பவலித்துத் தலைமையினையுடைய யானையினது அழகியமுகத்தே எய்கையினாலே,

உ௰ - நாணைக்கொள்ளுமிடம்

[புண்ணுமிழ குருதி முகம்பாயந் திழிதரப, புள்ளி வரிநுதல் சிதைய நில்லா, தயாந்துபுறங கொடுதத பின்னா நெடுவே, ளணங்குறு மகளி ராடுகளங கடுப்ப]

புள்ளி வரி நுதல் சிதையப புண உமிழ் குருதி முகம பாயந்து நெடுவேள் அணங்கு உறு மகளிா ஆடுகளம் கடுப்ப இழிதா—புள்ளியினையும் புகரினையுமுடைய மத்தகம் அழகழியும்படி அம்புபட்டு உருவின புணகளால் உமிழப்படுங்குருதி முகத்தேபாநது முருகனால்வருத்தமுற்ற மகளிர்க்கு மறியறுத்தாடுங் களத்திற குருதிகுதிக்குமாறுபோலக் குதிக்கையினாலே,

அயாந்து நிலலாது புறங் கொடுதத பினனா—தனனைமறந்து ஆணடுநிறறலாறறாது முதுகிட்டுப்போன பினபு,

இதனாலும் ஏதீடுகூறினாள்

மகளிராடுங்களம் கடப்பமாலைவளைத்தாற்போல மிகவுங் கடப்பமாலை வளைதத வென்பாருமுளா

திண் நிலைக் கடமபின் திரள் அரை வளைஇய துணை அறை மாலையிற கை பிணிவிடேம—திணணிய நிலையினையுடைய கடம்பினது திரணடமுதலை நெருங்கச்சூழ்நத மகளிரொழுங்கிற்கு ஒப்புச்சாற்றுதலையுடைய மாலைபோலே கைகோத்ததலை விடேமாய்,

நுரை உடைக் கலுழி பாயதலின—யாற்றின நுரையையுடைய பெருக்கிலே குதிக்கையினாலே,

உரவுத திரை அருங்கரை வாழையின நடுங்க— அதனிடத்துப பரக்கினற திரை மோதி இடிக்கரையினின்ற வாழைபோலே காலதளாநது பினனா ஒழுகினேமாக, அதுகண்டு,

[பெருநதகை, யஞ்சி லோதி யசையல யாவது, மஞச லோமபுநி னணிநல னுகாகென] பெருநதகை அம சில ஓதி அசையல நின அணி நலன நுகாகு யாவதும் அஞ்சல் ஓமபு என—பெரிய தகுதிப்பாடுடைய அழகிய சிலவான மயிரினையுடையாய, இங்ஙனங் காறளாநதொழுகாதேயென்றெடுதது யான நின அழகியநலத்தை நுகாவேன், நினனைநீங்குவேனென்று சிறிதும் அஞசுதலைப்பரிகரியெனச் சொல்லி,

மாசு அறு சுடா நுதல நீவி—குறறமற்ற ஒளியினையுடைய நுதலைததடைத்தது,

நீடு நினைந்து என் முகம நோககி நககனன—நெடுநாள இககளவொழுக்கம நிகழவேணடுமென்று நினைநது எனமுகத்தைப்பாாததுச் சிரித்தான,

[அநநிலை, நாணு முட்கு நணணுவழி யடைதர, வொயயெனப பிரியவும் விடாஅன்:]

அந நிலை பினனே கூட்டிறறு

நண்ணுவழி நாணும உட்கும அடைதர ஒயயெனப பிரியவும் விடான்—அங்ஙனம் அவனணுகாநினறவிடத்துத் தனக்கு இயல்பாகியநாணமும் அச்சமும் அவ்விடத்தேவந்து தோன்றுகையினாலே விரையத் தன்னிடத்து நின்றும் இவள நீங்கவும் விடானாய்,

[கவைஇ, யாக மடைய முயங்கலின்] அந்நிலை கவைஇ ஆகம் அடைய முயங்க

வின்—அங்ஙனம் நின்றநிலையிலே கையாலேயணைத்து இவள்மார்பு தன்மார்பிலே யொடுங்கும்படி தழுவுகையினாலே,

இதனால் ஏதீடும் வேட்கையுரைத்தலுங் கூறினாள்

[அவ்வழிப், பழுமிளகுக்க பாறை நெடுஞ்சுனை]

பழு மிளகு உக்க பாறை நெடுஞ் சுனை—பழுத்த மிளகு சிந்திக்கிடக்கின்ற கற்பாறையிடத்து நீண்ட சுனையிலே,

முழு முதற் கொக்கின் தீங் கனி உதிர்ந்தென—பெரிய அடியினையுடைய மாவினுடைய இனியபழங்கள் உதிர்ந்தனவாக அப்பழத்தாலும்,

[புள்ளெறி பிரசமொ டீண்டிப் பலவி, னெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேறல்]

பலவின் நெகிழ்ந்து உகு நறும் பழம்—பலாவினுடைய விரிந்து தேனொழுகின்ற நறியபழத்தாலும்,

விளைந்த தேறல்—உண்டான கட்டெளிவு,

புள் எறி பிரசமொடு ஈண்டி—நிரம்புதலால் தன்னை நுகர்கின்ற ஈயினைத்தள்ளியுகுத்த தேனாலே வந்துதிரளுகையினாலே,

நீர் செத்து அயின்ற தோகை—தனக்கு எளிய நீராகக்கருதி அத்தேறலையுண்ட மயில்,

[வியலூர்ச, சாறுகொ ளாங்கண் விழவுக்கள நந்தி] சாறு கொள் ஆங்கண் வியல் ஊர் விழவுக் களம் நந்தி— விழாக்கொள்ளுதற்குரிய அவ்விடங்களையுடைய அகற்சியையுடைய ஊர்களில் விழாக்கொள்ளுதலையுடைய களத்தே மிக்கு,

ஆங்கணென்றது - கோயில்களை

அரிக் கூட்டு இன்னியம் கறங்க ஆடும் மகள்—அரித்தெழுகின்ற ஓசையைக் கூட்டுதலையுடைய இனிய வாச்சியங்களொலிப்ப ஆடுகின்றமகள்,

கயிறு ஊர் பாணியின் தளரும் சாரல்—கழாய்க்கயிற்றிலே ஏறியாடுகின்ற தாளத்தினாலே தான் ஆற்றாது தளருமாறுபோலத் தளருஞ்சாரல்,

தேறலயின்ற தோகை கூத்தாடி ஆற்றாது தளருஞ் சாரலையுடைய குன்றென்க

இதற்கு உள்ளுறையுவமங் கொள்ளுமாறு—மிளகுக்கபாறை அந்நிலத்து மாக்களுறைகின்ற ஊராகவும், நெடுஞ்சுனை தலைவன் குடியாகவும், மாம்பழத்தாலும் பலாப்பழத்தாலும் விளைந்த தேறல் தந்தையாலும் தாயாலுமுளளாகிய தலைவியாகவும், பிரசம் இவளைக்கூட்டின பாலவரைத்தெய்வமாகவும், அதனையுண்டமயில் உயர்ந்த தலைவனைத் தன்குலத்திற்கு ஒத்தானாகக்கருதி நுகர்ந்ததலைவியாகவும் அதனாலே பிறந்த களிப்புக் களவொழுக்கத்தாற்பிறந்த பேரின்பமாகவும் மயில் ஆடவாற்றாத்தன்மை வருந்திக்குறைந்த தன்மையாகவும் உள்ளுறையுவமங்கொள்க

[வரையர மகளிரிற் சாஅய் விழைதக, விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தட், டண்கம ழலரி தாஅய] விண் பொரும் சென்னிக் கிளைஇய காந்தள் தண் கமழ் அலரி வரை அரமகளிரில் சாஅய் விழைதக தாஅய்—விண்ணைத்தீண்டுகின்ற சிகரங்களிலே கிளைத்த செங்காந்தளினுடைய குளிர்ந்த மணக்கின்ற பூக்கள் கீழே வரையரமகளிர் பரந்து விளையாடுகையினாலே நலம் சிறிதுகெட்டு விரும்புதலுண்டாகும்படி கீழே வந்து பரந்து,

நன் பல வம்பு விரி களத்திற் கவின் பெறப் பொலிந்த குன்று கெழு நாடன்—நன்றாகிய பலவாகிய கச்சுப் பரந்த களம்போலே அழகுபெறப் பொலிவுபெற்ற மலை பொருந்தின நாடன்,

உயர்ந்த நிலத்தே நின்று மணக்கின்ற காந்தள் வரையரமகளிரால் கீழ்நிலத்தே பரந்து அவ்விடத்தைக் கச்சுவிரித்தாற்போல அழகுபெறுத்துமென்றதனால், நம்மின் உயர்ச்சியையுடைய தலைவன் நமது நல்வினையால் தனது பெருமைகள் தானொழிந்து இவ்விடத்தே வந்து கூடி நமக்கும் உயர்ச்சியுளதாக்கி நம்மை அழகுபெறுத்துகின்றானென்று உள்ளுறையுவமமெய்தின்று.

எம் விழைதரு பெருவிறல்—எம்மை எப்பொழுதும் விரும்புதலைத்தருகின்ற பெரியவெற்றியையுடையவன்,

அவ்வழி (௧௮௬) உள்ளத் தன்மை யுள்ளினன் கொண்டு—தான் முயங்குகையினாலே அப்பொழுது இவளுள்ளத்து நிகழுந்தன்மை மேலவரைந்துகொண்டு இல்லறநிகழ்த்துதலாயிருக்குமென்று நினைந்தனனாய அதனையுட்கொண்டு,

அவ்வழி இங்கேகூட்டிற்று

[சாறயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி, வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப, மலர்த்த திறந்த வாயில் பலருண் ]

பலர் உண மலர்த்த திறந்த வாயில் வளநகர்—பலருமவந்து உண்ணும்படி அகலக் கதவு திறந்துகிடக்கின்ற வாசலையுடைய வளநகர்,

மிடாச் சொன்றி வருநர்க்கு வரையாச் சாறு அயர்ந்து அன்ன வளநகர் பொற்ப—மிடாச்சோற்றை வருவார்க்கெல்லாம் வரையாமலிடுகின்ற விழாக்கொண்டாடினாற்போன்ற செல்வத்தையுடைய அகம் பொலிவுபெறும்படி,

முன்புள்ள இயல்புகூறிற்று

பை நிணம் ஒழுகிய நெய் மலி யடிசில்—பசுத்த நிணமொழுகின நெய்மிக்க அடிசிலை நீயிடுகையினாலே,

வசை இல் வான் துணைப் புரையோர் கடும்பொடு விருந்துண்டு எஞ்சிய மிச்சில்—குற்றமில்லாத உயர்ந்தகுலத்திற்பிறந்த உயர்ந்தோர் தமது சுற்றத்தோடே விருந்துண்டு மிக்க அடிசிலை,

பெருந்தகை—பெரிய தகைமைப்பாடுடையவனே,

நின்னொடு உண்டலும் புரைவது என்று ஆங்கு அறம் புணையாகத் தேற்றி—நீயிடுகையினாலே யானுண்டலும் உயர்ந்ததென்றுசொல்லி அப்பொழுது இல்லறம் தங்களைக்கரையேற்றுவதாகத் தெளிவித்து,

ஓடு ஆலாக்குக

பிறங்கு மலை மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது ஏமுறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி—பெரியமலையில் மிகவுயர்ந்தவிடத்தே யுறைகின்ற முருகனையும்வாழ்த்தி வணங்கி அவன்முன்னே இவள் மயக்கமுறுதற்குக் காரணமான வஞ்சினத்தை உண்மையாற்றெளிவித்து,

வஞ்சினம் - பிரியின் அறனல்லதுசெய்தேனாவேனென்னுமொழி மூன்றேற்றுதலின், ஏமுறுவஞ்சினமென்றார்

அம் தீம் தெண்ணீர் குடித்தலின் நெஞ்சு அமர்ந்து—அம்மலையில் அழகிய இனிய அருவிநீரை அவன்குடிக்கையினாலே இவள்நெஞ்சு சூளுறவிலே பொருந்தி,

நீர்குடித்தலும் ஒருகூறுறவென்று கொள்க. நெஞ்சமைந்தென்றும் பாடம்.

[அருவிட ரமைந்த களிறுதரு புணர்ச்சி, வானுரி யுறையுள் வயங்கியோ ரவாவு ம், பூமலி சோலை யப்பகல் கழிப்பி] வான் உரி உறையுள் வயங்கியோர் அவாவும் அரு விடர் அமைந்த பூ மலி சோலை களிறு தரு புணர்ச்சி அப் பகல் கழிப்பி—ஆகாயத்திடத்தே தமக்குரிய இருப்பினையுடைய விளங்கிய தேவர்விரும்பும் அரிய முழைஞ்சுகளினிடத்தே பொருந்தின பூமிக்க சோலையிலே களிறுகூட்டின கூட்டத்தை அன்றைப்பகற்பொழுதெல்லாம் போக்கி,

உரிய உறையுள் - விகாரம்

உண்மைசெப்புங்கிளவி கூறினள்

[எல்லை செல்ல வேழூர் பிறைஞ்சிப, பல்கதிர் மண்டிலங் கல்சேர்பு மறைய:] பல் கதிர் மண்டிலம் ஏழ ஊர்பு எல்லை செல்ல இறைஞ்சிக் கல் சேர்பு மறைய—பலகிரணங்களையுடைய ஞாயிறு ஏழுகுதிரைபூண்ட தேரையேறிப் பகற்பொழுது போம்படி தாழ்ந்து அத்தகிரியைச்சேர்ந்து மறைகையினாலே,

மான் கணம் மரமுதல் தெவிட்ட—மான்றிரள் மரத்தடிகளிலே திரள,

அசையிடுதலுமாம்

ஆன் கணம் கன்று பயிர் குரல மன்று நிறை புகுதர—பசுவினுடையதிரள் கன்றுகளையழைக்குங் குரலையுடையவாய் மன்றுகள்நிறையப் புகுதலைச்செய்ய,

ஏங்கு வயிர் இசைய கொடு வாய் அன்றில் ஓங்கு இரும் பெண்ணை அகமடல் அகவ—ஊதுகின்ற கொம்புபோன்ற ஓசையையுடைய வளைந்த வாயையுடைய அன்றில் உயரும் பெரியபனையில் உண்மடலிலேயிருந்து பேட்டையழைக்க,

பாம்பு மணி உமிழ—பாம்பு தான்மேய்தல் காரணமாகத் தன்னிடத்துமாணிக்கத்தை யீன,

[பல்வயிற் கோவலர், ஆம்பலந் தீங்குழற் றெள்விளி பயிற்ற] கோவலர் பல வயின் ஆம்பல் அம் தீங் குழல் தெள் விளி பயிற்ற—இடையர் பலவிடங்களினுநின்று ஆம்பலென்னும் பண்ணினையுடைய அழகிய இனிய குழலிடத்துத் தெளிந்த ஓசையைப் பலகாலுமெழுப்ப,

ஆம்பல் ஆய் இதழ் கூம்பு விட—ஆம்பலினது அழகியஇதழ்கள் தளையவிழ,

[வளமனைப், பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி, யந்தி யந்தண ரயர·]

அந்தணர் அந்தி அயர—பார்ப்பார் அந்திக்காலத்துச் செய்யுந்தொழில்களை நிகழ்த்த,

வள மனைப் பூந்தொடி மகளிர் சுடர் தலைக்கொளுவி அந்தி அயர—செல்வத்தையுடைய மனைகளிற் பொலிவுபெற்ற தொடியினையுடைய மகளிர் விளக்கை அவ்விடத்தேகொளுத்தி அந்திக்காலத்திற் றொழிலைநிகழ்த்த,

கானவர் விண் தோய் பணவைமிசை ஞெகிழி பொத்த—அக்காட்டிலவாழ்வார் விண்ணைத்தீண்டுகின்ற பரணினமேலே தீக்கடைகோலாலே நெருப்பைப்பிறப்பித்து எரிப்ப,

வானம் மா மலை வாய் சூழ்பு கறுப்ப—மேகம் பெரிய மலையிடத்தைச்சூழ்ந்து கறுப்ப,

கானம் கல்லென்று இரட்ட—காட்டிலுள்ள விலங்குகளெல்லாம் கல்லென்னும் ஓசையையுடையவாய் ஒன்றறொன்று மாறிக்கூப்பிட,

கானம் - ஆகுபெயர்

புள்ளினம் ஒலிப்ப — பறவைகள் குடம்பைககண்ணேநின்று ஆரவாரிக்கையி னலே,

* [சினைஇய வேந்தன் செல்சமம் கடுப்பத, துனைஇய மாலை துன்னுதல் காணூஉ:]

தெய்ட்டப (உகள) புகுதர (உகஅ) அகவ (உஉ0) உமிழ்ப் (உஉக)பயிற்றக (உஉஉ) கூம்புவிட (உஉ௩) அயரப (உஉ௫) பொத்தக (உஉசு) கறுபப (உஉஎ) இரட்ட ஒலிப் பச (உஉஅ) செலசமங்கடுபப (உஉக) மாலை துன்னுதலகணடு (உ௩0) என முடிக்க.

இவ்வெச்சங்கள் எதிர்காலமுணர்த்தின. † "நிலனொருங்கு மயங்குத லின் றென மொழிப" எனவே காலமிரண்டு மயங்குமென்றலிற குறிஞ்சியின் மாலைக்கா லங்கூறினர்

[நேரிறை முன்கை பற்றி நுமர்தர, நாடறி நன்மண மயர்கஞ் சின்னாட், கலங்க லோம்புமி னிலங்கிழை யீரென, வீர நன்மொழி தீரக் கூறி]

இலங்கிழையீர்—விளங்குகின்ற பூணினையுடையீர்,

நுமர் நேர் இறை முன்கை பற்றித் தர நாடு அறி நல மணம் அயர்கம—நும்மு டையசுற்றத்தார் நுமது நேரிய இறையினையுடைய முன்கையைப்பிடித்து எமக்குத் தர நாட்டிலுள்ளாரெல்லாமறியும் நன்றாகியகலியாணத்தினைப் பின்பு நிகழ்த்துவேம்;

சின்னாள் கலங்கல் ஓம்புமின் என ஈரம் நனமொழி தீரக் கூறி—யாம் இக்கள வொழுக்கத்தாற்பெறும் பேரின்டம்பெறுதற்குச் சிறிதுநாள் இங்ஙனம் ஒழுகாநின் றேமென்று நெஞ்சுகலங்குதலைப் பாதுகாப்பீராகவென்ற அருளுடைத்தாகிய நல்ல வார்த்தையை இவளெநஞ்சில் ஏறுத்தற்கு தீருமபடி சொல்லி,

துணை புணர் ஏற்றின் எம்மொடு வந்து—ஆவைப்புணர்ந்த ஏறுபோலே விடா மல் எம்முடனேகூடவந்து,

துஞ்சா முழவின் மூதூர் வாயில் உண் துறை நிறுத்துப் பெயர்ந்தனன்—ஓசை யை ஒருகாலுமறாத முழவினையுடைய பழைய நம்மூர்வாசலில் பலரும் நீருண்ணுந் துறையிலே எம்மைநிறுத்தி மீண்டுபோனான்,

இதனால் வேட்கையுரைத்தல் கூறினாள்

அதற்கொண்டு அன்றை அன்ன விருப்பொடு என்றும் இர வரல் மாலையனே—அப்புணர்ச்சிதொடங்கி அம்முதனாள்போன்ற விருப்பத்தோடே எந்நாளும் இர வுக்குறியிலே வருதலைத் தனக்கியல்பாகவுடையன்,

ஏகாரம் - ஈற்றசை

வருதோறும் காவலர் கடிகினுமகதன் நாய குரைப்பினும் நீ துயிலெழினும் நிலவு வெளிப்படினும—அங்ஙனம் வரும்போதெல்லாம் ஊர்காவலர் கடுகிக்காத்தாராயினும் கோபத்தையுடைய நாய் குரைத்ததாயினும் நீ துயிலுணர்ந்தாயாயினும் நிலவு வெளி யாகவெறித்ததாயினும,

வேய் புரை மென் தோள இன்துயில் பெறாஅன்—மூங்கிலையொத்தமெல்லிய தோளிற்பெறும் இனியதுயிலைப் பெறாது போவன;

பெயரினும் முனியல உறாஅன்—யாங்கள் குறியல்லதனைக் குறியாகக்கருதிச் செல்லாநின்றுமீண்டு மனையிடத்தேபுகுகினும் அதற்கு வெறுத்தலைச்செய்யான்;

---

* இதற்கு உரைகிடைத்திலது

† தொலகாப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல, கஉ.

இளமையின் இகந்தன்றும இலனே—அவனுரன் இளமைப்பருவத்தைக் கடந்ததுமிலன்,

[வளமையிற், றனனிலை திரந்தனறு மிலனே] வளமையில் என்றும(உசஉ) தன் நிலை திரந்தன்றும இலனே— நறகுணஙகளைத திரிததற்குரிய செல்வசசெருக்கான் எககாலும தன்குலததிற்குரிய நறகுணஙகளின நீஙகியதுமிலன்,

ஏகாரங்கள் - ஈற்றசை

கொன ஊா மாய வரவின இயலபு நினைஇத தேறறி—அலாமுதலியவறறுன் அசசத்தையுடைய இவ்வூரின்கணணே தனககுப பொய்யாயிருக்கின்ற இரவுக்குறியிலே கூடுதற்குவருகின்ற வரவின துதனமையை இஃதொழுககமன்றென்று நினைத்து அவன் வரைந்துகொள்ள இலலற நிகழ்த்துதலே நலலொழுக்கமென்று துணிகையினாலே,

[நீரெறி மலரிற சாஅ யிதழ்சோரா, வீரிய கலுழுமிவள் பெருமதா மழைக் கண்] இவள பெரு மதா மழைக கண நீா எறி மலரிற் சாஅய இதழ சோரா ஈரிய கலுழும—இவளுடைய பெரிய மதாதத குளிர்ந்த கண்கள் பெருநதுளியெறிந்துபெயதமலாபோலே அழகுகெட்டு இமைசோாநது ஈரததினையுடையவாயக கலஙகாநிறகும,

[ஆகத தரிபபனி யுறைபப நாளும, வலைபபடு மஞஞையி னலஞ்செலச சாஅய், நினைதொறுங கலுழுமா லிவளே கஙகு, லளைசெறி யுழுவையு மாளியு முளியமும், புழறகோட் டாமான புகலவியுங களிறும, வலியிற றபபும் வன்கண வெருசினத, துருமுஞ் சூரு மிரைதே ரரவமு, மொடுஙகிருங குட்டத தருஞ்சுழி வழங்குங, கொடுந்தாள முதலையு மிடஙகருங கராமு, நூழிலு மிழுக்கு மூழடி முட்டமும், பழுவம பாந்தளு முளப்பட பிறவும, வழுவின வழாஅ விழுமமவா, குழுமலை விடரக முடையவா லெனவே]

இவள அவா குழுமலை விழுமம உடையவால என நினைதொறும வலைப படு மஞ்ஞையின நலம் செலச சாஅய அரிப பனி நாளும ஆகதது உறைபபக் கலுழும்—இவள அஙஙனந்தேறறுக கணவரூகினறதறகு மேலே அவாவருகினற மலை இடும்பையுடையவாயிருககுமெனறு நினைககுந்தோறும் வலையிலகபபட்ட மயிலபோலே தனனலமபோம்படி நுணுகிக கணணில அரிததுவீழ்கினறநீா நாளதோறும் மாரபிலேதுளிபபக கலஙகாநிறகும,

கஙகுல—இராககாலதது,

அளைச செறி உழுவையும—முழைஞ்சிடததிலே செறியும புலிகளும்,

யாளியும—யாளிகளும,

உளியமும—கரடியும்,

புழல கோடு ஆமான புகலவியும – உளளுபபொயயான கொம்பையுடைய ஆமானிலேறும்,

களிறும—யானையும,

வலியின தபபும் வனகண வெருசினதது உருமும— வலியினறெகெடுககும் தறுகணமையையுடைததாகிய வெவவிய சினததையுடைய உருமேறும,

சூரும— கொடுந்தெயவமும,

இரை தோ அரவமும—இரைதேடித்திரியும பாமபும்,

ஒடுங்கு இருங்குட்டத்து அருஞ்சுழி வழங்கும் கொடுந்தாள் முதலையும் இடங்கரும் கராமும்—புடைபட்ட கரிய ஆழத்திடத்துப் போதற்கரிய சுழியிடத்தே திரியும் வளைந்த தாளையுடைய முதலையும் இடங்கரும் கராமும்

இவை மூன்றும் சாதி விசேடம்

நூழிலும்—வழிப்பறிப்பார் கொன்றுகுவிக்கு மிடங்களும்,

நூழில் - கொடிப்பிணக்கென்பாருமுளர்

இழுக்கும்—வழுக்குநிலமும்,

ஊழ் அடி முட்டமும்—முறைப்படிப் போய் பின்பு வழிமுட்டாயிருக்கும் இடங்களும்,

பழுவும்—பிசாசும்,

பாந்தளும்—பெரும்பாம்பும்

உள்ப்பட்ட பிறவும் வழூஉ அ விழுமம்—உழுவை முதலா எண்ணப்பட்ட இவையெல்லாமுட்பட வேறும் தப்புஞ்செயலினாற் பிறப்பத இம்மைகளை

விழுமஞ்செய்வனவற்றை விழுமமென்றார், இஃது ஆகுபெயர்

அவர் குழு மலை விடரகம் உடையவால் என—தலைவருடைய [illegible]யையுடைத்தாகிய மலையின் முழைஞ்சிடம் உடையவாயிருக்குமென்று

அன்னாய் வாழி, அன்னாய் யான்கூறுகின்றதனை விரும்புவையாக (௧), நீயும் ஐயமையலையாகி வருந்தி (௮), இவளும் (௨௩) ஏனையுலகத்தும் இயைவதாலெனக் கூறி(௨௪) மெலியும் (௨௫), யானும் (௨௬) சான்றோர்போல (௨௮) வருந்தாநின்றேன் (௨௯), எண்ணாது (௩௧) எமியேம் துணிந்த அருவினை (௩௨) நிகழ்ந்த வண்ணம் நீயுணர (௩௩) செப்புதலையமைந்தேன் அதுகேட்டுச் சின்வாழியோ (௩௪), முனையிற் படுபுள்ளோப்பி (௩௮) வருதியரென நீ போகவிடுகையினாலே (௩௯) யாங்களும்போய் இதணமேறிக் (௪௧) கிளிகடி மரபினவற்றை வாங்கி ஓட்டிக் (௪௪) கொளீஇப் (௫௦) பொழிந்தென (௫௩) நெடுங்கோட்டிழிதரும் தெண்ணீர் (௫௪) அருவி (௫௫) யாடிப் (௫௬) பாய்சுனைகுடைவுழிப் (௫௭) பாயம்பாடிக் (௫௮) கூதளம்பிரிவண்டு வரிச (௯௦) சிவந்தகண்ணேமாய (௯௧) மலிவனமறுகிப் (௯௭) பல்பூம் புழகுடனே (௯௬) காந்தள் (௬௨) முதலியவற்றையும் பிறவற்றையும் (௯௫) பாறையிலே குவித்துத் (௯௮) தெள்விளி பயிற்றி(௧௦௦)ஓப்பியும்(௧௦௧)தழைத்துஉடுத்துக்(௧௦௨)கோதையை(௧௦௩) முச்சியிலேகட்டிச் (௧௦௪) செயலைத் (௧௦௫) தண்ணிழலிலே யிருந்தனமாக (௧௦௬), குன்றுகெழுநாடனாகிய எம்பெருவிறல் (௧௧௬) அணிபெறவந்து (௧௩௬) இளையீர், இறந்த (௧௪௧) கெடுதியுமுடையேயென்றனன், அதனெதிர் (௧௪௨) சொல்லேமாதலிற் கலங்கி (௧௪௫) மெல்லியலீர் சொல்லுமடழியோமெனச்சொல்லி (௧௪௫)ஓச்சி (௧௫௦) அவித்துச் (௧௫௧) சொல்லற்பாணிநின்றனனாக (௧௫௨), வேழம் எதிர்தருகையினாலே (௧௬௫) விரைந்துவந்துபொருந்தி (௧௬௮) நடுங்காநிற்கப் (௧௬௯) பகழியைவாங்கி (௧௭௦) அணிமுகத் தழுத்தலின் (௧௭௧) அதுபுறங்கொடுத்தபின் (௧௭௪) கலுழிபாய்தலின் (௧௭௮) வாழையினடுங்கினமாக, அதுகண்டு பெருந்தகை (௧௭௯) எடுத்து அஞ்சலோம்பெனச்சொல்லி (௧௮௧) நீவி நினைந்து (௧௮௨) என் முகநோக்கி நக்கனன் (௧௮௩), அவ்வழி நாணுமுட்கும் அடைதருகையினாலே (௧௮௪) இவளிங்கவும் விடாஅய (௧௮௫) அந்நிலை (௧௮௩) முயங்கலின், அவ்வழி (௧௮௬) யிவளிம்பாத்தன்மை யுள்ளினனாய் அதனையுட்கொண்டு (௨௦௦) விராந்துண்டெஞ்சிய மிச்சிலை (௨௦௬) நீயிடுகையினா

லே யானுண்டலும புரைவதென்று சொலலித (௨௦௭) தேற்றிய (௨௦௮) பெருந்த கை (௨௦௬) கடவுளும் வாழ்த்திக கைதொழுது (௨௦௯) வஞ்சினம்வாய்மையிற றேற றித (௨௧௦) தெண்ணீர்குடித்தலின் நெஞ்சமர்ந்து (௨௧௧) சோலையிலே (௨௧௪) களி றுதருபுணர்ச்சியைக (௨௧௨) கழிப்பி (௨௧௪) மண்டிலம் மறைகையினாலே (௨௧௬) மாலைதுன்னுதல கண்டு (௨௩௦) இலங்கிழையீர், கலங்கலோம்புமின்னென (௨௩௩) ஈர நன்மொழிகூறி (௨௩௪) எம்மொடுவந்து (௨௩௫) உண்டுறைநிறுத்துப பெயர்ந்தன ன், ஏற்றுக்கொண்டு (௨௩௭) என்றும (௨௩௮) இரவிலவருமாலையன், வருந்தோறும (௨௩௯) கடுகினும குரைப்பினும (௨௪௦) துயிலெழினும் வெளிப்படினும (௨௪௧) இன் றுயில(௨௪௨)பெறுமற போவன, அதுவேயன்றிப பெயரினும முனியலுறுன(௨௪௩) இகந்தன்றுமிலன் (௨௪௪), என்றும (௨௪௨) தீர்ந்தன்றுமிலாதவன (௨௪௫) மாயவரவி னியல்புநினைந்து தேற்றுகையினாலே(௨௪௬) இவள்கலுழும (௨௪௮), அங்ஙனம் அழு கின்றதற்குமேலே அவர்வருகின்ற (௨௬௦) குழுமலைவிடரகம (௨௬௧) விழுமம (௨௬௦ உடையவென (௨௬௧)நினையுந்தோறும (௨௫௧) சாஅய (௨௫௦) உறைப்பக (௨௪௯) கலங் காநிற்கும (௨௫௧), இதுகாண் நலவினை நிகழ்ந்தவண்ணமென்றுளென வினைமு டிக்க

ஆரியவரசன்பிரசத்தனைத் தமிழறிவித்தற்குக் கபிலர்பாடிய குறிஞ்சிப்பாட் டிற்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று

---

வெண்பா

௧ நின்குற்ற மில்லை நிரைதொடியும் பண்புடைய
ளென்குற்றம் யானு முணர்கலேன் பொன்குற்
றருவி கொழிக்கு மணிமலை நாடன
தெரியுங்காற் றீய திலன

௨ ஆற்றலசால் கேள்வி யறம்பொரு ளின்பத்தைப்
போற்றிய புணர்ந்த பொருளிற்றே - தேற்ற
மறையோர் மணமெட்டி னைந்தா மணத்திற்
குறையுயக் குறிஞ்சிக் குணம்

---

## ஒன்பதாவது

# பட்டினப்பாலை.

வசையில்புகழ் வயங்குவெண்மீன்
றிசைதிரிந்து தெற்கேகினுந்
தற்பாடிய தளியுணவிற்
புட்டேம்பப் புயன்மாறி
௫ வான்பொய்ப்பினுந் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி
புனல்பரந்து பொன்கொழிக்கும்
விளைவறா வியன்கழனிக்
கார்க்கரும்பின் கமழாலைத்
௧௰ தீத்தெறுவிற் கவின்வாடி
நீர்ச்செறுவி னீணெய்தற்
பூச்சாம்பும் புலத்தாங்கட்
காய்ச்செந்நெற் கதிரருந்து
மோட்டெருமை முழுக்குழவி
௧௫ கூட்டுநிழற் றுயில்வதியுங்
கோட்டெங்கிற் குலைவாழைக்
காய்க்கமுகிற் கமழ்மஞ்ச
ளினமாவி னிணர்ப்பெண்ணை
முதற்சேம்பின் முளையிஞ்சி
௨௰ யகனகர் வியன்முற்றத்துச்
சுடர்நுதன் மடநோக்கி
னேரிழை மகளி ருணங்குணாக் கவருங்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டு
௨௫ முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்
விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக்
கொழும்பல்குடிச் செழும்பாக்கத்துக்
குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு
வெள்ளையுப்பின் கொள்ளைசாற்றி
௩௰ நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி
பணைநிலைப் புரவியி னணைமுதற் பிணிக்குங்

கழிசூழ்படப்பைக் கலியாணர்ப்
பொழிற்புறவிற் பூந்தண்டலை
மழைநீங்கிய மாவிசும்பின்
௩௫ மதிசேர்ந்த மகவெண்மீ
னுருகெழுதிற லுயர்கோட்டத்து
முருகமர்பூ முரண்கிடக்கை
வரியணிசுடர் வான்பொய்கை
யிருகாமத் திணையேரிப்
௪0 புலிப்பொறிப் போர்க்கதவிற்
றிருத்துஞ்சுந் திண்காப்பிற்
புகழ்நிலைஇய மொழிவளர
வறநிலைஇய வகனட்டிற்
சோறுவாக்கிய கொழுங்கஞ்சி
௪௫ யாறுபோலப் பரந்தொழுகி
யேறுபொரச் சேறாகித்
தேரோடத் துகள்கெழுமி
நீறாடிய களிறுபோல
வேறுபட்ட வினையோவத்து
௫0 வெண்கோயின் மாசூட்டுந்
தண்கேணித் தகைமுற்றத்துப்
பகட்டெருத்தின் பலசாலைத்
தவப்பள்ளித் தாழ்காவி
னவிர்சடை முனிவ ரங்கி வேட்கு
௫௫ மாவுதி நறும்புகை முனைஇக் குயிற்றம்
மாயிரும் பெடையோ டிரியல் போகிப்
பூதங் காக்கும் புகலருங் கடிநகர்த்
தூதுணம் புறவொடு துச்சிற் சேக்கு
முதுமரத்த முரண்களரி
௬0 வரிமணலகன் றிட்டை
யிருங்கிளை யினனொக்கற்
கருந்தொழிற் கலிமாக்கள்
கடலிறவின் சூடுதின்றும்
வயலாமைப் புழுக்குண்டும்
௬௫ வறளடம்பின் மலர்மலைந்தும்
புனலாம்பற் பூச்சூடியு
நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரு
நாண்மீன் விராய கோண்மீன் போல

மலர்தலை மன்றததுப பலருடன் குழீஇக்
௭0 கையினுங் கலத்தினு மெய்யுறத தீண்டிப்
பெருஞ்சினத்தாற் புறக்கொடாஅ
திருஞ்செருவி னிகன்மொய்ம்பினோர
கல்லெறியுங் கவண்வெரீஇப்
புள்ளிரியும் புகர்ப்போந்தைப
௭௫ பறழ்ப்பன்றிப் பல்கோழி
யுறைக்கிணற்றுப் புறச்சேரி
மேழகத தகரொடு சிவல்விளை யாடக
கிடுகுநிரைத தெஃகூன்றி
நடுகல்லி னரண்போல
௮0 நெடுந்தூண்டிலிற காழ்சேர்த்திய
குறுங்கூரைக் குடிநாபபண
ணிலவடைந்த விருள்போல
வலையுணங்கு மணன்முன்றில
வீழ்த்தாழைத் தாட்டாழ்நத
௮௫ வெண்கூ தாளத்துத தண்பூங கோதையர்
சினைச்சுறவின் கோடுநட்டு
மனைசசேர்த்திய வலலணங்கினன
மடற்றாழை மலர்மலைந்தும
பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும
௯0 புன்றலை யிரும்பரதவர்
பைந்தழைமா மகளிரொடு
பாயிரும பனிக்கடல வேட்டஞ் செல்லா
துவவுமடிந் துண்டாடியும
புலவுமணற் பூங்கானன்
௯௫ மாமலை யணைந்த கொண்மூப போலவுந
தாயமுலை தழுவிய குழவி போலவுந
தேறுநீர் புணரியொடு யாறுதலை மணக்கு
மலியோதத தொலிகூடற்
றீதுநீங்கக் கடலாடியு
௧00 மாசுபோகப புனல்படிந்து
மலவ னாட்டியு முரவுத்திரை யுழக்கியும
பாவை சூழ்ந்தும் பல்பொறி மருண்டு
மகலாக் காதலொடு பகல்விளை யாடிப
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
௧0௫ பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைத

துணைப்புணர்ந்த, மடமங்கையர்
பட்டுநீக்கித் துகிலுடுத்து
மட்டுநீக்கி மதுமகிழ்ந்து
மைந்தர் கண்ணி மகளிர சூடவு
கக0 மகளிர் கோதை மைந்தர் மலையவு
நெடுங்கான் மாடத தொளளெரி நோககிக்
கொடுந்திமிற பரதவா குரூஉசசுட ரெண்ணவும
பாட லோர்தது நாடக நயந்தும்
வெண்ணிலவின் பயன்றுய்த்துங்
கக௫ கண்ணடை இய கடைக்கங்குலான்
மாஅகாவிரி மணங்கூட்டுந
தூஉவெக்கர்த துயின்மடிந்து
வாலிணர் மடற்றாழை
வேலாழி வியன்றெருவி
க௨0 னல்லிறைவன் பொருள்காக்குந
தொலலிசைத் தொழின்மாக்கள்
காய்சினதத கதிர்ச்செலவன்
றேர்பூண்ட மாஅபோல
வைகறொறு மசைவின்றி
க௨௫ யுல்குசெயக் குறைபடாது
வான்முகநதநீர் மலைபபொழியவு
மலைப்பொழிந்தநீர் கடறபரபபவு
மாரி பெய்யும் பருவம போல
நீரினின்று நிலததேறவு
க௩0 நிலததினின்று நீர்பபரப்பவு
மளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி
யருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வலலணங்கினோன்
க௩௫ புலிபொறிததுப் புறம்போககி
மதிநிறைந்த மலிபண்டம்
பொதிமூடைப போரேறி
மழையாடு சிமய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடைத் தோற்றம் போலக்
க௪0 கூருகிர் ஞமலிக் கொடுந்தா ளேற்றை
யேழகத் தகரோ டுகளு முன்றிற்
குறுந்தொடை நெடும்படிக்கால

கொடுந்திண்ணைப் பஃறகைப்பிற்
புழைவாயிற் போகிடைகழி
௧௪௫ மழைதோயு முயர்மாடத்துச்
சேவடிச் செறிகுறங்கிற்
பாசிழைப் பகட்டல்குற்
றூசுடைத் துகிர்மேனி
மயிலியன் மான்னோக்கிற்
௧௫0 கிளிமழலை மென்சாயலோர்
வளிநுழையும் வாய்பொருந்தி
யோங்குவரை மருங்கி னுண்டா துறைக்குந்
காந்தளந் துடுப்பிற் கவிகுலை யன்ன
செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்
௧௫௫ வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்
குழலகவ யாழ்முரல
முழவதிர முரசியம்ப
விழவறா வியலாவணத்து
மையறு சிறப்பிற் றெய்வஞ் சேர்த்திய
௧௬0 மலரணி வாயிற் பலர்தொழு கொடியும்
வருபுன றந்த வெண்மணற் கான்யாற்
றுருகெழு கரும்பி னொண்பூப் போலக்
கூழுடைக் கொழுமஞ்சிகைத்
தாழுடைத் தண்பணியத்து
௧௬௫ வாலரிசிப் பலிசிதறிப்
பாகுகுத்த பசுமெழுக்கிற்
காழூன்றிய கவிகிடுகின்
மேலூன்றிய துகிற்கொடியும்
பலகேள்வித் துறைபோகிய
௧௭0 தொலலாணை நல்லாசிரிய
ருறழ்குறித் தெடுத்த வுருகெழு கொடியும்
வெளிலிளக்குங் களிறுபோலத்
தீம்புகார்த் திரைமுன்றுறைத்
தூங்குநாவாய் துவன்றிருக்கை
௧௭௫ மிசைக்கூம்பி னசைக்கொடியு
மீன்றடிந்து விடக்கறுத்
தூன்பொரிக்கு மொலிமுன்றின்
மணற்குவைஇ மலர்சிதறிப்
பலர்புகுமனைப் பலிப்புதவி

கஅ௦ னறவுநொடைக கொடியோடு
பிறபிறவு நணிவிரைஇப்
பல்வே றுருவிற் பதாகை நீழற்
செல்கதிர் நுழையாச் செழுநகர் வரைப்பிற்
செல்லா நல்லிசை யமரர் காப்பி
கஅரு னீரின் வந்த நிமிர்பரிப் புரவியுங்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னுங்
குடமலைப பிறநத வாரமு மகிலுந்
தென்கடன் முத்துங் குணகடற் றுகிருங்
ககூ௦ கங்கை வாரியுங் காவிரிப் பயனு
மீழத துணவுங் காழகத தாக்கமு
மரியவும் பெரியவு * நெளிய வீண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகி
னீர்நாப் பண்ணு நிலததின் மேலு
ககூரு மேமாப்ப வினிதுதுஞ்சிக்
கிளைகலித்துப் பகைபேணாது
வலைஞர்முன்றின் மீன்பிறழவும்
விலைஞர்குரமபை மாவீணடவுங
கொலைகடிந்துங் களவுநீக்கியு
உ௦௦ மமரர்ப் பேணியு மாவுதி யருததியு
நலலாநொடு பகடோமபியு
நான்மறையோர் புகழ்பரபபியும்
பண்ணிய மட்டியும பசும்பதங் கொடுததும
புண்ணிய முட்டாத தண்ணிழல வாழ்க்கைக்
உ௦ரு கொடுமேழி நசையுழவர்
நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோ
வடுவஞ்சி வாயமொழிநது
தமவும் பிறவு மொப்ப நாடிக
உக௦ கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைபடாது
பல்பண்டம் பகர்ந்துவீசுந்
தொலகொண்டித துவன்றிருக்கைப்
பல்லாயமொடு பதிபழகி
வேறுவே றுயர்ந்த முதுவா யொக்கற
உகரு சாறயர் மூதூர் சென்றுதொக் காங்கு

---

* நெரியவீண்டியென்றும் பாடம்.

மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையு
முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
உஉ0 வாரேன் வாழிய நெஞ்சே கூருகிர்க்
கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்குப்
பிறர் பிணியகத் திருந்து பீடுகாழ் முற்றி
யருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று
பெருங்கை யானை பிடிபுக் காங்கு
உஉ௫ நுண்ணிதி னுணர நாடி நண்ணார்
செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்
துருகெழு தாய மூழி னெய்திப்
பெற்றவை மகிழ்தல் செய்யான் செற்றோர்
கடியரண் டொலைத்த கதவுகொன் மருப்பின்
உ௩0 முடியுடைக் கருந்தலை புரட்டு முன்றா
ளுகிருடை யடிய வோங்கெழில் யானை
வடிமணிப் புரவியொடு வயவர் வீழப்
பெருநல் வானத்துப் பருந்துலாய் நடப்பத்
தூறிவர் துறுகற் போலப்போர் வேட்டு
உ௩௫ வேறுபல் பூளையொ டுழிஞை சூடிப்
பேய்க்க ணன்ன பிளிறுகடி முரச
மாக்க ணகலறை யதிர்வன முழங்க
முனைகெடச் சென்று முன்சம முருக்கித்
தலைதவச் சென்று தண்பணை யெடுப்பி
உ௪0 வெண்பூக் கரும்பொடு செந்நெ னீடி
மாயிதழ்க் குவளையொடு நெய்தலு மயங்கிக்
கராஅங் கலித்த கண்ணகன் பொய்கைக்
கொழுங்காற் புதவமொடு செருந்தி நீடிச்
செறுவும் வாவியு மயங்கி நீரற்
உ௪௫ றறுகோட் டிரலையொடு மான்பிணை யுகளவுங்
கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி
யந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ
வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியிற்
உ௫0 பருநிலை நெடுந்தூ ணொல்கத் தீண்டிப்
பெருநல் யானையொடு பிடிபுணர்ந் துறையவு
மருவிலை நறும்பூந் தூஉய்த் தெருவின்

முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த
திரிபுரி நரம்பின் றீந்தொடை யோர்க்கும்
உ௫௫ பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்துச்
சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி
யழல்வா யோரி யஞ்சுவரக் கதிப்பவு
மழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவுங்
கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப்
உ௬0 பிணந்தின் யாக்கைப் பேய்மக டுவன்றவுங்
கொடுங்கான் மாடத்து நெடுங்கடைத் துவன்றி
விருந்துண் டானாப் பெருஞ்சோற் றட்டி
லொண்சுவர் நல்லி லுயர்திணை யிருந்து
பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்த்
உ௬௫ தொடுதோ லடியர் துடிபடக் குழீஇக்
கொடுவி லெயினர் கொள்ளை யுண்ட
வுணவில் வறுங்கூட் டுள்ளகத் திருந்து
வளைவாய்க் கூகை நன்பகற் குழறவு
மருங்கடி வரைப்பி னூர்கவி னழியப்
உ௭0 பெரும்பாழ் செய்து மமையான் மருங்கற
மலையகழ்க் குவனே கடறூர்க் குவனே
வான்வீழ்க் குவனே வளிமாற் றுவனெனத்
தான்முன்னிய துறைபோகலிற்
பல்லொளியர் பணிபொடுங்கத்
உ௭௫ தொல்லருவாளர் தொழில்கேட்ப
வடவர் வாடக் குடவர் கூம்பத்
தென்னவன் றிறல்கெடச் சீறி மன்னர்
மன்னெயில் கதுவு மதனுடை நோன்றாண்
மாத்தானை மறமொய்ம்பிற்
உ௮0 செங்கண்ணாற் செயிர்த்துநோக்கிப்
புன்பொதுவர் வழிபொன்ற
விருங்கோவேண் மருங்குசாயக்
காடுகொன்று நாடாக்கிக்
குளந்தொட்டு வளம்பெருக்கிப்
உ௮௫ பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிறீஇ
வாயிலொடு * புழையமைத்து
ஞாயிற் றோறும் புதைநிறீஇப்

* வழியமைத்தென்றும் பாடம்.

பொருவேமெனப் பெயர்கொடுத்
உ௯0 தொருவேமெனப் புறக்கொடாது
திருநிலைஇய பெருமன்னெயில்
மின்னொளி யெறிப்பத் தம்மொளி மழுங்கி
விசிபிணி முழவின் வேந்தர் சூடிய
பசுமணி பொருத பரேரெறுழ்க் கழற்கால்
உ௯௫ பொற்றொடிப் புதல்வ ரோடி யாடவு
முற்றிழை மகளிர் முகிழ்முலை திளைப்பவுஞ்
செஞ்சாந்து சிதைந்த மார்பி னொண்பூ
ணரிமா வன்ன வணங்குடைத் துப்பிற்
றிருமா வளவன் றெவ்வர்க் கோக்கிய
ங00 வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் றோளே.

## இதன்பொருள்.

இது பட்டினத்தைச் சிறப்பித்துக்கூறிய பாலைத்திணையாகலின், இதற்குப் பட்டினப்பாலையென்று பெயர்கூறினார். பாலையாவது பிரிதலும் பிரிதனிமித்தமுங் கூறுவது. இப்பாட்டு, * வேற்றுநாட்டகல்வயின் விழுமத்துத் தலைவன் செலவழுங்கிக் கூறியது. இது, முதலுங்கருவுங்கூறாது உரிப்பொருளே சிறப்பக் கூறியது.

வசை இல் புகழ்—குற்றங்கூறுதலில்லாத புகழையுடைய காவிரி (௬) யென்க.

வயங்கு வெண்மீன் திசை திரிந்து தெற்கு ஏகினும்— † விளங்குகின்ற வெள்ளியாகியமீன் தான் நிற்றற்குரிய வடதிசையினில்லாமல் தென்றிசைக்கண்ணே போகினும்,

இதனாற் பெய்யும்பருவத்துப் பெய்யாமைக்குக் காரணங்கூறினார்

[தற்பாடிய தளியுணவிற், புட்டேம்பப் புயன்மாறி, வான்பொய்ப்பினும்.] தளி உணவின் தற் பாடிய புள் தேம்பப் புயல் மாறி வான் பொய்ப்பினும்—துளி உணவாகையினாலே தன்னைப்பாடிய வானம்பாடி புலரும்படி மழையைப்பெய்தலைத்தவிர்ந்து மேகம்பொய்த்து வறக்டகாலமாயினும்,

தான் பொய்யா மலைத் தலைய கடற் காவிரி—தான் பொய்யாமற் காலந்தோறும் வருகின்ற குடகமலையிடத்தே தலையினையுடைய கடலிடத்தேசெல்கின்ற காவிரி,

கடல் - கணவன்

புனல் பரந்து பொன் கொழிக்கும்—நீர்பரந்து கரையிலே பொன்னைப்போகடும் சோழநாடு (உஅ),

விளைவு அறா வியன் கழனி — விளைதற்றொழின்மாறாத அகற்சியையுடைய கழனியிடத்தில்,

கார்க் கரும்பின் கமழ் ஆலைத் தீத் தெறுவிற் கவின் வாடி நீர்ச் செறுவின் நீள் நெய்தற் பூச் சாம்பும் புலத்து ஆங்கண்—பசிய கரும்பின் கமழும்பாகை யடுகின்ற

* தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், ரு.

† "அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினு, மிலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினு, மந்தண் காவிரி வந்து" என்றார் புறப்பாட்டிலும், ௩௫

கொட்டிலில் நெருப்பிற்புகை சுடுகையினாலே அழகுகெட்டு நீரையுடைத்தாகிய செய்யின்கணின்ற நீண்ட நெய்தற்பூ வாடும் நிலத்தையுடைய வயலிடத்துக் குறும்பல்லூர் (உஅ),

காய்ச் செந்நெற் கதிர் அருந்தி மோடு எருமை முழுக்குழவி கூட்டு நிழல் துயில் வதியும்—காய்த்த செந்நெற்கதிரைத்தின்று வயிற்றையுடைய எருமையீன்ற முற்பட்டகன்றுகள் நெடுங்கூட்டினுடைய நிழலிலே உறக்கத்தைக்கொள்ளுங் குறும்பல்லூர் (உஅ),

கோள் தெங்கின்—குலைகளையுடைய தெங்கினையும்,

குலை வாழை—குலைகளையுடைய வாழையினையும்,

காய்க் கமுகின்—காயையுடைய கமுகினையும்,

கமழ் மஞ்சள்—மணநாறும் மஞ்சளினையும்,

இனம் மாவின்—இனமான மாமரங்களினையும்,

இணர்ப் பெண்ணை—குலைகளையுடைய பனையினையும்,

முதற் சேம்பின்—அடிபரந்த சேம்பினையும்,

முளை இஞ்சி—முளையினையுடைய இஞ்சியினையுமுடைய விளைவறாவியன்கழனி (அ) யெனமுன்னேகூட்டுக

[அகனகர் வியன்முற்றத்துச், சுடர்நுதன் மடநோக்கி, னேரிழை மகளி ருணங்குணாக் கவருங், கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை, பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டு, முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்]

சுடர் நுதல் மட நோக்கின் நேர் இழை மகளிர் உணங்கு உணாக் கவரும் கோழி எறிந்த கொடுங்கால் கனம் குழை—ஒளியையுடைய நுதலினையும் மடப்பம்பொருந்தினநோக்கினையும் பொருந்தின பூணினையுமுடையமகளிர் உலருகின்ற நெல்லைத் தின்னுங் கோழியையெறிந்த வளைந்த இடத்தையுடைய பொன்னாற்செய்த மகரக்குழை,

பொன் கால் புதல்வர் புரவி இன்று உருட்டும் முக்கால் சிறுதேர் முன்வழி விலக்கும் அகல் நகர் வியன் முற்றத்து—பூணணிந்த தாளினையுடைய சிறார் குதிரை பூட்டாமற் கையாலுருட்டும் மூன்றுருளையையுடைய சிறுதேரினது வழியின்முன்பை விலக்கும் செல்வமகன்ற மனையினது அகன்ற முற்றத்தையுடைய குறும்பல்லூர் (உஅ) என்க

[விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக், கொழும்பல்குடிச் செழும்பாக்கத்து]

இஃது, இருஞ்செருவின் (எஉ) விலங்குபகையல்லது கலங்குபகையறியாப் பாக்கமெனமேலேகூட்டிற்று.

குறும் பல் ஊர் நெடு சோணாட்டு—ஒன்றற்கொன்று அண்ணிதாய பலவாகிய ஊர்களையுடைய பெரியசோழநாட்டில்,

சோழநாடென்பது சோணாடெனமருஉமுடிபு.

சோழநாட்டுப்பட்டின (உஅ) மென்க.

வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி நெல்லொடு வந்த வல் வாய்ப் பஃறி—வெள்ளிதாகிய உப்பினது விலையைச்சொல்லி விற்ற நெல்லைக்கொண்டுவாத வலிய இடத்தையுடைய படகை,

பஃறி - ஓடமுமாம்

பணை நிலைப புரவியின் அணை முதற் பிணிகரும் கழி சூழ் படப்பை—பந்தியிலே நிறநிலையுடைய குதிரைகளைப்பிணிக்குமாறுபோலே சாந்த தறிகளிலேபிணிக்கும் கழி சூழ்ந்த பககத்தினையும்,

அணைமுதல் - அணையிடத்துத தறியுமாம் படபபை - தோட்டமுமாம்.

கலி யாணாப் பொழிற் புறவிற் பூந்தண்டலை—மனசசெருசகெழுதற்குக் காரண மான புதுவருவாயினையுடைய தோபபுக்களுசகுப புறம்பாகிய பூஞ்சோலைகளையும்,

[மழைநீங்கிய மாவிசும்பின, மதிசோந்த மகவெணமீ, னுருகெழுதிற லுயர் கோட்டத்து, முருகமாபூ முரண்கிடககை, வரியணிசுடா வான்பொய்கை:]

மழை நீஙகிய மா விசும்பின் மதி சோநத மகவெணமீன் உரு கெழு திறல் உயர் கோட்டதது வான் பொய்கை—மழைமாசுநீஙகின பெரிய ஆகாயததிடதது மதியைச் சேர்ந்த மகமாகிய வெள்ளியமீனினது வடிவுபொருநதின வலியையுடைய உயர்ந்த கரையையுடைய நன்முகிய பொய்கைகளையும்,

மதியும் மீனும பொய்கைகரும கரைகரும் உவமிக்கும்பொருள்

இனி உயர்கோட்டததை, எல்லாரும் மதியைசசோந்த மகவெணமீனைப்பார்க்கை கசிடமாகிய கோயிலாககிக் கோயிலும் பொய்கையுமென எணணுதலுமாம்

இனிப் பொயகைக்கரையிலே கோயிலாக்கிக் கோயிலும் பொயகையும் மதிசேர் ந்த மகவெணமீன்போனறவெனறுமாம.

முருகு அமா பூ முரண கிடக்கை வரி அணி சுடாப பொய்கை—மணம்பொருந் தின பூ நிறததாற றமமுள் மாறுபட்டபரபபாலே பலநிறமணிநத ஒளியினையுடைய பொயகை,

இரு காமத்து இணை ஏரி—இமமையிலும் மறுமையிலுமுணடாகிய காமவின்பத் தினைககொடுததறகுரிய இணைநத ஏரிகளையும்,

அது, *"சோமகுணடஞ் சூரிய குணடத துறைமூழ்கிக் - காமவேள கோட்டந் தொழுதாா கணவரொடுந் - தாமின புறுவ ருலகத்துத தையலாா - போகஞ்செய் பூமி யினும் போயபபிறபபா" எனறதனுனுமுணாக.

இனி வளாகாமஹோரி வணிகாமஹோரி யென்றும், சஙகிராமகாமம் வணிக்கிராமகாம மென்றுமுரைபப

புலிப பொறிப போாக கதவின திருத துஞ்சும திண் காப்பின் — புலியாகிய அடையாளததினையும பலகைகள தமமுறசேருதலையுடைய கதவினையுமுடைய திரு மகடஙகும் திணணிய மதிலினையும்,

[புகழுநிலைஇய மொழிவளர, வறநிலைஇய வகனட்டிற, சோறுவாக்கிய கொழுங் கஞ்சி, யாறுபோலப பரநதொழுகி, யேறுபொரச சேறுகித, தேரோடத் துகள்கெழு மி, நீறுடிய களிறுபோல, வேறுபட்ட வினையோவதது, வெணகோயின மாசூட்டும்·]

சோறு வாககிய கொழுஙகஞ்சி யாறு போலப் பரந்து ஒழுகி—சோற்றைவடித் தொழுக்கிய கஞ்சி யாறுகள்போலே எஙகும்பரந்தொழுகி,

ஏறு பொரச் சேறுகி—இடபங்கள் தம்மிற்பொருகையினுலே பின்பு சேருய்,

தேர் ஓடத் துகள் கெழுமி—பலதேர்களும ஓடுகையினுலே தூளியாய்ப்பொ ருந்தி,

* சிலப்பதிகாரம், புகார்காண்டம், கனத்திறமுரைத்தகாதை.

வேறு பட்ட வினை ஓவதது வெண் கோயில்—வேறுபட்ட தொழில்களையுடைய சித்திரங்களையுடைய வெள்ளிய கோயில்களை,

நீறு ஆடிய களிறு போல மாசு ஊட்டும்—புழுதியைமேலேபூசிக்கொண்ட யானையைப்போல அழுக்கேறப்பண்ணும்,

கஞ்சி ஒழுகிச் சேறாகிக் கெழுமிக் கோயிலை மாசூட்டுதற்குக்காரணமாகிய அட்டிலெனககூட்டுக

புகழ் நிலைஇய மொழி வளர அறம நிலைஇய அகன் அட்டில்—இம்மைக்குப் புகழ் நிலைபெற்றசொல் எங்கும்பரவாநிறக மறுமைக்கு அறம்நிலைபெற்ற அகன்ற அட்டில்,

இருமையினும் பெறும் பயனுண்டாகச் சோறிடுமெ சாலையென்றவாறு.

தண் கேணித் தகை முற்றததுப பகடு எருத்தின் பல சாலை—குளிர்ந்த சிறிய குளங்களை உள்ளேயடக்கின முற்றததினையுடைய பெரிய எருத்திற்கு வைக்கோலிடும் பலசாலையினையும்,

தவப் பள்ளி—தவஞ்செய்யும அமணபள்ளி பௌத்தப்பள்ளிகளையும்,

[தாழ்காவி, னவிர்சடை முனிவ ரங்கி வேட்கு, மாவுதி நறும்புகை முனைஇக் குயிறம், மாயிரும பெடையோ டிரியல போகிப், பூதங் காக்கும புகலருங கடிநகர்த், தூதுணம் புறவொடு துச்சிற சேக்கும்.]

அவிர் சடை முனிவா அங்கி வேட்கும் ஆவுதி நறும புகை முனைஇக் குயில் தம மா இரு பெடையோடு இரியல போகி—விளங்குகின்ற சடையினையுடைய இருடிகள் தீயின்கண்ணே வேட்டலைசெய்யும் நெய்முதலியவறறின் நறியபுகையைவெறுத்துக் குயில்கள் தம்முடைய கருமையையும் பெருமையையுமுடைய பேடைகளுடனே கெடுதலையுடையவாய் நீஙகிபபோய்,

பூதம் காக்கும் புகல் அரு கடி நகாத தூது உண அம புறவொடு துசசில் சேக்கும் தாழ காவின்—பூதஙகள் வாசலிலேகாததிருககும புகறகரிய அசசத்தையுடைய காளிகோட்டத்திடததிற கல்லைததின்னும் அழகிய புறவுகளுடனே குடியிருபபாகததஙகும இளமரக்காவினையும்,

முனிவரைாத தன்னிடத்தேகொணடிருததலிற காக காரணமாயிற்று.

[முதுமரத்த முரண்களரி, வரிமணல கனறிட்டை, யிருங்கிளை யினனொககற, கருந்தொழிற் கலிமாககள, கடலிறவின் சூடுதினறும, வயலாமைப புழுககுணடும், வறளடம்பின் மலாமலைந்தும், புனலாமபற பூசகுடியு, நீனிற விசுமபின வலனேர்பு திரிதரு, நாணமீன் விராய கோண்மீன் போல, மலர்தலை மன்றததுப பலருடன குழீஇக, கையினுங கலத்தினு மெய்யுறத தீணடிப, பெருஞ்சினததாற் புறககொடாஅ, திருஞ்செரு விளிகன்மொயம்பினோர், கல்லெறியுங் கவணவெரீஇப, புள்ளிரியும் புகரப்போங்கைப, பறழ்பபன்றிப பலகோழி, யுறைகிணற்றுப புறசசேரி, மேழகத் தகரொடு சிவல்விளை யாட.]

புகாப் போங்கைப் புள வெரீஇ இரியும கல் எறியும கவண—நிறத்தையுடைய பனையிலிருக்கும் பறவைகளஞ்சிக கெட்டுப்போதற்குககாரணமான கல்லையெறியுங கவணையுடைய கலிமாககள் (௬௨) எனமுன்னேகூட்டுக.

இனன் ஒக்கல் கருந்தொழிற் கலி மாககள்—ஒரினசசுற்றததினையும் வலியதொழிலையுமுடைய செருக்கின பரதவாபிள்ளைகள்,

கடலிறவு இன் சூடு தின்றும் — கடலிறாக்களின் இனிய சுடப்பட்ட தசையைத்தின்றும்,

வயல ஆமைப புழுக்கு உண்டும் — வயலில ஆமையைப புழுக்கின இறைச்சியைத்தின்றும்,

வறள் அடம்பின் மலா மலைநதும்—மணலிலேபடாந்த அடப்பமபூவைத தலையிலேகட்டியும்,

புனல் ஆம்பல பூச சூடியும—நீரினின்ற ஆமபறபூவைப பறிதது்ச்சூடியும்,

நீல நிற விசும்பின வலன ஏாபு திரிதரு நாள மீன விராய கோள மீன போல—நீலநிறத்தையுடைய ஆகாயத்தே வலமாகவெழுந்து திரியும நாளகளாகிய மீன்களோடேகலந்த கோளகளாகிய மீன்கள்போல,

மலா தலை மனறதது மெழுகத் தகரொடு சிவல விளையாடப் பலா உடன குழீஇ—அகன்ற இடததையுடைய மன்றிலே மேழககிடாயோடே சிவலையுங்கொணடு பொருவிதது விளையாடுமபடி பலரும சேரததிரணடு,

மாககள தின்றும உணடும் மலைநதும சூடியும விளையாடும்படி மீன்போற குழீஇயென்க.

இகல் மொயமபினோா பெருஞ்சினததால வரி மணல அகன திட்டை இருங்கிளை முது மரதத முரண் களரி புறககொடாது கையினும் கலததினும மெய் உறத தீண்டி இருஞ்செருவின் விலங்கு பகை அலலது (உ௬) கொழு பல குடி (உ௭) கலங்கு பகை அறியாச (உ௬) செழுமபாககதது (உ௭)—அங்ஙனமபொருவித்தலிற்றோன்றும் மாறுபாடுசெய்யும் வலியினையுடையராய ஆண்டுபபிறந்த பெரியசினத்தாலே அறலினையுடைததாகிய மணலினையுடைய அகன்றமேட்டில பெரிய கிளைததலையுடைய பழையமரததையுடையவாகிய பொருதறகுச்சமைநத போாக்களததேசென்று முதுகு கொடாமற் கையாற்குததியும படைககலங்களாலே வெட்டியும ஒருவர்மெய்யோடு ஒருவாமெய் உறும்படி கலந்துபொரும பெரியபோரை விலங்குகின்ற பகையல்லது செருக்கினையுடைய பலகுடி கலங்கி எழுநதிருததறகுக காரணமானபகையை அறியாத பாக்கங்களையும்,

பாக்கம - கடறகரையிலூாகள

பறழ்ப் பனறிப பல் கோழி உறைக கிணறறுப புறச்சேரி— குட்டிகளையுடைய பனறிகளையும் பலசாதியாகிய கோழிகளையும உறைவைதத கிணறுகளையுமுடைய இழிகுலததோ ரிருக்குந்தெருவுகளையும,

[கிடுகுநிரைத தெஃகூன்றி, நடுகலலி னரணபோல] நடு கலலின அரண போலக் கிடுகு நிரைதது எஃகு ஊன்றி—நடுகலலினிறகின்ற தெய்வமாயவனும் அவனுக்குவைதத கிடுகும் வேலுமபோலக கிடுகைநிரைதது வேலையூன்றிப புறககொடாது (௭௧) எனமுன்னேகூட்டுக

அரண் - ஆகுபெயா.

[நெடுந்தூணடிலிற காழ்சோததிய, குறுங்கூரைக் குடிநாபப, ணிலவடைந்த விருள்போல, வலையுணங்கு மணன்முன்றில், வீழ்ததாழைத் தாட்டாழ்ந்த, வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையா, சினைச்சுறவின் கோடுநட்டு, மனைசசோ்த்திய வல்லணங்கினான், மடற்றாழை மலாமலைநதும, பிணாப்பெணணைப் பிழிமாந்தியும், புன்றலையிரும்பரதவர், பைந்தழைமா மகளிரொடு, பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லா, துவவுமடிந் துண்டாடியும்]

புன தலை இரும்பரதவா—சிவந்த தலையினையுடைய பெரியபரதவர்,

உவவு—உவாநாளாகையினாலே,

பாய் இரு பனிக் கடல வேட்டம செலலாது மடிந்து—பரந்த கருமையையுடைய குளிாநத கடலில் மீன்பிடித்தற்குப்போகாது மனவெழுச்சிதவிர்ந்து,

பைந்தழை மா மகளிரொடு—பசிய தழையினையுடைய கரியநிறத்தினையுடைய தம்மகளிரோடேகூடி,

நெடுந்தூணடிலிற காழ சோத்திய குறுஙகூரைக் குடி நாபபண்—நெடியதூண டிவிற்காம்புகள் சாாததிவைதத குறிய இறபபினையுடைய குடியிருப்புநடுவில்,

நிலவு அடைந்த இருள் போல வலை உணஙகு மணல முனறில் மனை—நிலவு நடுவேசோந்த இருளைபபோலே வலைகிடந்துலரும மணலையுடைததாகிய முன்றிலினை யுடைய மனையிடததே,

சினைச சுறவின கோடு நடடுச சோததிய வல் அணஙகினால்—சினையையுடைய சுறவின் கொமபைநட்டு அதனிடததேயேறறிய வலிய தெய்வங்காரணமாக,

வீழத தாழைத தாள தாழ்ந்த வெணகூதாளததுத தண பூஙகோதையா—விழுதையுடைய தாழையினடியிடததேநினற வெணடாளியினது தணணியபூவாறசெய்த மாலையினையுடையராய,

மடல தாழை மலா மலைநதும—மடலையுடைய தாழையினது மலரைசசூடியும,

பிணாப பெணணைப பிழி மாந்தியும்—சருசசரையையுடைய பனையிற கள்ளை யுணடும்,

உணடு ஆடியும்—நெறகள்ளையுணடு விளையாடியும,

புலவு மணற பூஙகானல்—புலானாற்றததையுடைய மணலிடததே பூக்களையுடைய கடறகரையிற குடி (அக) யென்க

மா மலை அணைந்த கொண்மூப் போலவும—கரியமலையைச்சோந்த செக்காமேகம்போலவும,

இது, கரிய உயாந்த திரையின்மீதே சிவநத யாற்றுநீா பரநததற்குவமை.

தாய் முலை தழுவிய குழவி போலவும்—தாயுடைய முலையைத்தழுவிய பிள்ளையைப போலவும,

இஃது ஒன்றுபடுதறகு உவமை

தேறு நீாப் புணரியொடு யாறு தலைமணக்கும—தெளிநத கடலிறறிரையோடே காவிரி தலைகரககும்,

[மலியோதத் தொலிகூடல்] ஓததது ஒலி மலி கூடல்—ஓதத்தினால் ஒலிமலிந்த புகார்முகததே,

தீது நீஙகக் கடலாடியும—தீவினைபோகக கடலாடியும்,

மாசு போகப் புனல் படிநதும—உப்புப்போக நீரிலேகுளிததும்,

அலவன் ஆட்டியும்—ஞெணடுகளையாட்டியும்,

உரவுத திரை உழககியும்—பரக்கின்றதிரையிலே விளையாடியும்,

பாவை சூழ்ந்தும்—பாவைகளைப்பணணியும்,

பல் பொறி மருண்டும்—ஐம்பொறிகளானுகரும்பொருள்களை நுகர்ந்து மயங்கியும்,

அகலாக் காதலொடு பகல் விளையாடி—நீங்காதவிருப்பத்துடனே பகற்பொழு தெல்லாம் விளையாடி,

பரதவர் (௯0) உவவுமடிந்து (௯௯) மகளிரோடே கூடிக (௯௧) குடிநாப்பண் (அ௧) மனையிடத்தேசேர்த்திய அணங்கின்றற் (அஎ) கோதையராய (அ௫) மலைந்தும (அஅ) மாந்தியும் (அ௯) ஆடியும் (௯௬) பின்னாக கூடலிலே (௯அ) தீதுநீங்க ஆடியும (௯௯) படிந்தும் (௧00) ஆட்டியும உழக்கியும (௧0௧) சூழ்ந்தும் மருண்டும (௧0௨) காத லொடு பகல்விளையாடி (௧0௩) யெனமுடிக்க

[பெறற்கருந தொல்சீர்த் துறக்க மேய்க்கும், பொய்யா மரபிற பூமலி பெருந்து றைத், துணைபபுணர்ந்த மடமங்கையா, பட்டுநீக்கித துகிலுடுத்து, மட்டுநீக்கி மதுமகி ழ்ந்து, மைந்தா கண்ணி மகளிா சூடவு, மகளிா கோதை மைந்தா மலையவு, நெடுங்கான மாடத் தொள்ளெரி நோக்கிக், கொடுந்திமிற பரதவா குரூஉச்சுட ரெண்ணவும், பாட லோர்த்து நாடக நயந்தும், வெண்ணிலவின பயன்றுய்த்தும், கண்ணடைஇய கடைக்கங்குலான, மாஅகாவிரி மணங்கூட்டுந, தூஉவெக்கர்த துயின்மடிந்து ]

பெறற்கு அரு தொல சீர்த துறக்கம் ஏய்க்கும் நெடுங்கால மாடத்து—பெறுதற கரிய பழைய தலைமையினையுடைய சுவர்க்கத்தையொக்கும் நெடிய காலகளையுடைய மாடத்திடத்தேயிருந்து,

பாடல ஓர்த்து நாடகம் நயந்தும வெண்ணிலவின பயன துய்த்தும—பாட்டை க்கேட்டு நாடகங்களைவிரும்பிக்கண்டும வெள்ளிய நிலவிற்பெறும்பயனை நுகர்ந்தும,

மட்டு நீக்கி மது மகிழ்ந்தும—கள்ளுண்டலைக்கைவிட்டுக் காமபானத்தையுண்டு மகிழ்ந்தும்,

பட்டு நீக்கித துகில உடுத்தும—பட்டுடுத்தவற்றை நீக்கிப புணாச்சிக்காலத்துக்கு நொய்யவாகிய வெள்ளியவற்றையுடுத்தும,

துணைப் புணர்ந்த மடமங்கையா கண்ணடைஇய கடைக் கங்குலான்—கணவ ரைக்கூடின மடப்பத்தையுடையமகளிா பின்புகண்டுயின்ற பிற்பட்டசாமத்தையு டைய இராக்காலத்தே,

மாடத்தேயிருந்து நயந்தும் துய்த்தும் மகிழ்ந்தும உடுத்தும துணைப்புணர்ந்தமட மங்கையா கண்டுயின்ற கங்குலென்று கங்குற்கு அடைகூறினா

மைந்தா கண்ணி மகளிா சூடவும மகளிா கோதை மைந்தா மலையவும்— மாட த்தேயிருந்து நுகாந்து அனந்தாமிக்கமையாற கணவாசூடிய கண்ணியைத தமது கோதையாகநினைந்து மகளிாசூடிக்கொள்ளும்படியாகவும மகளிாசூடியகோதையைத தமதுகண்ணியாகநினைந்து மைந்தாசூடிக்கொள்ளும்படியாகவும கண்டுயின்றகங்குலெ ன இதுவுங் கங்குற்கு அடைகூறினா

நெடுங்கான் மாடத்துக் குரூஉச்சுடா ஒள் எரி நோக்கிக் கொடுந்திமில பரதவர் எண்ணவும் கண்ணடைஇய கங்குல்—அம்மாடத்திட்ட நிறவிய விளக்குக்களில விடி யற்காலத்தவியாமல் ஒள்ளியவாய எரிகின்ற அவையிற்றைப்பாாத்து இராக்காலத் தே வளைந்த திமிலைக்கொண்டு கடலிலேபோன பரதவரெண்ணும்படியாகவும் கண்டு யின்ற கடைக்கங்குலென்றும் கங்குற்கு அடைகூறினா.

விளக்குக்களிலே எண்ணெயைவாாத்துத் தூண்டுவாரின்றி எல்லாருந் துயில் கோடலிற சில எரிந்தவற்றையெண்ணினா

பொய்யா மரபின் மா காவிரி பூ மலி பெருந்துறை மணம கூட்டும் தூ எக்

கார்த் துயில் மடிந்து—பொய்யாமல் நீவரும்முறைமையினையுடைய பெரிய காவிரி பூமிக்க பெரியதுறைகளிற் பூமணங்களைக் கொண்டுவந்து திரட்டுந் தூயவிடுமணலிலே துயில்கொண்டுகிடந்து,

பரதவர் (௯0) பகல்விளையாடி (௧0௯) மாடத்திலிருப்பாரெல்லாரும் கணங்கொடை இய கடைகழ்ங்குலிலே (௧௧௫) தாவெகாத துயின்மடிந்து (௧௧௭) மற்றைநாள் மக ளிரொடு செறிய (௧௫௫) எடுத்த விழவரு வியலாவணம் (௧௫௮) எனக் கூட்டுக.

[வாலிணர் மடற்றாழை, வேலாழி வியன்றெருவி, னலவிறைவன் பொருள்கா க்குந், தொல்லிசைத் தொழின்மாக்கள், காய்சினத்த கதிர்ச்செலவன், றோபூண்ட மாஅபோல, வைகறொறு மசைவின்றி, யுல்குசெய்க் குறைபடாது, வான்முகந்த நீர் மலைப்பொழியவு, மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவு, மாரி பெய்யும் பருவம் போல, நீரினின்று நிலத்தேறவு, நிலத்தினின்று நீர்ப்பரப்பவு, மளந்தறியாப் பல பண்டம், வரம்பறியாமை வந்தீண்டி, யருங்கடிப் பெருங்காப்பின், வலியுடை வல் லணங்கினோன், புலிபொறித்துப் புறம்போக்கி, மதிநிறைந்த மலிபண்டம், பொ திமூடைப் போரேறி, மழையாடு சிமய மால்வரைக் கவாஅன், வரையாடு வரு டைத் தோற்றம் போலக், கூருகிர் ஞமலிக் கொடுந்தாளேற்றை, யேழகத் தகரோ டுகளு முன்றில்]

வான் முகந்த நீர் மலைப் பொழியவும் மலைப் பொழிந்த நீர் கடற் பரப்பவும் மாரி பெய்யும் பருவம் போல—மேகம் தான்முகந்தநீரை மலையிடத்தே சொரிதற்காகவும் மலையிற்சொரிந்தநீரை மீண்டு கடலிலே பரப்புதற்காகவும் மாரிக்காலத்தே பெய்கி ன்ற செவ்விபோல,

வான் எழுவாயாகப் பெய்யுமென்னும் பயனிலைகொண்டது

வால் இணர் மடல் தாழை வேலாழி வியன் தெருவில் அருங்கடிப் பெருங்காப் பின்—வெள்ளிய பூங்கொத்துக்களையும் மடலினையுமுடைய தாழையையுடையகரை யினையுடைத்தாகிய கடலருகின்கணிருக்கும் பரதவருடைய அகன்றதெருவிடத்து அகன்ற காவலையுடைய பண்டசாலையினகண்ணே,

வரம்பு அறியாமை வந்து ஈண்டி நிலத்தினின்றும் நீர்ப்பரப்பவும்—எல்லையறியா தபடி வந்துதிரண்டு பின்னர் அப்பண்டசாலையிலேநின்றும் கடலிலேயேறுதற்காக வும்,

வல் அணங்கின் நோன்வலி உடைப் புலி பொறித்துப் புறம் போக்கி உல்கு செய மதி நிறைந்த மலி பண்டம—வலிய வருத்துந்தன்மையையுடைய அச்சமுடையா ளமாகிய வலியையுடைய புலியையுடையாளமாகவிட்டுப் பண்டசாலைக்குப்புறம்பே புறப்படவிட்டுச் சுங்கங்கொள்ளுதற்கு மதித்தற்றொழிலிற்குறையற மிக்கபண்டங்க ளையும்,

நீரினின்று நிலத்தேறவும் புலி பொறித்துப் புறம்போக்கி உல்குசெய அளந்து அறியா மதி நிறைந்த பல பண்டம—கடலினின்றும் பண்டசாலையிலே யிறக்குதற் காகவும் புலிபொறித்து மரக்கலத்திற்குப்புறம்பே புறப்படவிட்டுச் சுங்கங்கொள்ளு தற்கு நெஞ்சாலேயளந்தறிந்து மதித்தல் நிறைந்த பலபண்டங்களையும்,

பரப்பவும் ஏறவுமென்னுமெச்சங்கள் புலிபொறித்தென்னும் வினையொடுமுடி ந்தன.

பொதி மூடைப் போர் ஏறி—பொதிந்த பொதிகளடுக்கின போரிலேயேறி,

நீர் கடற்பரப்பவுமென்ற உவமைக்கு நிலத்தினின்றுநீர்ப்பரப்பவும், நீர் மலைப் பொழியவுமென்ற உவமைக்கு நீரினின்றுநிலத்தேறவும் பொருளாகக்கொள்க.

நல் இறைவன் பொருள் காக்கும் தொல் இசைத் தொழில் மாக்கள் காய் சினத்த கதிர செல்வன் தேர் பூண்ட மா போல வைகல் தொறும் அசைவு இன்றிக் குறை படாது உல்கு செய—நல்ல அரசனுடையபொருளைப் பிறர்கொள்ளாமற்காக்கும் பழையபுகழினையுடைய சுங்கங்கொள்வோர் எரிகின்ற சினத்தையுடைய கிரணங்களையுடைய பகலவன் தேர்பூண்ட குதிரைகளைப்போல ஒருபொழுதும் மடிந்திராது நாடோறும் இளைப்பின்றித் தாழ்வின்றாகச் சுங்கங்கொள்ள,

இதனை இருவகைப்பண்டங்களுக்குங் கூட்டியுரைப்ப.

மழை ஆடு சிமய மால் வரைக் கவாஅன் வரை ஆடு வருடைத் தோற்றம் போல—மழையுலாவும் சிகரத்தையுடையவாகிய பெரிய மூங்கிலையும் பக்கமலையினையுமுடைய மலையிடத்தேயுலாவும் வருடைமானின் தோற்றரவுபோல,

கூர் உகிர் ஞமலிக் கொடுந்தாள் ஏற்றை ஏழகத்தகரோடு உகளும் முன்றில்—கூரிய உகிரையுடைய நாயில் வளைந்த காலையுடைய ஏறுனவை மேழகக்கிடாயோடே குதிக்கும் பண்டசாலையின் முற்றத்தினையும்,

ஏற்றை தகரோடே இருவகைப்பண்டங்களையும்பொதிந்த மூடைப்போரேறி உகளுமுற்றமெனக

குறுந்தொடை நெடு படிக்கால் கொடுந் திண்ணை—அணுகினபடிகளையுடைய நெடிய ஏணிகள்சார்த்தின சுற்றுத்திண்ணையினையும்,

பல் தகைப்பின—பலகட்டுக்களையும்,

புழை—சிறுவாசலையும்,

வாயில—பெரியவாசலையும்,

போகு இடைகழி—பெரிய இடைகழிகளையுமுடைய,

[மழைதோயு முயர்மாடத்துச், சேவடிச் செறிகுறங்கிற், பாசிழைப் பகட்டல்குற், தூசுடைத் துகிர்மேனி, மயிலியன் மானோக்கிற், கிளிமழலை மென்சாயலோர், வளிநுழையும் வாய்பொருந்தி ]

மழை தோயும் உயர் மாடத்து வளி நுழையும் வாய் பொருந்தி—மேகஞ்செறியும் உயர்ந்த மாடத்தில் தென்காற்றுவருஞ் சாளரங்களைச்சேர்ந்தென்க

சேவடி—சிவந்த அடியினையும்,

செறி குறங்கின்—செறிந்த குறங்கினையும்,

பாசிழை—பசிய பூணினையும்,

பகடு அல்குல்—பெரியவல்குலினையும்

தூசு உடை—தூசாகிய உடையினையும்,

துகிர் மேனி—பவளம்போலுநிறத்தினையும்,

மான் நோக்கின—மான்போலும் பார்வையினையும்,

கிளி மென் மழலை—கிளிபோலும் மெலவிய மழலைவார்த்தையினையும்,

மயில் இயல் சாயலோர்—மயிலினது இயல்போலும் மென்மையினையுமுடைய மகளிர்,

ஓங்கு வரை மருங்கின் நுண் தாது உறைக்கும் காந்தள் அம் துடுப்பிற் கவி குலை அன்ன செறி தொடி முன்கை கூப்பி—உயர்கின்ற மலைப்பக்கத்தே மெல்லிய

தேன்றுளிக்கும் செங்காந்தளினது அழகிய கண்ணிடத்திணைந்த குலையையொத்த செறிந்த தொடியினையுடைய முன்கைகுவிக்க,

குவிக்கவெனத்திரிக்க. இரண்டு காந்தண்முகை சேர்ந்தாலொத்த கையென்க. கவிதல் - ஒன்றோடொன்றுசேர்தல

[செவ்வேள், வெறியாடு] வெறியாடு செவ்வேள்—வெறியாடுதற்குரிய முருகனுக்கும்,

[மகளிரொடு செறியத் தாஅய்க, குழலகவ யாழ்முரல, முழவதிர முரசியம்ப, விழவறா வியலாவணத்து, மையறு சிறப்பிற் றெய்வஞ் சேர்த்திய, மலரணி வாயிற் பலர்தொழு கொடியும]

மை அறு சிறப்பின் சேர்த்திய பலர் தொழு தெய்வம—பிறப்பறுதற்குக்காரணமான தலைமையையுடைமையாற் கோயில்களிடத்தே உண்டாக்கின பலருந்தொழுந்தெய்வங்களுக்கும்,

மகளிரொடு செறியத் தாஅய்க குழல் அகவ யாழ் முரல முழவு அதிர முரசு இயம்ப விழவு அறா வியல் ஆவணத்து—பாடுமகளிரோடே பொருந்தப் பரந்து வங்கியம் இசையையுண்டாக்க யாழ் வாசிக்க முழவு முழங்க முரசு ஒலிப்ப எடுத்த திருநாணீங்காத அகன்ற அங்காடித்தெருவினையும்,

மகளிரொடு செறிய எடுத்த விழவென்க

சேவடிமுதலியவற்றையுடைய சாயலோர் மாடங்களிற் சாளரங்களிற்பொருந்தி முன்கைகூப்பப் பலருந் தொழும முருகவேளுக்கும் ஏனைத்தெய்வங்களுக்குமெடுத்த விழவறா வியலாவணமெனக்கூட்டுக.

மலர் அணி வாயில் கொடியும—இல்லுறைதெய்வமகிழ மலரணிந்த மனைவாசலிற் கட்டினகொடிகளும்,

[வருபுன றந்த வெண்மணற் கானயாற், றுருகெழு கரும்பி னொண்பூப் போல] வருபுனல் தந்த வெண்மணல் கான்யாறு உருகெழு கரும்பின் ஒண் பூப்போல மேலூன்றிய துகிற்கொடியும் (௧௬௮)—வருகின்ற நீர்கொண்டுவந்த வெள்ளியமணலையுடைய காட்டாற்றுக்கரையினின்ற அழகுபொருந்தின கரும்பினது ஒள்ளிய பூவையொக்க மேலூன்றின துகிற்கொடியும,

கான் - மணமுமாம். கடைத்தெருவிற்கு இரண்டுபுறத்திலுமெடுத்த கொடிகட்கு யாற்றங்கரையும் கரும்பம்பூவும் உவமைகூறினார்

[கூழுடைக் கொழுமஞ்சிகைத், தாழுடைத் தண்பணியத்து, வாலரிசிப் பலிசிதறிப், பாகுகுத்த பசுமெழுக்கிற், காழூன்றிய கவிகிடுசினை, மேலூன்றிய துகிற்கொடியும்:]

கூழ் உடைக் கொழு மஞ்சிகை—நெல்லும் அரிசியையுமுடைய அழகிய மஞ்சிகை,

மஞ்சிகை - கொட்டகாரமுமாம

தாழ் உடைத் தண் பணியத்து மஞ்சிகை—தாழ்ப்பாளையுடைய தண்ணிய பண்டங்களையுடைய மஞ்சிகை,

நெல்லுப்போல ஏனைப்பண்டங்கள் சிறந்தனவன்மையிற் றண்ணியபண்டமென்றார். பண்டமெனவே உலகில்விற்கும பண்டங்களெல்லாம் அடங்கின.

பாகு உகுத்த மஞ்சிகை—பாக்குவெற்றிலை சொரிந்த மஞ்சிகை,
இனி உகுத்தபாகெனமாறிச சிந்தினபாகினையுடைய மஞ்சிகையென்றுமாம்.
என்றது கணசேர்க்கைக் கட்டுப்பாகினை.

இதனைப் பசுமெழுககெனபதனேடுகூட்டிப பரபபியென்பாருமுளா.

பசுமெழுககின் மஞசிகை—புதுமெழுககினையுடைய மஞ்சிகையிடததே,

வால் அரிசிப பலி சிதறி—வெள்ளிய அரிசியாகிய பலிகளைத்தூவி,

காழ் ஊன்றிய கவி கிடுகின் மேல ஊன்றிய துகிற் கொடியும்—கால்கள் நட்டு வைதத கவிநதசட்டஙகளின்மேலே நட்டுவைதத வெள்ளியகொடிகளும்,

கால்கள - சட்டஙகளைத்தாஙகுவன

சிதறி ஊன்றிய மஞ்சிகையிறகவிந்த கிடுகெனக.

பல் கேள்வித் துறை போகிய தொல ஆணை நல் ஆசிரியா உறழ குறித்து எடுத்த உரு கெழு கொடியும்—பலவாகிய கேட்டறறொழிலையுடைய நூற்றிரளை முற்றக் கற்ற பெரிய ஆககினையையுடைய நலல ஆசிரியா வாதுசெய்யககருதிககட்டின அச்சம்பொருந்தின கொடிகளும்,

வெளில இளககும களிறு போல—அசையாத கம்பத்தினையசைக்கும் யானை போலநின்று தூஙகுநாவாய (கஎ௪),

[தீமபுகாாத திமைமுன்றுறைத, தூஙகுநாவாய துவன்றிருக்கை, மிசைக்கூம்பி னசைககொடியும்]

தீமபுகாாத திமை முன துறை—கட்கினிதாகிய புகாரிடத்துத் திமையினையுடைய துறையின்முன்னே,

துவன்று இருக்கை தூங்கு நாவாய மிசைக் கூம்பின் நசைக கொடியும்—நிறைந்தஇருப்பினையுடைய அசைகின்ற நாவாயின்மேனட்ட பாய்மரத்தின்மேலெடுத்த விரும்புதலையுடைய கொடிகளும,

[மீன்றடிந்து விடககறுத, தூன்பொாிசகு மொலிமுன்றின், மணற்குவைஇ மலர் சிதறி.]

மணல குவைஇ மலா சிதறி—மணலை மிகபபரபபிச செமபூக்களையுஞ்சிதறி,

மீன் தடிந்து விடககு அறுதது ஊன் பொரிககும் ஒலி முன்றில்—மீனையறுத்துப பின் இறைசசியையுமறுததது அவ்விரண்டுதசையினையும்பொரிக்கும் ஆரவாரத்தினையுடைய முற்றததினையும்,

[பலாபுகுமனைப பலிபபுதவி, னறவுநொடைக கொடியோடு, பிறபிறவு நனிவிமைஇ]

பலிப் புதவின்—தெயவததிறகுககொடுககும் பலியினையுடைய வாசலினையுமுடைய,

பலா புகும் மனை நறவு நொடைக் கொடியோடு பிறபிறவும நனி விமைஇ—கள்ளுணபாாபலருஞ்செலலும் மனைகளிற சிறபபுடைக களளின்விலைககுக் கட்டின கொடியோடே ஏனையவற்றிறகுக கட்டினகொடிகளும் மிகக்கலக்கையினலே செல்கதிர் நுழையா (க௮௯) வென்க.

பல் வேறு உருவிற் பதாகை— பலவாய் வேறுபட்ட வடிவினையுடைய பெருங் கொடிகளும்,

நீழல்—நறவுநொடைக்கொடியோடே முற்கூறியகொடிகளும் பிறகொடிகளும் பதாகைகளும் விரவுகையினலே இவெறறினிழலில,

செல் கதிர் நுழையாச் செழு நகா வரைப்பின்—செல்கின்ற ஞாயிற்றின்கிரணங்கள் நுழையப்படாத வளவிய ஊரெல்லையிடத்து மறுகு (கசுரு) எனககூட்டுக.

செல்லா நல் இசை அமரா காபபின்—கெடாத நல்ல புகழினையுடைய தேவர்கள் பாதுகாவலினாலே,

[நீரின் வந்த நிமிா பரிப புரவியுங, காலின் வநத கருஙகறி மூடையும்]

நீரிற் காலின் வந்த நிமிா பரிப் புரவியும—கடலிலே காற்ருன்வந்த நிமிாந்த செலவினையுடைய குதிரைகளும்,

நீரிற் காலின் வந்த கருஙகறி மூடையும்—கடலிலே காற்ருன்வந்த கரிய மிளகு பொதிகளும்,

வடமலைப் பிறநத மணியும் பொன்னும்—மேருவிலேபிறந்த மாணிககமும் சாம்பூநதமென்னும்பொன்னும்,

குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும—பொதியினமலையிலேபிறந்த சந்தனமு மகிலும்,

புகாாக்குததென்மேற்காதலிற குடமலையெனபா பொதியின்மலையை அனறி மேறகுள்ளமலையென்றுமாம்

தென்கடல் முத்தும—தெனறிசைககடலிறபிறந்த முததும்,

குணகடல துகிரும்—கீழ்த்திசைககடலிறபடாநத பவளமும்,

கங்கை வாரியும்—கஙகையாற்றிலுணடாகிய பொருளும,

அவை யானையும் மாணிககமும் முததும் பொனனுமுதலியனவும பிறவுமாம.

* [காவிரிப் பயனு, மீழத் துணவும்]

காழகத்து ஆக்கமும்—கடாரததிலுண்டான நுகரும்பொருளகளும,

ஆககம் - ஆகுபெயா

அரியவும்—சீனமுதலிய இடஙகளினினறும்வந்த கருபபூரம பனிநீா குஙகும முதலியனவும்,

பெரியவும்—இவையொழியப பெரியவையாகிய பலபொருள்களும,

நெளிய ஈணடி—நிலத்தினமுதுகு நெளியும்படி திரண்டு,

[வளந்தலை மயஙகிய நனந்தலை மறுகி, னீாநாப பணணு நிலததின மேலு, மேமாப்ப வினிது துஞ்சி]

எமாப்ப நீா நாப்பணும நிலததின் மேலும இனிது துஞசி—எமாபபினாலே புகாரினவிடததும கரையினிடத்தும் அழிவின்றி இனிதாகத தஙகுகையினாலே,

வளம் தலை மயஙகிய நனந்தலை மறுகின—செல்வம் தலைதெரியாத அகன்ற இடங்களையுடைய தெருவுகளையும்,

செழுநகாவரைபபிற (கஅ௩) புரவிமுதலியனவீணடித (கசுஉ) துஞ்சி (கசுடு) மயங்கிய மறுகு (கசுரு) என்க

இனி இனிது துஞ்சி மீன்பிறழவும் மாவீணடவுமென மேலேகூட்டுவோருமுளா

[இளைகலித்துப பகைபேணாது, வலைஞாமுனறின் மீன்பிறழவும, விலைஞாகுரம்பை மாவீண்டவுங், கொலைகடிந்தூங் களவுநீக்கியு, மமராப பேணியு மாவுதி யருத்தியு, நல்லானொடு பகடோம்பியு, நான்மறையோா புகழ்பரபபியும், பண்ணிய மட்டியும் பசும்பதங்கொடுததும், புணணிய முட்டாத் தண்ணிழல வாழ்ககைக், கொடுமேழி

* இதறகு உரைகிடைத்திலது.

நசையுழவா, நெடுநுகத்துப் பகல்போல, நடுவுநின்ற நன்னெஞ்சினோா, வடுவஞ்சி வாய்மொழிந்து, தமவும் பிறவு மொப்ப நாடிக, கொளவதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைபடாது, பலபண்டம் பகாநதுவீசுந், தொல்கொண்டித துவன்றிருக்கைப, பலலாயமொடு பதிபழகி, வேறுவே றுயாநத முதுவா யொக்கற, சாறயா மூதூா சென்றுதொக காஙகு, மொழிபல பெருகிய பழிதீா தேஎததுப, புலமபெயர் மாக்கள் கலந்தினி துறையும்]

பழி தீா தேஎதது முது வாய ஒககல சாறு அயா மூதூா சென்று தொககாஙகு—குறறமற்ற பிறதேசஙகளிலே அறிவுவாயதத சுற்றததினையுடைய விழாககளைநிகழத்தின பழையவூரிலுளளாா ஈணடுவநது குடியேறினாறபோல,

* "செலவினும வரவினும" என்னுஞசூததிரததாற சென்றென்பது வநதெனனும்பொருடநதது.

வேறு வேறு உயாந்த புலம பெயா மாககள—பலசாதிகளாயுயாநத தததநிலததைக கைவிட்டுபபோநத மாககள,

பலமொழி பெருகிய மாககள—பலபாடைமிகக மாககள,

மாககளெனறாா, ஐயறிவையுடையராதலின எனறது சோனகா சீனா முதலியோரை

மாககள பலலாயமொடு பதிபழகி கலநது இனிதுறையும மறுகின (௨௧௭)—இம்மாக்கள பலதிரளோடே இவவூரிடததேபழகி ஈணடைநனமககளோடே கூடி நன்றாகவிருககும மறுகென முன்னேகூட்டுக

இவாகளிருததலின, வளநதலைமயஙகிய மறுகுகளாயின

கிளை கலிததுப பகை பேணாது வலைஞா முனறில மீன பிறழவும விலைஞா குரமபை மா ஈணடவும் கொலை கடிந்தும களவு நீககியும—மீனற்ரளும் விலஙகின்றிரளும் செருககி வலையாறபிடிபபாரையும கொனறு இறைசசிவிறபாரையும தமககுப் பகையாககருதியஞ்சாதே வலைஞாமுறறததே மீனபிறழநதுதிரியுமபடியாகவும விலைஞர்குடிலிலே விலங்குகள் கிடககும்படியாகவும் முறபடக கொலைததொழிலை அவர்களிடததினின்றும போககியும் பின்னாக களவுகாணபாரிடததுக களவுததொழிலைபபோககியும்,

அமரர்ப் பேணியும—தேவாகளை வழிபட்டும்,

ஆவுதி அருததியும்—யாகஙகளைபபணணி அவறறுள ஆவுதிகளை அவாநுகரப் பணணியும்,

நல ஆனொடு பகடு ஓமபியும—நலல பசுககளோடு எருதுகளைப பரிகரிததும,

† "வைசிகன பெறுமே வாணிக வாழககை' ‡ 'மெய்தெரி வகையி னெணவகை யுணவின் - செயதியும் வரையா ரபபா லான" என்பதனுல, வாணிகாககு உழவுததொழிலுரிததாகலிற் பகடோமபியுமென்றாா யாகததிறகுப பசுவை ஓம்பியுமெனறாா.

நான்மறையோா புகழ பரபபியும— அந்தணாககுணடாம புகழகளைத தாஙகள் அவாககு நிலைபெறுததியும்,

புணணியம் பணணி அட்டியும—பெரிதாகிய புணணியஙகளைத தாஙகள் பணணி அவற்றைச செயயமாட்டாதாாககுத தானமபணணியும்,

---

* தொலகாபபியம, சொல்லதிகாரம, கிளவியாககம, உஅ

† ,, பொருளதிகாரம, மரபியல, எஎ.

‡ ,, ,, ,, எஅ.

அம் - அசை.

பண்ணியமட்டியுமென்றதற்குச் சோற்றை ஆக்கியிட்டுமென்பாருமுளர்.

பசும்பதம் கொடுத்தும் — விளைந்தநெல்லையும் பறிக்குங்கமுகையும் உணவாகக் கொடுத்தும்,

இதற்கு அரிசியும் கறியுங் கொடுத்துமென்பாருமுளர்.

முட்டாத் தண்ணிழல் வாழ்க்கை — இங்ஙனஞ்செய்யும் அறத்தொழில்கள் முட்டுப்படாத குளிர்ந்த அருளுடனேவாழும் இல்வாழ்க்கையையுடைய நன்னெஞ்சினோ (௨0௭) ரொக

கொடு மேழி நசை உழவர் நெடுநுகத்துப் பகல் போல நடுவுநின்ற நல்நெஞ்சினோர் — வளைந்தமேழியால் உழவுத்தொழிலை நச்சுதலையுடைய உழவரது நெடிய நுகத்திற்றைத்த பகலாணிபோல நடுவுநிலையென்னுங்குணம் நிலைபெற்ற நன்றாகிய நெஞ்சினையுடையோர்,

என்றது ஆண்டுறையும் வேதவாணிகரை.

தம பல் பண்டமும் பிற பல பண்டமும் ஒப்ப நாடி — தமமுடையவாகிய பலசரக்குகளையும் பிறவாகிய பலசரக்குக்களையும் பொருளொப்ப ஆராய்ந்து,

வடு அஞ்சி வாய்மொழிந்து — தமக்குடிக்கு வடுவாமென்றஞ்சி மெய்யேசொல்லி,

கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉம் குறைபடாது — தாங்கொள்ளுஞ் சரக்கையும் தாங்கொடுக்கும்பொருட்கு மிகையாகக்கொள்ளாது தாங்கொடுக்குஞ் சரக்கையும் தாம்வாங்கும்பொருட்குக் குறையக்கொடாமல்,

பகர்ந்து வீசும் — இலாபத்தை வெளியாகச்சொல்லிக் கொடுக்கும்,

தொல் கொண்டி — பழைதாகிய கொள்ளையினையும்,

கொள்ளையென்றார், இந்நெறியை நடத்தினாரிடத்தல்லது பொருட்டிரளுண்டாகாதென்றற்கு.

தண்ணிழல் வாழ்க்கையினையும் (௨0௪) தொல்கொண்டியினையு (௨௧௨) முடைய நன்னெஞ்சினோ (௨0௭) ரொக

துவன்று இருக்கை — நெருங்கின குடியிருப்பினையும்,

காவிரி (௬) புனல்பரந்து பொன்கொழிக்கும் (௭) பல்லூர் நெடுஞ்சோணாட்டிற் (௨௮) கழிசூழ்ப்படப்பையினையும் (௩௨) தண்டலையினையும் (௩௩) பொய்கைகளையும் (௩௮) ஏரிகளையும் (௩௧) இணைகாப்பினையும் (௪௧) கோயிலைமாசூட்டுதற்குக்காரணமான (௫0)அட்டிலினையும் (௪௫) சாலையினையும் (௫௨)பள்ளியினையும்(௫௩)குயில்(௫௫) துச்சிற்சேக்கைக்குக்காரணமான (௫௮) தாழ்காவினையும் (௬௩) பாக்கங்களையும் (௨௭) புறச்சேரியினையும் (௭௬) முன்றிலினையும் (௧௪௧) விழவறா ஆவணத்தையும் (௧௫௮) மாக்கள் கலந்து இனிதுறையும் (௨௧௭) வளந்தலைமயங்கிய மறுகுகளையும் (௧௧௬) நன்னெஞ்சினோர் (௨0௭) துவன்றிருக்கை (௨௧௨) யினையுமுடைய பட்டின (௨௧௮) மென வினைமுடிக்க

முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும் — குறைவுபடாத தலைமையினையுடைய பட்டினத்தை எனக்கு உரித்தாகப் பெறுவேனாயினும்,

வார் இருங்கூந்தல் வயங்கிழை ஒழிய — நீண்ட கரிய கூந்தலையுடைய விளங்குகின்ற பூணினையுடையாள் ஈண்டுப் பிரிந்திருப்ப,

வாரேன் வாழிய நெஞ்சே — யான் நின்னோடுகூடவாரேன், நெஞ்சே போய் வாழ்வாயாக,

* "அளிநிலை பொறாஅது" என்னும் அகப்பாட்டாற் போதற்கு ஒருப்படாமல் நிற்குங் குறிப்புணர்க.

கூர் உகிர்க் கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்கு—கூரிய உகிரினையும் வளைந்தவரிகளையுமுடைய புலிக்குட்டி கூட்டிடத்தே அடையுண்டிருந்து வளர்ந்தாற் போல,

பிறர் பிணி அகத்து இருந்து பீடு காழ் முற்றி—பகைவர் காவலிடத்தே யிருந்து தனக்குப்பெருமை வயிரமாகமுற்றி,

[அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று, பெருங்கை யானை பிடிபுக் காங்கு, நுண்ணிதி னுணர நாடி]

நுண்ணிதின் உணர நாடி — தனனுணர்வு கூரிதாகவுணரும்படி இதுவே காரிய மென்றாராய்ந்து,

பெருங்கை யானை அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று பிடிபுக்காங்கு—பெரிய கையினையுடைய யானை தான் அகப்பட்டப் பண்ணின குழியில் ஏறுதற்கரிய கரைகளை இடியும்படி கோட்டாலே குத்திக் குழியைத் தூர்த்துப் பிடியிடத்தே சென்றாற்போல,

[நண்ணார், செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்து] நண்ணார் செறிவு உடைத் திண் காப்பு வாள் கழித்து ஏறி—அப்பகைவருடைய நெருங்கின திண்ணிய காவலாகிய வாட்படையை ஓட்டி அவ்விடத்தினின்றும் போந்து,

இனித் திண்காப்பிடத்தே வாளை உறைகழித்து வெட்டிப்போந்தென்றுமாம்

உரு கெழு தாயம் ஊழின் எய்தி—அச்சம்பொருந்தின தன்னரசவுரிமையை முறையாலேபெற்று,

பெற்றவை மகிழ்தல் செய்யான்—தான் இறையாகப்பெற்ற அரசுரிமையான் மகிழ்ச்சிபொருந்துதல் செய்யானாய் மேலுமாசைமிக்கு,

[செற்றோர், கடியரண் டொலைத்த கதவுகொன் மருப்பின், முடியுடைக் கருந் தலை புரட்டு முன்றாள், உகிருடை யடிய வோங்கெழில் யானை, வடிமணிப் புரவியொடு

* அகநானூறு, களிற்றியானைநிரை, ரு—"அளிநிலை பொறாஅ தமரிய முகத்தள், விளிநிலை கொள்ளாஅ டமியண் மென்மெ, னலமிகு சேவடி நிலம்வடுக் கொள்ளாஅக, குறுக வந்துதன் கூரெயிறு தோன்ற, வறிதகத் தெழுந்த வாயன் முறுவலள், கண்ணிய துணரா வளவை யொண்ணுதல், வினைதலைப் படுதல் செல்லா நினைவுடன், முளிந்த வோமை முதையலங் காட்டுப், பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி, மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப, உதிர்வன படூஉங் கதிர்தெறு கவாஅன், மாயத்த போல மழுகுநுனைத் தோற்றிப், பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல், விரனுதி சிதைக்கு நிரைநிலை யதர்யில், பரன்முரம் பாகிய பயமில் கான, மிறப்ப வெண்ணுதி ராயி னறத்தா, றன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி, யன்ன வாக வென்னுநள் போல, முன்னங் காட்டி முகத்தி னுரையா, வோவச் செய்தியி னொன்றுநினைந் தொற்றிப், பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொ, டாகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத், தூநீர் பயந்த துணையமை பிணையன், மோயின ளுயிர்த்த காலை மாமலர், மணியுரு விழந்த வணியிழை தோற்றங், கண்டே கடிந்தனஞ் செலவே யொண்டொடி, யுழைய மாகவு மினைவோள், பிழையல ளாகுதல் பிரிதுநா மெனினே" என்றது பொருள்வயிற்பிரியக்கருதிய தலைமகன் தன்னெஞ்சிற்குச்சொல்லிச் செலவழுங்கியது. பாலை பாடிய பெருங்கடுங்கோ

வயவர் வீழப, பெருநல் வானத்துப பருந்துலாய் நடபபத், தூறிவா துறுகற் போ லப் போர்வேட்டு, வேறுபல பூளையொ டுழிஞை சூடிப, பேய்க்க ணன்ன பிளிறுகடி முரச, மாக்க ணகலறை யதிரவன முழுஙக, முனைகெடச் சென்று முன்சம முருக்கி]

முடியுடைக் கருந்தலை புரட்டுமெ முன்றாள் உகிர உடை அடிய—முடியையுடைய கரியதலைகளையுருட்டுமெ முன்காலின் உகிருடைய அடிகளையுடையவாய்,

தூறு இவர் துறு கற் போல உழிஞை சூடிச செறவோா கடி அரண் தொலைத்த யானையொடு—தூறுபடாநத நெருஙகின மலைகளபோல உழிஞையைச்சூடித தம்மரச ராற் போாபெறறாருடைய காவலையுடைய அரணகளையிடித்த யானைகளோடும்,

கதவு கொல் மருபபின் ஓஙகு எழில யானை—கதவைமுறிக்கும் கொம்பினையும் உயர்ந்த அழகினையுமுடைய யானையென்க.

வடி மணிப புரவியொடு—வடிதத மணிகட்டின குதிரைகளோடும்,

போாவேட்டு—போரைவிரும்பி,

பேயககண அனன பிளிற கடி முரசம மாக்கண அகலறை அதிரவன முழுங்க—பேயின்கண்ணையொததுமுழஙகுகின்ற காவலையுடையமுரசம் பெருமையை உடைததாகிய இடததையுடைய பாசறையிலே நடுஙகுவனவாய் முழஙக,

அகலறை - மலைபபக்கமுமாம

முனை கெடச சென்று—பகைபபுலஙகெடுமபடி சென்று,

பெரு நல வானததுப பருநது உலாய நடபப வயவா வீழ முனை சமம முருக்கி—பெரிய நலலவானிடத்தே பருநது உலாவிததிரியுமபடியாக வீராபடும்படி முற்பட்ட தூசியைககெடுதது,

யானைகளோடும புரவிகளோடும போாவேட்டு முரசுமுழஙகசசென்று பருந்து லாய்நடபப வயவாவீழ முருககியெனக

தலை தவச சென்று—அபபகைவராரணிடத்தே மிகநடநது,

[தண்பணை யெடுப்பி, வெணபூக கருமபொடு செநநெ னீடி, மாயிதழ்க குவளை யொடு நெய்தலு மயஙகிக், கராஅங கலிதத கணணகன பொய்கை] வெண்பூக கரும் பொடு செந்நெல் நீடிக் குவளையொடு மா இதழ் நெய்தலும மயஙகிக கராம் கலிதத கண அகன் பொய்கைத் தண் பணை எடுபபி—வெள்ளிய பூககளையுடையகருமபுகளுடனே, செந்நெல்லும்வளர்நது குவளையோடே பெருமையையுடைய இதழ்களையுடைய நெய் தலுமயஙகப்பட்டு முதலைகள செருககிததிரிநத இடமகன்ற பொயகைகளையுடைய மருதநிலத்துள்ள குடிகளையோட்டி,

[கொழுஙகாற புதவமொடு செருந்தி நீடிச, செறுவும் வாவியு மயஙகி நீரறறு] செறுவும் வாவியும் நீரறற மயஙகி வேறு பல் பூளை (௨௬) யொடு கொழுஙகால் புதவ மொடுசெருந்தி நீடி—செய்களும் வாவிகளும் நீரறறு தமமிலொன்றிய இருவகைப் பட்ட பலவாகிய பூளைகளோடே கொழுவிய தாளகளையுடைய அறுகோடே கோரைக ளும் வளரப்பட்டு,

வேறுபல்பூளை - இஙகேகூட்டிாறு சிறுபூளையும பெரும்பூளையுமுணமையின் வேறுபல்பூளையென்றா

அறு கோட்டு இரலையொடு மான்பிணை உகளவும—அறல்பட்ட கொம்பினையு டைய புல்வாய்க்கலையோடு மானபிணை துள்ளியிளையாடும்படியாகவும்,

தலைதவச்சென்று தணைபணையெடுபெயி (உ௩௯) நீடி (உ௪௦) உகளவு (உ௪௫)மென்க.

[கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி, யந்தி மாட்டிய நந்தா விளக்கின், மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ, வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியில்:]

கொண்டி மகளிர் உண் துறை மூழ்கி மெழுக்கம் அந்தி மாட்டிய நந்தா விளக்கின் மலரணி கந்து உடைப் பொதியில—பகைவர்மனையோராய்ப் பிடித்துவந்த மகளிர்பலரும நீருண்ணுந்துறையிலே சென்றுமுழுகி மெழுகுமெழுக்கத்தினையும் அவர்கள் அந்திக்காலத்தேகொளுத்தின அவியாத விளக்கினையுமுடைய பூக்களைச்சூட்டின தறியினையுடைய அம்பலம்,

கந்து - தெய்வமுறையுந தறி

வம்பலர் பலர் ஏறித் தொழச் சேக்கும பொதியில—புதியவர்கள் பலருமேறித் தொழுதற்குத்தங்கும் பொதியில்,

பொதியிலைமெழுகி விளக்குமிட்டிருக்க வம்பமகளிரைவைத்தார், அதனால் தமக்குப் புகழுளதாமென்றுகருதி

பருநிலை நெடுந்தூண் ஒல்கத் தீண்டிப் பெரு நல் யானையொடு பிடி புணர்ந்து உறையவும்—அதெய்வமுறையும் அம்பலத்தினின்ற பருத்த நிலைமையினையுடைய நெடியதூண் சாயும்படி தம்முடம்புரிஞ்சிப பெரிய நல்ல களிறுகளுடனே பிடிகள் கூடித்தங்கும்படியாகவும,

[அருவிலை நறும்பூத தூஉய்த் தெருவின, முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த, திரிபுரி நரம்பின் றீந்தொடை யோர்க்கும, பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்து:] தெருவின் அருவிலை நறும்பூத தூஉய் முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த திரி புரி நரம்பின தீந்தொடை ஓர்க்கும் பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்து—ஆண்டுள்ளதெருவின்கண்ணே விலைகூறுதற்கரிய நறியபூக்களைச்சிதறி அறிவுவாய்த்தலையுடைய கூத்தருடைய மத்தளத்திறாளத்தோடேகூடின முறுக்குதல்புரிந்த நரம்பின் இனிதாகிய கட்டினையுடைய யாழைக்கேட்கும் பெரிய திருநாளின்றாகிய அச்சமுதிர்ந்த மன்றத்திடத்தே,

தூவி ஓர்க்குமென்க தொடை - ஆகுபெயர்

* [சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி, யழல்வா யோரி யஞ்சுவரக் கதிப்பவும·]

அழுகுரற கூகையோடு ஆண்டலை விளிப்பவும்—இசைக்கு வருந்திக்கூப்பிடுகின்ற குரலையுடைய கூகைகளுடனே கூடி ஆண்டலைப்புள்ளுக் கூப்பிடும்படியாகவும்,

கணம் கொள் கூளியொடு கதுப்பு இருத்து அசைஇப பிணம் தின் யாக்கைப் பேய்மகள் துவன்றவும்—திரட்சிகொண்ட ஆண்பேய்களுடனே மயிரைத்தாழ்த்து இளைத்துப் பிணத்தைத்தின்னும் வடிவையுடைய பேய்மகள் நெருங்கும்படியாகவும்,

கொடுங் கால்— வளைந்த கால்களையுடைய பேய்மகளென முன்னேகூட்டுக.

விருந்து மாடத்து நெடுங் கடைத் துவன்றி உண்டு ஆனாப் பெருஞ் சோறு அட்டில்—விருந்தினர் மாடத்திடத்து நெடிய தலைவாசலிலே முற்படநெருங்கியிருந்து பின்பு உள்ளேசென்று உண்டு மிக்குக்கிடக்கின்ற பெரியசோற்றையுடைய அடுக்களை,

ஒண் சுவர் நல் இல் உயர் திணை இருந்து பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்—சாந்திட்ட சுவர்களையுடைய நன்றாகிய அகங்களின் உயர்ந்ததிண்ணைகளிலேயிருந்து பசியகிளி வார்த்தைசொல்லுதற்குக் காரணமாகிய பால்நிறைந்த வளவியவூர்,

* இதற்கு உரை கிடைக்கவில்லை.

திண்ணை - விகாரம். இனி உயர்திணை - உயர்ந்த மேனிலமென்றுமாம்.

[தொடுதோ லடியர் துடிபடக் குழீஇக், கொடுவி லெயினர் கொள்ளை யுண்ட வுணவில் வறுங்கூட் டுள்ளகத் திருந்து.] கொடு வில் எயினர் தொடுதோல் அடியர் துடி படக் குழீஇக் கொள்ளை உண்ட உணவு இல் வறுங்கூடு உள்ளகத்து இருந்து—கொடிய வில்லினையுடைய வேடர் செருப்புத்தொட்ட அடியினையுடையராய்த் துடியொலிப்பத் திரண்டு கொள்ளையாகக் கொண்டுண்ட நெல் பின் இல்லையான வறுவிய கூட்டினுடைய உள்ளாகியவிடத்தேயிருந்து,

வளை வாய்க் கூகை நண்பகற் குழறவும—வளைந்த வாயினையுடைய கூகை' அடியொத்தகாலத்தே கூப்பிடும்படியாகவும்,

செழுநகர் (உசுச) ரட்டிலிடத்துக் (உசுஉ) கூட்டினுள்ளேயிருந்து (உசுஎ) கூகை குழறவு (உசுஅ) மென்க.

[அருங்கடி வரைப்பி னூர்கவி னழியப், பெரும்பாழ் செய்து மமையான் மருங்கற:] அருங்கடி வரைப்பின் ஊர் கவின் அழிய மருங்கு அறப் பெரும்பாழ் செய்தும் அமையான்—அரிய காவலையுடைய மதிலையுடைய பகைவர்படைவீடுகள் அழகழிய அவர்கள்குலமின்றாகப் பெரியபாழாகப்பண்ணியதனாலும் செற்றம் ஆறானாய்,

பெற்றவை மகிழ்தல்செய்யானாய் (உஉஅ) மேலுமாசைமிக்கு யானைகளோடும (உ௩௧) புரவிகளோடும (உ௩உ) போர்வேட்டு (உ௩௪) முரச (உ௩௬) முழங்கச் (உ௩எ) சென்று முன்சமமுருக்கித் (உ௩அ) தலைத்தவச்சென்று எடுப்பி (உ௩௯) உகளவும் (உ௪௫) உறையவும் (உ௫௧) கதிர்ப்பவும் (உ௫எ) விளிப்பவும (உ௫அ) குழறவும் (உசுஅ) துவன்றவும் (உசுO) பாழ்செய்தும் (உஎO) ஊர்கவினழியப் (உசு௯) பாழ்செய்தும அமையானு (உஎO) வென வினைமுடிக்க.

பாழ்செய்தல் இரண்டிடத்துங்கூட்டுக

மலை அகழ்க்குவனே கடல் தூர்க்குவனே வான் வீழ்க்குவனே வளி மாற்றுவனென—இவன் தெய்வத்தன்மையுடையனாதலின் இம்மலைகளையெல்லாம் அகழ்தலைச் செய்வன்; கடல்களையெல்லாந் தூர்த்தலைச்செய்வன், தேவருலகைக் கீழ்வீழ்த்தலைச் செய்வன்; காற்றை இயங்காமல்விலக்குவனென்று உலகத்தார் மேற்கூறும்படியாகத் துறைபோகலினெனக.

பெரும்பாழ்செய்தும் அமையானாய், இங்ஙனம் பாழ்செய்தவன் மேல் இவையுஞ்செய்வனென்று கூறும்படியாகத் துறைபோனானென்றவாறு.

தான் முன்னிய துறை போகலின—தான்கருதிய போர்த்துறைகளெல்லாம் பொருதுமுடித்தானாகலின்,

பல் ஒளியர் பணிபு ஒடுங்க—பலராகிய ஒளிநாட்டார் தாழ்ந்து தம் வீரங்குறைய, ஒளியராவார் மறறை மண்டலத்திற்கு அரசராதற்குரிய வேளாளர்.

தொல் அருவாளர் தொழில் கேட்ப—பழைய அருவாளநாட்டிலரசரும் தாங்கள் செய்யுந்தொழிலை வந்துகேட்ப,

வடவர் வாட—அதற்கு வடக்குநாட்டிலுள்ள அரசர் குறைய,

குடவர் கூம்ப—குடநாட்டிலுள்ளார் மனவெழுச்சி குறைய,

[தென்னவன் றிறல்கெடச் சீறி மன்னர், மன்னெயில் கதவு மதனுடை நோன்றாண், மாத்தானை மறமொய்ம்பிற், செங்கண்ணாற் செயிர்த்துநோக்கிப், புன்பொதுவர் வழிபொன்ற, விருங்கோவேள் மருங்குசாயக், காடுகொன்று நாடாக்கிக், குளந்தொட்டு வளம்பெருக்கிப், பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக், கோயிலொடு குடி

நிறீஇ, வாயிலொடு புழையமைத்து,ஞாயிறொறும் புதைநிறீஇப், பொருவேமெனப் பெயர்கொடுத், தொருவேமெனப் புறக்கொடாது, திருநிலைஇய பெருமன்னெயில்:]

புன் பொதுவர் வழி பொன்ற—புல்லிய இடையராய் அரசாள்வோர் கிளைமுழுதுங் கெட்டுப்போக,

இருங்கோவேள் மருங்கு சாய—ஐம்பெருவேளிர் குலமுழுதுங் குறைய,

காடு கொன்று—சோழமண்டலத்திற காடாகிய இடங்களை வெட்டிப்போகட்டு,

நாடு ஆக்கி—பண்டுபோலக குடியிருநது விளையப்பண்ணி,

குளம தொட்டு—தூர்ந்தகுளங்களைக கல்லி,

வளம் பெருக்கி—நாட்டிற்குச் செல்வத்தைமிகுத்து,

பிறங்கு நிலை மாடதது உறந்தைபோக்கி—பெரிய நிலைகளையுடைய மாடங்களை யுடைய உறந்தையெனனுந தன்னூரைபபோக்கி,

கோயிலொடு குடி நிறீஇ—கோயில்களோடே பழையகுடிகளையும் பண்டுபோல நிலைநிறுத்தி,

திரு நிலைஇய பெரு மன எயில—திருமகணிலைபெற்ற பெரியஆக்கத்தையுடைய உறந்தையின் மதிலிடததே,

வாயிலொடு புழை அமைதது—பெரிய வாசல்களோடே சிறியவாசல்களையுமு ண்டாக்கி,

ஞாயில் தொறும புதை நிறீஇ—அதன்றலையில எய்துமறையும் சூட்டுத்தோறும் அம்புகட்டுக்களையும் கட்டிவைத்து,

ஒருவேம் எனப் புறக கொடாது பொருவேமெனப்பெயாகொடுத்து மன்னர் மன் எயில் கதுவும் மதன் உடை நோன் தாள் மாத தானை மறமொய்ம்பின் தென்னவன் திறல்கெடச் செஙகண்ணுற் செயிர்த்துநோக்கிச் சீறி—யாங் தமியேமென்றுகருதிப் பலவரசர்கள்வந்தால் முதுகிடாது அவாகளுடனும் பொரககடவேமென வஞ்சினத் தைச்சொல்லி அரசருடைய பெரியஅரண்களைக் கோபித்தழிக்கும் செருக்கினையுடை ய வலிய முயறசியினையும பெருமையினையுடைய நாறபடையினையும் மறத்தையு டைத்தாகிய வலியினையுமுடைய பாணடியனது வலிகெடும்படி தன் செய்யகண்ணு லே குற்றத்தைச்செய்துபார்த்துக கோபித்துப பெறறவை மகிழ்தல் செய்யா(உஉஅ) னென முன்னேகூட்டுக

"கொடியனெம் இறையெனக் கணணீர் பரப்பிக், குடிபழி தூற்றுங் கோலே னு குக" என்றுகூறும் வஞ்சினத்தாற் றனக்கு ஓர் பெயர்பெறுதலின் வஞ்சினத்தைப் பெ யரொன்றார்

[மின்னொளி யெறிப்பத் தம்மொளி மழுங்கி, விசிபிணி முழவின் வேந்தர் சூடி ய, பசுமணி பொருத பரேரெறுழக் கழற்கால்.]

விசி பிணி முழவின் வேந்தர் தம் ஒளி மழுங்கி மின் ஒளி எறிப்பச் சூடிய கழல் கால்—இறுகவலித்த வாரககட்டினையுடைய முரசுகளையுடைய வழிபாடில்லாத வேந் தர் தம்மரசிழத்தலிற் றமக்கு முன்புள்ள விளக்கங்கெட்டுப் பின்பு அவ்விளங்குகி ன்ற விளக்கம் தோன்றும்படியாகத் தம் முடிமேலேசூடின வீரக்கழலையுடைய கா லினையும்,

பசுமணி பொருத பரோ எறுழக கழல்—பசிய மணிகளோடே மாறுபட்ட பெரி ய அழகிய வலியினையுடைய கழலெனக.

பொற்றொடிப் புதல்வர் ஓடி ஆடவும் முறறிழை மகளிர் முகிழ் முலை திளைப் பவும் செஞ்சாந்து சிதைந்த மார்பின்—பொன்னாற்செய்த தொடியினையுடைய பிள்

ளைகள் ஓடிவந்து ஏறி விளையாடுகையினாலும் மெய்ம்முழுதுமணிந்த அணிகலங்களையுடைய மகளிருடைய தாமரைமுகைபோலும் முலைகள் புணாதலாலும சிவந்தசந்தன மழிந்த மார்பினையும்,

ஒண் பூண்— ஒள்ளிய பேரணிகலனகளையும்,

அரிமா அன்ன அணஙகு உடைத் துப்பின்— சிஙகவேற்றையொதத வருத்தத்தையுடைய வலியினையுமுடைய,

திரு மா வளவன்—திருவின் பெருமையையுடைய கரிகாற்பெருவளததான்,

திண்காப்பு வாள்கழித்தேறிக் (உஉசு) காடுகொன்று நாடாககிக் (உஅரு) குள க்தொட்டு வளமபெருக்கி (உஅச) உறந்தைபோக்கிக் (உஅரு) குடிநிறீஇப் (உஅசு) பெருமன்னெயிலிலே (உகூக) வாயிலொடு புழையமைத்து (உஅஎ) ஞாயிறொறும் புதை நிறீஇ (உஅஅ) இஙஙனம் உருகெழுதாயம் ஊழினெயதித் (உஉஎ) தென்னவன் றிறல்கெடச்சீறி (உஎஎ) அவன் றிறையாகத்தந்த அரசவுரிமைகளாற் பெற்றவையிற் முன் மகிழ்தல் செய்யானும் (உஉஅ) மேலுமாசைமிக்கு இவன் மலையகழக்குவன் தூர்க்குவன் (உஎக) வீழ்க்குவன் மாறறுவனென்று உலகங கூறும்படியாக (உஎஉ) உழிஞைசூடி (உருரு) யானையோடும் (உருக) புரவியோடுஞ் (உருஉ) சென்று முருக்கி (உருஅ) எடுப்பிப் (உருகூ) பெரும்பாழ்செய்தும் அமையானும் (உஎ0) பணிபொடுஙகக் (உஎச) கேட்ப (உஎரு) வாடக கூம்பப (உஎசு) பொன்றச் (உஅக) சாயத் (உஅஉ) தான் முன்னிய துறைபோகையினாலே (உஎரு) வழிபடா ஏனைவேந்தர் (உகூரு) தம்மொளிமழுங்கி மின்னொளியெறிபபச (உகூஉ) சூடிய (உகூரு) காலினையும் (உகூச) மார்பினையும் பூணினையும் (உகூஎ) துப்பினையு (உகூஅ) முடைய கரிகாறபெருவளத்தா (உகூகூ) னென வினைமுடிக்க.

தெவ்வர்க்கு ஓககிய வேலினும் வெய்ப கானம்— பகைவரைககொல்லுதற்கு அறுதியிட்டுவைத்த வேலினுங் கடியவாயிருந்தன காடு;

அவன் கோலினும தண்ணிய தட மெல் தோளே— அவன் செங்கோலினுங் குளிர்ந்திருந்தன பெரிய மெல்லியதோள்கள்

நெஞ்சே, (உஉ0) இவளை நேசமுடன் கொண்டு செல்வோமெனனில, கானம் அவன் (ரு00) ஓக்கிய (உகூக) வேலினும் வெயயவாயிராநின்றன (ரு00), இவடோள் (ரு0க) அவன் (ரு00) கோலினுந தணணிய (ரு0க) ; இவளைப் பிரியாதுறைதலில் யான்போதற்கு ஆறறுவாயிராநின்ற, ஆதலாற பட்டினம்பெறினும் (உகஅ) வயஙகிழை ஈண்டுப்பிரிந்திருப்ப (உககூ) யான நின்னுடன்வாரேன், இனி ஆணடுபோய் வாழவாயாக (உஉ0) வென வினைமுடிகக

வாரேனென்முன் அவளை ஆறறுவித்துப் பின்பு பிரிதல்கருதி. அது, * "செலவிடை யழுககல் செல்லாமை யன்றே, வன்புறை குறிதத றவிாசசி யாகும்" என்பதனானுணர்க

**சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலைக்கு மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.**

---

முச்சக் காமு * * * காமெனருப புற்று.

---

* தொல்காப்பியம, பொருளதிகாரம், கற்பியல், சச.

## பத்தாவது

# *மலைபடுகடாம்.

திருமழை தலைஇய விருணிற விசும்பின்
விண்ணதி ரிமிழிசை கடுப்பப் பண்ணமைத்துத்
திண்வார் விசித்த முழவொ டாகுளி
நுண்ணுருக் குற்ற விளங்கடர்ப் பாண்டின்
௫ மின்னிரும் பீலி யணித்தழைக் கோட்டொடு
கண்ணிடை விடுத்த களிற்றுயிர்த் தூம்பி
னிளிப்பயி ரிமிருங் குறும்பரந் தூம்பொடு
விளிப்பது கவருந் தீங்குழ றுதைஇ
நடுவுநின் றிசைக்கு மரிக்குரற் றட்டை
௧௦ கடிகவர் பொலிக்கும் வல்வா யெல்லரி
நொடிதரு பாணிய பதலையும் பிறவுங்
கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப
நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்
கடுக்கலித் தெழுந்த க......கன் சிலம்பிற்
௧௫ படுத்துவைத் தன்ன பாறை மருங்கி
னெடுத்துநிறுத் தன்ன விட்டருஞ் சிறுநெறி
தொடுத்த வாளியர் துணைபுணர் கானவ
ரிடுக்கண் செய்யா தியங்குந ரியக்கு
மடுக்கன் மீமிசை யருப்பம் பேணா
௨௦ திடிச்சுர நிவப்பி னியவுக்கொண் டொழுகித்
தொடித்திரி வன்ன தொண்டுபடு திவவிற்
கடிப்பகை யனைத்தும் † கேள்வி போகாக்
குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பி
னரலை தீர வுரீஇ வரகின்
௨௫ குரல்வார்ந் தன்ன நுண்டுளை யிரீஇச்
சிலம்பமை பத்தல் பசையொடு சேர்த்தி
யிலங்குதுளை செறிய வாணி முடுக்கிப்
புதுவது புனைந்த வெண்கை யாப்பமைத்துப்
புதுவது போர்த்த பொன்போற் பச்சை

---

* இந்நூலுக்குக் கூத்தராற்றுப்படையெனவும் பெயருண்டு.

† கேள்விபோகாதெனவும் பாடம்.

௩0 வதுவை நாறும் வண்டுகம ழைம்பால்
மடந்தை மாண்ட நுடங்கெழி லாகத்
தடங்குமயி ரொழுகிய வவ்வாய் கடுப்ப
வகடுசோர்பு பொருந்தி யளவினிற் றிரியாது
கவடுபடக் கவைஇய சென்றுவாங் குந்தி
௩௫ நுணங்கர நுவறிய நுண்ணீர் மாமைக்
களங்கனி யன்ன கதழ்ந்துகிள ருருவின்
வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியா
ழுமைவரப் பண்ணி யருணெறி திரியா
திசைபெறு திருவின் வேந்தவை யேற்பத்
௪0 துறைபல முற்றிய பைதீர் பாணரொ
டுயர்ந்தோங்கு பெருமலை யூறின் றேறலின்
மதந்தபு ஞமலி நாவி னன்ன
துளங்கியன் மெலிந்த கல்பொரு சீறடிக்
கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ
௪௫ விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத்
திலங்குவளை விறலியர் நிற்புறஞ் சுற்றக்
கயம்புக் கன்ன பயம்படு தண்ணிழற்
புனல்கால் கழீஇய மணல்வார் புறவிற்
புலம்புவிட் டிருந்த புனிறில் காட்சிக்
௫0 கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ
தூமலர் துவன்றிய கரைபொரு நிவப்பின
மீமிசை நல்யாறு கடற்படர்ந் தாஅங்
கியாமவ ணின்றும் வருதும் நீயிரும்
கனிபொழி கானங் கிளையொ டுணீஇய
௫௫ துனைபறை நிவக்கும் புள்ளின மானப்
புனைதார்ப் பொலிந்த வண்டுபடு மார்பின்
வனைபுனை யெழின்முலை வாங்கமைத் திரடோள்
மலர்போன் மழைக்கண் மங்கையர் கணவன்
முனைபாழ் படுக்குந் துன்னருந் துப்பி
௬0 னிசைநுவல் வித்தி னசையே ருழவர்க்குப்
புதுநிறை வந்த புனலஞ் சாயல்
மதிமா றோரா நன்றுணர் சூழ்ச்சி
வின்னவி றடக்கை மேவரும் பெரும்பூ
ணன்னன்சேய் நன்னற் படர்ந்த கொள்கையொ
௬௫ டுள்ளினிர் சேறி ராயிற் பொழுதெதிர்ந்த
புள்ளினிர் மன்ற வெற்றுக் குறுகலி

ஞாற்றி னளவு மசையுநற் புலமும
வீற்றுவளஞ் சுரக்குமவ னாடுபடு நலனு
மலையுஞ் சோலையு மாபுகல் கானமுந்
௪௭0 தொலையா நல்லிசை யுலகமொடு நிற்பப்
பலர்புறங் கண்டவ ரருங்கலந் தரீஇப்
புலவோர்க்குச் சுரக்குமவ னீகை மாரியு
மிகழுநர்ப் பிணிக்கு மாற்றலும் புகழுநர்க்
கரசுமுழுது கொடுப்பினு மமரா நோக்கமொடு
௪௭௫ தூத்துளி பொழிந்த பொய்யா வானின்
வீயாது சுரக்குமவ னாண்மகி ழிருக்கையு
நல்லோர் குழீஇய நாநவி லவையத்து
வல்லா ராயினும் புறமறைத்துச் சென்றோரைச்
சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி
௪௮0 நல்லிதி னியக்குமவன் சுற்றத் தொழுக்கமு
நீரகம் பனிக்கு மஞ்சுவரு கடுந்திறற்
பேரிசை நவிர மேஎ யுறையுங்
காரி யுண்டிக் கடவுள தியற்கையும்
பாயிரு ணீங்கப் பகல்செய்யா வெழுதரு
௪௮௫ ஞாயி றன்னவவன் வசையில் சிறப்பு
மிகந்தன வாயினுந் தெவ்வர் தேஎ
நுகம்படக் கடந்து நூழி லாட்டிப்
புரைதோல் வரைப்பின் வேனிழற் புலவோர்க்குக்
கொடைக்கட னிறுத்தவவன் றொல்லோர் வரவு
௪௯0 மிரைதேர்ந் திவருங் கொடுந்தாண் முதலையொடு
திரைபடக் குழிந்த கல்லகழ் கிடங்கின்
வரைபுரை நிவப்பின் வான்றோ யிஞ்சி
யுரைசெல வெறுத்தவவன் மூதூ ராங்கண்
கேளினி வேளைநீ முன்னிய திசையே
௪௯௫ மிகுவளம் பழுநிய யாணர் வைப்பிற்
புதுவது வந்தன் றிதுவதன் பண்பே
வானமின்னு வசிவு பொழிய வானா
திட்ட வெல்லாம் பெட்டாங்கு விளையப்
பெயலொடு வைகிய வியன்க ணிரும்புனத்
௫00 தகலிரு விசும்பி னாஅல் போல
வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை
நீலத் தன்ன விதைப்புன மருங்கின்
மகுளிபா யாது மலிதுளி தழாலி

[பராவரு மரபிற் கடவுட் காணின்.] புரிசைப (உஉக) பராவரு மரபிற் கடவுள் காணின்—கோயிலிற் பராவுதற்கரிய முறைமையினையுடைய கடவுளைக்கண்டீராயின்,

[தொழாநிர் கழியி னல்லது] நீர் தொழாக கழியின அலலது—நீர் வணஙகிப போம் அத்தனையலலது,

நீரொனபது குறுகினறது இனித தொழாநிரொனடது மறையனறித தொழு தென்று பொருடருமேனுமுணாக

வறிது நும் இயம தொடுதல ஓமபுமின—சிறிது நும்முடைய வாசசியஙகளைத தீணடுதலைக காபபீராக, அதறகுக காரணமென்னையெனின,

[மயங்குதுளி, மாரி தலையுமவன மலலல வெறபே | அவனது மலலல வெற்பு ம யஙகு துளி மாரி தலையும்—அவனது வளவிய நவிர மெனனுமலை மயஙகின துளியை யுடைய மழையை இடைவிடாமறபெயயாநிறகும,

என்றதனுறபயன வாசசியஙகளுநினைநது நுமககும போசலரிதெனபதாம

[அலகை யனன வெள்வோப பீலிச, கலவ மஞ்ஞை கடசியிற தளரினும]

அலகை அன்ன வெள வோப பீலி மஞஞை— பசசையையொதத வெள்ளிய வேரினையுடைய பீலியையுடைய மயில,

கட்சியில கலவம் தளரினும— அககாடடிடததே ஆடுதறகுவிரிதத கலாபத்தி னது பாரததாலே ஆடியிளைதது நிற்பினும,

[கடுமபறைக கோடியா மகாஅ ரனன, நெ ஙகழைக கொமபாக கடுவ னுக ளினும.]

நெடுஙகழைக் கொமபா—நெடிய மூஙகிலினகவடுகளிலே,

கடும்பறைக கோடியா மகாஅா அனன கடுவன உகளினும—கடிய பறையினை யுடைய கூத்தருடைய பிளளைகளையொதத கடுவனபாயினும,

[நோகொ ளெடுவரை நேமியிற றொடுதத, சூாபுக லடுககததுப பிரசங கா ணினும்.]

நோ கொள் நெடுவரைச் சூா புகல அடுககதது—செவவையைத தனனிடததே கொணட நெடியமலையிற றெயவம் விரும்பின பககமலையிலே,

நேமியின தொடுதத பிரசம காணினும—தேருருளபோலவைதத தேனிறாலைக காணினும,

[ஞெரேரென நோககல லோமபுமி னுரிததன்று, நிரைசெலன் மெல்லடி நெறி மாறு படுகுவிர]

ஞெரேரென நோக்கல உரிததனறு—கடுகபபாாததல நுமககுரியதொழிலனறு, அதறகுக்காரணமென்னையெனின்,

மெல்லடி நிரை செலல நெறி மாறுபடுகுவிர—மெலலிய அடியாலே நிரைத துச செல்லுதலையுடைய வழிதபபுவிர.

ஓமபுமின்—ஆதலால அங்ஙனநோககுதலைப் பாதுகாபபீர,

இதுவும் ஆற்றினதருமைகூறிறறு.

வரை சோ வகுநதின கானத்துப் படினே—மலையைச்சேர்ந்த வழியினையுடைய காட்டிடத்தேசெல்லின்,

[கழுதிற சேணோ னேவொடு போகி, யிழுதி னன்ன வானிணஞ் செருக்கி, நி றப்புண் கூர்ந்த நிலந்தின் மருப்பி, னெறிகெடக் கிடநத விரும்பிண ரொருத்தி, னிரு

**ணெிந் தன்ன வேனங் காணின், முளிகழை யிசைந்த காடுபடு தீயி, னளிபுகை கம ழா திருயினிர் மிசைந்து:]**

கழுதிற் சேணோன் நிறப்புண் கூர்ந்த எவொடு போகி நெறிகெடக் கிடந்த ஏனம்—பரணினமேலிருந்த யானைமுதலியவற்றிறகெட்டாதவன் எய்த மருமத்திற் புண்மிகுதற்குககாரணமான அம்போடேபோகி நெறிகெடக்கிடந்த பன்றி,

நிலம் தின் மருபபின் இழுதின அன்ன வால் நிணம் செருககி இரும்பிணர் எருத்தின் இருள் துணிநதனன ஏனம்—கிழங்குகளை அகழநதுதின்கையினுலே மண டின்றுதேய்ந்த கொம்பினையும் நெய்விழுதினையொத்த வெள்ளியநிணம் செருக்கும் படி கரியசருச்சரையையுடைத்தாகிய கழுததினையுமுடைய இருள் அறறுக்கிடந்தாற் போனற ஏனம்,

செருககவெனததிரிக்க.

ஏனம காணின முளி கழை இசைந்த காடு படு தீயின் நளி புகை கமழாது இருயினிர் மிசைந்து —பன்றியைககணடாயின் உலாந்தமூங்கில் தமமிலிழைத்ததனுற் பிறந்த காடெஙகுமுணடாகியதீயினுலே செறிந்தபுகைநாறுமல வக்கி மயிர்போகச் சீவித் தின்று,

[துகளறத துணிநத மணிமரு டெணணீாக், குவளையம் பைஞ்சுனை யசைவிடப் பருகி:] குவளை அம் பைஞ்சுனை துகள அறத துணிந்த மணி மருள் தெணணீர் அசை விடப் பருகி—குவளையால அழகிய பசியநிறததவாகிய சுனையில கலககமறத்தெளிந்த பளிஙகென்றுமருளுந் தெளிநதநீரை வழியில இளைப்புத்தீருமபடி குடித்து,

அசைவு - விகாரம்

[மிகுததுப பதஙகொணட பருஉககட் பொதியினிர்] பருஉக்கண் பதம் மிகுத்துக கொண்ட பொதியினிர்—பருதத இடத்தையுடைய தசையாகியவுணவை முழு துந்தினறுமல மிகுததுவைததுககட்டிககொணட பொதியின்சுமையினையுடையிராய்,

புள கைபோகிய புனறலை மகாரோடு—வளை கையினின்றும்போதறகுக்காரண மான சிவந்த தலையினையுடைய பிளளைகளோடே,

பிளளைப்பேற்றால் வளையிடாராகலின், வளைபோதறகுப பிள்ளைகாரணமாயினர்.

[அறகிடை கழித லோமபி யாறறநு, மில்புக் கனன கல்லளை வதிமின்:] இடை கழிதல் ஓமபி ஆற்ற நும் இல புககன்ன கல அளை அற்கு வதிமின்—அவ்விடததுப் போதலைப்பரிகரித்து வழியிடததனவாகிய நும்மில்லிலே புககாலொத்த கன்முழைஞ் சுகளிலே இராக்காலததுத் தஙகுவிர்,

இஃது அசையுநற்புலமும வலசியுஞ் சேரககூறிறறு

கானத்துபபடின் (௨௪௨) மிசைந்து (௨௪௧) பருகிப (௨௫௧) பொதியினிராய் (௨௫௨) மகாரோடே (௨௫௩) கழிதலோமபி அற்கு (௨௫௪) வதிமின் (௨௫௫) என்க.

அற் சேர்ந்து அல்கி அசைதல் ஓம்பி—இராக்காலததிற்கு எலலாருங்கூடித்தங்கி இளைபபாறி,

வான் கண் விரிக்க விடியல் எற்றெழுந்து—வானிடததே ஞாயிற்றின்கதிர் விரிந்த விடியற்காலத்தே துயிலுணர்நதெழுந்து,

**கான் அகப்பட்ட செவ்நெறிக் கொண்மின்—காட்டிடத்தேகிடந்த செவ்விய நெறியைப் போவீராக,**

[கயங்கண டன்ன வகன்பை யங்கண், மைந்துமலி சினத்த களிறுமத னழிக் குந், துஞ்சுமரங் கடுக்கு மாசுணம் விலங்கி, யிகந்துசேட் கமழும் பூவு முண்டோர், மறந்தமை கல்லாப பழனு மூழிறந்து, பெரும்பயங் கழியினு மாந்தர் துன்னு, நிருங் கால் வீயும் பெருமரக் குழாமும]

அகன் பை அம் கண் மைந்து மலி சினத்த களிறு மதன் அழிக்கும் துஞ்சு மரம் கடுக்கும் மாசுணம் விலங்கி—அகன்றபடத்தினையும் அழகியகண்ணினையுமுடைய வலிமிகுகின்ற சினத்தவாகிய யானைவலியைக்கெடுத்துவிழுங்கும் விழுந்துகிடக்கின் ற பெருமரங்களையொக்கும் பெரும்பாம்புகிடக்கின்ற வழியைவிலங்கி,

பெரும்பயம் கழியினும் ஊழ இறந்து இகந்து சேண் கமழும் பூவும் உண்டோர் மறந்து அமைகல்லாப் பழனும மாந்தா துன்னா—அவற்றாற்கொள்ளும் பெரியபயன் கொள்ளாமறபோசினும முற்காலமடிப்பட்டுப்போந்த முறைமையைக்கடந்து தாம் நிற்கின்ற இடத்தைக்கடந்து தூரியநிலத்தைச்சென்றுநாறும் பூவையும் நுகாந்தவர் மறந்து உயிர்வாழ்தலாற்றாத பழங்களையும தெய்வங்களனறி மானிடா அணுகாரா கையினாலே,

ஊழிறந்து துன்றொன்க

இரு கால வீயும பழனும் கயம கண்டன்ன பெரு மரக்குழாமும—நீளுங்காம் பையுடைய அப்பூக்களையும் பழத்தையும குளத்தைக்கண்டாறபோலுங் குளிர்ச்சியை யுடைய பெரியமரக்குழாத்தினையும்,

[இடனும் வலனு நினையினிர நோக்கிக், குறியறிந் தவையவை குறுகாது கழி மின்.] நினையினிா குறியறிந்து இடனும வலனும நோக்கி அவைஅவை குறுகாது கழிமின்—யானகூறியதனைநினைத்து அவற்றினகுறிகளையறிந்து இடத்தினும்வலத் தினும்பார்த்து அவையிற்றை அவையிற்றை அணுகாமற போவீர்,

விலங்கி நோக்கிக் குறுகாது கழிமினெனக

இது சோலைகூறிறறு

கோடு பல முரஞ்சிய கோளி ஆலத்துக் கூடு இயத்தனன குரல புணா புள் ளின்—கொமபுகள்பலவுமுற்றிய பழத்தைத் தனனிடத்தேகொண்டதாகிய ஆலமரத் திடத்தே கூடின பலவாச்சியங்களையொத்த பலவோசையுங்கூடின பறவைத்திரளை யுடைய நாடுகா (உ௭0) ணெனக

நாடு காண நனந்தலை மென்மெல அகனமின்—நாடுகளையெல்லாம காணலா யிருக்கின்ற அகன்ற இடத்தையுடைய மலையை மெலலமெல்லப்போவீர்,

நனந்தலை - ஆகுபெயா.

மா நிழற பட்ட மரம் பயில இறும்பின—பெரியநிழலுண்டான மரம்நெருங்கின குறுங்காட்டாலே,

[ஞாயிறு தெரூஅ மாக நனந்தலை] மாகம ஞாயிறு தெரூஅ நனந்தலை—ஆகா யத்திற்றிரியும் ஞாயிறு சுடப்படாத அகன்ற இடத்தையுடைய குன்றம் (உ௭௫),

தேளம் மருளும அமையமாயினும இரூஅ வன்சிலையா மா தேர்பு கொட்கும் குறவரும் மருளும் குன்றத்துப படினே—திசைதெரியாமன்மயங்கும் இராக்காலமா யினும் முறியாத வலியவில்லையுடையராய் விலங்குதேர்ந்துநின்று சுழன்றுதிரியும் குற வருமுட்படமயங்குங் குன்றத்தே நீங்களசெலலின்,

[அருவி நுகரும வானர மகளிா, வருவிசை தவிராது வாங்குபு குடைதொறுந தெரியிமிழ கொண்டநும மியம்போ வின்னிசை·] வாஙகுபு வருவிசை தவிராத இமிழ் கொண்ட அருவி நுகரும் வான் அரமகளிா குடைதொறும் நும் இயம் போல தெரி இன்னிசை—உள்ளபணடஙகளை வாங்கிககொண்டு வருகின்ற விசைதவிராத ஒலித்தலைக்கொண்ட அருவியையாடும் தெய்வமகளிா அதனைக கையாறகுடையு தோறும் நும்முடைய வாசசியஙகளைபபோல தாளந்தெரிகின்ற இனியவோசையும்,

[இலங்கேந்து மருபபி னினமபிரி யொருததல, விலஙகன் மீமிசைப பணவைக கானவர், புலமபுக குணணும் புரிவளைப் பூசல ]

விலங்கல மீமிசைப பணவைக் கானவா புலம்புக்கு உணணும்—மலையின்பே விட்டபரணிற கானவா திணைபபுனததைப புகுநதுதினனும,

இலஙகு ஏந்து மருபபின் இனம பிரி ஒருததல புரி வளைப பூசல—விளங்குகின் ஏந்தின கொம்பையுடைய தன்னினததைபபிரிந்த யானைததலைவனைப பிடிததறவிரும்பின வளைததலையுடைய ஆரவாரமும,

[சேயளைப பள்ளி யெஃகுறு முளளி, னெயதெற விழுககிய கானவ ரழுகை சேய் அளைப பள்ளி எய எஃகு உறு முளளின தெற இழுககிய கானவா அழுகை—நெடிய முழையாகிய இருபபிடததிறறஙகும் எய்பபனறி தனதுகூாமையுறுகின் முள்ளால எயதுகொலலுகையினுலே பட்ட கானவரழுகின்ற அழுகையும்,

[கொடுவரி பாயந்தெனக கொழுநா மாாபி, னெடுவசி விழுபபுண டணிமாா காபபென, வறலவாழ் கூந்தற கொடிச்சியா பாடல ] கொழுநா மாாபில கொடுவரி பாய தென நெடு வசி விழுபபுண தணிமாா காபபென அறல வாழ் கூந்தல் கொடிச்சிய பாடல—தஙகணவாமாாபிலே புலிபாய்நததாகப பட்ட நெடிய பிளததலையுடைய சீரியபுணணை ஆறறுதறகுக காவலென்றுகருதி அறல்வீறறிருநத மயிரினையுடைய கொடிசசியாபாடும பாட்டாலெழுநத ஓசையும,

தலை நாள பூதத பொன இணா வேஙகை மலைமாா இடூஉம ஏமப பூசல—முத ஞளிலேபூத்த பொனபோலுங்கொததினையுடைய வேஙகைப்பூவைசசூடுதற்கு மக ளிா புலிபுலியெனறுகூபபிடும ஏமததையுடைய ஆரவாரமும,

வேஙகைவளாநது பூவைககொடுததலின், அசசநதீா்ந்த பூசலென்றூா.

கன்று அரைப பட்ட கயநதலை மடபபிடி—கனறு வயிறறிலேயுணடான மெல் லியதலையினையுடைய மடபபததையுடையபிடியை,

வலிகளு வரம்பாகிய கணவன் ஓமபலின்—வலிககு எல்லையாகிய களிறு கவழந்தேடிககொடுததுப பாதுகாந்துப போகையினுலே,

ஒண கேழ வயபபுலி பாயநதென—அபபோக்கினைககுறிதது ஒளிததிருநது ஒள் ளிய நிறத்தையுடைய வலியபுலி பாய்ந்ததாக,

கிளையொடு நெடு வரை இயம்பும இடி உமிழ தழஙகு குரல்—அபபிடி தன்சுற் றததோடே நெடியமலையிடத்தேகூபபிடும் இடியோசைபோலும முழஙகுஙகுரலும்,

இடியுமிழந்த ஓசையை ஆகுபெயரான உமிழ எனறூா

கைகக கோள் மறநத கருவிரல மந்தி—பாாபபைத் தன்கையாற்றழுவிக்கோடலை மறந்த கரியவிரலையுடையமந்தி,

அரு விடர் வீழ்நத தன் கலலாபபார்ப்பிறகு— எடுததற்கரிய ஆழந்த முழையி லேவீழ்ந்திறந்த தன்குட்டிககு,

கல்லாமை - தனக்குரியதொழிலைக் கல்லாமை

முறி மேய யாக்கை கிளையொடு துவன்றிச் சிறுமை உற்ற களையாப் பூசல்—தளிரைமேய்ந்துவளர்ந்த வடிவினையுடைய சுற்றத்தோடேநெருங்கி நோய்மிக்க விலக்கப்படாத ஆரவாரமும்,

மந்தி பார்ப்பிறகுத் துவன்றிச் சிறுமையுற்ற பூசலென்க

கலை கை அற்ற காண்பு இன் நெடு வரை நிலை பெய்து இட்ட மால்பு நெறியாக—முசுக்கலை ஏறமுடியாதென்று செயலற்ற காட்சியினிய உயர்ந்தவரையிலே நிலைபேறுண்டாகக் கட்டிநட்ட கணேணியே வழியாகச்சென்று,

பெரும்பயன் தொகுத்த தேங்கொள் கொள்ளை—பெரியபயனுண்டாகத் தேனீதிரட்டிவைத்த தேனையழித்துக்கொண்ட கொள்ளையாலுண்டான ஆரவாரமும்,

[அருங்குறும் பெறிந்த கானவ ருவகை, திருந்துவே லண்ணற்கு விருந்திறை சான்மென.]

திருந்து வேல் அண்ணற்கு விருந்து இறை சான்மென—திருந்தும்வேலினையுடைய நன்னனுக்குப் புதிதாகக்கொடுத்தற்கு இவற்றிறைக்கொண்டபொருள்கள் அமையுமெனக் கருதிச்சென்று,

அரு குறும்பு எறிந்த கானவர் உவகை—அழித்தற்கரிய குறும்புகளையழித்த கானவர் மகிழ்ச்சியிலுண்டான ஆரவாரமும்,

நறவு நாட்செய்த குறவர் தம் பெண்டிரொடு மான தோற் சிறுபறை கல்லெனக் கறங்க வான் தோய் மீமிசை அயரும் குரவை—நறவை நாட்காலத்தேகுடித்த குறவர் தம்பெண்டிரோடேகூடி மான்றோல்போர்த்த சிறுபறை கல்லென்னுமோசைபடவொலிப்ப வானைத்தீண்டும் உச்சிமலையிலேயாடுங் குரவைக்கூத்தின்ஆரவாரமும்,

[நல்லெழி னெடுந்தே ரியவுவந் தன்ன, கல்யா றொலிக்கும் விடர்முழங் கிரங்கிசை:] நல எழில் நெடுந்தேர் இயவு வந்தன்ன ஒலிக்கும் கல் யாறு விடர் முழங்கு இரங்கு இசை—நல்ல அழகினையுடைய நெடியதேர்கள் வழியிலே ஓடிவந்த தன்மையவாக ஒலிக்கும் கல்லின்மேலவரும் யாறுகள் முழைஞ்சுகளிலேவீழ்ந்து மாறுதொலிக்கும் ஓசையும்,

நெடுஞ்சுழிப் பட்ட கடுங்கண் வேழத்து உரவுச் சினம் தணித்துப் பெரு வெளிற் பிணிமார் விரவு மொழி பயிற்றும் பாகர் ஓதை—காட்டாற்றின் நெடியசுழியிலே வீழ்ந்து அகப்பட்ட தறுகண்மையையுடைய யானையினது வலிய சினத்தைத் தணியப்பண்ணிப் பெரியகம்பத்திலே சேர்த்தற்குத் தமதேவற்றொழிலைச்செய்தற்குக்காரணமான பேச்சுக்களைப்பேசி அவற்றிலே பயிலப்பண்ணும் பாகருடைய ஆரவாரமும்,

ஒலி கழைத் தட்டை புடையுநர் புனந்தொறும் கிளி கடி மகளிர் விளி படு பூசல்—ஒலிக்கும் மூங்கிலாற்செய்த தட்டையைப்புடைத்துப் புனங்கடோறும் கிளியையோட்டுகின்ற மகளிர்கூப்பிடுதலாற்பிறந்த ஆரவாரமும்,

இனத்தின் தீர்ந்த துளங்கு இமில் நல்லேறு—நிரையினின்றும்பெயர்ந்த அசையும் குட்டேற்றினையுடைய இடபமும்,

மலைத் தலை வந்த மரையான் கதழ் விடை—எக்காலமும் போர்செய்து போந்த தொழில் தன்னிடத்திலேகைவந்த மரையானினது விரைந்த ஏறும்,

[மாறுகொ ளொக்கலொ டுற்றுப்பட் டாக்கிக், கோவலர் குறவரோ டொருங்கியைந் தார்ப்ப, வள்ளிதழ்க் குளவியுங் குறிஞ்சியுங் குழைய, நல்லேறு பொருஉங் கல்லென் கம்பலை.]

கோவலர் குறவரோடு ஒருங்கு இயைந்து ஆர்ப்ப—முல்லைநிலத்திற்கோவல ரும் குறிஞ்சிநிலத்திற்குறவரும் சேரக்கூடி வென்றதன்வெற்றிதோன்ற ஆரவாரிக் கும்படி,

மாறு மைந்தின் ஊறு படுத தாக்கிப் பொரூஉம் கல்லென் கம்பலை—முதுகிடாத வலியுடனே புண்ணுண்டாம்படி முட்டிப்பொரும கல்லென்கின்ற ஓசையையுடைய ஆரவாரமும்,

ஏறும் விடையும் ஆர்ப்பப் பொரூஉம் கம்பலையென்க

நல்லேறு வள இதழ்க குளவியும் குறிஞ்சியும் குழையப் பொரூஉம் கம்பலை— எருமையேறுகள் வளவிய இதழையுடைய குளவியும் குறிஞ்சியும் வாடும்படி தம்மிற் பொருகின்ற ஆரவாரமும்,

[காந்தட் டுடுப்பிற் கமழுமட லோச்சி, வணகோட் பலவின் சுளைவிளை தீம்பழ, மூண்டுபடு மிசைசிற் காழ்ப்பயன கொண்மார், கன்றுகடா அ வுறுக்கு மகாஅ ரோதை]

வண கோட் பலவின் விளை தீம்பழம் சுளை உண்டு படு மிசைசிற காழ் பயன் கொண் மார்—வளவிய குலைகளையுடைய பலாவினது முற்றின இனிய பழத்திற்சுளையை விரும்பினோரெல்லாரும தின்று கீழ்வீழ்ந்துகிடக்கும் மிகையான பழத்தின்விதை யைப் பயன்கொடற்கு,

கன்று காந்தள் துடுப்பிற் கமழ் மடல் ஓச்சிக் கடாவுறுக்கும் மகார் ஓதை— கன்றுகளைப்பிணைத்துக் காந்தளினது துடுப்புப்போலும கமழுகின்ற மடலாலேயடித் துக் கடாவிடும் பிள்ளைகளுடைய ஆரவாரமும,

* [மழைகண் டன்ன வாலைதொறு ஞெரேரென]

[கழைகண் ணுடைக்கும கரும்பினேத்தமும] கரும்பின் கழை கண்ணுடைக் கும ஏத்தமும—கரும்பின்கோலைச சாறுகொளளும ஆலையினோசையும்,

தினை குறு மகளிர் இசை படு வள்ளையும்—தினையைக்குறுகின்ற மகளிருடைய இசைமிகுகின்ற †வள்ளைப்பாட்டும,

சேம்பும் மஞ்சளும் ஓம்பினர் காப்போர் பன்றிப் பறையும்—சேம்பையும் மஞ்ச ளையும்விதைத்து வளர்ந்தபின்பு பன்றி கிழங்கைக்கல்லாமற் காப்போருடைய பன்றிக்குக் கொட்டும் பறையோசையும்,

குன்றகச் சிலம்பும்—இவவோசைகளான் மலையிடத்தெழும் எதிரொலியும்,

என்ற இவ்வனைத்துமே—என்று யான்கூறிய எல்லாவோசைகளும்,

[இயைந்தொருங் கீண்டி.] ஒருங்கு இயைந்து ஈண்டி—சேரப்பொருந்தித் திர ளப்பட்டு,

[அவலவு மிசையவுந் துவன்றிப பலவுடன்] அவலவும் மிசையவும் பல உடன் துவன்றி— நாழ்வாரயிலுள்ளனவும உச்சிமலையிலுள்ளனவுமாகிய ஒழிந்த பலவோ சைகளும் நெருங்குகையினாலே,

[அலகைத தவிர்த்த வெண்ணருந் திறத்த, மலைபடு கடாஅ மாதிரத் தியம்ப:] எண்ணரு திறத்த அலகைத தவிர்த்த மலை படு கடாம மாதிரத்து இயம்ப—எண்ணு

* இதற்குரைகிடைத்திலது.

† வள்ளைப்பாட்டு - உலக்கைப்பாட்டு.

தறகரிதாகிய கூறுபாட்டையுடையவாகையினாலே எண்ணையொழிந்த மலைகளாகிய யானைக்குண்டாகின்றவொலி திசைகளெலலாமொலிபப,

கடாம - ஆகுபெயராய் அதனாறபிறநத ஓசையையுணாததிற்று.

வரி நிழலிருபபின் (௨௯௦), இனனிசையும் (௨௯௬) பூசலும் (௨௯௯) அழுகையும் (௩௦௧) பாடலும் (௩௦௪) பூசலும் (௩௦௬) குரலும (௩௧௦) பூசலும் (௩௧௪) கொளீயும் (௩௧௭) உவகையும் (௩௧௮) குரவையும (௩௨௨) இசையும் (௩௨௪) ஓதையும் (௩௨௭) பூசலும் (௩௨௯) கம்பலையும் (௩௩௫) ஓதையும் (௩௩௯) ஏத்தமும (௩௪௧) வள்ளியும (௩௪௨) பறையும் (௩௪௪) எனறிவ்வனைததுங (௩௪௫) குனறகசசிலம்பும (௩௪௪) ஒருங்கியைநதீண்டபபட்டு (௩௪௫) ஒழிந்த ஓசைகளுந துவன்றுகையினாலே (௩௪௬) மலைகளாகிய யானைககுணடாகினற வொலி (௩௪௮) பலதிறமபெயாபவை (௨௯௧) மாதிரததியமப (௩௪௮) அவற்றைககேடகுவி (௨௯௧) ரென முடிகக.

இருப்பிற (௨௯௦) கேட்குவி (௨௯௧) ரெனக

மலைக்கு யானையையுவமிதது அதனகட்பிறந்தவோசையைக கடாமெனச் சிறப்பித்தவதனால் இப்பாட்டிற்கு மலைபடுகடாமென்று பெயாகூறினா.

[குரூஉககட் பிணையற கோதை மகளிா, முழவுததுயி லறியா வியலு ளாஙகண, விழவி னறறவன் வியன்கண வெறபே]

அவன் வியன கண வெறபு—அநநனனுடைய அகனறவிடததையுடைய மலை,

குரூஉக கண பிணையல கோதை மகளிா—பலநிறமபொருநதின இடததை யுடைததாகிய பிணததலையுடைய மாலையினையுடையமகளிா ஆடறகேறற,

முழவு துயில அறியா வியலுள ஆஙகண விழவின அறறு—முழவு கணணுறகக மறியாத அகன்ற ஊரிடததுககொணட திருநாளையொததுச சிறநதிருககும,

கண தணணெனக் கணடும கேட்டும உணடறகு இனியபல பாராட்டியும—காண்டற்கினியனவற்றைக கணகுளிரககணடும் கேட்கபபடுவனவற்றைச் செவிகுளிரக்கேட்டும் உணடறகினிய உணவுகளைக கொண்டாடியுணடும,

[இன்னும் வருவ தாக நமககெனத, தொனமுறை மரபினி ராகி] நமககு இன்னும் வருவதாக எனத தொல் முறை மரபினிராகி—நமககு மேலும இந்நுகாசசி உண்டாவதாகவென்று விரும்பிய பழையவுறவான மககளைபபோலும் முறைமையினை யுடையிராய்ச சிலநாட்டங்கி,

பல் மாண் செரு மிகளுப் புகலும திரு ஆா மாாபன—பலவாய மாட்சிமைப்பட்ட வஞ்சிமுதலியபோாததொழில மிககுநடததலாலே உலகமபுகழுந் திருமக ணிறைந்திருந்த மாாபினையுடைய நன்னனுடைய,

உரும் உரறு கருவிய பெரு மலை பிறபட—உருமேறுமுழஙகுந் தொகுதியை யுடைய பெரிய மலை நுமக்குபபினனுமபடி,

இறும்பூது கஞலிய இன குரல விறலியா நறுங காா அடுக்கத்துக குறிஞ்சி பாடி—அதிசயநெருங்கின இனிய யாழையுடைய விறல்படவாமகளிா நறிய கரிய பக்கமலையிலே குறிஞ்சியென்னும்பணணைப பாட,

குரல் - ஆகுபெயா. பாடி - பாடவெனச

கை தொழூஉப பரவிப பழிச்சினிா கழிமின்—நீரும் ஆண்டுறையுக் தெய்வங்க

லைக் கையாலேதொழுது எங்குறைமுடித்தால நுமக்கு இவைதருதுமென்று பரவுக் கடன்பூண்டு வாழ்த்திப்போவீர்,

மரபினிராகிப் (௩௫௫) பாடிப் (௩௫௬) பழிச்சி (௩௬௧) மலை பிறபடக் (௩௫௭) கழிமின் (௩௬௦) என்க

[மைபடு மாமலை பனுவலிற பொங்கி] பனுவலிற பொங்கி மை படு மாமலை—சூன்முதிர்வதற்குமுன்பு எஃகுறு பஞ்சிபோலப் பொங்கிச்சென்று கார்காலம்வருமளவும மேகமகிடக்கும் பெரிய மலையிடத்தில,

கை தோய்வு அன்ன கார மழைத் தொழுதி—கை சென்றுபிடிக்கும் தன்மையையொத்த அணுகுதலையுடைய கரிய மேகத்திரள்,

தூஉய அன்ன துவலை துவறறலின—வலியத்தூவினுலொத்த துவலைகளைத் தூவுகையினுலே,

தேஎம தேருக கடும்பரிக கடும்பொடு—திசைகளைத் துணிந்துகொள்ளமாட்டாத கடிய செலவினையுடைய சுற்றத்தோடே,

காஅயக் கொண்ட நும் இயந் தொயபடாமல்—காவிக்கொண்ட நும்முடைய வாச்சியங்கள் நனையாதபடி,

கூவல் அன்ன விடரகம புகுமின—கிணறுகள்போன்ற முழைஞ்சுகளிடத்தே புகுவீர்,

இரு கல் இகுப்பத்து இறு வரை சேராது—பெரிய கல்லினது திரட்சியினிடத்து முறிந்துநின்ற மலைகளைச்சேராதே,

[குன்றிடம் பட்ட வாரிட ரழுவத்து, நின்று நோக்கினுங் கண்வாள் வெளவு, மண்கனை முழவின் றலைக்கோல் கொண்டு, தண்டுகா லாகத் தளர்த லோம்பி, யூன்றி னிர் கழிமி னூறுதவப் பலவே]

நின்றுகண் நோக்கினும் வாள் வெளவும இடம பட்ட குன்று—நின்று கண்ணாற் பார்க்கினும கண்ணினொளியைத் தன்னழகாலே வாங்கிக்கொள்ளும் இடமுண்டாகிய மலையில்,

உம்மை - அவற்றைநுகர மனத்தாற்கருதின் அம்மனத்தையும் வாங்கிக்கொள்ளுமென எச்சவும்மை

ஆரிடர் அழுவத்து ஊறு தவப் பல—பொறுத்தற்கரிய வருத்தத்தைச்செய்யும குழிகளிடத்துப் பிறக்கும்இடையூறுகள் மிகப்பல, அவற்றை,

மண் கனை முழவின தலைத் தண்டு காலாகக் கொண்டு—மார்ச்சனைசெறிந்த முழவிடத்திற் காமரத்தை நுமக்குக் காலாக வாங்கிக்கொண்டு,

தளர்தல ஓம்பி கோல ஊன்றினிர் கழிமின—அடி உள்ளேவிழுதலைப் பரிகரித்து அத்தண்டாகிய கோலை ஊன்றிப்போவீர்,

அயில் காய்ந்தன்ன கூர்ங் கற பாறை—வேல்காய்ந்தாற்போலும் குடுமிக்கூர்ங் கற்களையுடைய பாறையில்,

வெயில் புறந்தரூஉம் இன்னல இயக்கத்து—குளிர்ச்சிவாராமல வெயில் பாது காக்கும் இன்னாமைசெய்யும் வழியிடத்திற போம்பொழுது,

கதிர் சினம் தணிந்த அமையத்துக் கழிமின்—ஞாயிறு சினமாறின அந்திப்பொழுதிலே போவீர்;

[உரைசெல வெறுத்தவவ ணீங்காச் சுற்றமொடு, புரைதவ வுயரிய மழைமருள் பஃறோ, லரசுநிலை தளர்க்கு மருப்பமு முடைய.]

உரை செல வெறுத்த அவன் நீங்காச் சுற்றமொடு புரை தவ உயரிய மழை மருள் பல் தோல் அருப்பமும் உடைய—புகழ பரக்கும்படி செறிந்த நன்னனுடைய நீங்காத படைத்தலைவரோடே உயர்ச்சிமிகவுயர்ந்த மேகமென்றுமருளும பல யானை த்திரளையுடைய அரண்களையும் அவ்வழியுடைய;

அரசு நிலைதளர்க்கும அருப்பம்—பொரவந்த அரசர் நிலையுடைமையைக் கெடு க்குமரண்,

பின்னி அன்ன பிணங்கு அரில நுழை தொறும—அவ்வரண்களிற பின்னிவைத் தாலொத்த கொடிபிணங்கின சிறுகாட்டையுடைய சிறியவழிகடோறும,

முன்னோன் வாங்கிய கடு விசைக் கணைக கோல் இன் இசை நல் யாழ்ப் பத்த ரும் விசிபிணி மண்ணார் முழவின் கண்ணும் ஓம்பிக கைபிணி விடாது பையயக கழி மின்—முன்போகின்றவன முகததிலடியாமல வாங்கிவிட்ட கடியவிசையையுடைய திரண்டகோல இனிய இசையைத் தன்னிடத்தேகொண்ட நல்ல யாழின்பத்தரையும் வலித்துக்கட்டின மார்ச்சனைசெறிந்த முழவின்கண்ணையும் கெடாதபடி காததது அவ னைக் கரம்பிடித்துககோடலை விடாதே மெலலமெலலப் போவீர்;

நாடுகாணனந்தலை (உஎ௦) முதல இத்துணையும மலைகூறிற்று. இவ்விடத்து யாற்றின்தன்மையும் சேரககூறினார்

களிறு மலைந்தனன கண்கூடு துறுகல்—யானைகள் தமமிற்சோந்து பொருதா லொத்த ஒன்றினிடத்தே ஒன்று கூடிநெருங்கின கல்லிடத்தே,

தளி பொழி கானம தலை தவப பலவே—மழைபெய்கின்ற காடுகள் அவ்விட த்து மிகப்பல;

ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஆர்ததென நலவழிக் கொடுத்த நாணுடை மற வர்—ஏவல்பொருநதாத பகைவா முதுகிட்டவளவிலே தமதுவெற்றிதோன்ற ஆர வாரித்தாராக,அதுபொறாமல இவவிடம் உயிர்கொடுத்தறகு நல்லகாலமென்று மீண்டு உயிரைக்கொடுதத நாணத்தையுடைய மறவருடைய,

செல்லா நல இசைப பெயரொடு நட்ட கல ஏசு கவலை எண்ணு மிகப் பலவே—கெடாத நல்ல புகழினையுடைய பெயர்களை எழுதிநட்டகறகள் முதுகிட்டுப்போனவ ரை இகழும பலவழிகள் எண்ணுதல மிகும்படி பலவாயிருககும;

இன்பு உறு முரற்கை நும பாட்டு விருப்பாகத் தொன்று ஒழுகும் மரபின் நும் மருப்பு இகுததத துனைமின்—இன்பமிகுகின்ற தாளத்தினையுடைய நும்முடைய பாட்டு அந்நடுகல்லிற செயவததிறகு விருப்பமாகப பழமைநடக்கின்ற முறைமையி னையுடைய நுமமுடைய யாழைவாசிதது விரையப போவிர்,

மருப்பு - ஆகுபெயர்

பண்டு நற்கு அறியாப புலம பெயா புதுவிா சநது நீவிப புல் முடிந்து இடுமி ன்—முறகாலம் நன்மையறியாத தீயநிலததை வழியறியாமறபோய மீண்டுவந்த புதி யவர்கள பின்வருகின்றவாகளும் அவ்வாறுபோய மீளாதபடி பலவழிகளுங்கூடி ன சந்தியைக் கையாலேதுடைதது அடையாளமாக ஊகம்புல்லை முடிந்திட்டு வைப்பிர்,

நற்கு - நன்கின்விகாரம

கானம் பல (௩அ௫), ஆண்டுக கல (௩அக) நட்ட (௩அஅ) கவலை பல (௩அக); அ க்கல்லிற்கு மருப்பிகுத்துத் துனைமின் (௩கக), அப்பொழுது புதுவிா (௩கஉ) புன் முடிந்திடுமி (௩கக) னெனக கூட்டுக

செல்லும் தேஎத்து—நீங்கள் போம் தேசத்திலே,

[பெயாமருங் கறிமாா, கலலெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த, கடவு ளோங்கிய காடேசு கவலை.]

கல எறிந்து மருங்கு பெயா அறிமாா எழுதிய கடவுள்—கல்லை இடந்துகொண்டு அதனிடத்தே இவவாறேபொருதுபட்ட இனனென்று அவனபெயரை உலகமறிவதற்கு எழுதிய கடவுள்,

நல் அரை மராத்த கடவுள—நலல அரையினையுடைய மராத்திடத்தனவாகிய கடவுள்,

என்றது - மராமரத்தினிழலிலே நட்ட கலலெனறவாறு

கடவுள் ஓங்கிய காடு ஏசு கவலை—அககடவுளின செயவததனமைமிகக தனகொடுமையாற பிறகாடுகளையிகழும பலவழிகளில,

[ஒட்டா தகனற வொன்னாத தெவவா, சுட்டினும பனிககுஞ சுரநதவப பலவே.]

ஒட்டாது அகன்ற ஒன்னாத தெவவா சுரம தவப பலவே—நனனனைப பொருந்தாதே நீங்கின அவன் ஏவறகுப் பொருந்தாத பகைவரிருககும் அருநிலஙகள மிகபபல,

இதனால இகழுநாபபிணிக்கும ஆறறல கூறினா

சுட்டினும பனிககும சுரம்—அததமூாகளிலேயிருந்து நினைப்பினும தலைநடுககுவிக்குஞ் சுரம்,

தேம் பாய் கணணித தோ வீசு கவி கை ஓமபா வள்ளற படாந்திருமெனினே—தேன்சொரிகின்ற கணணியினையும தேசைசசிதறுங் கொடுத்துக்கவிந்த கையினையுமுடைய தனக்கென்று ஒருபொருளும் பேணாத நன்னனைநினைத்துச செல்கின்றேமென்று கூறுவீராயின,

[மேம்பட வெறுத்தவவன றொல்றிணை மூதாா, ஆஙகன மற்றே நமம னோககே] நம்மனோககு ஆஙகனம் மேமபட வெறுதத அவன் தொல திணை மூதாா அறு—நமமையொககும பரிசிலாககு அபபகைபபுலம எலலாவூாகளினும மேலாம்படி செல்வமுணடான நன்னனுடைய பழைதாகிய உயாநத ஒழுககத்தினையுடைய பழையவூாகளை யொககும்,

அசைவுழி அசைஇ அஞ்சாது கழிமின்—இளைததவிடததே யிளைபபாறி அஞ்சாமற் போவீா,

[புலியுற வெறுததகதன வீழபிணை யுளளிக, கலைநினறு விளிககுங கான மூழிறந்து.] புலி உற வீழ தன் பிணை உளளி வெறுதத கலை நினறு விளிககும் கானம ஊழ இறநது—புலிபாயகையினாலேபட்ட தனபிணையை நினைதது வெறுதத கலைநின்று கூபபிடும் அககாட்டை முறைமைபபடபபோய,

சிலை ஒலி வெரீஇய செஙகண மரைவிடை—விலலினோசைககு வெருவின சிவந்தகணணையுடைய மரையேறு,

தலை இறும்பு கதழும நாறு கொடிப புறவின—முறபபட்ட குறுஙகாட்டிலே விரைநதோடும் நாறுகினற கொடிகளையுடைய காட்டிடததே,

வேறு புலம் படாநத ஏறு உடை இனநத வளை ஆன தீமபால—வேறறுபபுலஙகளிலே சென்றுமேயாநத ஏறறையுடைய நிரையிடததனவாகிய சஙகுபோல வெள்ளிய பசுக்களின இனிய பாலை,

மிளை சூழ் கோவலா வளையோா உவபபத தருவனா சொரிதலின—நிரையைககாவல் சூழகின்ற இடையா வளையினையுடைய மகளிா மனமகிழும்படி கொணடுவந்து சொரிகையினாலே,

[பலம்பெறு நசையொடு பதிவயிற் றீர்ந்தநும், புலம்புசே ணகலப் புதுவி ராகுவிர.] பலம் பெறு நசையொடு நும் பதிவயின் தீர்ந்த புலம்பு சேண் அகலப் புதுவிர் ஆகுவிர்—பலத்தைபபெறவேணடுமென்னும ஆசையுடனே நும்முடைய ஊரினின்றும் போந்த வருத்தம் விட்டு நீஙகுகையினாலே விருந்தாந்தன்மையை யுடையீராகுவிர்,

[பகாவிரவு நெலலின் பலவரி யனன, தகாவிரவு துருவை வெள்ளையொடு விரைஇக், கல்லென் கடததிடைக் கடலி னிரைக்கும, பல்யாட் டினநிரை] பகர் பல விரவு நெல்லின அரி அன்ன நகா விரவு துருவை வெள்ளையொடு விரைஇக கல் லென் கடததிடைக கடலின இரைககும் பல் யாட்டு இன நிரை—பணடமவிற்ற பலவுங்கூடு நெல்லினரிசியையொததனவாகக கிடாய்விரவுகின்ற செம்மறித்திரள் வெள்யாட்டுடனேகலநது கலலெனகின்ற ஓசையையுடைய காட்டிடததே கடல்போலேயொலிக்கும் பல யாட்டினினஙகளையுடைய திரளகளிலே,

பகாநெல் - விலைதரொகை.

எல்லினிர புகினே—இராககாலததை யுடையிராயச் செலலின்,

மனத்தே அககாலததைக கருதுதலின், உடைமையாயிறறு.

பாலும் விதயையும பணணுது பெறுகுவிர்—பாலும் பாறசோறும நமக்கெனறு சமையாமற நமககுச சமைநதிருந்தவற்றைப பெறுகுவிர்,

துயம்மயிர் அடககிய சேககை அனன—மெல்லிய தலைமயிரினையுடைய சேணமிடட படுக்கையையொதத,

மெய் உரிதத இயறறிய மிதி அதள் பள்ளி—ஆடுகளின மெயயையுரித்து ஒன்றுகததைத்த வாரமிதித்த தோறபடுககையிலே,

தீத் துணையாகச சேர்நதனிர கழிமின்—கொடியவிலஙகுகள் வாராதபடி இடையர ஒளித்த நெருபபுத துணையாகத் தங்கிப போவிர்,

கூபபிடு கடககும கூர நல் அமபிற கொடுவிற கூளியர் கூவை காணின்—கூப்பிடாத அவ்வெல்லையைக * கூவாநிறகும கூரிய நல்ல அமபினையும் கொடியவில்லினையுமுடைய நாடுகாககும வேடருடைய திரளைககண்டீராயின், அவாகளுக்கு,

படியோரத தேய்தத பணிவு இல ஆணமைக கொடியோள்கணவற் படார்திகுமெனினே—தனனை வணஙகாதாரை அழித்த தாழ்சசியில்லாத பகைவரையாளுந் தன்மையினையுடைய நனனனெனிலைததுப் போசினமேமென்று கூறின,

கொடியோளகணவன - கொடியினையுடையோள கணவன் இதனுல் அவன்றேவி கறபுமகுதி கூறிஞர இது நனனனெனனும் பொருட்டாய்நின்றது.

தடியும் கிழஙகும தணடினர் தரீஇ ஓம்புநர் அல்லது உடற்றுநர் இல்லை—தசைகளையும கிழஙகுகளையும நுமமை நலிநது தினனபபணணிப பாதுகாபபாரல்லது வருததுவார்களில்லை, அவறறை நுகாநது,

ஆங்கு வியம் கொணமின்—அவவிடததது அவர் போகச்சொனனவழியை நுமக்கு வழியாகக கொண்டுபோவிர்;

அது அதன பணபே—அககாட்டின்தன்மை அத்தன்மைத்தாயிருக்கும்;

தேம் பட மலர்ந்த மரா அ மெல் இணரும்—தேனுண்டாக மலர்நத மராவினது மெல்லிய பூங்கொத்தும்,

---

* கடவாநிற்குமென்றும் பிரதிபேதமுண்டு.

உமபல் அகைத்த ஒள் முறி ஆவும்—யானைமுறித்த ஒள்ளிய தளிர்களையுடைய ஆசசாவிற் பூவும்,

[தளிரொடு மிடைந்த காமர் கண்ணி, திரங்கு மரனாரிற பொலியச் சூடி:] திரங்கு மரநாரில் தளிரொடு மிடைந்த காமா கணணி பொலியச் சூடி— உலாந்த மரநாரிலே தளிர்களோடே நெருங்கககட்டின விருப்பமருவின கண்ணியை அழகுபெறச் சூடி,

முரம்பு கண் உடைந்த நடவை தண்ணென—பருக்கையையுடைய மேட்டுநில த்திடம் விண்ட சிறுவழி மழைபெயது குளிருகையினாலே,

உண்டனிர் ஆடிக் கொண்டனிர் கழிமின்—அநநீரைககுடித்துக குளித்து வழி ககுமுகநதுகொண்டு போமின்,

[செவ்வீ வேங்கைப் பூவி னன்ன, வேய்கொ ளரிசி விதவை சொரிந்த, சுவல்வி ளை நெல்லி னவரையம் புளிங்கூழ்]

செவ்வீ வேங்கைப் பூவின அனன அவரை—சிவந்த பூககளையுடைய வேங்கைப்பூவினையொத்த நிறத்தையுடைய அவரைவிதை,

வேய் கொள அரிசி—மூங்கில தன்னிடத்தே கொண்ட அரிசி,

சுவல விளை நெல்லின் அரிசி—மேட்டுநிலததேவிளைந்த நெலலினரிசி,

சொரிந்த விதவைப் புளியங்கூழ்—இவற்றைப் புளிககரைதத உலையிலே சொரிந்தாககின குழைந்த புளியங்கூழை,

அறகு இடை உழநத நும வருததம வீட—இராககாலததுக் காட்டிட்டதுப்பகற பொழுதுவந்த நும்வருததம் போம்படி,

[அகலு ளாங்கட் கழிமிடை ந்திய ...ரி, புல்வேய குரமபைக குடிதொறும் பெறுகுவிர்:] ஆங்கண அகலுள் கழி மிடைந்து இயற்றிய புல் வேய் குரம்பைக குடிதொறும் பெறுகுவிா—அவவிடத்து அகனற ஊரிட ததுக கழிகளால் தெறறிப்பண்ணின புலலானவேய்ந்த குடிலகளிலிருககும குடிகடோறும பெறுகுவிா,

கூழை அறகுப் பெறுகுவிரெனக

[பொன்னறைந் தனன நுணனே ரரிசி, வெண்ணெறிந் தியற்றிய மாக்க ணமலை, தண்ணெ னுண்ணிழு துளளீ டாக, வசையினிர் சேப்பி னல்கலும் பெறுகுவிர்:]

அசையினிர் சேப்பின்—இளைப்பாறி அவ்விடததே சிலநாட்டங்குவீராயின்,

பொன் அறைந்தனன நுண நேர் அரிசி வெண எறிநது இயற்றிய மாக கண் அமலை—பொனனை நறுககினுலொதத நுண்ணிய ஒதத அரிசியை வெள்ளையெறிந்தாக்கின கரிய இடததையுடைய சோற்றுததடியை,

தணணென நுண இழுது உளளீடாக அலகலும பெறுகுவிா—தண்ணென்ற நுணணிய நெயம்முதை உளளேயிட்டுணணுமபடி நாடோறும பெறுகுவிா;

விசயம் கொழிதத பூழி அனன—கருப்புககட்டியைக் கொழிதத பொடியையொதத,

உணணுநாத் தடுதத இடி நுண நுவணை—தனனை நுகாவாரை வேறொன்றை நுகராமற் றடுதத இடிததலால நுண்ணிதாகிய இளைபபிணடியோடு,

சேப்பின நுவணையோடே அமலையை இழுதுள்ளீடாக அல்கலும பெறுகுவிரென்க.

நுவணையோடெனா ஒடு விரிக்க.

நொய் மர விறகின் ஞெகிழி மாட்டிப் பனி சேண் நீங்க இனிது உடன் துஞ்சி—நொய்ய மரமாகிய விறகாலாக்கின கடைகொள்ளியை எரித்துப் பனி விட்டுநீங்கும்படி இனிதாகச் சேரத்துஞ்சி,

புலரி விடியற் புள் ஓர்த்துக் கழிமின்—இராக்காலநீங்குதலையுடைய விடியற்காலத்தே நிமித்தம்பார்த்துப் போவீர்,

புள்ளோர்த்தென்றதற்குப் புட்களின்குரல் கேட்டுப் போவீரென்றுமாம்

இத்துணையும் கானமும், கானத்தாற்றினது நன்மையும், அசையுநற்புலமும் வல்சியும் சேரக்கூறினார்

புல் அரைக் காஞ்சி—புற்கென்ற அரையினையுடைய காஞ்சிமரத்தினையும்,

புனல் பொரு புதவின்—நீர்வந்துபொருகின்ற அறுகுகளையும்,

மெல் அவல்—மெல்லிய விளைநிலங்களையும்,

[இருந்த வூர்தொறு நல்லியாழ்ப், பண்ணுப்பெயர்த் தன்ன காவும் பள்ளியும், பன்னாணிற்பினுஞ் சேந்தனிர்செலினு, நன்பல வுடைத்தவன் றண்பணை நாடே ]

காவும்—பொழில்களையும்,

பள்ளியும்—இடைச்சேரிகளையுமுடைய,

அவன் தண் பணை நாடே — நன்னனுடைய குளிர்ந்த மருத நிலத்தையுடைய நாடு,

பன்னாள் நிற்பினும் சேந்தனிர் செலினும் இருந்த ஊர்தொறும்—பலநாள்நிற்பினும் ஒருநாட்டங்கிப்போகினும் நீர் நுகர்தற்குக் குடிநீங்காதிருந்த ஊர்களந்தோறும்,

நல்லியாழ் பண்ணுப் பெயர்த்தன்ன நன் பல வுடைத்து— நல்ல யாழின்பண்ணை மாறிவாசித்தத்தன்மையவாக நன்றாகிய பலபொருள்களை யுடைத்து,

காஞ்சிமுதலியவற்றை உடையநாடு ஊர்தோறும் நன்பலவுடைத்தென்க.

பண் ஒன்றையொன்றொவ்வாது இனிதாயிருக்குமாறுபோல நுகரும்பொருள்களும் ஒன்றையொன்றொவ்வா இனிமையுடையவென்றார்.

கண்பு மலி பழனம் கமழத் துழைஇ வலையோர் தந்த இரு சுவல் வாளை—கண்புநெருங்கின மருதநிலத்தைப் பூக்கணாறவளைத்து ஆராய்ந்து வலையைவீசுவார் கொண்டுவந்த பெரிய கழுத்தினையுடைய வாளைத்தடியை,

நிலையோர் இட்ட நெடு நாண் தூண்டில் பிடிக்கை அன்ன செங்கண் வரால் துடிக்கண் அன்ன குறையொடு விராஅய்—ஓரிடத்தில் நிலைபெற நிற்றலையுடையோரிட்ட நெடிய கயிற்றையுடைய தூண்டிலிற்பட்ட பிடியின்கையையொத்த சிவந்த கண்ணையுடைய வராலினது துடியின்கண்ணையொத்த தடியோடேகலந்து,

பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்—பகன்றைப்பூவாற் செய்த கண்ணியை யுடைய கள்விற்கும் வலையருடைய மகளிர்,

ஞெண்டு ஆடு செறுவில் தராய்க்கண் வைத்த விலங்கல் அன்ன போர் முதல் தொலைஇ வளம் செய் வினைஞர் வல்சி நல்க—ஞெண்டுகளாடித்திரியும் செய்க்கருகில மேட்டுநிலத்தே யிட்ட மலையையொத்தபோர்களை அடியிலேவிழ அழித்துக் கடாவிட்டு வளப்பத்தையுண்டாக்கும் உழவர் நெல்லை முகந்துதராநிற்க,

துளங்கு தசும்பு வாக்கிய பசும் பொதித் தேறல்—களிப்புமிகுதியால் அசையும் மிடாவினின்றும்வார்த்த பசிய மூங்கிலாலாக்கின கட்டெளிவை,

[இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கடொறும் பெறுகுவிர்:] ஞாயிறு இளங்கதிர்க் களங்கடொறும் பெறுகுவிர்—ஞாயிற்றினது இளைய கதிர்கள் எறிக்குங்காலத்திலே களங்கடோறும் பெறுகுவிர்,

வினைஞர் வல்சிநல்கிற்கப் பழையர்மகளிர் விளைஇத் தேறல்நல்கிற்கப் பெறுகுவிர் எனக்

[முள்ளரித் தியற்றிய வெள்ளரி வெண் சோறு, வண்டுபடக் கமழுந் தேம்பாய் கண்ணித், திண்டேர் நன்னற்கு மயினி சான்மெனக், கண்டோர் மருள]

வண்டு படக் கமழும் தேம் பாய் கண்ணித் திண் தேர் நன்னற்கும் அயினி சான்மெனக் கண்டோர் மருள—வண்டுபடியும்படி நாறும் தேன்சொரிந்த கண்ணியினையும் திண்ணிய தேரினையுமுடைய நன்னனுக்கும் உணவாதற்கமையுமென்று கண்டோர்கள் மருளும்படி,

முள் அரித்து இயற்றிய வெள்ளரி வெண்சோறு—முள்ளைக் கழித்தாக்கின கொழுப்பால் வெள்ளியநிறத்தையுடைய தடிகளையிட்ட வெள்ளிய சோற்றை,

வெள்ளிய நிறத்தையுடைய தடிகளை வெள்ளரியென்றார், ஆகுபெயராக்கி.

கடும்புடன் அருந்தி—நுஞ் சுற்றத்துடனே யுண்டு,

மருள இயற்றிய வெனக்.

எருது எறி களமர் ஓதையொடு நல் யாழ் மருதம் பண்ணி அசையினிர் கழிமின்—எருத்தையடிக்கின்ற உழவரோசையோடே கூடும்படி நல்லயாழை மருதத்தைவாசித்து இளைப்பாறிப் போவீர்,

இத்துணையும் நாடுபடுவல்சியும் அசையுநர்ப்புலமும் சேரக்கூறினார்.

வெள் நெல் அரிநர் தண்ணுமை வெரீஇச் செங்கண் எருமை இனம் பிரி ஒருத்தல் கனை செலல் முன்பொடு கதழ்ந்து வரல் போற்றி—வெள்ளிய நெல்லையறுப்பார் கொட்டின பறையோசைக்கு வெருவிச் சிவந்த கண்ணையுடைய எருமைத்திரளைப் பிரிந்தகடா ஆரவாரிக்குஞ் செலவினையுடைய வலியோடே நும்மேல் விரைந்து வருதலைப் பேணி,

வனை கலத் திகிரியிற் குமிழி சுழலும் துனை செலல் தலைவாய் ஓவிறந்து வரிக்கும்—குயவன்வனைகின்ற மட்கலத்திற் சக்கரம்போலக் குமிழி சுழன்றுதோன்றும் விரைந்தசெலவினையுடைய வாய்த்தலையின் ஒழிவின்றி ஓடும் யாறு (௪௭௬),

காணுநர் வயாஅம் கட்கு இன் சேயாற்றின் யாணர் ஒரு கரை கொண்டனிர் கழிமின்—காண்பார் விரும்புங் கட்கினிய சேயாற்றினது புதுவருவாயையுடைய ஒரு கரையை வழியாகக்கொண்டு போவிர்,

வயாம் - ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங்கெட்டது. சேயாறு - அவ்வியாற்றின் பெயர்

[நிதியந் துஞ்சு நிவந்தோங்கு வரைப்பிற், பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇ, வியலிடம் பெறாஅ விழுப்பெரு நியமத், தியாறெனக் கிடந்த தெருவிற் சாறென, விகழுநர் வெரூஉங் கவலை மறுகிற், கடலெனக் காரென வொலிக்குஞ் சும்மையொடு, மலையென மழையென மாட மோங்கித், துனிதீர் காதலி னினிதமர்ந் துறையும், பணிவார் காவிற் பல்வண் டிமிரு, நனிசேய்த் தன்றவன் பழவிறன் மூதூர்:]

பல் வண்டு இமிரும் பனி வார் காவின்—பலவண்டுகளொலிக்கும் குளிர்ந்த நெடிய பொழில்களையும்,

இகழுநர் வெரூஉம் நிவந்தோங்கு வரைப்பின்—நன்னனை இகழ்திருப்பார் அஞ்சும் மிகவோங்கு மதிலையும்,

சாறெனக் கெழீஇக் கடலெனக் காரென ஒலிக்கும் சும்மையொடு வியல் இடம் பெறா விழுப் பெரு நியமத்து—திருநாளென்னும்படி மாந்தர் பொருந்திக் கடலெனக் காரென ஒலிக்கும் ஆரவாரத்தோடே திரிதற்கு அகன்ற இடம்பெறாத சீரிய பெரிய அங்காடித்தெருவினையும்,

கவலை மறுகின்—பல கவர்த்தனமையையுடைய குறுந்தெருக்களையும்,

புதி எழவு அறியாப் பழங்குடி துனி தீர் காதலின் இனிது அமர்ந்து உறையும் மாடம் மலையென மழையென ஓங்கி—ஊரினின்றும் போதலையறியாத பழையகுடி வெறுப்பில்லாத விருப்பத்தோடே நன்றாகப் பொருந்தியிருக்கும் மாடங்கள் மலையென மழையென ஓங்குகையினாலே,

யாறெனக் கிடந்த தெருவின்—யாறெனனும்படி கிடந்த பெருந்தெருவினையும்,

இரண்டுமருங்கின் மாடமுந் தெருவும் யாறும் கரையும் போன்றவென்றார்.

நிதியம் துஞ்சும் அவன் பழ விறல் மூதூர் நனி சேய்த்தன்று—காவினையும் மதிலினையும் நியமத்தினையும் மறுகினையும் தெருவினையுமுடைய பொருட்டிரட்கும் அவன் பழைய வெற்றியையுடைய மூதூர் மிகவும் தூரிதன்றெனக்

இது மூதூர்மாலை கூறிற்று

பொருந்தாத் தெவ்வர் இருந்தலை துமியப் பருந்து படக் கடக்கும் ஒள் வாள் மறவர்—நன்னனைப்பொருந்தாத பகைவருடைய கரிய தலைகள் துணியப் பருந்துகள்படியப் போரைவெல்லும் ஒள்ளியவாளையுடைய மறவர் தம்முடைய,

கருங்கடை எஃகம் சாத்திய புதவின் அருங்கடிவாயில் அயிராது புகுமின்—கரிய காம்பினையுடைய வேலைச்சாத்திவைத்துக் காத்திருக்கின்ற பல தெற்றுவாசல்களையுமுடைய அரிய கோபுரவாயிலை ஐயுறாமற்புகுவீர்,

[மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர், வெல்போர்ச் சேஎய் பெருவிற லுள்ளி, வந்தோர் மன்ற வளியர் தாமெனக், கண்டோ ரெல்லா மமர்ந்தினிதி னோக்கி]

மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர் கண்டோரெல்லாம்—அம்பலங்களிலே தங்குவாராகிய தூரியநிலங்களினின்றும் வந்த கூத்தர்முதலியோராய் நும்மைக்கண்டோரெல்லாம்,

அளியர் தாம் வெல் போர்ச் சேஎய் பெரு விறல் மன்றவுள்ளி வந்தோரென அமர்ந்து இனிதின் நோக்கி—இவ்வளிக்கத்தக்கவர்தாம் வெல்லும்போரைவல்ல முருகனைப்போலும் நன்னனைப் பரிசிலர்க்குக் கொற்றமாகநினைத்து வந்தோரென்றுகருதி முகம்பொருந்தி இனிதாகப்பார்த்து,

[விருந்திறை யவரவ ரெதிர்கொளக் குறுகிப், பரிபுலம் பலைத்தநும் வருத்தம் வீட:] பரி புலம்பு அலைத்த வருத்தம் வீட அவர் விருந்து நும் இறை எதிர்கொள அவர்க் குறுகி—தரித்தலானுண்டான தனிமை வருத்தினவருத்தம் போம்படி அவ்விடத்தோர் விருந்தாய நீங்கள் தங்குதலை எதிரேற்றுக்கொள்கையாலே அவர்களைச் சேர்ந்திருந்து,

[எரிகான் றன்ன பூஞ்சினை மரா அத்துத், தொழுதி போக வலித்தகப் பட்ட, மடக்கடை யாமான் கயமுனிக் குழவி]

எரி கான்றன்ன பூஞ் சினை மராஅத்த தொழுதி போக வலிந்து அகப்பட்ட மட நடை ஆமான் குழவி—நெருப்பைக் கான்றாலொத்த பூங்கொம்புகளையுடைய மராமரத்திடத்தே கிடந்த இனமெல்லாங் கெட்டுப்போகப் போகமாட்டாதகப்பட்ட மடப்பத்தையுடைய நடையையுடைய ஆமானினது குழவி,

கயமுனிக் குழவி—யானைக்கன்றினையுந்,

[ஊமை யெண்கின் குடாவடிக் குருளை] எண்கின் குடாவடி ஊமைக் குருளை—கரடியின் வளைந்த அடியினையுடைய வாய்திறவாக்குட்டி,

மீமிசைக் கொண்ட கவா பரிக் கொடுந்தாள் வரை வாழ் வருடை வன் தலை மாத் தகா—முதுகிடத்தேகொண்ட நிலத்தைக் கைக்கொள்ளும் செலவினையுடைய வளைந்தகாலையுடைய வரையிடத்தேவாழும் எண்காலவருடையில் வலிய தலையினையுடைய பெரியகிடாய்,

இனி வருடையுந் தகருமென வேறாக்கக் கூறலுமாம்

அரவுக் குறும்பு எறிந்த சிறு கண் தீர்வை—பாம்பினது வலிகளையழித்த சிறிய கண்ணினையுடைய கீரி,

அளைச் செறி உழுவை கோளுற வெறுத்த மடக்கண் மரையான பெருஞ்செவிக் குழவி—முழையிலே செறிந்திருந்த புலி பாய்தலுறுகையினாலே தன்னுடலைவெறுத்த மடப்பத்தையுடையகண்ணினையுடைய மரையானினது பெரிய செவியினையுடைய குழவி,

அரக்கு விரித்தன்ன செந்நில மருங்கிற் பரல் தவழ் உடும்பின் கொடுந்தாள் ஏற்றை—அரக்கைப்பரப்பினாலொத்த சிவந்தநிலத்திடத்திற் சுக்கான்கல்லிலேதவழும் உடும்பினது வளைந்தகாலையுடைய ஏறு,

வரைப் பொலிந்து இயலும் மடக்கண் மஞ்ஞை—மலையிடத்தே அழகுபெற்று ஆடும் மடப்பத்தையுடைய கண்ணினையுடைய மயில்,

கானக் கோழிக் கவர் குரற் சேவல்—கானத்திடத்துக் கோழியினது பெடையையழைக்கின்ற குரலையுடைய சேவல்,

கானப் பலவின் முழவு மருள் பெரும்பழம்—காட்டிடத்துப் பலாவினுடைய முழவென்றுமருளும் பெரியபழம்,

[இடிக்கலப் பன்ன நறுவடி மாவின், வடிச்சேறு விளைந்த தீம்பழத் தாரம்] நறுவடி மாவின் இடிக் கலப்பன்ன வடிச் சேறு விளைந்த தீம்பழத் தாரம்—நறிய வடுக்களையுடைய மாவினது பொடிச்செய்த கண்டின்கலப்பையொத்த பிழியப்படும் சாறுமுற்றின இனிய பழமாகிய பண்டம்,

தூவற் கலித்த இவர் நனை வளர் கொடி—மழையாற்செருக்கின படர்கின்ற அரும்புகளையுடைய மணமவளருகின்ற நறைக்கொடி,

காஅய்க் கொண்ட நுகம் மருள் நூறை—காவிக்கொண்டுவந்த நுகமென்றுமருளும் நூற்றைக்கிழங்கு,

நூறை - மலங்கென்பாருமுளர்

[பரூஉப்பளிங் குதிர்த்த] உதிர்த்த பரூஉப் பளிங்கு—மரத்தினின்றும் சிதறியுதிர்த்த பருத்த நிகரமாகிய கற்பூரம்,

பல உறு திரு மணி—பலவிலைபெற்ற அழகிய மாணிக்கம்,

[குருஉப்புலி பொருத புண்கூர் யானை, முத்துடை மருப்பின் முழுவலி மிகுதிரள்:] குருஉப்புலி பொருத புண் கூர் முழுவலி யானை முத்துடை மருப்பின் மிகுதிரள்—நிறத்தையுடைய புலிபொரப்பட்ட புண்மிக்க குறைவில்லா வலியையுடைய யானைகளினுடைய முத்துடைய கொம்புகளினுடைய மிக்கதிரள்,

வளை உடைந்தன்ன வள் இதழ்க் காந்தள்—வளையுடைந்தாற்போன்ற வளவிய இதழையுடைய காந்தட்பூ,

நாகம்—புன்னைப்பூ,

திலகம்—திலகப்பூ,

நறுங் காழ் ஆரம்—நறிய வயிரத்தையுடைய சந்தனம்,

[கருங்கொடி மிளகின் காய்த்துணர் பசுங்கறி] மிளகின் கருங்கொடி காய்த்துணர்ப் பசுங்கறி—மிளகினது கரியகொடிகள்காய்த்த கொத்தினையுடைய பசியமிளகு,

முன்னர் மிளகென்றது முதலை, கறி - சினை.

திருந்து அமை விளைந்த தேக்கள் தேறல்—நன்றாகிய மூங்கிற்குழாயிலே முற்றிய தேனாற்செய்த கட்டெளிவு,

கான நிலை எருமைக் கழை பெய் தீந்தயிர்—காட்டிடத்து நிலைமையினையுடைய எருமையினது மூங்கிற்குழாயிலேசேர்த்த இனியதயிர்,

நீல் நிற ஓரி பாய்ந்தென—முற்றுகையினாலே நீலநிறத்தையுடைய நிறம்பிறந்ததாக,

நெடு வரை நேமியின் செல்லும் நெய்க் கண் இறால்—நெடிய வரையில் இருப்பிடத்தைவிட்டுப்போய் நெய்யை தன்னிடத்தேயுடைய இறால்கள்,

[உடம்புணர்பு தழீஇய வாசினி யனைத்துங், குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி, கடன்மண்டழுவத்துக் கயவாய் கடுப்ப, நோனாச் செருவி னெடுங்கடைத் துவன்றி·]

தழீஇய ஆசினி—நன்றென்று கூட்டிக்கொண்ட ஆசினிப்பலா,

குடமலைப் பிறந்த தண் பெருங்காவிரி கடல் மண்டு அழுவத்துக் கயவாய் கடுப்ப—குடகமலையிற்பிறந்த குளிர்ந்த பெரிய காவிரி கடலிலே மிகச்செல்கின்ற ஆழத்தையுடைய புகார்முகத்தையொப்ப,

நோனாச் செருவின் நெடுங்கடை - பகைவர் பொறுத்தலாற்றாத போரினையுடைய தலைவாசலிலே,

அனைத்தும் உடம்புணர்பு துவன்றி,

[வானத் தன்ன வளமலி யானைத், தாதெருத் ததைந்த முற்ற முன்னி.]

மழை எதிர் படு கண் முழவு கண் இகுப்ப—மழைமுழக்கத்திற்கு எதிராகமுழங்கும் கண்ணையுடைய முழவின்கண்கள் ஒலியாநிற்க,

கழை வளர் தூம்பின் கண் இடம் இமிர—மூங்கிலாகிய இசைவளரும் பெருவங்கியத்தினது திறந்தகண்ணிடம் ஒலியாநிற்க,

[மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ், நரம்புமீ திறவா துடன்புணர்ந்தொன்றிக், கடவ தறிந்த வின்குரல் விறலியர்]

மருதம் பண்ணிய கரு கோடு சீறியாழ் நரம்பு மீது இறவாது உடன் புணர்ந்து ஒன்றி இன் குரல் விறலியர்—மருதத்தை வாசித்த கரிய தண்டினையுடைய சிறிய

---

* இவற்றிற்கு உரைகிடைத்திலது

யாழின் நரம்பினோசைக்கு மேற்போகாது அவ்வோசையுடனே கூடி ஓரோசையாய இனிதாகிய பாட்டினையுடைய விறலபட ஆடுமகளிர்,

கடவது அறிந்த விறலியர்—தலைவனைக் கண்டால் செய்யக்கடவ தொழிலை யறிந்த விறலியர்,

தொன்று ஒழுகு மரபின் தம் இயல்பு வழாஅது—பழைதாய் நடக்கு முறைமையினையுடைய தம்மிலக்கணத்திற் றப்பாமல்,

அருந்திறற் கடவுட் பழிச்சிய பின்றை—பொறுத்தற்கரிய வலியையுடைய கடவுளை முதல் வாழ்த்தின பின்பு,

முற்றத்தையணுகி (௫௬௧) இருப்ப (௫௬௨) விறலியர் (௫௬௬) தேவபாணியைப் பாடின பின்பு (௫௬௮) எனக்

விருந்திற் பாணி கழிப்பி—சென்று புதிதாகப் பாடும் பாட்டுக்களைப் பாடி,

நீள் மொழிக் குன்றா நல் இசைச் சென்றோர் உம்பல—வேளிற் றப்புலவோர்க்குக் கொடுத்தவற்றை வாங்காதபடி தாங்கூறிய வஞ்சினங்களிற் குறையாத நல்ல புகழிலே நடந்தோருடைய வழியில் வந்தவன்,

இதனாற் கொடைக்கடனிறுத்த அவன் தொல்லோர் வரவு கூறினார்.

[இன்றிவட் செல்லா துலகமொடு நிற்ப, விடைதெரிந் துணரும் பெரியோர் மாய்ந்தெனக், கொடைக் கட னிறுத்த செம்ம லோயென]

இடை தெரிந்து உணரும் பெரியோர் மாய்ந்தென—நன்றிது தீதிதுவென்று ஆராயும் பெரிய உபகாரிகள் இறந்தார்களாக,

இன்று இவண் செல்லாது உலகமொடு நிற்பக் கொடைக் கடன் இறுத்த செம்மலோய் என—நின்போ இக்காலத்து இவ்வுலகிலே நடந்துவிடாதே உலகமுள்ளவளவு நிற்கும்படி கொடையாகிய கடனை முடித்த தலைமையை யுடையோயென்று கூறி,

வென்றிப் பல் புகழ் விறலோடு ஏத்தி—வெற்றியாலுண்டாகிய பல புகழ்களை ஐம்பொறிகளைத் தன்வசமாக்கின வெற்றியோடே புகழ்ந்து,

சென்றது நொடியவும் விடாஅன—நும்மனத்திற் சென்ற வினைப் புகழ்களை முற்றக்கூறவும் அமையானாய்,

நசை தர வந்தது சாலும் வருந்தமும் பெரிது என—எனமேலுள்ள நசை கொண்டு வருகையினாலே என்னிடத்தே வந்தது அமையும், வழிவந்த வருத்தமும் பெரிதென முகமன் கூறி,

பொரு முரண் எதிரிய வயவரொடு பொலிந்து திருநகர் முற்றம் அணுகல் வேண்டி—பொருகின்ற மாறுபாட்டினை எதிர்கொண்டிருக்கும் படைத்தலைவரோடே பொலிவுபெற்றுச் செல்வத்தையுடைய தன்மனையின் முற்றத்தை நீங்கள் செல்லுதலை விரும்பி,

பொலிந்தென்னும் எச்சத்தை உடையவென்பதனோடு முடிக்க.

கல்லென் ஒக்கல் நல் வலத்து இரீஇ—கல்லென்னும் ஆரவாரத்தையுடைய சான்றோரிருக்கின்ற நன்றாகிய சமையத்திருக்கு மண்டபத்தேயிருந்து,

வலம் - இடம்

இதனால், நல்லிதினியக்குமவன் சுற்றத்தொழுக்கமும் அவன் நாளமகிழிருக்கையுங் கூறினார்.

உயர்ந்த கட்டில் உருபபு இல் சுறறததது அகன்ற தாயதது அலங்கிய நட்பததது இலமெனை மலர்ந்த கையராகி—உயர்ந்த அரசவுரிமையினையும், கொடுமையிலலாத அமைச்சர்முதலியோரையும, அகன்றநாட்டினையும், சுருங்கின அறிவினையுமுடையராய் இரந்துவந்தோர்க்கு யாம் இல்லேமென்றுகூறி இல்லையென்று மறிதத கையினை யுடையராய்,

கட்டில - சிஙகாதனமுமாம தாயம் - உரிமைகளெல்லாவற்றையுங் கூறிற்றுமாம

தம் பெயர் தம்மொடு கொணடனா மாயந்தோா—தம்பெயரை உலகில் நிறுத்தாமல் தம்முடனேகொணடு பொன்றக கெட்டுபபோன அரசா,

நெடு வரை இழிதரு நீததம் சால அருவிக கடுவரற் கலுழிக கட்கு இன் சேயாற்று வடு வாழ எககா மணலினும் பலரோ—நெடிய மலையினின்றுங்குதிக்கும் பெருக்குநிறைந்த அருவியின நு கடியவரததினையுடைததாகிய பெருக்கினையுடைய கட்கினிய சேயாற்றின அறலவீற்றிருந்த இடுமணலாகிய மணலினுமபலா,

[அதனால், புகழொடு கழிகநம் வரைந்த நாளென ] அதனால் நம வரைநதநாள் புகழொடும் கழிக என—ஆகையினாலே நமககுத் தெயவம் இததுணைக்காலமிருவென எல்லையிட்டுவிட்ட நாள் புகழோடே கழிந்துபோவதாகவென்றுகருதி,

[பரந்திடங் கொடுக்கும் விசும்புதோ யுள்ளமொடு ]

பரநது இடம கொடுககும உள்ளமொடு—கொடுததற்றொழிலிலேவிரிந்து அதற்கே இடங்கொடுக்கும் நெஞ்சுடனே,

விசும்பு தோய் உள்ளம்—ஆகாயததையொதத பெரிய உள்ளம்

[நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரி, துவந்த வுளளமோ டமர்ந்தினிது நோக்கி.] நயந்தனிா உவந்த உள்ளமோடு சென்ற நுமமினும் தான் பெரிது அமாநது இனிது நோககி—பரிசிலபெறுதறகு விருமபி மகிழ்நத நெஞ்சததோடே சென்ற நும்மினுங்காட்டில் தான் பெரிதும முகமமர்ந்து இனிதாகப்பாாதது,

[இழைமருங் கறியா நுழைநூற கலிங்க, மெள்ளறு சிறபபின வெள்ளரைக் கொளீஇ ] எள்ளறு சிறபபின இழை மருஙகு அறியா நுழை நூற் கலிஙகம் வெள்ளரைக் கொளீஇ—இகழசசியற்ற தலைமையினையுடைய இழைபோனவிடமறியாத நுண்ணியநூலாறசெய்த புடைவைகளை அழுகசேறினசீலைகள் கிடததலின வெள்ளிதாகிய அரையிலே உடுத்தி,

[முடுவ றந்த பைநநிணத தடியொடு, நெடுவெ ணெல்லி னரிசிமுட் டாது, தலைநா ளன்ன புகலொடு வழிசிறந்து, பலநா ணிற்பினும் பெறுகுவிர் ]

வழி சிறநது பல நாள் நிற்பினும்—அவ்விடம் நுந்நெஞ்சிற்குச சிறப்பெயதிப் பலநாள் நின்றீராயினும,

முடுவல் தந்த பைநநிணத தடியொடு—பெண்ணாய் கடித்துககொணடுவந்த பசிய நிணத்தையுடைய தசைகளோடே,

நெடு வெள் நெல்லின் அரிசி முட்டாது—நெடிய வெள்ளிய நெல்லினரிசியும் முட்டுப்படாமல்,

தலைநாள் அன்ன புகலொடு பெறுகுவிா—முதனாட்போன்ற விருப்பத்தோடே பெறுகுவிர்;

[நில்லாது. செலவேந் திலலவெந் தொலபதிப பெயாக்தென, மெல்லெனக் கூறி விடுப்பின் ]நில்லாது எம் தொல பதிப் பெயர்நது செலவேம் திலல என மெல்

லெனக் கூறி விடுப்பின்—அவ்விடத்து நில்லாதே எம்முடைய பழைய வூரே மீண்டு போவேம்; இஃது எங்களுக்குவிருப்பமென்று அவன்பொறுக்கச்சொல்லி அவனைக் கைவிடின்,

நும்முள் தலைவன் தாமரை மலைய—நுங்களிற் றலைவனானவன் பொற்றாமரையைச் சூட,

விறலியர் சீர் கெழு சிறப்பின் விளங்கு இழை அணிய—விறல்படவாடுமகளிர் அழகுபொருந்தின தலைமையினையுடைய விளங்குகின்ற பேரணிகலங்களைப் பூண,

நீர் இயக்கு அன்ன நிரை செலல் நெடுந்தேர்—நீரின் செலவினையொத்த நிரைத்துச்செல்கின்ற செலவினையுடைய நெடிய தேர்கள்,

வாரிக் கொள்ளா வரை மருள் வேழம்—யானைபடுகின்றவிடத்திற் பிடித்துக் கொள்ளாத மலையென்றுமயங்கும் யானைகள்,

என்றது - பகைவர்திறைதந்த யானைகளை

கறங்கு மணி துவைக்கும் ஏறு உடைப் பெரு நிரை—ஒலிக்குமணிகள் ஆரவாரிக்கும் ஏறுகளையுடைய பெரிய பசுத்திரள்கள்,

பொலம் படைப் பொலிந்த கொய் சுவல் புரவி—பொன்னாற்செய்த கலனையுத லியவற்றாற் பொலிவுபெற்ற மனச்செருக்கால் மயிரைப் பலகாலுங் கொய்யும் கழுத்தினையுடைய குதிரைகள்,

நிலம் தினக் கிடந்த நிதியமொடு—மண்தின்னும்படி பழைதாய்க்கிடந்த பொருட்டிரளோடே,

அனைத்தும்—எல்லாவற்றையும்,

இலம் படு புலவர் ஏற்ற கை நிறையக் கலம் பெயக் கவிழ்ந்த கழல் தொடித் தடக் கையின்—இல்லாமையுண்டான புலவர் ஏற்றகைந்நிறையும்படி பேரணிகலங்களைச்சொரிகையினாலே கீழ்நோக்கின உழலுந்தொடியணிந்த பெரியகையினிடத்துண்டாகிய,

இதனால் புலவோர்க்குச்சுரக்கும் அவன் ஈகைமாரிகூறினார்.

வளம் பிழைப்பு அறியாது—தான்கொடுத்தசெல்வம் கெடுதலையறியாதபடி,

வாய் வளம் பழுநிய கழை வளர் நவிரத்து மீமிசை—வாய்த்தவளப்பம் முற்றப்பெற்று மூங்கில்வளர்ந்த நவிரமெனனும் பெயரையுடைய மலையிடத்துச்சியிலே,

ஞோலோன மழை சுரந்தன்ன ஈகை—கடுக மழைசொரிந்தாற்போன்ற கொடையாலே,

[நல்கித, தலைநாள் விடுக்கும் பரிசில.] தலைநாள் பரிசில் நல்கி விடுக்கும்—முதனாளிலே பரிசில்தந்து போகச்சொல்லும்,

மலை நீர் வென்று எழு கொடியில் தோன்றும் குன்று சூழ் இருக்கை நாடு கிழவோனே—மலையினின்றும் விழுகின்ற அருவிகள் வென்றுயாகின்ற கொடிகள்போலத்தோன்றும் மலைகள்சூழ்ந்த பரப்பினையுடைய நாட்டிற்கு உரிமையையுடையோன்.

விடுப்பிற் (௫௬௮) சென்றோருமபல் (௫௭௦) நாடுகிழவோன் (௫௮௩) தன்கையிடத்துண்டாகிய (௫௭௭) மழைசுரந்தன்ன இயல்பாகிய கொடைத்தொழிலாலே (௫௮௦) வளம்பிழைப்பறியாதபடி (௫௭௮) நிதியத்தோடே (௫௭௫) தேர் (௫௭௧) வேழம் (௫௭௨) நிரை (௫௭௩) புரவி (௫௭௪) இவையனைத்தும் (௫௭௫) உயர்ந்தவன் தாமரை

மலைய விறலியர் (௫௬௯) இழையணியத் (௫௭0) தலைநாளிலே பரிசிலாக (௫௮௧) நல்கி (௫௮0) விடுக்கும் (௫௮௧) எனமுடிக்க

இதனால், வீயாதுசுரக்குமவன வியன்மகிழிருக்கை கூறினார்

கலப்பையிராய் (௧௩) ஒழுகிச் (௨0) சுரம் (௪௬) இருந்த (௪௯) தலைவ (௫0), யாறு கடற்படர்ந்தாங்கு (௫௨) யாம் அவனைக்கருதிச்சென்று பரிசில்பெற்று வருகின்றேம், நீயிரும் (௫௩) நன்னற்படாந்த கொள்கையொடு (௬௪) செல்குவிராயின் (௬௫) எற்றாக்குறுதலின் (௬௬) எதிர்ந்தபொழுதையும் (௬௫) புள்ளையும் உடையிராயிருந்தனிர் (௬௬); இனி யாற்றினதளவும் புலமும் (௬௭) வல்சியும் (௬௮) மலையும் சோலையும் கானமும் (௬௯) ஈசைமாரியும் (௭௨) ஆற்றலும் (௭௩) இருக்கையும் (௭௬) சுற்றத்தொழுக்கமும் (௮0) கடவுளதியற்கையும் (௮௩) அவன் சிறப்பும் (௮௫) தொல்லோர்வரவும் (௮௯) மூதூர்மாலையும் (௯௩) இருக்குமபடிகேட்பாயாக, அவற்றுள் இனிவேலை நீ முன்னியதிசையைக்கேள் (௯௪), பெட்டாங்குவிளைய (௯௮) வானம் பொழிகையினாலே (௯௭) முசுண்டை (௧0௧) முதலாகப பல (௧௪௪) ஈருககவொண்ணிய இம மிகுவளம பழுநியவைபபாலே (௯௫) புதுவதுவந்தன்று, அவ்வழியினபண்பு இத்தன்மைத்து (௯௬), அவற்றைக்கண்டு கானவர் (௧௫௫) சிறுகுடிபபடின் (௧௫௬) ஒக்கலொடும் பதமிகப்பெறுகுவிர் (௧௫௭), அசைஇ அன்று அறசோந்து அவண அலகிய (௧௫௮) போகிப் (௧௬0) பாக்கமெய்தி (௧௬௨) [illegible]றலவேள [illegible]யிரியமெனிற் (௧௬௪) பொம்மல்பெறுகுவிர் (௧௬௯), அவனமலைமிசைநாடு அ[illegible]ய [illegible]னறு (௧௮௮), ஆண்டுத தேக்கட்டேறலைப (௧௭௧) பருகி நறவைமகிழ்ந்து (௧௭௨) அணந்தல தீர (௧௭௩) மகமுனறதடுபப மனைதொறும (௧௮௫) தாரதடேடாட (௧௭0) வலசியைப (௧௮௩) பெறுகுவிர் (௧௮௫), பெற்றால பரிசினமறபப நீடலுமுரியிர் (௧௮௭), அங்ஙனநீட்டிபபிற பனித்தலு முரியிர் (௧௯௧), ஆதலால பலநாணிலலாது நாடபடாமின (௧௯௨), படருப பொழுது அவவாறு (௧௯௫) அருமபொறி (௧௯௪) யுடையவாகையினறுலே நளளிருள (௧௯௫) வைகினிர் விரிநதவிடியலகழிமின (௧௯௬), கழிநது செபபநதுணியின (௧௯௭) வலஞசெயாககழிமின் (௨0௨), கழிநது குறவர் (௨0௩) ஏறறத (௨0௪) தளாககுஙகல (௨0௬) கூற்றததனன (௨0௯), அவைதாம இரியத (௨0௮) ததகி (௨0௭) யிசைதவ்ராது வரும, அதறகு மரமறையாககழிமின் (௨௧0), கழிநது கானயாற்றுநடைவை (௨௧௪) வழூஉமருஙகுடைய (௨௧௫), அவவிடததிறகு வலந்த பரூஉக் கொடிமதலைபற்றி (௨௧௬) வழாமலோமபி (௨௧௫) ஓருவமராருவிரோமபினிர கழிமின (௨௧௮), கழிந்து நுண்ணீரபபாசிவழுமபு (௨௨௧) அடிநிலைதளாககு மருபபமுமுடைய (௨௨௨), அதறகு வேரலோடு (௨௨௩) மென்கோல பற்றினிர்கழிமின (௨௨௪), கழிந்து கடவுட்காணின் (௨௩0) வெறுப்பு மாரிதலையு (௨௩௩) மாதலின, நும [illegible]யங்கொட்டுதலோமபுமின (௨௩௨), ஓம்பி மஞ்ஞைதளரினும (௨௩௭) கடுவன உகளினும் (௨௩௭) பிரசங்காணினும் (௨௩௯) ஒன்றோனநோக்ககலுரிதன்று (௨௪0), நெறிமாறுபடுகுவிர் (௨௪௧), அங்ஙனம் நெறிமாறுபடாமறபபாயக கானததுபபடின (௨௪௨) ஏனங்காணின (௨௪௭) மிசைந்து (௨௪௯) பருகப (௨௫௧) பொதியினராய (௨௫௨) மகாரோடே (௨௫௩) கழிதலோமபி அறகுக (௨௫௪) கலலளைவதிமின (௨௫௫), வதிநது விடியலெழுந்து (௨௫௭) செங்கெறிக்கொணமின (௨௫௮), கொண்டு விலங்கி (௨௬௧) நோக்கிக (௨௬௬) குறுகாதுகழிமின் (௨௬௭), கழிந்து நாடுகாணனந்தலை மெனமெல வகணமின் (௨௭0), அகன்று குன்றத்துப்படின் (௨௭௫) [illegible]யநதொடுமின (௨௭௭), தொட்டால் கானவருனர் (௨௭௯), அவரெயதிக (௨௮௧) காட்டி (௨௮௩) முந்துற (௨௮௪) இனியிராகுவிர் (௨௮௬); அங்ஙனமினியிராய் அவர்கூறிய மாதிரங்கைக்கொண்டு (௨௮௭) இழிந்து

(௨௮௮) இருப்பின் (௨௯0) மலைபடுகடாம (௩௪௮) பலதிறமபெயர்பவை கேட்குவிர் (௨௯௧); கேட்டபின் அவன்வெறபு விழயினறறு (௩௫௧), ஆணடுதெ தொன்முறைமரபி னிராகிப் (௩௫௫) பாடிப (௩௫௯) பழிச்சி (௩௬0) மலைபிறபடக் (௩௫௭) கழிமின், (௩௬0) கழிந்து துவலைதுவற்றலின (௩௬௩) விடரகம்புகுமின் (௩௬௬), புகுந்து குன் றில் ஆரிடரழுவததது (௩௬௮) ஊறு தவபபல (௩௭௨), அவற்றைக் கோலகொணடு (௩௭0) ஊனறினிாகழிமின் (௩௭௨), கழிநது இன்னலியககததது (௩௭௪) அமையத்துக கழிமின (௩௭௫), கழிநது அவவிடம் அருபபமுமுடைய (௩௭௮), அவவரணகளிற போகில நுழைதொறும் (௩௭௯) கைபிணிவிடாதுகழிமின (௩௮௩),கழிநதாற கானமப ல (௩௮௫), கல நட்ட(௩௮௮) கவலைகளபல (௩௮௯); அககலவிறகு மருபபிகுததுத்துனை மின் (௩௯௧), அபபொழுது புதுவிா (௩௯௨) புனைமுடிநிறுமின (௩௯௩), இட்டுபோ னற சுரநதபபல (௩௯௪), ஓமபாவளளற படாநிருமெனின (௪00) நம்மனோ ாககு ஆஙகனம (௪0௨) மூதூா (௪0௧) அறறு (௪0௨), அசைவுழியசைஇ அஞ்சா துகழிமின (௪0௩), அககானததையிறநது (௪0௫) கோவலாபாலைச (௪0௯) சொ ரிகையினுலே (௪௧0) அவாக்குவிருந்தாவா (௪௧௨), அஙஙனமவிருந்தாய ஆட்டி னிரையிலேபுகிற (௪௧௬) பாலுமவிதவையும பெறுகுவிா (௪௧௭), அவறறைபபெறறு அதட்பளளியிலே (௪௧௯) சேநதனிாகழிமின (௪௨0), கழிந்து கூளியாகூவைகாணிற (௪௨௨)படாநிருமெனின (௪௨௪) தடியுஙகிழஙகுந ரீஇ (௪௨௫) ஓமபுநரலலது உட றுநரிலலை (௪௨௬), அவறறையருநதி வியஙகொணமின, அதனபணபு அஃது(௪௨௭), அபபண்ணைபககணடு கணணியைச (௪௩0) சூடிந (௪௩௧) தணணெனன (௪௩௨) உணட னிா ஆடிக கொணடனிாகழிமின (௪௩௩), கழிநதாற புளிஙகூழை (௪௩௬) அறகுக் (௪௩௭) குடிதொறுமபெறுகுவிா (௪௩௯), பெறறு அசையினிா சேபபின் (௪௪௩) நுவ ணையோடு (௪௪௫) அமலையை (௪௪௧) இழுதளளீடாக (௪௪௨) அலக்லும் பெறுகுவிா (௪௪௩); அவறறைபபெறறு ஞெகிழிமாட்டிந (௪௪௬) துஞ்சிப (௪௪௭) புளளோாததுக கழிமின் (௪௪௮), கழிநதால அவன தணபணைநாடு நனபலவுடைத்து (௪௫௩), அதனை யடைநதால விளைஞாவலசிநலகப (௪௬௨) பழையாமகளிா (௪௫௧) விளைஇந (௪௫௮) தேறலை (௪௬௩) நலக (௪௬௨) அவறறைபபெறுகுவிா (௪௬௪), அவறறைபபெறறபின்பு அவரவரிட்டவெணசோறறை (௪௬௫) யருநதி (௪௬௮) மருதமபணணிக கழிமின (௪௭0), கழிநது எருமையொருததல (௪௭௨) கதழுநது வரலபோறறிச (௪௭௩) சேயாற றின் (௪௭௬) ஒருகரைகொணடனிாகழிமின (௪௭௭), கழிந்தால அவன்மூதூா சேய் ததன்று (௪௮௭), அவவூரிறசெனறுல அருஙகடிவாயிலை அயிராது புகுமின (௪௯௧),பு ககாறபரிசிலா(௪௯௨)கணடோரெலலாம (௪௯௫)எதிாகொளககுறுகிப (௪௯௬) பின்னா் முறறமுன்னிக (௫௩௧) கடவுள் வாழததிபபினனா (௫௩௮) விருந்திறபாணிகழிப்பிச (௫௩௯) செம்மலோயெனக கூறி(௫௪௩)யேததிச (௫௪௪) சென்றதுநொடியவும் விடா அய (௫௪௫) வருததமுமபெரிதெனககூறி(௫௪௬)அணுகலவேணடி (௫௪௮)நல்வலததி ரீஇ (௫௪௯) மாய்ந்தோா (௫௫௩) மணலினுமபலா (௫௫௬), அதனால் நம்வரைந்தநாள் புகழொடு கழிகவென்றுகருதிப (௫௫௭) பரநதிடஙகொடுக்குமுள்ளததோடே (௫௫௮) அமர்ந்து நோக்கிக் (௫௬0) கலிஙகம (௫௬௧) வெளளைகொளீஇப (௫௬௨) பலநாள் நிறபினும் (௫௬௬) தடியொடு (௫௬௩) அரிசி முட்டாது (௫௬௪)தலைநாளன்னபுகலொ டு (௫௬௫) தரப பெறுகுவிா; நிலலாது(௫௬௬)செல்வேமென (௫௬௭) விடுபபின் (௫௬௮) சென்றேரும்பல் (௫௪0), நாடுகிழவோன (௫௮௩), அவன் தனகையிடத்துண்டாகிய (௫௭௭) மழைசுரநதன்ன இயலபாகிய கொடைததொழிலாலே (௫௮0) வளம்பிழை ப்பறியாதபடி (௫௭௮) நிதியுததோடே (௫௭௫) தோ் (௫௭௧) வேழம் (௫௭௨) நிரை

